முதற் பதிப்பு : மார்ச், 1973
பத்தாம் பதிப்பு : டிசம்பர், 1999
பதினொன்றாம் பதிப்பு : ஆகஸ்ட், 2001
பன்னிரெண்டாம் பதிப்பு : ஜூன், 2003
பதிமூன்றாம் பதிப்பு : ஆகஸ்ட், 2004
பதிநான்காம் பதிப்பு : அக்டோபர், 2005
பதினைந்தாம் பதிப்பு : டிசம்பர், 2006
பதினாறாம் பதிப்பு : டிசம்பர், 2007



திருநாவுக்கரசு தயாரிப்பு

**விலை : ரூ.85.00**

- TITLE : **JALADEEPAM, PART I**
- AUTHOR : SANDILYAN
- EDITION : SIXTEENTH EDITION, DECEMBER, 2007
- PAGES : 364
- PUBLISHED BY : **VANATHI PATHIPPAKAM**
  23, Deenadayalu Street,
  T. Nagar, Chennai - 600 017.
  E-mail : vanathipathippakam@vsnl.net
  Website : www.vanathipathippakam.com
- PRICE : **Rs.85.00**

Printed at : **Mani Offset,** 112, Bells Road, Triplicane,
Chennai - 5. Phone : 28555249, 28588186

# இலக்கிய தீபம்

ஆசிரியர் சாண்டில்யன் மகாராஷ்டிரர்களின் வாழ்க்கையைப் பின்னணியாக வைத்து தமிழ் மக்களுக்காக எழுதிய சரித்திர நாவல்தான் ஜலதீபம். இது குமுதம் பத்திரிகையில் இரண்டரை ஆண்டுகளுக்குமேல் தொடர்கதையாக வந்தது. வாசகர்கள் பெரிதும் விரும்பிப் படித்து வந்த வரலாற்று நாவல். இலக்கிய இன்பத்தை வாரி வழங்கிய நாவல்.

இப்பொழுது வரலாற்று நாவல்களைச் சுவை குன்றாமல் இலக்கியத் தரத்தோடு எழுதுவதில் ஆசிரியர் சாண்டில்யனுக்கு இணை ஆசிரியர் சாண்டில்யன்தான். அவர் கதைகளில் சுவை மட்டுமல்ல; ஆழ்ந்த கருத்துக்களும் பெரிய தத்துவங்களும் பொன்மொழிகளும் நிரம்பி நிற்பதைக் காணலாம். அவை கடலில் மறைந்துள்ள முத்துக்களைப் போல் அவருடைய நீண்ட நெடுங்கதையில் மறை பொருளாக அங்கங்கே பொதிந்து கிடக்கின்றன. இதை உன்னிப்பாகப் படிப்பவர்கள் உணரலாம்.

இலக்கிய வல்லுனரான ஆசிரியர் சாண்டில்யனின் நாவல்களை லட்சோப லட்சம் தமிழ் மக்கள்

விரும்பிப் படிக்கிறார்கள். காரணம் அவருடைய இலக்கியப் புலமையும், வரலாற்று ஆதாரங்களோடு அவர் கதையைச் சுவை குன்றாமல் நடத்திச் செல்லும் பாங்கும்தான். அவரிடமிருந்து இன்னும் பெரிய பெரிய இலக்கிய தீபங்களைத் தமிழ் மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அவர் இன்னும் புதுப்புது நாவல்களை ஆக்கித் தருவார் என்ற நம்பிக்கை உண்டு. அந்த வல்லமையும ஆற்றலும் அவருக்கு நிரம்ப உண்டு.

''ஜலதீபம்'' புத்தக வடிவில் வானதி பதிப்பக வெளியீடாக வரவேண்டும் என்ற மக்கள் விருப்பத்தை நிறைவேற்றியிருக்கிறோம். இதற்கு அனுமதியளித்த பிரபல நாவலாசிரியர் சாண்டில்யன் அவர்களுக்கு நன்றி கலந்த வணக்கம்.

இந் நாவலைத் தொடர்கதையாக வெளியிட்ட குமுதத் தாய்க்கு நன்றி.

இந்த அரும்பெரும் நவீனத்துக்கு அழகிய முறையில் ஓவியங்கள் தீட்டித்தந்த ஓவியர் மணி லதாவுக்கு நன்றி.

புத்தக வடிவில் அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீ பரமேஸ்வரி அச்சகத்தாரை மறக்க முடியாது.

புத்தகத்தை வரவேற்கத் துடிக்கும் தமிழ் மக்களைப் போற்றி வணங்குகிறேன்.

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்

# முன்னுரை

மகாராஷ்டிரர்களைப்பற்றி ஒரு நாவல் எழுத வேண்டுமென்ற நினைப்பு பல ஆண்டுகளாக எனக்கு இருந்து வந்தது. இந்து தர்மத்துக்காகவும் மதத்துக்காகவும் மக்களுக்காகவும் போராடிய ராஜபுத்திரர், மகாராஷ்டிரர் ஆகிய இரு இனங்களில் ராஜபுத்திரர்களைப்பற்றி நாலைந்து கதைகளை ஏற்கனவே எழுதிவிட்டேன். மகாராஷ்டிரர்களைப்பற்றி விரிவான ஒரு கதை எழுத வேண்டுமென்ற ஆவல் கிளைத்து ஆண்டுகள் பல ஓடி விட்டன. ஆயினும் ஏனோ எழுத மட்டும் இத்தனை நாள் வரை கைவரவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்பு கிங்கெய்ட், பராஸ்னிஸ் என்ற இரு பெரிய சரித்திர ஆசிரியர்கள் எழுதிய ''மகாராஷ்டிர மக்கள் சரித்திரம்'' என்ற வரலாற்று நூலைப் படித்தபோது, அவர்கள் அப் புத்தகத்தில் குறிப்பிட்டிருந்த கனோஜி ஆங்கரேயைப் பற்றிய முக்கிய கருத்தொன்று மனத்தில் ஆழப் பதிந்தது.

''மொகலாயரையும் பிரிட்டிஷாரையும் போர்ச்சுகீஸியரையும் கடல் பகுதியில் ஒடுக்கிய கனோஜி ஆங்கரே தமது கடைசி நாள்வரை அரபிக் கடலின் முடிசூடா மன்னராக விளங்கி வந்தார்'' என்ற குறிப்பு என்னைப் பெரிதும் கவர்ந்ததன்றி, உலகத்திலேயே பெரிய கடல் வல்லரசான பிரிட்டனையும் முறியடித்த ஒரு கடல் வீரன் நமது நாட்டிலிருந்திருக்கிறானே என்ற விவரம் பெருமிதத்தையும் தந்தது. அந்தப் பெருமிதம் இதயத்தில் ஒரு பக்கத்தில் இருந்து வந்தது. அப்படி முளையாக இதயத்திலிருந்த அந்தப் பெருமிதம் ஒரு நாவலின் வடிவில் உருவாகப் பத்து

ஆண்டுகள் ஆகியிருக்கின்றன. உருவெடுத்ததற்கும் ஒரு மகாராஷ்டிர வரலாற்று ஆசிரியர்தான் காரணம்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மனோகர் மல்கோங்கர் என்ற ஆசிரியர் எழுதிய ''கனோஜி ஆங்கரே—மராத்தா கடற்படைத் தலைவர்'' என்ற வரலாற்று நூலைப் படித்தேன். அதில் கனோஜியைப்பற்றிய புதுத் தகவல்கள் பல, புது ஆராய்ச்சிகள் பல இருந்தன. அந்த வரலாற்று நூலே ஒரு கதை போலிருந்தது. அந்த நூல் எனது இதயத்திலிருந்த அந்தப் பழைய ஆசையைக் கிளறவே, மகாராஷ்டிரர்கள் வரலாற்றைப் பற்றிய பல நூல்களைப் படித்தேன். சமீப காலத்தில் வெளிவந்த, ஸர்தேசாய், பிரிஜ்கிஷோர் முதலிய ஆசிரியர்களின் ஆராய்ச்சி நூல் களையும் ஆராய்ந்தேன். பிறகு ஆங்கரே என் இதயத்தில் விசுவரூபம் எடுத்தார். மகாராஷ்டிரர்களின் சுதந்திரப் போராட்டம், அவர்கள் ஸ்தாபித்த பெரும் சாம்ராஜ்யம்' அவர்கள் தியாகம், வீரம் அனைத்தும் மனத்தில் உதய மாகவே ஜலதீபமும் உதயமாயிற்று.

மகாராஷ்டிரர்களின் தஞ்சை அரசையும், கொங்கணிப் பகுதியில் நடந்த வீரப் போராட்டங்களையும் இணைத்து இந்த நாவலை எழுதத் தீர்மானித்தேன். இதற்காக நான் படித்த வரலாற்றுப் புத்தகங்கள் பல. செய்த ஆராய்ச்சியும் சொற்பமன்று. மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின்பு பயன்பட்ட புத்தகங்களின் பட்டியலை இந்த நாவலில் முன்னுரைக்கு அடுத்தபடி தந்திருக்கிறேன். எம்.ஏ., பிஎச்.டி., படிக்கும் மாணவர்களுக்கு உபயோகப்படும் என்ற எண்ணத்தில் இந்த நாவலில் வரும் சரித்திர சம்பவங்களின் தேதிகளை யும் தனிப்படக் கொடுத்திருக்கிறேன்.

மகாராஷ்டிரப் பேரரசை சிவாஜிக்கு அடுத்தபடி உருவாக்கித் திடப்படுத்திய பாலாஜி விசுவநாத், கனோஜி ஆங்கரே, பிரும்மேந்திர சுவாமி ஆகிய முப்பெரும் வரலாற்றுப் பாத்திரங்களை இந்தப் புத்தகத்தில் நீங்கள் சந்திப்பீர்கள். அதுமட்டுமின்றி, மகாராஷ்டிரர்களுக்கும்



பிரிட்டிஷாருக்கும் பெரும் தொந்தரவு கொடுத்த இருபது வயதுக்குள் மும்முறை விதவையாகிய, காதரைன் என்ற வரலாற்றுப் பாத்திரத்தையும் நீங்கள் சந்திப்பீர்கள். காதரைனைப்பற்றி நீங்கள் படிக்கும்போது ஒரு கற்பனைப் பாத்திரத்தைச் சந்திப்பது போலிருந்தாலும் அவள் சரித்திரப் பாத்திரம். அவளைக் கனோஜியின் குராப்பு ஒன்று பிடித்த நிகழ்ச்சி இந்த ஆசிரியர் கதை ஓட்டத்துக் காகச் சிருஷ்டித்த கடல் போராகத் தோன்றினாலும், அது உண்மையாகவே நடந்த போர். இந்தக் கதையில் மகாராஷ்டிரர்களின் கடல் நிலப் போர்களைக் குறி வைத்து அவற்றைச் சுற்றிச் சுற்றிக் கதையை நடத்திச் சென்றிருக்கிறேன்.

இந்தக் கதையின் கற்பனைப் பாத்திரங்களான இதய சந்திரன், மஞ்சு, பானுதேவி, எமிலி, நிம்கர், தஞ்சை ரகசிய ராணி ஆகியவர்களை நீங்கள் விரும்புவீர்கள் என நினைக்கிறேன். மஞ்சுவை நேசித்தது இதயசந்திரன் மட்டுமல்ல. குமுதத்தை வாசித்தவர்களெல்லாம் நேசித் தார்கள். புத்தக வடிவில் படிக்கும் நீங்களும் நேசிப்பீர்கள் என நினைக்கிறேன்.

இக்கதாநாயகன் நான்கு பெண் பாத்திரங்களுடன் மோதுகிறான். அவர்களில் ஒருத்தி அரசியலுக்காக அவனை உபயோகப்படுத்த முயலுகிறாள். இன்னொருத்தி கேவலம் காமத்தை மட்டும் அவனிடம் இச்சிக்கிறாள். மற்ற இரண்டு பேர் அவனை மனமாரக் காதலித்தாலும் அவர்களில் ஒருத்தி, அவன் மனம் மஞ்சுவிடமிருப்பதைத் தெரிந்து விலகிக் கொள்கிறாள். எமிலியின் இந்த மகத்தான தியாகம் மஞ்சுவிடம் இதயசந்திரனைச் சேர்ப்பிக்கிறது.

கடலில் சஞ்சரிக்கும் ஒரு மாலுமியின் ஆசாபாசங் களையும் கடமையை விட்டு வழுவாத ஒரு மகாவீரனின் பேருணர்ச்சிகளையும் இக்கதை சித்தரிக்கிறது. தன்னை மீறிய சந்தர்ப்பங்களில் கர்மவீரனாயிருப்பவன் எப்படி

நடந்து கொள்கிறான் என்பதை இந்த நாவலில் வலியுறுத்த முயன்றிருக்கிறேன். பெரிய சரித்திர நிகழ்ச்சிகளைக் கொண்டு இந் நாவலுக்கு அஸ்திவாரமிட்டிருக்கிறேன். கனோஜியின் சாகசச் செயல்களை, அசுர சாதனைகளை கூடியவரை சொல்லியிருக்கிறேன். சொல்ல இன்னும் எவ்வளவோ இருக்கிறது. கடலில் பாரதத்தின் மானங் காத்த மாவீரன், அரபிக் கடலின் இணையற்ற அரசனாகச் சஞ்சரித்த வல்லரசுகளையும் அண்ட விடாமல் கடலாண்ட மகாராஷ்டிரக் கடற்படைத் தளபதி, அவரைப் பற்றி எழுத வேண்டுமென்று நீண்ட நாளாக இருந்த ஆவலை இந்த நாவலில் நான் பூர்த்தி செய்து கொண்டேன். பூர்த்தி உங்களுக்குமிருக்குமென்று நம்புகிறேன்.

பெரிய பெரிய நாவல்களை நான் எழுத இடைவிடாமல் வாய்ப்பளித்து வரும் குமுதம் ஆசிரியர், எனது மதிப்பிற்குரிய நண்பர், திரு. எஸ். ஏ. பி. அண்ணாமலை அவர்களே, இந்த நாவலை எழுதவும் எனக்கு ஊக்கமளித்தார் என்பது உலகமறிந்த விஷயம், அவருக்கு எனது நன்றி உரித்தாகும்.

இந்த நாவலைப் புத்தக வடிவில் கொண்டுவர, பதிப்பாளரும் எனது உற்ற நண்பருமான திரு. வானதி திருநாவுக்கரசு அவர்கள் எடுத்துக்கொண்ட சிரமம் கொஞ்ச நஞ்சமன்று. அதிகப்படியான சித்திரங்கள் வேண்டாமென்று நான் சொல்லியும் கேளாமல் அத்தியாயத்திற்கு இரண்டு மூன்று சித்திரங்கள், முகப்புப் படங்கள் பலவற்றை ஓவியர் 'லதா'வை எழுதச் சொல்லிப் புத்தகத்தைப் பெரிதும் அழகுப்படுத்தியிருக்கிறார். இந்தப் புத்தகத் தயாரிப்பில் அவர் எந்தச் செலவையும் பொருட் படுத்தவில்லை. அவருக்கு எனது நன்றி உரித்தாகும்.

தமிழ்ப் பெருமக்களுக்கு நான் என்ன சொல்ல? அவர்கள் அன்பில்லையேல், ஆதரவில்லையேல், நான் இல்லை.

சாண்டில்யன்

## இந்நூலை உருவாக்குவதில் உதவிய வரலாற்று நூல்களின் பட்டியல்

1. A History of the Maratha People
*—By Kincaid and Parasnis*

2. Shivaji and His Times
*—By Sri Jadunath Sircar, M A., I.E S ,*

3 The Pirates of Malabar
*—By Cal John Biddulph*

4. Kanoji Angre — Maratha Admiral
*—By Manohar Malgonkar*

5 History of the Mahrattas Admiral
*—By James Grant Duff*

6. Maharastra State Gazeteer
*—By Satara, Kolaba and Ratnagiri Dts.*

7. The Main Currents of Maratha History
*—By Govind Sakharam Surdesai*

8. Chitnis Bakhar

9. Tara Bai and Her Times
*—By Brij Kishore*

10. Hand Book of Bombay Presidency
*—By J. Murray*

## இந்தக் கதையில் வரும் வரலாற்று நிகழ்ச்சிகளின் காலக் குறிப்பு

1698 — 'தார்ய ஸாரங்கா' என்ற பட்டப் பெயருடன் கனோஜி ஆங்கரே மகாராஷ்டிரக் கடற்படையின் தலைவராக, ராணி தாராபாயின் ஸார்கேலாகப் பதவி ஏற்கிறார்.

1702 — ஒரு பிரிட்டிஷ் வர்த்தகக் கப்பலை அரபுக் கடலில் கனோஜி கைப்பற்றுகிறார். அரபிக் கடலில் அவருடைய நடவடிக்கைகள், பிரிட்டிஷ், மொகலாய போர்ச்சுகீஸியருக்குக் கவலை அளிக்கின்றன.

1707 — பம்பாய் பிரிட்டிஷாரைச் சேர்ந்த பிரிகேட் ஜாதிக் கப்பலொன்றை கனோஜி தமது பீரங்கிகளால் தூளாக்கி விடுகிறார்.

707 — அக்டோபர் 2—தாராபாயின் படைகளை கெட் சமவெளியில் ஷாஹு சந்தித்து முறியடிக்கிறார்.

708 — ஜனவரி 12—ஷாஹு ஸதாராவில் மகாராஷ்டிர மன்னனாக முடி சூடுகிறார்.

09 — அக்டோபர் 22—பிரிட்டிஷ் காப்டன் என்பவரும் அவரது 13 வயது மகள் காதரைனும் கார்வாருக்கு வருகிறார்கள். அங்கு காதரைனைத் தொண்டு கிழவரான மிஸ்டர் ஹார்வே மணக்கிறார்.

1 — டிஸம்பர்— ஹார்வேயும் காதரைனும் பம்பாய் வந்தபோது காதரைனை தாமஸ் சௌனும், வில்லியம் கிப்போர்ட்டும் காதலிக்கிறார்கள். ஹார்வே கார்வார் திரும்பியதும் காலமாகவே அங்கு வந்த சௌன் அவரை மணக்கிறார்.

— சௌன் தம்பதிகளுடன் பம்பாய் வந்துகொண்டிருந்த கெட்ச் ஆன், பம்பாய் கவர்னரின் ஆயுத யாக்ட் ஆகிய இரு கப்பல்களையும் கனோஜியின் குராப்புகள் தாக்கிப் பிடிக்கின்றன. அவற்றுக்குத்



துணை வந்த டிபையன்ஸ் என்ற போர்க் கப்பல் ஓடிவிடுகிறது. இந்தப் போரில் மிஸ்டர் சௌன் மரணமடையவே இரண்டாம் முறை விதவையான மிஸஸ் சௌனையும், கெட்ச் ஆன், கவர்னர் யாக்ட் இக் கப்பல்களையும் திருப்பிக் கொடுக்க 30,000 ரூபாய் கேட்கிறார்.

1713 — பிப்ரவரி 22— பம்பாய் கௌன்ஸில் தொகையைக் கொடுக்க காதரைன் பம்பாய்க்கு அனுப்பப் படுகிறாள். மிகவும் சேதப்பட்ட நிலையில் கெட்ச் ஆனும் திருப்பப்படுகிறது.

1713 — மார்ச்— பம்பாய் கவர்னர் ஏஸ்லாபியிடம் கனோஜி சமாதான ஒப்பந்த ஏற்பாடுகள் செய்கிறார்.

1713 — முடிவில்— கனோஜியை முறியடிக்க ஷாஹு ஏற்பாடு செய்கிறார். பேஷ்வா பிங்களேயைப் பெரும் படையுடன் அனுப்புகிறார். பிங்களே கனோஜியின் படைகளால் கல்யாண் நகரில் முறியடிக்கப்படுகிறார். பிங்களேயைச் சிறை செய்த கனோஜி ராஜ்மச்சியையும் லோஹ்காட்டையும் பிடித்துக்கொண்டு ஸதாராமீது படையெடுப்பதாக ஷாஹுவுக்குச் செய்தியனுப்புகிறார்.

1714 — பாலாஜி விசுவநாத்தை பேஷ்வாவாக நியமித்து ஆங்கரேயை முறியடிக்க அவரை அனுப்புகிறார் ஷாஹு. பாலாஜி பூனாவில் தங்கி கனோஜிக்குக் கடிதம் எழுதுகிறார். பிறகு அவரை வால்வான் என்ற இடத்தில் சந்திக்கிறார்.

1714 — பிப்ரவரி 8— கொலாபா ஒப்பந்தம். ஷாஹுவின் பேஷ்வா என்ற முறையில் பாலாஜி விசுவநாத்தும் ஷாஹு கார்ய துரந்தரராக கனோஜி ஆங்கரேயும் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுகிறார்கள்.

## இந் நூலாசிரியரின் பிற நூல்கள்


கடல் புறா I, II & III
யவன ராணி I, II
ராஜ முத்திரை I, II
ராஜ திலகம்
ராஜபேரிகை
வசந்த காலம்
மன்னன் மகள்
மலைவாசல்
கன்னி மாடம்
புரட்சிப் பெண்
ராஜ்யஸ்ரீ
பாண்டியன் பவனி
நாகதேவி
விலை ராணி
சேரன் செல்வி
கவர்ந்த கண்கள்
அவனி சுந்தரி
மங்கல தேவி
ஜலமோகினி
கடல் ராணி
மோகினி வனம்
மலையரசி
மோகனச் சிலை
ராஜயோகம்
ராணா ஹமீர்
நீலவல்லி
சந்திரமதி
ஜீவ பூமி
மஞ்சள் ஆறு
ராணியின் கனவு
செண்பகத் தோட்டம்
மதுமலர்
மூங்கில் கோட்டை
இளைய ராணி
நங்கூரம்
உதயபானு
நாகதீபம்
பல்லவ திலகம்
நீள்விழி
நிலமங்கை
மனமோகம்
இந்திரகுமாரி

வானதி பதிப்பகம்
தியாகராய நகர்— சென்னை-17





### அத்தியாயம் 1

# கொங்கணியின் மடி

இதயசந்திரன் இமைகள் சற்றே விரிந்து விழிகளின் இருண்ட கருமணிகளுக்கு இடங்கொடுத்தாலும், ஏதோ மங்கலான வெளிச்சமும், வெளிச்சத்தின் ஊடே புகுந்து வந்த பனி மண்டலமும், பனி மண்டலத்தின் இடை யிடையே முத்து முத்தாய்ப் பாய்ந்த வைரக் கற்களுமே கண்களின் பார்வைக்குப் புலப்பட்டதால், இருப்பது இக லோகமா சொர்க்கமா, இரண்டுமற்ற சொப்பன உலகமா என்பதை நிர்ணயிக்க முடியாத நிலையில் அவன் தனது தலையை இருபுறமும் அசைத்துப் பார்த்தான். அசைந்த தலை திடீரென நீரில் மூழ்கிவிட்டதாலும், ஏதோ பேரிரைச்சல் காதுகளில் விழுந்ததாலும், எதையும் நிர்ணயிக்கத் திராணியற்ற அவன், விழிகளை மீண்டும் மூடி மூச்சையும் இழுத்துப் பிடித்துக் கொண்டான். அடுத்த

விடுபட்ட முகத்தில் சுரணை வினாடி மூழ்கிய நீரிலிருந்து முன்னைவிடச் சற்று அதிகமாக வரவே, தானிருப்பது பூலோகந்தான் என்ற முடிவுக்கு வந்து, அந்த முடிவின் விளைவாகச் சற்றுத் திருப்தியையும் முகத்தில் படரவிட்டுக் கொண்டான். அந்தத் திருப்தியின் இடையே லேசாகப் புன்முறுவல் அவன் உதடுகளில் தவழத் தொடங்கியது.

சொர்க்கத்தின் சிறப்புக்களை புராணங்கள் எத்தனை தான் வர்ணித்தாலும், பேரின்பத்தை அடைவதன் உயர்வை வேதாந்தங்கள் எத்தனைதான் போதித்தாலும், பூலோகத்தில் இருப்பதில் மனிதன் எத்தனை திருப்தி அடைகிறான் என்பதை எண்ணினான் இதயசந்திரன் அந்தச் சமயத்தில். உலகத்தில் மதங்கள் பல இருந்தாலும், தத்துவங்கள் பல இருந்தாலும், இந்த உலகத்தைவிட்டு மேல் உலகம் சென்றால் அங்கு எத்தனை அமைதியும் சந்துஷ்டியும் உண்டு என்பதை எத்தனை மதங்களும் தத்து வங்களும் வலியுறுத்தினாலும், உயிருடன் பூவுலகத்தில் கூடியவரை வாழவேண்டும் என்ற பூதத்துவம் மனிதனை விட்டு அகலாததை நினைத்து, ''மண்ணாசை எவ்வளவு சிறந்தது!'' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொள்ளவும் செய்தான் அவன்.

அவனிருந்த அரை மயக்கத்திலும் அவன் மண்ணில் கிடந்தது அவனுக்குப் பெரும் துணிவை அளித்தது. துணிவு சுரணையைத் தூண்டியது. பூமியின் ஸ்பரிசம் சுரணை யைத் தூண்டுவது எத்தனை விந்தை என்பதையும் எண்ணிப்பார்த்த இதயசந்திரன், 'மண்ணில் உயிர் இருப்பதால் சுரணையைத் தூண்டுகிறது,' என்று விளக்க மும் செய்து கொண்டான். 'மண்ணிலிருந்து மரம், செடி, கொடிகள் முளைக்கின்றன. அவற்றின் ஜீவ சத்துக்களி லிருந்து மனிதனும் சக்தியையும் உயிர்த் துடிப்பையும் பெறுகிறான். ஆகவே இந்த மண்ணைவிட்டு விலக எவன் இஷ்டப்படுவான்? என்று தன்னை வினவியும் கொண்டான் அவன். இன்னொரு முறை அவன் உடல்மீது



நீர் திரண்டது. ஆனால் இம்முறை தலை மூழ்கவில்லை. உடலின் கழுத்துக்குக் கீழுள்ள பகுதியே மூடிற்று, அந்த நீர் மூட்டம் விலகியபோது மார்பு மீது தங்கிவிட்ட ஓரிரு கிளிஞ்சல்களிலிருந்தும், மெள்ளப் பக்கவாட்டிலிருந்து தங்களது நீளக் கால்களைக் கொண்டு தொற்றிக் கழுத்தை நோக்கி ஏறி வந்த இரண்டு நண்டுகளிலிருந்தும், தானிருப்பது ஏதோ ஒரு கடற்கரை என்பது அவன் உணர்ச்சிகளுக்கு நன்றாகத் தெரிந்தது.

உணர்ச்சிகளுக்குத்தான் விளக்கம் கிடைத்ததே தவிர விழிகளுக்கு அத்தனை விளக்கம் கிடைக்கவில்லை. திறந்த கண்களுக்கு இரவு பகல் தெரியவில்லை. அந்தப் பழைய மங்கலான வெளிச்சமும் பனி மண்டலமுமே தெரிந்தன. ஆனால் இடையிடையே பாய்ந்த அந்த வைரக்கற்கள் தெரியவில்லை. இருப்பினும் சிந்தனை தெளிவடைந்து வேலை செய்ததால் தெரிந்த மங்கலான வெளிச்சம் வெண் மதியின் வெளிச்சமாகத்தானிருக்கவேண்டுமென்றும், அதை அவ்வப்பொழுது லேசாக மறைக்கும் சின்னஞ்சிறு வெள்ளி மேகங்களே கண்களுக்குப் பனிமண்டலங்களாகக் காட்சி யளித்திருக்கவேண்டுமென்றும் ஊகித்தான் இதயசந்திரன். முதலில் தெரிந்து பின்பு மறைந்துவிட்ட வைரக் கற்கள்கூட அலைகள் வீசிய நீர்த் திவலைகளாகத்தானிருக்குமென்றும் முடிவு செய்து கொண்டான். ஆகவே நன்றாகக் கண் களைக் கசக்கிக்கொள்ள இரு கைகளையும் எடுக்க முயன்றதும் அவன் நினைப்பு முன்னைவிட அதிகமாகப் பளிச்சிடவே, தன் நிலைமை வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது அவனுக்கு. ஒரு கையை அவனால் நன்றாகத் தூக்க முடிந்தாலும் இன்னொரு கை இடியெனக் கனத்து அகல மறுத்தது. அந்தக் கை வலித்த வலியில் அவன் முகத்தை வேதனையுடன் சுளித்தான். வேதனையும் வலியும் அவன் சுரணைகளை நன்றாகத் தூண்டிவிட்ட தன்றி, கண்களுக்கும் பார்வை அதிகமாகக் கொடுத்த தால், அலை நீரும் அது அள்ளி வீசிய சிறுமணலும் கண்களுக்கு எரிச்சலைக் கொடுத்ததை உணரக்கூடிய

நிலைக்கு அவன் வந்துவிட்டதால், அசைக்க முடிந்த இடது கையால் கண்ணின் மணலிரண்டை விழி ஓரங்களில் ஒதுக்கி, கழுத்துக்கருகில் வந்து ஊட்டியைக் கௌவ முயன்ற நண்டுகளையும் பிடித்தெறிந்தான்.

இதற்குப் பின்பு முழுச் சுரணை அடைந்துவிட்ட இதயசந்திரன் கண்களுக்கு வான்மதியும் நன்றாகக் காட்சியளித்தான். பார்வை நன்றாகக் கிடைத்ததும் வாளைச் சிறிது நேரம் உற்று நோக்கிவிட்டுத் தலையசைத்து அக்கம் பக்கம் பார்த்த அவன் கண்களின் இடது பக்கத்தில் கடலலைகளும் வலது பக்கத்தில் ஸஹ்யாத்ரி எனப் புராணங்களும், காட்மாதா என மகாராஷ்டிரரும், மேற்குத் தொடர்ச்சிமலை என நவீன பூகோள ஆசிரியர்களும் அழைக்கும் மலைத்தொடரின் பேருச்சிகளும் தெரிந்ததால், ஓரளவு ஆசுவாசப் பெருமூச்சும் விட்ட இதயசந்திரன், தன் உடலை மெள்ள அலையோரத்திலிருந்து நன்றாகக் கரைக்கு இழுக்க முயன்றான். அப்பொழுது அவனுக்குத் தன் உண்மை நிலை சந்தேகமறத் தெரிந்ததால் திக்பிரமை இதயத்தைச் சூழ்ந்துகொண்டது. உடலை அணுவளவும் நகர்த்தத் தன்னால் முடியாதென்பதும், யாராவது சீக்கிரம் உதவிக்கு வந்தாலொழிய எந்த மண்ணின் பிரபாவத்தைப் பற்றிச் சற்று முன்பு எண்ணி மகிழ்ச்சியடைந்தானோ அந்த மண்ணிலிருந்து தான் போய் விடுவது பரம நிச்சயமென்பதையும் உணர்ந்ததால், தனக்கு உணர்ச்சி திரும்பியது நன்மைக்குத்தானா என்றுகூடச் சந்தேகித்தான் இதயசந்திரன், வானவீதியில் தன்னைப் பார்க்கும் வெண்மதி தன்னைப் பார்த்து நகைக்கிறானா திகைக்கிறானா என்பது புரியாததால் திரும்ப ஒருமுறை கடலை நோக்கவும் செய்தான்.

அப்பொழுது ஆனி மாதமில்லாததால் அரபிக் கடலின் அலைகள் பனைமர உயரத்துக்கு எழாவிட்டாலும், திதி பௌர்ணமியாகையால் சாதாரண நாட்களைவிட அதிக உயரத்துக்கு அலைகள் திரண்டு வருவதை அவன்



கண்கள் கண்டன. தான் கடலோரத்தில் தள்ளப்பட்
டிருந்தாலும் வரும் அலைகள் எட்டவே மடிந்து திரை
நுரை மட்டுமே தன் மார்புமீதும் ஒவ்வொரு சமயம்
முகத்தின்மீதும் புரளுமென்றாலும், நாழிகை ஏற ஏற
ஏதாவது பேரலைகளிரண்டு கரையை ஆக்ரமித்தால்
தன்னை உருட்டிக்கொண்டு போய்த் தனக்கு உம்பருலகை
அளித்துவிடும் என்பதைச் சந்தேகமறப் புரிந்து
கொண்டான் இதயசந்திரன். வானத்தை நன்றாகக் கண்
கொண்டு மீண்டும் நோக்கிய அவன் சந்திரனிருந்த
இடத்திலிருந்து இரவு இன்னும் உச்சி காலத்தை நெருங்க
வில்லையென்பதை முடிவு செய்துகொண்டான். நடு உச்சி
வரவரப் பேய் அலைகள் கரையை நோக்கிப் பாய்ந்து
வருமாதலால் அதற்குள் தனக்கு யாராவது உதவினா
லொழிய தான் கடலுக்குள் மீண்டும் சென்றுவிட வேண்டி
யிருக்குமென்பதை நன்றாக உணர்ந்துகொண்டான்.
யாராவது உதவமாட்டார்களா என்ற எதிர்பார்ப்பு அவன்
இதயத்தில் உதயமானாலும் அதற்கு வாய்ப்பு இல்லை
யென்றே அவன் முடிவில் எண்ணினான். அதற்குக் காரண
மும் இருந்தது.

அவன் எந்த மரக்கலத்தில் வந்தானோ அந்த மரக்கலம்
கரைக்கு அருகாமையிலேயே கொள்ளைக்காரர்களால்
தாக்கப்பட்டிருக்க, பெரும் பீரங்கிகள் இரு கப்பல்களிலும்
சப்தித்திருக்க, தீப்பிடித்த கப்பலிலிருந்து பாய்மரத்
தண்டோடுதான் கடலில் விசிறப்பட்டிருக்க, அந்தப்
பெரும் நிகழ்ச்சியைக் கடலோரக் கிராமங்கள் எப்படிப்
பார்க்காமலிருக்க முடியும், பார்த்திருந்தால், கடற்கரை
யில் கூட்டம் எப்படி இல்லாதிருக்கும் என்று யோசித்தான்
இதயசந்திரன் ஆகவே நடந்த அந்த உக்கிரமான கப்பற்
போரும், மனித சஞ்சாரம் அதிகமிராத கரைக்கருகேயுள்ள
கடலில்தான் நடந்திருக்க வேண்டுமென்றும், தான்
கடலோரத்தில் தள்ளப்பட்டிருந்தாலும் தன்னைக் கரை
யோரத்தில் தள்ளிய அலைகளே திரும்பவும் தன்னைத்
தங்களிடம் அழைத்துச் சென்றுவிடுமென்றும் தீர்மானித்

தான். அசந்தர்ப்பம் எத்தனை இருந்தாலும் அபாயம் மீறிவிட்டதாக எண்ணமெழுந்தாலும், உயிர் ஆசை மனித முயற்சியை நன்றாகத் தூண்டும் வேகமுள்ளதாதலால், அவன் இடது கையைத் தூக்கி வலது கையில் பாய்ந்திருந்த மரச்சிலாம்பைப் பல்லைக் கடித்துக்கொண்டு பிடுங்கினான்.

பிறகு இடது கையையும், சற்று ஊன்றியதும் மரண வலியளித்த வலது கையையும் இருமுறை ஊன்றிக் கரை மீது நகர்ந்தான். அப்படியும் இரண்டே அடிகள்தான் நகர முடிந்தது அவனால். மரச்சிலாம்பு பிடுங்கப்பட்டதால் பீறிட்டு வெளிவந்த குருதி மண்ணை மெல்ல நனைத்தது. சிலாம்பு பிடுங்கப்பட்டதால் திறந்த காயத்தில் பட்ட மணலும் மணலிலிருந்த உப்புநீரும் அசாத்திய எரிச்சலைக் கிளப்பி அவன் உயிரை உறிஞ்சிவிடும் நிலைக்குக் கொண்டு வந்தது. குருதி அதிகப்பட்டதால், மெள்ள மெள்ள மீண்டும் சுரணை இழக்க ஆரம்பித்தான் அவன். அதுவரை சகலத்தையும் காட்டிய கண்கள் மீண்டும் மெள்ள மெள்ளப் பஞ்சடைய ஆரம்பித்தன. ஆரம்பித்த வேகத்தில் இருண்டும் விட்டன.

நீண்ட நேரம் கழித்து இரண்டாம் முறையாக அவன் நினைப்பு மீண்டபோது தனது நிர்க்கதி நன்றாகப் புரிந்ததால் அவன் ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் ஆண்டவனைத் தியானித்தான். மனித சக்திகள் பயனற்றுப் போகும்போதுதான் மனிதன் ஆண்டவனைச் சந்திக்கிறான் என்ற ஆன்றோர் போதனை எத்தனை உண்மையானது என்று அந்தச் சமயத்தில் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டே இதயசந்திரன், ''உன்னைத் தவிர வேறு கதியில்லை'' என்று வானை நோக்கி உள்ளத்திலிருந்து அபயக் குரல் கொடுத்தான். 'திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துள' பரந்தாமன் ஏன் என்னைக் காக்க வழி செய்யக்கூடாது என்று கேட்கவும் செய்தான். அவன் அபயக் குரல் வானத்தை எட்டித்தானிருக்க வேண்டும்.



கடல் ஓரத்தே ஓர் உருவம் குனிந்தும் நிமிர்ந்தும் எதையோ பொறுக்கிக்கொண்டு மடியில் கட்டியவண்ணம் நடந்து வந்துகொண்டிருந்தது. நிலவொளியில் ஆஜானுபாகுவான அந்த உருவத்தின் மேனி தங்கத் தகடுபோல பளபளத்ததையும் அதன் இடது கையிலிருந்த நீளத் தடியின் நுனியிலிருந்த தங்கப் பூண்கூட அந்த உருவத்தின் மேனிப் பளபளப்பின் காரணமாகச் சற்றுக் குறைந்தே பிரகாசித்ததையும் கண்ட இதயசந்திரன் தன் பிரார்த்தனை வீண் போகவில்லை என்பதைப் புரிந்துகொண்டான். அந்த உருவம் அவனிருப்பதை அறியாமலேயே குனிந்து குனிந்து அலைகளை ஆராய்ந்தவண்ணம் வந்து ஓரிடத்தில் சற்று நின்று ஸஹ்யாத்திரி மலைப்பக்கமாகக் கண்களைத் திருப்பியது.

வந்த உதவி திரும்பிவிட்டால் என்ன செய்வதென்ற வேதனையில் உடலில் திராணியிருந்த மட்டும் முனகினான் இதயசந்திரன். அலைகளின் பேரிரைச்சலில் தன் முனகல் கேட்குமோ என்ற அச்சம் அவன் மனதில் புகுந்து இதயத்தைத் திக்திக்கென்று அடிக்க வைத்துக் கொண்டிருந்த சமயத்தில், அந்த ஆஜானுபாகுவின் கண்கள் திடீரென அவனிருந்த திசையில் நிலைத்தன. அதற்குப் பிறகு இரண்டு வினாடிகளில் இதயசந்திரன் இருந்த இடத்தை அது அடையவும் செய்யவே, தன் முன்னிருப்பது ஒரு துறவியென்பதைப் புரிந்துகொண்ட இதயசந்திரன் கைகளைக் கூப்ப மெள்ளக் கைகளைத் தூக்க முயன்றான். இடது கை மட்டுமே எழுந்ததால் அந்தத் துறவி அவன் நிலைமையைப் புரிந்துகொண்டு அவனை அசையாமலிருக்கும்படி சைகை செய்து அவனருகே மண்டியிட்டார். அருள் நிரம்பிய கண்கள் இதயசந்திரன் கண்களைச் சந்தித்தன. அந்த அருள் விழிகளில் ஈட்டி போன்ற கூர்மையும் இருப்பதைக் கண்ட அந்த வாலிபன் இடது கையால் தனது வலது கையைச் சுட்டிக்காட்டினான். துறவி புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்து அவனது காயத்தைப் பரிசோதித்தார். பிறகு எழுந்து தனது மடியி

லிருந்த ஒரு சிறு சங்கை எடுத்துக் கிரீச்சென்று காதைத் துளைக்கும்படியாக ஊதினார்.

அதுவரை மனித சஞ்சாரமற்ற அந்தப் பகுதியில் எங்கோ காலடிகள் ஓடிவரும் சத்தம் கேட்டது, அந்தச் சத்தம் கலீர் கலீரெனக் காதுக்கு மிக இன்பமாயிருந்தது. அடுத்த அரை நாழிகை நேரத்துக்கு ஐந்தாறு பேர் துறவி யிருந்த இடத்துக்கு ஓடிவந்ததும் அந்த ஐந்தாறு பேரும் பெண்களாயிருப்பதைக் கண்ட இதயசந்திரன் வியப்பு உச்சியை எட்டிக் கொண்டிருந்தது. அந்தப் பெண்களில் முகப்பில் நின்றவளைத் துறவி விளித்து, ''இவன் வலது கையில் இரத்தம் சேதப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு கட்டைப் போடு'' என்று கூறி, தன் காவி உடையிலிருந்து நீளமாகச் சிறிது துணியைக் கிழித்துக் கொடுத்தார். அந்தப் பெண் ஒரு வினாடி துறவிமீது கலக்கம் நிறைந்த பார்வையை வீசினாள். பிறகு பேசாமல் உட்கார்ந்து இதயசந்திரன் கையைத் திருப்பிக் காயத்தைப் பரிசோதித் தாள்.

இதயசந்திரன் இதயம் நின்றுவிடும் நிலைமையி லிருந்தது. கையைத் திருப்பிய அந்தக் காரிகையின் அழகு அவனுக்குக் காயமளிக்காத மயக்கத்தை அளித்துவிடும் போலிருந்தது. சிறிதும் லட்சியம் செய்யாமல் அவள் மண்டியிட்டு உட்கார்ந்து கையைத் திருப்பி காவிச் சீலையை வைத்துக் கட்டியபோது அவளைப் பக்கவாட்டில் பார்த்த அந்த வாலிபன் உணர்ச்சிகள் கட்டுக்கடங்காமல் தத்தளித்தன. தனது கையை வெகு லாவகமாகத் தூக்கிக் கட்டுப்போட்ட பின்பு அவள் அவனைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் எழுந்து விட்டதையும், மேற்கொண்டு என்ன ஆணை என்று கேட்பது போல் அந்தத் துறவியை அவள் நோக்கியதையும் கண்ட இதயசந்திரன், 'இந்தத் துறவி யார்? இத்தனை பெண்கள் சங்கு சத்தம் கேட்டு ஏன் ஓடி வருகிறார்கள்?' என்று உள்ளூர எண்ணமிட்டதன்றி, துறவியை நோக்கி, ''நான் எங்கிருக்கிறேன்?'' என்று ஈனசுரத்தில் கேட்கவும் செய்தான்.



''பரசுராமன் திருவடியில்'' என்றார் துறவி.

ஏதும் விளங்காத இதயசந்திரன் குழப்பம் மிகுந்த பார்வையொன்றைத் துறவிமீது வீசினான்.

''கொங்கணியின் மடியில்'' என்று அவனுக்குக் கட்டுப் போட்ட கட்டழகி விளக்கம் கூறிப் புன்முறுவலும் செய்தாள்.

ஏதோ புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையை அசைத் தான் இதயசந்திரன் மெல்ல. ஆனால் அலைகள் தள்ளி யிருப்பது கொங்கணியின் மடியிலல்ல. பாரத நாட்டுச் சரித்திரத்தின் பெரும் கட்டத்தின் மடியில் விதி அவனை வீசியிருப்பதை இந்த வேளையில் அவன் உணரவில்லை. அவன் மட்டுமென்ன அவன் நிலையைப் பரிதாபக் கண்களுடன் நோக்கிக் கொண்டு நின்ற அந்தக் கட்டழகியும் உணரவில்லை. கட்டழகி மட்டுமா உணர வில்லை! அந்த இருவரையும் மற்றும் பலரையும் கருவி களாக இயக்கி மகாராஷ்டிரர்களின் மகோன்னத சரித்திரத்தை இஷ்டப்படி வளைத்த அந்தத் துறவிகூட உணர்ந்தாரில்லை.

## அத்தியாயம் 2

# சுவாமியும் சுந்தரியும்

விதியென்பது ஆண்டவனின் விசித்திர தண்டம்... மனித அறிவுக்குச் சிறிதும் புலப்படாத ஒரு மர்மம். அஞ்ஞானி அதை அறிவீனத்தால் அசட்டை செய்கிறான். விஞ்ஞானி அதை விவேகத்துக்கு ஒவ்வாதது என்று புறக்கணிக்கிறான். மெய்ஞ்ஞானி அதை ஆண்டவன் கட்டளை, கர்மத்தின் கரம் என்று உணர்ந்து அதன் விளைவுகளுக்குச் சிரம் தாழ்த்துகிறான். ஆனால் அந்த மெய்ஞ்ஞானிகூட விதி எதை விளைவிக்கிறது என்பதை அறியாமல் திகைக்கிறான்.

வலைஞன் எப்படி ஒரு நூலிழையை எடுத்துப் பின்னத் துவங்கி முடிவில் பெரும் வலையைச் சிருஷ்டித்து விடுகிறானோ, அப்படியே விதியும் வாழ்வின் ஒரு நூலிழையை எங்கோ துவக்கி, எப்படியோ பின்னிப் பெரும் வலையைச் சிருஷ்டித்துவிடுகிறது. அதில் சிக்க வேண்டியவர்கள் சிக்கிக்கொள்கிறார்கள். அதை நாடி வருபவர்கள் தானே வருகிறார்கள். அப்படி வருவதை 'சந்தர்ப்பம்' 'தற்செயல்' என்ற சொற்களால் குறிப்பிடு கிறார்கள். உலக பந்தத்தில் உழலும் மனிதன் வைத்த பெயர்கள் அவை. சாஸ்திரம் வைத்த பெயர் விதி.

அத்தகைய விதியின் இச்சையாலோ சந்தர்ப்ப விசேஷத்தாலோ அலைக்கருகே கூடி நின்ற அந்தச் சிறு கூட்டத்தில் மற்ற அனைவரும் வியப்பின் எல்லையை அடைந்திருந்தாலும், கம்பீரமாக நின்ற அந்தத் துறவி மட்டும் எவ்வித வியப்பையும் காட்டாமல் அலைக் கரையில் கிடந்த அந்த வாலிபனைத் தலை முதல் கால் வரையில் கண்களை ஓட்டிக் கவனித்தார். மணலில் சுமார் ஆறடி நீளத்துக்கு நார் நாராகப் பலவிடங்களில் கிழிந்த மகாராஷ்டிர உடையுடன் கிடந்த அந்த வாலிபனின்



உடலில் சதைப்பற்று அதிகமில்லாததை, கைகளின் திறந்த இடங்களும் மார்பும் அறிவித்தாலும் உடல் நன்றாக உரம் பாய்ந்திருந்ததையும், அவன் மேனி அதிகச் சிவப்போ கறுப்போ இல்லாமல் சற்றே அருணோதயச் சிவப்பா யிருந்ததையும் கவனித்த துறவி, அவன் நல்ல வலிமை உள்ளவனென்பதையும் வெய்யிலிலும், மழையிலும் அதிகம் அடிபட்டவனென்பதையும் புரிந்து கொண்டார். அவன் விசாலமான மார்பு மூச்சால் திடமாக எழுந்து தாழ்ந்ததிலிருந்து அவன் இதயத்தின் திண்மையும் அவருக்குத் தெள்ளென விளங்கியது. அத்தனையையும் திருப்தியுடன் கவனித்த துறவிக்கு அவன் கண்கள் மட்டும் திருப்தியை அளிக்காததால் அவனைச் சிறிது கவலையுட னேயே கவனித்தார். கண்களில் சதா துள்ளிக் கொண் டிருந்த ஓர் ஒளி, திடீரென ஈட்டிபோல் கூர்ந்துவிடும் ஒரு சாயை, அவரைச் சற்று சிந்திக்க வைத்தது. அவன் முகத்தில் அழகுமிருந்தது, கம்பீரமுமிருந்தது. நன்றாக வெட்டப்பட்டிருந்தாலும் அலை நீரால் முகத்தில் ஒட்டி வைக்கப்பட்டிருந்த பட்டை மயிர்க்கொத்து அந்தக் கம்பீரத்தை அதிகப்படுத்தியது. அத்தனை கம்பீரத்தையும், அழகையும், உடலுறுதியையும் துறவி கவனித்தும் திருப்தியடையாதவராய் அவனை நோக்கி, ''தமிழா! சற்று இடது புறமாகத் திரும்பு'' என்று நின்றபடியே தூய தமிழில் உத்தரவிட்டார்.

இதயசந்திரனுக்கு மட்டும் கையில் அந்தக் காயமும் காயத்தின் வலியும், புண்களின் மணல் எரிச்சலும் இல்லா திருந்தால் தானிருப்பது கனவுலகம் என்றே தீர்மானித் திருப்பான். கப்பல் போரின் சத்தம்கூட யாரையும் கரைக்குக் கொண்டுவராத அந்த மனித சஞ்சாரமற்ற கடற்கரைக்குத் துறவி வந்ததே அவனுக்கு வியப்பா யிருந்தது, அவர் சங்கநாதத்துக்குப் பெண்கள் சிலர் ஓடி வந்தது அதிக வியப்பை அளித்தது. அவர்களின் முகப்பில் வானச்சந்திரனைப் பழிக்கும் வாள் விழியாளொருத்தி வந்ததும் தன் கைக்குக் கட்டுப் போட்டதும் அதைவிட

விந்தையாயிருந்தது அவனுக்கு. தவிர தான் மகாராஷ்டிர
மொழியில் கேட்ட கேள்விக்குத் துறவியும் அந்தக்
கட்டழகியும் தமிழில் பதில் சொன்னது வியப்பைத் தாண்டி
குழப்பத்தைத் தந்திருந்தது. கட்டுப்போட்ட பின்பு
தன்னை எழுப்பிவிட முயலாத துறவி தன்னைக் கூர்ந்து
நோக்கி எடை போட்டதையும், முடிவில், ''தமிழா!''
என்று அழைத்து இடதுபுறம் திரும்பும்படி தூய தமிழில்
உத்தரவிட்டதையும் எண்ணிய இதயசந்திரன் பேசும்
சக்தியை அறவே இழந்து மிரள மிரள விழித்தான்.

அவன் மிரள விழிப்பதைக் கண்ட துறவி தன் பக்கத்
தில் நின்ற மீன் விழியாளைப் பார்த்து, ''தேவி! தமிழன்
விழிக்கிறான் பார்த்தாயா?'' என்று கூறி மெல்ல
நகைத்தார்.

இதயசந்திரன் கண்களில் திடீரென சினம் துளிர்த்தது.
அதைக் கண்ட துறவி அதை ஆமோதிப்பதற்கறிகுறியாகத்
தலையை அசைத்து, ''நினைத்தேன், அப்பொழுதே''
என்றார்.

இதயசந்திரன் கண்கள் ஈட்டிகளாயின. ''என்ன
நினைத்தீர்கள்?'' என்ற சொல்லில் மிகுந்த பலவீனத்திலும்
சினம் நன்றாகத் துளிர்த்தது.

துறவி சர்வசாதாரணமாகப் பதில் சொன்னார், ''நீ
முன்கோபி என்பதை'' என்று.

''நீர் என்ன முற்றும் அறிந்தவரா?'' என்று வினவிய
இதயசந்திரன் குரலில் அப்பொழுதும் உஷ்ணம் இருந்தது.

''முற்றும் அறிந்தவன் எவனும் இதுவரை உலகத்தில்
பிறந்தது கிடையாது'' என்றார் துறவி புன்முறுவல் உதடு
களில் தவழ.

''என்னைத் தமிழனென்று எப்படி அழைத்தீர்? என்
நெற்றியில் எழுதி ஒட்டியிருக்கிறதா?''

''நெற்றியில் மட்டுமல்ல, நாவிலும் ஒட்டியிருக்
கிறது.''



''நாவிலுமா!''

''ஆம் வீரனே! உன் முகம் உன்னைத் தமிழனென்று
திட்டவட்டமாக அறிவிக்கிறது. நீ முதலில் பேசிய
மகாராஷ்டிரமும் நீ தமிழனென்பதைத் தெளிவுபடுத்து
கிறது. உன்னைக் காட்டிக் கொடுக்க உன் முகமே
போதும்; அந்தக் கொச்சை மகாராஷ்டிரத்தில் நீ கேள்வி
கேட்டிருக்க வேண்டாம்'' என்ற துறவி அத்துடன் நில்லா
மல், ''தஞ்சையிலிருந்து வருபவன் எதற்காகக் கப்பல்
மூலம் வரவேண்டும் என்பது மட்டும் எனக்குப் புரிய
வில்லை'' என்று மற்றுமொரு அதிர்வேட்டையும் எடுத்து
வீசினார். மேற்கொண்டு ஏதும் பேசாமல் அவனருகில்
உட்கார்ந்து அவன் உடலைத் தானே எதிர்ப்பக்கமாகப்
புரட்டி முதுகைக் கவனித்தார். தோள் புறத்தில் அகன்று
கீழே லேசான முக்கோணமாக இறங்கிய அந்த முதுகின்
நாலைந்து இடங்களிலும் சிலாம்புகள் சட்டையைப்
பிய்த்துக் கொண்டு பாய்ந்திருப்பதைக் கண்ட துறவி
சற்றுப் பின்னால் நின்ற கட்டழகியைப் பார்த்து,
''முதுகிலும் சிலாம்புகள் இருக்கின்றன. இந்த
வாலிபனைப் பிடித்துத்தான் அழைத்துச் செல்லவேண்டும்.
கூடாரத்திற்குச் சென்றபின்பு இந்தச் சிலாம்புகளை
எடுப்போம். அந்த மந்திர தண்டத்தை எடு'' என்று
உட்கார்ந்தபொழுது அப்புறத்தில் போட்ட தங்கப் பூண்
தடியைக் காட்டினார். கட்டழகி அந்தத் தடியை எடுத்துக்
கொடுத்ததும் இதயசந்திரனின் காயம்படாத இடது கை
பக்கத்தில் தனது வலது கையைக் கொடுத்து சிறு குழந்தை
யைத் தூக்குவதுபோல் அவனைத் தூக்கி நிறுத்தி அவன்
இடது கையில் அந்தப் பெரும் கோலைக் கொடுத்து,
''நன்றாக ஊன்றிப் பிடி'' என்றார்.

இதயசந்திரன் ஏதும் சொல்லாமல் அவர் சொன்ன
படி செய்தான். அந்தத் துறவியின் தெய்வீக முகமும் மித
மிஞ்சிய பலமும், அவர் முதலில் தன்னைத் தமிழா என்றும்
பிறகு வீரனே என்றும் விளித்ததும், கடைசியில் தஞ்சை
யிலிருந்து வந்தவன் கப்பலில் ஏன் வந்தாயென்று வினா

எழுப்பியதும், பல விஷயங்களை அடுக்கித் தன்னை அக்கு
வேறு ஆணி வேறாகப் பிரித்துவிட்டதும், அவன் சித்தத்
தில் ஆயிரமாயிரம் யோசனைகளையும் எல்லையற்ற
பிரமிப்பையும் விளைவித்திருந்ததால் அவன் ஏதும் பேசும்
நிலையில் இல்லை. இதெல்லாம் கிடக்க அலை உருட்டித்
தரையில் நிர்க்கதியாகக் கிடந்த தன்னை முன்கோபி
என்று கூறி, குணத்தையும் வரையறுத்துவிட்டதையும்
எண்ணி எண்ணி நிலைகுலைந்தும் கிடந்தான். அது
மட்டுமன்றி அவர் எதைச் சொன்னாலும் அவர் 'தேவி'
என்று அழைத்த கட்டழகி புன்முறுவல் கோட்டியது
பெரும் கோபத்தை அளித்தது அவனுக்கு. ஆனால் நிர்க்
கதியான நிலையில் கிடந்த தனக்குக் கதியாய் வந்து
சேர்ந்த அவர்களைப்பற்றி ஏது நினைத்தும் ஏது சினந்தும்
பயனில்லை என்ற காரணத்தால் துறவியும் அந்தப் பெண்
களும் சொன்னபடி நடந்து கொண்டான் இதயசந்திரன்.

துறவி தனது ஒரு கையால் அவனைத் தூக்கி அவன்
இடது கையில் அந்தப் பெரும் கோலைக் கொடுத்து,
"தமிழா! உன் முதுகில் சிலாம்புகளிருப்பதால் நடக்கும்
போது வலி எடுக்கத்தான் செய்யும். பொறுத்துக் கொள்;
மெல்ல நட" என்று கூறி, கட்டுப் போட்ட இடத்துக்கு
மேல் அவன் வலது கையைத் தன் கையால் உறுதியாகப்
பிடித்துக் கொண்டார். பிறகு கட்டுப் போட்ட
கட்டழகிக்குப் பின்னிருந்த இரு பெண்களை விளித்து,
"மந்திர தண்டம் ஊன்றிய கைக்குச் சிறிது ஆதரவு
கொடுங்கள்" என்று மகாராஷ்டிரத்தில் கூறினார். அது
வரையில் தமிழில் நடந்த உரையாடல்களைக் கேட்டு
ஏதும் புரியாமல் நின்ற அந்தப் பெண்களில் இருவர் இதய
சந்திரன் இடதுகையை மெள்ளத் தாங்கினர். இப்படி
ஒருபுறம் துறவியும் மற்றொருபுறம் இரு பெண்களும்
தாங்கிக் கொடுக்க ஊன்றுகோல் பிடித்து மெல்ல
மெல்ல கரைப்புறம் நோக்கி நடந்தான் இதயசந்திரன்.
எதிரே மேற்குத் தொடர்ச்சி மலையில் பெரும் பாறை
களும், புதர்களும் அடியில் தெரிந்தன. அந்தக் காட்டின்



முகப்புக்கு வெகு முன்பாகவே, அதாவது கரையிலிருந்து
கூப்பிடு தூரத்திலேயே சில கூடாரங்களும் விளக்குகளும்
தெரிந்தன.

'இத்தனை அருகில் கூடாரமடித்துத் தங்கியிருக்கும்
இந்த சுவாமியும் சுந்தரிகளும் பெரும் கப்பல் போர் அருகே
நடக்கையில் எப்படி அமைதியாகக் கூடாரங்களில் தங்கி
யிருந்தார்கள்? ஒன்று கூடாரங்களை விட்டுக் காட்டுக்குள்
ஓடியிருக்க வேண்டும். அல்லது கூச்சல் போட்டுப் பக்கத்தி
லிருக்கும் ஊரைக் கூட்டியிருக்க வேண்டும். எதையும்
செய்யாமல் இடித்த புளி மாதிரி உட்கார்ந்திருக்கிறார்கள்!
சமுத்திரக் கரையில் சுவாமி நள்ளிரவில் வருகிறார்,
எதையோ பொறுக்குகிறார், சங்கு ஊதுகிறார், பெண்கள்
ஓடிவருகிறார்கள்! எனக்கு ஏதும் புரியவில்லையே!' என்று
தனக்குள்ளேயே பலபடி கேட்டுக் கொண்ட இதயசந்திரன்
துறவியைத் திரும்பிப் பார்த்தான். அவர் மடி நிறைய
எதையோ கட்டி முடிந்துகொண்டிருந்தார். சமுத்திரக்
கரையில் அவர் பொறுக்கக் கூடியது கிளிஞ்சல்தானாகை
யால், 'எதற்காக இவர் கிளிஞ்சல் பொறுக்குகிறார்?
இவரென்ன குழந்தையா?' என்று தன்னைத் தானே
கேட்டுக் கொண்ட இதயசந்திரன் மற்றவர்களிடம் ஏதும்
கேட்காமல் மௌனமாக நடந்து சென்றான். பத்துப்
பதினைந்தடி நடந்ததும், "சுவாமி! இந்தப் பெண்கள்
விட்டுவிடலாம்" என்று கூறித் தன் கையை அவர்களிட
மிருந்து விடுவித்துக் கொண்டு கோலூன்றி நடந்தான்.
துறவி அவனைப் பக்கவாட்டில் கவனித்தார். "நன்று
நன்று! தமிழா! நன்று!" என்று உள்ளூர சிலாகித்தும்
கொண்டார். அத்துடன் பக்கத்தில் வந்துகொண்டிருந்த
தேவியை நோக்கி, "நீயும் உன் தோழிகளும் போய்
இவனுக்குப் படுக்கை தயார் செய்யுங்கள். சிறிது நீரும்
காய்ச்சி வையுங்கள். இவன் அருந்த பானம் ஏதாவதிருந்
தாலும் பாருங்கள்" என்று உத்தரவிட்டார்.

அவர் கட்டளையைக் கேட்ட மற்ற பெண்கள்
கூடாரங்களை நோக்கி ஓடினாலும், கட்டுப் போட்ட

அந்தக் கட்டழகி மட்டும் ஓட இஷ்டப்படாமல் சற்று துரிதமாக நடந்தே சென்றாள். அவள் நடந்து சென்ற தோரணையையும் கண்டு அவளைத் தாண்டி உயர எழுந்த சையபருவத உச்சிகளையும் கண்ட இதயசந்திரன் இரண்டுக்குமுள்ள பொருத்தத்தையும் கண்டான். இரண்டுக்கும் கம்பீரம் மிக அதிகமாயிருந்ததையும் சையபருவத உச்சிகள் போலவே அவள் அழகும் நிலவில் பளபளத்ததையும் பார்த்த இதயசந்திரன், இரண்டுக்கும் உள்ள ஒரு வேறுபாட்டையும் நினைத்து இளநகை கோட்டினான். சையபருவத உச்சிகள் அசையவில்லை. ஆனால் அந்தக் கட்டழகியின் பின்னழகுகள் அசைந்து அசைந்து சென்றன. அவள் உட்கார்ந்து தனது வலக்கையைக் கட்டியபோது பக்கவாட்டில் அவளைப் பார்த்த சமயத்தில் கண்ணுக்குக் கிடைத்த அழகுப் பக்குவம் வேறு. இப்பொழுது கால்களை வீசி நுண்ணிடை இலங்க நடந்த அழகிய பிரமிப்பு வேறு. பக்கவாட்டில் அவள் ஒரு காலை மடித்து உட்கார்ந்தபோது அவள் இடை வெளேரென்று வாள் போல் மடிந்திருந்ததன்றி அதற்கு மேலே ஆடை அணிந்த இடைவெளியில் கண்ணைத் தாக்கிய ஒற்றைப் பிம்பம் அரபிக் கடலின் நடுத்தர வெண்சங்கைப் போல் பிரமை ஊட்டியது. தன் வலது கையைத் தூக்க அவள் அடியில் கொடுத்த கை ஏதோ மலர் உலாவுவது போலிருந்தாலும், இறுக அவள் காயத்தைக் கட்டியபோது அதே மலர்க்கை இரும்பாக மாறியது. மண்டியிட்ட ஒரு காலுக்கும் நிமிர்ந்திருந்த மற்றொரு காலுக்கும் இடையே பாய்ந்து ஒட்டிவிட்ட ஆடை அவன் மதிக்கு விஷத்தை ஊட்டியது.

இப்பொழுது அவள் ஏதோ கடலிலிருந்து எழுந்த தேவதை மலையுச்சியைத் தொடச் செல்வது போல் சென்று கொண்டிருந்தாள். பின்புறத்தில் சுருட்டிக் கட்டப்பட்டிருந்த குழல் பெரிதாக எழுந்து தலையில் சூடிய மலருக்கு மயக்கத்தக்க பின்னணியைச் சிருஷ்டித்திருந்தது. அவள் கைகள் அளவுடன் அசைந்தன.



கால்கள் அளவுடன் நடந்தன. ஆகவே அவள் ஆடை மட்டும் அளவுக்கு மேல் விசிறவில்லை. இறுகப் போடப்பட்டிருந்த ரவிக்கை முதுகின் முக்கால் பாகத்தை மறைத்திருந்ததால், அதற்குக் கீழே மறையாத இடையும் இடைக்கு மேலேயிருந்த பகுதியும் வெளேரென்று அந்த வெண்ணிலவில் தெரிந்தன. ஆடையின் அடிப்பகுதி கணுக்காலுக்கு மேலிருந்ததால் காற்சிலம்புகளும் பளபளத்து ஒளிவிட்டன.

இதயசந்திரன் மெல்ல கூடாரங்களின் அருகில் வந்து சேர்ந்தான். அங்கிருந்த நான்கு கூடாரங்களில் முகப்புக் கூடாரத்துக்குள் அவனை அழைத்துச் சென்ற துறவி கீழேயிருந்த மான் தோலொன்றில் அவனைப் படுக்கவைத்தார். பணிப்பெண்கள் கொண்டுவந்த சுடுநீரை மெள்ள ஒற்றி ஒற்றி முதுகுச் சிலாம்புகளை மிக லாவகமாகக் கழற்றினார். பிறகு கூடார மூலையிலிருந்த கம்பளியொன்றை எடுத்து அவன் உடலைக் கழுத்து வரையில் போர்த்திவிட்டு உள்ளே கையைவிட்டு அவன் உடையை நீக்கினார். கம்பளியில் அவனைச் சுற்றிய வண்ணம் திருப்பி முதுகை மட்டும் திறந்து காயங்களை ஒற்றி அழுத்தியும், அந்தக் கூடாரத்து மூலையிலிருந்த பெட்டியிலிருந்து எடுத்த மெழுகைக் காயங்களில் அப்பியும் குருதி வரவொட்டாமல் நிறுத்தினார். பிறகு வலதுகைக் கட்டையும் அவிழ்த்து, தேவியை ஏதோ திராவகத்தையும் பஞ்சையும் கொண்டு வரச் சொல்லி, திராவகம் தடவி, பஞ்சு வைத்து நன்றாகக் கட்டினார். பிறகு பணிப்பெண் ஒருத்தி கொண்டு வந்த பாலில் ஏதோ இரண்டு சொட்டு திராவகம் ஊற்றி, ''தமிழா வாயைத் திற!'' என்று அவனை வாயைத் திறக்கச் சொல்லி ஊற்றினார்.

இதயசந்திரன் தனது உடலில் புது சக்தி பாய்வதை அறிந்தான். அத்துடன் அவன் கண்களும் மெல்ல மூடின. அடுத்த நாலைந்து விநாடிகளுக்குள் அவன் நன்றாக உறங்கிவிட்டதை அவன் சீரான மூச்சு தெளிவுபடுத்தியது.

சுவாமி மற்ற பெண்களை அவர்கள் கூடாரத்துக்குச் செல்லப் பணித்துவிட்டுத் தம்முடன் தனியே நின்ற தேவியைக் கவலையுடன் நோக்கினார். "இவனை நீ ஜாக்கிரதையாகக் கவனிக்கவேண்டும்" என்றார்.

தேவி சந்தேகம் நிரம்பிய விழிகளைத் துறவிமீது திருப்பினாள். "இவன் என்ன அத்தனை அபாய மானவனா?" என்று வினவிய குரலிலும் சந்தேகம் ஒலித்தது.

"அபாயமானவனோ என்னவோ தெரியாது. ஆனால் இந்தத் தமிழன் லேசுப்பட்டவனல்ல. காரணமில்லாமலும் இங்கு அவன் வரவில்லை" என்று திட்டவட்டமாகக் கூறினார் துறவி.

சுந்தரி சுவாமியை வியப்புடன் நோக்கினாள். சுவாமி ஏதும் சொல்லாமல் கூடாரத்தைவிட்டுக் கிளம்பி மறுபடியும் கடற்கரை நோக்கி வேகமாக நடந்தார்.

அத்தியாயம் 3

# கடலரசன் காணிக்கை

காயங்கள் கவனிக்கப்பட்டுக் காய்ச்சிய பாலும் குடித்த பிறகு களைப்பின் மிகுதியாலோ திராவகத்தின் மகிமையாலோ கும்பகர்ண உறக்கத்தில் ஆழ்ந்துவிட்ட அந்தக் கட்டிளங்காளையுடன் தனித்து விடப்பட்ட கட்டழகி அவனை நன்றாகக் கூர்ந்து கவனித்தாள். பருவப் பெண்ணொருத்தி பரபுருஷனொருவனை அப்படி ஊன்றிப் பார்ப்பது அத்தனை சரியில்லை என்பதை அந்தச் சுந்தரி உணர்ந்திருந்தாலும், தனிமையளித்த துணிவும், அவனைப் பற்றி சுவாமிகள் இதயத்தில் எழுப்பிவிட்ட சந்தேகமும், அவள் வெட்கத் திரையைச் சற்று விலக்கி யிருந்ததால் அவள் அவனை நன்றாகப் பார்க்கவே செய்தாள். நூற்றுக்குத் தொண்ணூறு பேர் விஷயத்தில் முகத்துக்கு நித்திரையளித்து விடும் விகாரம் அவன் வதனத்தில் சிறிதும் ஏற்படாததையும், உறக்கத்திலும் அவன் முகச்சாந்தியுடனும் அழகுடனும் விளங்கியதையும், பெண்களின் உதடுகளைப்போலவே மென்மையாயிருந்த அந்த உதடுகளின் ஓரத்தில் சிறு நகையொன்று தவழ்ந் திருந்ததையும் கவனித்த அந்தக் கட்டழகி, அவன் உள்ளக் களங்கம் ஏதும் அற்றவனென்று நிர்ணயித்தாள். அப்படி அவள் நிர்ணயித்த சமயத்திலேயே திடீரென அவன் இதழ் களில் சிறுநகை மறைந்து இதழ்கள் இரும்புப்பட்டயங் களாக மாறியதன்றி, அவன் முகத்தில் ஏதோ ஒரு கலக்கம் மேகம்போல் படர்ந்துவிட்டதையும் கண்ட அந்தக் காரிகை, தான் அந்தக் காளையை எடை போட்டதில் தவறிருக்குமோ என்று ஒரு விநாடி யோசித்தாள். அந்த வினாடிக்குள் வாலிபன் முகம் பழைய முகமாயிற்று. கடையிதழ்ச் சிறுநகை சற்று அதிகமாகவே துலங்கியது. இதழ்களிலும் கடுமை நீங்கிப் பழைய மென்மை தென்பட்டது.

இந்தத் திடீர் மாற்றம் அந்தக் கட்டழகிக்குப் பெரும் விசித்திரமாயிருந்தது ஏதோ அந்த வாலிபன் இதயத்தில் அவனுக்குச் சினமூட்டக்கூடிய பெரும் ரகசியம் புதைந்து கிடக்கிறதென்பதைப் புரிந்துகொண்டாள். ஆனால் அது எதுவாயிருக்கும், எப்படிப்பட்டதாயிருக்கும், இந்த வாலிப வயதுக்குள் அத்தகைய துக்கத்தையோ வெறுப்பையோ சினத்தையோ விளைவிக்கக்கூடிய என்ன விபரீதம் அந்த வீர வாலிபன் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்க முடியும் என்பதையும் சிந்திக்கத் தொடங்கிய அந்த அழகி, 'இந்த வீண் யோசனை எனக்கு எதற்கு? இவர் யார், நான் யார்?' என்று தனக்குள் கேள்வியும் எழுப்பிக்கொண்டாள். அந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டாலும், எண்ணங்களை அந்த வாலிபனிடமிருந்து பிரிக்க முயன்றாலும், முடியாததால் மீண்டும் அவன் அழகிய வதனத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்தாள். அவன் வாள் நுதலும், அடர்ந்த வளைந்த புருவங்களும் கண்களை மூடி நின்ற நீள் இமைகளும் பெண்களின் அழகையும் தோற்கடிக்கும்வண்ணம் அமைந்திருப்பதைக் கவனித்த கட்டழகி அவன் மேலுதட்டில் லேசாகத் துளிர்த்துக் கருத்திருந்த மெல்லிய ரோமத்தொடர் மட்டுமில்லாதிருந்தால் அவனை பெண்ணென்று கூறிவிடலாமென்று நினைத்தாள். ஆனால் அந்த அழகிய முகத்தில் உறக்கத்திலும் தெரிந்த ஓர் உறுதி, கம்பீரம், மென்மையிலும் ஆண்மை சொட்டிக்கொண்டிருந்த இதழ்களின் அமைப்பு. இவை பெண்மைக்கும் அந்த முகத்துக்கும் சம்பந்தமில்லை என்பதைப் பறைசாற்றின. அது மட்டுமல்ல— கடற்கரையில் சற்று முன்பு நாராகக் கிழிந்த உடையில் இருந்து வெளிப்பட்டுக் கிடந்த மார்பும், நீண்ட கைகளும் கால்களும், அவள் அகக்கண் முன்பு எழுந்து தாண்டவமாடவே, அவள் கண்களை அவன் முகத்தைவிட்டு நீக்கவும் செய்தாள் முகத்தை விட்டு நீங்கிய கண்கள் அந்த அறை மூலையில் எறியப்பட்டிருந்த அந்த உடைகளின்மீதும நிலைத்து மறுபடியும் போர்த்தப்பட்ட கம்பளியின் மீதும் நிலைத்தன.



நிலைத்த கண்களில் சங்கடமும், வெட்கமும், கலக்கமும் பீதியும் கலந்து தாண்டவமாடின. கழுத்து மட்டும் போர்த்தப்பட்டிருந்த அந்தக் கம்பளிக்குள் அந்தக் கட்டிளங்காளை பிறந்த மேனியில் படுத்திருந்தானென்பதும் அவன் உடை பூராவையும் துறவி களைந்து விட்டாரென்பதும் அப்பொழுதுதான் நினைவிற்கு வரவே, அவள் உட்கார்ந்திருந்த நிலையில் அதிர்ச்சியுற்றுத் தரை மீது கண்களை நிலைக்கவிட்டாள். இப்படி ஒரு நிலையிலுள்ள ஆடவனுடன் சுவாமி எப்படித் தன்னைத் தனியாக விட்டுச் செல்லலாம் என்று கோபத்துடன் கேட்டுக் கொள்ளவும் செய்தாள். இந்த எண்ணத்துடன் 'உறக்கத்தில் இவர் கம்பளி விலகி விட்டால்?' என்ற மற்றொரு கேள்வியும் எழுந்து பெரும் பீதியை அவள் இதயத்தில் எழுப்பி விடவே அவள் உடல் ஒரு முறை இலேசாக நடுங்கியது அவனைத் தனியாக விட்டுத் தன் கூடாரத்துக்குச் சென்று விட்டாலென்ன என்று ஒரு முறை நினைக்கவும் செய்தாள். ஆனால் அவள் எழுந்திருக்கவும் இல்லை. ஓட முயற்சிக்கவும் இல்லை. 'சுவாமியின் கட்டளையை மீற முடியாது. அரசர்களாலேயே அவர் கட்டளையை மீற முடியாமலிருக்க அபலையான நான் எப்படி மீறமுடியும்?' என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டாள் ஆனால் அவள் உள்ளம் கேட்டது, 'ஏனடி! நீ சுவாமியின் கட்டளைக்காகவா உட்கார்ந்திருக்கிறாய்? நடுக்கத்திலும் திகைப்பிலும் லேசான இன்பமும் உன் இதயத்தில் ஏன் ஊடுருவுகிறது?' என்று. அந்த ஆடவனின் ஆடையற்ற உடல் ஏதேதோ விகார எண்ணங்களைத் தன் மனத்துள் விரவி விடுவதை அவள் உணர்ந்தாள் மனிதப் பிறவியில் சமுதாயக் கட்டுப்பாடுகள், நாகரிக வலைகள், எத்தனை கோட்பாடுகளை ஏற்படுத்தினாலும் சிருஷ்டியின் அடிப்படை இச்சைகளை யாரும் வெற்றி கொள்ளமுடியாதென்பதை அவள் சந்தேகமற உணர்ந்து கொண்டாள். எல்லாமறிந்த சுவாமி தன்னை எதற்காக இவருக்குக்

காவலாக உட்கார வைத்துப் போனார் என்று துறவியைக் கடிந்தும் கொண்டாள். பிறகு அந்த வாலிபனைப் பார்க்காதிருக்கக் கண்களையும் மூடிக்கொண்டாள்.

மூடிய கண்கள் அதிக விபரீதத்தை இதயத்தில் விளைவித்தன. சுவாமியின் சங்கநாதம் கேட்டுத் தான் தோழிகளுடன் கடற்கரைக்கு ஓடி அங்கு அந்த வாலிபனைக் கண்டது முதல் கூடாரத்தில் காவலிருக்கும் இந்த விநாடி வரையில் நடந்த சகலமும் அவள் கண்முன்பு எழுந்தன. விதி வீசிய தேவபுருஷன்போல் அந்த வாலிபன் கடற்கரையில் கிடந்தது, கப்பல் மரச்சிலாம்புகள் முதுகின் பல இடங்களில் ஆழப் பாய்ந்திருந்துங்கூட அவன் முகத்தில் சிறிதும் துன்பச்சாயை காட்டாமல் மணலில் நடந்தது, கூடாரத்தில் சிலாம்புகள் பிடுங்கப்பட்டபோது ஒரு ஹுங்காரமோ வேறுவித முனகலோ இல்லாமல் சகித்தது, இத்தனையும் அவள் மனக்கண்ணில் வலம் வந்தன. அத்துடன் கம்பளியைப் போர்த்திக் கம்பளிக்குள் கையை விட்டு சுவாமி அவன் உடைகளை லாவகமாக உருவி வெளியிலெடுத்ததும் நினைவுக்கு வரவே, அதனால் ஏற்பட்ட துர் எண்ணத்திலிருந்து மீள அவள் சரேலெனக் கண்களைத் திறந்தாள் கண்களைத் திறந்தாலும் மூடினாலும் கூடாரத்தில் இருக்கும் வரை தனது நிலை ஒரே விதமே என்பதைப் புரிந்துகொண்ட அந்தக் கட்டழகி சரேலென எழுந்திருந்து கூடாரத் திரையை விலக்கி வெளியே வந்து கடற்புறம் நோக்கி ஆகாயத்தையும் நோக்கினாள்.

சந்திரனிருந்த சாய்விலிருந்து உச்சிவேளை தாண்டி ஒரு ஜாமம் ஓடி விட்டதை அறிந்த கட்டழகி, ‘அப்பொழுதே சென்ற சுவாமி ஏன் இன்னும் வரவில்லை? கடலோரத்தில் இன்னும் என்ன செய்து கொண்டிருக்கிறார்?’ என்று தன்னைத்தானே வினவிக்கொண்டாள். சுவாமி வருகிறாரா என்பதைப் பார்க்க நீண்ட தூரம் கடலோரத்துக்காகக் கண்களை ஓட்டியும் பார்த்தாள். சுவாமி வரவில்லை. வருவதற்கான அறிகுறி எதுவும் தென்படவும் இல்லை. சுமார் ஒரு நாழிகைக்கு மேல் வாயிற் சீலைக்கருகிலேயே நின்று கொண்டிருந்த கட்டழகி ஒரு விநாடி பக்கத்துக் கூடாரத்துக்குச் சென்று தன் தோழிகளை அழைக்கலாமாவென்று யோசித்தாள். இல்லாவிட்டால் அதற்கும் அடுத்திருந்த இரண்டு கூடாரங்களிலிருந்து பல்லக்குத் தூக்குவோரையோ அல்லது காவல் வீரர்களையோ அழைத்து விட்டாலென்ன என்றும் யோசித்தாள். என்ன காரணத்தாலோ இரண்டையும் செய்யாமல் மீண்டும் கூடாரத்துக்குள் சென்றாள். சென்றவள் பழைய இடத்தில் பேசாமல் உட்காராமல் கூடாரத்துக்குள் அங்கும் இங்கும் உலாவினாள். கூடாரத்தை மீண்டும் ஒரு முறை சுற்றி நோக்கவும் செய்தாள்.



கூடாரத்தின் ஒரு மூலையில் கயிற்றுக்கொடியில் சுவாமியின் காஷாயங்கள் மடிக்கப்பட்டு வரிசையாகப் போடப்பட்டிருந்தன. மற்றொரு மூலையில் கிழக்கு நோக்கிப் போடப்பட்டிருந்த வியாக்கிராசனத்தில், எடுப்பான மஞ்சத்தின்மேல் சிக்குப் பலகையில், அவருடைய பாராயணச் சுவடிகள் இருந்தன. இந்தப் பாராயணச் சுவடிகளுக்கு மேலிருந்த தாமரை மணி ஆரமும், பட்டுப் பவித்திர மாலைகளும் சர்வ லட்சணமாக மாலைகளாகச் சாத்தப்பட்டிருந்தன. அந்தச் சுவடிகளின் மேலேயிருந்த ஒரு செம்புச் சம்புடம் விளக்கொளியில் நெருப்புத் துண்டம்போல் சுடர்விட்டுக் கொண்டிருந்தது. அந்த ஓலைச் சுவடியும், சம்புடமும், சலனப்பட்ட மனத்துக்குச் சிறிது சாந்தியை அளித்தன. அவள் ஆசுவாசப் பெருமூச்சுவிட்டு மீண்டும் வாசலுக்குச் சென்று திரும்பி வந்தாள். நாழிகைகள் ஓடின. சுவாமி திரும்பவில்லை. இரவின் கடைசி ஜாமமும் முடிந்தது. வானச் சந்திரன் வெண்சல்லாத் துணிபோலும் கர்ப்ப ஸ்திரீகளின் முகம்போலும் சோபையிழந்து பலவீனப்பட்டு வெளுத்தான். அடுத்திருந்த காட்டிலிருந்து பட்சி ஜாலங்கள் கூவின. சில ஆகாயத்தில் பறக்கவும் முற்

பட்டன. இதையெல்லாம் கண்டு உள்ளே வந்த கட்டழகி கொடியிலிருந்த பெரும் காவி ஆடையொன்றை எடுத்து அந்த வாலிபனை மூடியிருந்த கம்பளிமேல் பூராவாகப் போர்த்திவிட்டு, ''இனி இவர் புரண்டாலும் பயமில்லை'' என்று சற்று இரைந்தே சொன்னாள்.

இதைக் கேட்டு வாயிற்திரைச் சீலையருகிலிருந்து யாரோ களுக்கென்று சிரித்தார்கள். திரும்பிப் பார்த்த கட்டழகி தன் தோழிகளிருவர் தன்னைப் பார்த்து நகைத்துக்கொண்டு நிற்பதைப் பார்த்ததும் அவர்களை வெகுண்டு நோக்கி, ''நகைப்பதற்கு என்ன இருக்கிறது இங்கே?'' என்று சீற்றத்துடன் வினவினாள்.

''சுவாமிக்கு ஒரு சீடரையும் சிருஷ்டித்து விட்டீர்களே தேவி'' என்று கூறிய ஒரு தோழி மறுபடியும் நகைத்தாள்.

''சீடரையாவது சிருஷ்டிப்பதாவது?'' என்று மீண்டும் சீறினாள் கட்டழகி.

''அதோ, அதைச் சொல்கிறோம் தேவி'' என்று கூறிய மற்றொரு தோழி வாலிபன்மீது போர்த்தப்பட்டிருந்த காவி உடையைக் கைவிரலால் சுட்டிக் காட்டினாள்.

''இவருக்கு நீங்கள் ஏன் துறவறம் அளிக்கிறீர்கள்? வேண்டுமானால் சுவாமியே அளிப்பாரே'' என்று கூறிச் சிரித்தாள் இன்னொரு தோழி.

''காவி உடை போர்த்தியவர் எல்லாரும் துறவிகளாகி விடுவார்களா?'' என்று கேட்டாள் தேவி மீண்டும் கோபத்துடன்.

''ஆகமாட்டார்கள் தேவி. அப்படியிருக்க ஏன் காவி உடை போர்த்தினீர்கள்?'' என்றாள் முதலில் சிரித்தவள்.

''சுவாமி கூடாரத்தில் போர்த்த வேறு என்ன இருக்கிறது?'' இதைக் கேட்ட தேவியின் குரலில் முன்னைவிடக் கோபம் பன்மடங்கு அதிகமாகி இருந்தது.



''சுவாமிதான் கம்பளி போர்த்தி விட்டாரே?'' என்று சுட்டிக் காட்டினாள் இரண்டாமவள்.

''கம்பளி போதாவிட்டால்?'' இதற்கு மேல் சொல்ல தேவியின் நா எழவில்லை.

இரு தோழிகளுக்கும் நிலைமை புரியவே இருவர் முகத்திலும் திக்பிரமை சூழ்ந்தது. ''அப்படியானால் தேவி...'' என்று திகிலின் ஊடே ஒருத்தி இழுத்தாள்.

''உறக்கத்தில் அவர் புரண்டு ஏதாவது...'' என்ற இரண்டாமவளும் வாசகத்தை முடிக்காமல் குழம்பினாள்.

மூன்று பெண்களின் முகத்திலும் அசடு வழிந்தது. கடைசியில் தேவி மெதுவாகச் சொன்னாள், ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லையடி...'' என்று.

''இல்லையே.'' ஒரு தோழி கேட்டாள்.

''இல்லை,'' என்றாள் தேவி.

''நல்லவேளை'' என்றாள் இன்னொருத்தி.

''இப்படி சுவாமி உங்களைத் தனிமையில் விட்டு விட்டுப் போகக் கூடாது தேவி'' என்று கண்டித்தாள் ஒரு தோழி.

''எங்களையாவது நீங்கள் துணைக்குக் கூப்பிட்டிருக்கலாமே தேவி'' என்று அங்கலாய்த்தாள் மற்றொரு தோழி.

''நீங்கள் வந்து மட்டும் என்ன செய்துவிட முடியும்?'' என்று கேட்டாள்.

இரு தோழிகளுக்கும் புரிந்தது தேவியின் நிலைதான் தங்களுக்குமென்பது. ஆகவே இருவரும் வெட்க நகை கொட்டினார்கள். ''சே. கேவலம், ஆனாலும் கேவலம்'' என்று சொல்லிய தோழியொருத்தி நகைத்தாள். தேவியும் மற்ற தோழியும் அவளுடன் சேர்ந்து நகைத்தார்கள். அவர்கள் நகைத்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் சுவாமியும் கூடாரத்துக்குள் நுழைந்தார். அவர்கள் சிரிப்பை அவர் கவனிக்கவில்லை. அவர் முகத்தில் கவலை பெரிதும் மண்டிக் கிடந்தது. கையிலிருந்த ஒரு வாளைக்

கூடாரத்தின் மூலையில் சாத்திவிட்டு, மடியிலிருந்த ஓர் உருட்டிய இடைக் கச்சையை எடுத்துத் தேவியிடம் நீட்டி, ''தேவி! இதில் என்ன இருக்கிறது பார்'' என்று கூறினார். தேவி அந்தக் கச்சையைப் பிரித்துப் பார்த்ததல்லாமல் மூலையில் சுவாமிகள் சாத்திய வாளையும் பார்த்தாள். அந்த வாளை இடுப்பில் கட்ட ஏற்பட்ட கச்சைதான் அது என்பது அவளுக்குச் சந்தேகமறத் தெரிந்தாலும், கச்சையை வாளிலிருந்து ஏன் பிரித்தார் அவர் என்பதை அறியாமல் தயங்கினாள். அவள் தயக்கத்தைப் புரிந்து கொண்ட சுவாமி, ''சரியாகக் கச்சையை சோதித்துப் பார்'' என்று மீண்டும் கூறினார், கடுமை நிரம்பிய குரலில்.

தேவி கச்சையை தடவிப் பார்த்தாள். அதன் நடு மையத்தில் தைக்கப்பட்டிருந்த பையில் ஏதோ கடின வஸ்து அவள் கைகளுக்குத் தென்படவே அந்த இடத்தில் தனது இரு விரல்களை விட்டு அந்த வஸ்துவை எடுத்துப் பார்த்தாள். அறை விளக்கின் காலை நேர மங்கலான பிரகாசத்திலும் அந்தப் பொருள் பெரும் சுடர்விட்டது. அதைக் கண்ட தேவி மட்டுமன்றி, தோழிகளும் முகத்தில் எல்லையில்லா அச்சம் படர பேச்சிழந்து பிரமைபிடித்து நின்றனர்.

''இது...?'' என்று தேவி ஒற்றைச் சொல்லில் கேள்வி எழுப்பித் தன் பங்கய விழிகளைத் துறவியை நோக்கி எழுப்பினாள்.

''கடலரசன் காணிக்கை... மகாராஷ்டிர சாம்ராஜ்யத் துக்கு'' என்றார் துறவி. அவர் பதிலில் பணிவிருந்தது. மரியாதையிருந்தது, மட்டற்ற கவலையுமிருந்தது. அத்துடன் சொன்னார் துறவி, ''தேவி! இதை உன் உயிர் போல் பாதுகாக்க வேண்டும். எக் காரணத்தைக் கொண்டும் இந்த வாலிபன் கையில் இது கிடைக்காமல் பார்த்துக்கொள்'' என்று.

## அத்தியாயம் 4

# பேசட்டுமா?

படையெடுப்பும், படுநாசமும், மதமாற்றமும், மக்கள் அழிவும், சாத்திரக் கலைச் சிதைவும், சமூக நிலைகுலைவும், பராதீனமும், பார் இகழும் பரிபவமுமே நிறைந்த பாரதத் தின் துன்பம் நிறைந்த வரலாற்றில், இரண்டு பொன் விளக்குகளில் ஒன்றை ஏற்றியவரும் குப்த சாம்ராஜ்யத் தின் பொற்காலத்துக்குப் பின்பு சுமார் பதினொரு நூற்றாண்டுகள் கழித்து— ஹிந்து சாம்ராஜ்யமொன்றைச் சிருஷ்டித்து ஹிந்துக்கள் மானம் மடிந்து மங்காமல் பொற் சுடர் விட்டெறியச் செய்தவருமான சத்ரபதி சிவாஜியின் கைக் கங்கணத்திலாடிய இரண்டு புலிநகங்களில் ஒன்று அன்று தன் கையில் சுடர்விட்டதைக் கண்ட தேவி பேசும் சக்தியை அறவே இழந்து கிடந்தாள். மற்ற மங்கையரும் அதை வைத்த விழி வாங்காமல் பார்த்து நின்றனர்.

அந்தப் புலி நகம் பத்தரை மாற்றுத் தங்கத் தகட்டில் பல வைரங்களுக்கிடையில் பதிக்கப் பெற்றிருந்தாலும், வைரங்களின் சுடர் வீச்சு கண்ணைப் பறித்தாலும் அந்த வைரங்களுக்கிடையே பழுப்பு ஏறிக் கிடந்த அந்தப் புலி நகம், பழுப்பிலும், பெரும் கம்பீரத்தைப் பெற்றிருந்ததை தேவியும் மற்றப் பெண்களும் கண்டனர். அந்தப் புலிநகத்துக்கு மட்டும் வாயிருந்தால் அது எத்தனையோ வீரக் கதைகளைச் சொல்ல முடியும் என்று அவர்கள் உள்ளூர நினைத்தாலும் அதை வாய்விட்டே சொல்ல முற்பட்ட சுவாமிகள், ''இதற்கு வாயிருந்தால் பல வீரக் கதைகளைச் சொல்லும் தேவி! ஆனால் வாய் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது ஒரு கதையைச் சொல்லத் தவற வில்லை'' என்றார் குரலில் உணர்ச்சி பொங்க.

''என்ன கதை சுவாமி அது?'' என்று வினவினாள் தேவியும் குரலில் உணர்ச்சி வழிய.

''சத்ரபதியின் வாழ்க்கைக் கதை. அவரும் இந்தப்
புலிநகத்தைப்போல்தான் இருந்தார், மலைகளில் திரிந்து
வெய்யிலில் உடல் பழுப்பேறி. அவரைவிட இந்த வைரங்
களைப்போல் பளபளத்தார்கள் பெரும்பான்மையான
ராஜபுத்ரர்கள் மொகலாய சாம்ராஜ்ய விளக்கில். தங்கச்
சரிகை ஆடைகளுக்குக் குறைவில்லாமலும், பொன்னுக்கும்
வைர வைடூரிய ஆபரணங்களுக்கும் பஞ்சமின்றியும்
ஜொலித்தார்கள். அக்பர் முதல் அவுரங்கசீப் வரையில்
மொகலாய சாம்ராஜ்ய மந்திரிகளாய், படைத் தலைவர்
களாய் பணி செய்து ஊதியம் பெற்று உவகையுடன்
வாழ்ந்தார்கள். அந்தப் பளபளப்பின் இடையே எழுந்தார்
ஜாகீரற்ற இந்த அனாதை. மலைகளில் திரிந்தார்,
மாவாலிகளுடன் அலைந்தார். மாதாவின் மணிமொழியும்
பரமபக்தரான இராமதாஸின் ராமாயணக் கதையும் தவிர
வேறெதுவும் கேட்காத இந்த வீரர் எழுந்தார். மெல்லத்
தான் எழுந்தார். புலி மெல்லத்தான் எழுகிறது. ஆனால்
எழுந்த பின்பு அது பாய்வது எத்தனை வேகம்! அத்தனை
வேகத்தை மொகலாயச் சக்ரவர்த்தி அவுரங்கசீப் கண்டார்
இந்த மலைப் புலியிடம். மலைப் புலியை மலை எலியென
இகழ்ந்து அதைப் பிடிக்கப் பெரும் முகலாயப் புலிகள்
வந்தன. ஒன்று புலிநகத்துக்கே இரையாயிற்று. புலிநகம்
சரித்திரப் பிரசித்தி பெற்றது. மொகலாயப் பணியாட்கள்
அந்தப் புலிநகத்தைச் சுற்றி நிற்க வேண்டிய வைரக்
கற்களானார்கள். இந்த ஆபரணம் சொல்லும் கதை,
இந்த ஆபரணத்தை அணிந்த ஹிந்து ராஷ்டிரபதியின்
கதை. பாரத நாடு பெருமையுடன் சொல்லிக்கொள்ளக்
கூடிய வெகு சில கதைகளில் ஒன்று...'' என்று சொல்லிக்
கொண்டு போன சுவாமி உணர்ச்சிப்பெருக்கால்
தொண்டையடைத்து வாய் பேச முடியாமல் நின்றார்.

தேவியும் மற்றப் பெண்களும் பேசாமல் மௌனமே
சாதித்தார்கள். அந்தப் புலிநக ஆபரணத்தைப் பார்க்கப்
பார்க்க சிவாஜி மகாராஜாவே நேரில் வந்துவிட்டது
போன்ற பிரமையும், உணர்ச்சியும், மனக் கிளர்ச்சியும்



ஏற்படவே, அதன் கடந்த கால வரலாற்றில் அந்தப் பெண்
களும் திளைத்துக் கிடந்தார்கள். பல வினாடிகளுக்குப்
பிறகு துறவி சுரணை பெற்று, ''தேவி! இந்த ஆபரணத்
துடன் இப்பொழுது இந்த வாலிபன் பிணைக்கப்பட்டிருக்
கிறான்...'' என்றார் மெதுவாக.

தேவியும் பெண்களும் சுவாமியை ஏறெடுத்து
நோக்கிக் கண்களாலேயே வினா எழுப்பவே துறவி
மேலும் கூறினார் ''இந்தக் கச்சை இந்த வாலிபன் கச்சை.
இந்த வாள், இவனுடையது'' என்று.

தேவியின் முகத்தில் சந்தேகம் எழுந்தது. ''அதெப்
படித் தெரியும்'' என்று வினவினாள் சந்தேகம் குரலிலும்
ஒலிக்க.

''வீரன் என்பது அவன் முகத்தில் ஒட்டியிருக்கிறது.
கத்தியில்லாமல் வீரமில்லை. கச்சையில்லாமல் கத்தியு
மில்லை'' என்ற துறவி தொடர்ந்து சொன்னார்: ''தேவி,
இவன் கிழிந்த மேலங்கியில் சமீபத்தில் கச்சை கட்டியதால்
ஏற்பட்ட பட்டை மடிப்பைக் கடற்கரையிலே பார்த்தேன்.
ஆகவே இவன் எந்த மரக்கலத்தில் வந்தாலும் அதில்
அடிமையாகவோ கைதியாகவோ வரவில்லையென்பதை
ஊகித்துக்கொண்டேன். மரக்கலம் இங்கு அருகில் தாக்கப்
பட்டபோது இவன் கடலில் விழுந்து எப்படியோ நீந்தி
வெகுதூரம் வந்திருக்கிறான். கரை வருவதற்குச் சிறிது
தூரத்துக்கு முன்புதான் இவன் பிரக்ஞை இழந்திருக்க
வேண்டும்.'' அத்தனையும் நேரில் பார்த்தவர்போல் துறவி
கூறியதைக்கேட்ட தேவி அவர் ஊகத்துக்குப் பதில் ஏதும்
சொல்லவில்லை. துறவியின் பேச்சை ஆட்சேபிக்காமல்,
''அப்படியானால் நீங்கள் மீண்டும் கடலோரம்
சென்றது...?'' என்று வினவவே செய்தாள்.

''இந்த வாளையும் கச்சையையும் தேடித்தான். இவன்
தமிழனென்பதைக் கடற்கரையில் பார்த்தவுடன் தெரிந்து
கொண்டேன். இவன் நம்மைத் தமிழில் கேள்வி கேட்காமல்
மகாராஷ்டிரத்தில் கேட்டது என் சந்தேகத்தைக்

கிளப்பியது. தவிர, இவன் பேசிய மகாராஷ்டிரம் இலக்கணத்துக்குச் சரியாயிருந்தாலும் உச்சரிப்புக் கொச்சையாயிருந்தது. அத்தகைய மகாராஷ்டிரம் செஞ்சிக் கோட்டையில் பேசப்படுவதில்லை. தஞ்சையில்தான் பேசப்படுகிறது. ஆகவே, தஞ்சையிலிருந்தவன் தரை வழி வராமல் மேல் திசை வந்து கடல் வழி ஏன் வந்தான் என்ற கேள்வியும் எழுகிறதல்லவா? ஆகவே அதைப்பற்றிய அத்தாட்சி என்ன கிடைக்கிறது என்று பார்க்கவே மீண்டும் கடற்கரை சென்றேன். இந்த அத்தாட்சி கிடைத்தது. அதுவும் இரண்டு ஜாமம் தேடிய பிறகு, வடக்குக் கோடியில் வளைந்த கரையிருக்கிறது, பார். அங்கு ஒதுங்கிக் கிடந்தது அது'' என்றார் துறவி.

''அத்தனை தூரத்திலா?''

''ஆம் தேவி.''

''அப்படியானால் நீங்கள் கஷ்டப்பட்டு அலைந்திருக்க வேண்டுமே?''

''கஷ்டப்படாமல் எந்தப் பலன் கிடைக்கும் தேவி? அதுவும் இத்தகைய ஒரு பலன் கிடைக்குமா?''

கிடைக்காது என்பதற்கு அறிகுறியாகத் தேவி தலையை அசைத்தாள். பிறகு ஏதோ சந்தேகம் மேலிடக் கேட்டாள்: ''அப்படியானால் இவன் ஒற்றனா?''

துறவி சற்றுச் சிந்தித்துவிட்டுச் சொன்னார், ''எனக்குத் தெரியாது தேவி! விலைமதிக்க முடியாத இந்த ஆபரணத்தை, இந்த வரலாற்றுச் சின்னத்தை, இவன் கையில் யாராவது கொடுத்திருக்க வேண்டுமானால் இவன் சாதாரண வீரனாயிருக்க முடியாது'' என்று. அத்துடன் தொடர்ந்து, ''இந்த ஆபரணத்தைச் சிவாஜி மகாராஜா தமது புதல்வர் சாம்பாஜிக்குக் கொடுத்தார். சாம்பாஜி மகாராஜா அதை ராஜாராம் மகாராஜாவுக்கு அளித்தார். மொகலாயப் படைகளால் துரத்தப்பட்ட ராஜாராம் செஞ்சிக்குப் பின்வாங்கினார். அவருடன் சென்ற இந்த ஆபரணத்தைப் பிறகு யாரும் பார்க்கவில்லை.



இப்பொழுதுதான் நாம் பார்க்கிறோம். திரும்பி மகாராஷ்டிர ராஜ வம்சத்தின் கையில் பார்க்கவில்லை. தமிழ் வீரன் ஒருவனிடம் பார்க்கிறோம். மீதிக் கதையை இவன்தான் சொல்ல வேண்டும்'' என்று கூறிய துறவி இதயசந்திரன்மீது தமது கூரிய கண்களைத் திருப்பினார்.

அந்த வாலிபன் ஆழ்ந்த நித்திரையில் லயித்திருப்பதைக் கண்ட துறவி, 'இவன் ஏன் இத்தனை நேரம் உறங்குகிறான்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டு, ''தேவி! நீ உன் கூடாரத்துக்குச் சென்று சிறிது பால் அனுப்பு. இவன் அருந்திய மயக்கத் துளிகளுக்கு மாற்று மருந்து கொடுக்கிறேன்'' என்றார். அதைக் கேட்டு வெளியில் செல்ல முயன்ற தேவியை நோக்கி, ''தேவி, கச்சையை நீ எடுத்துச் சென்று மறைத்துவிடு. இவன் கேட்டால் வாள் மட்டுந்தானிருந்தது என்று சொல்லி விடுகிறேன். புலி நகத்தைப் பற்றி யாரும் மூச்சுவிட வேண்டாம்'' என்று எச்சரித்தார்.

அந்த எச்சரிக்கைக்குத் தேவி மட்டுமின்றி, மற்றப் பெண்களும் செவி சாய்த்து அங்கீகரித்துத் தலையசைத்து வெளியே சென்றனர். அவர்கள் சென்றதும் துறவி வெளியே வந்து, ''டேய், யாரங்கே?'' என்று குரல் கொடுக்க, கடைசிக் கூடாரத்திலிருந்து ஓடி வந்த காவலர்களில் வாலிபனான ஒருவனை நோக்கி, ''உன் உடைகளில் ஒன்றைக் கொண்டு வா'' என்று உத்தரவிட்டார். அவன் கொணர்ந்த உடையைக் கொடியில் போட்டுத் தனது மருந்துப் பேழையிலிருந்து ஒரு குப்பியை எடுத்து வெளியில் வைத்துவிட்டு, தமது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வெகு விரைவில் திரும்பினாலும், அதற்குள் கதிரவன் உதயமானதற்கு உண்டான அறிகுறிகள் எங்கும் தெரிந்தன. கதிரவனின் நேர் ஒளி வர நேரமாகுமென்றாலும் மேலைக் கடல் நீரும் கடற்கரையும் சூர்யோதய காலத்தில் புது மெருகைப் பெற்றன. மேற்குத் தொடர்ச்சி மலைப் பாறைகள் கருமையுடன் பளபளத்தன. காட்டு

மரங்கள் காற்றில் தலையசைத்தன. எங்கும் உயிர்த்துடிப்பு உண்டாயிற்று. இருப்பினும் சுவாமி கூடாரத்துக்குத் திரும்பிய பின்பும் இதயசந்திரன் இமைகள் மூடியபடியே கிடந்தன. அதைக் கவனித்த துறவி, ''திராவகத் துளிகளைச் சிறிது அதிகமாகவே கொடுத்துவிட்டேன் போலிருக்கிறது'' என்று தமக்குள் சொல்லிக்கொண்டு அதில் திருப்தியும் காட்டினார். அந்தச் சமயத்தில் தேவியின் தோழியொருத்தி கொணர்ந்த பாலில் மாற்றுத் திராவகத்தைச் சிறிது ஊற்றி மண்டியிட்டு உட்கார்ந்து அவன் மூடிய வாயிதழ்களைத் திறந்து பல்லையும் நீக்கி உள்ளே புகட்டினார்.

மாற்று மருந்து மெள்ள வேலை செய்யவே இரண்டு மூன்று வினாடிகளில் கண்விழித்த இதயசந்திரன் திடீரெனக் கம்பளியை நீக்கி எழுந்திருக்க முயன்றான். ''அடடே! சற்று இரு, சற்றுப் பொறு'' என்று துறவி கூறியதும்தான் அவனுக்குத் தன் நிலை புரிந்தது. ஆகவே சட்டென்று கம்பளியை இழுத்து உடலை மூடிக்கொண்டு, ''சுவாமி! இந்த நிலை...'' என்று தட்டுத் தடுமாறி இழுத்தான்.

''உன் காயங்களுக்குச் சிகிச்சை செய்ய அவசியமாயிற்று. சட்டையைக் கிழித்துக்கொண்டு முதுகில் சிலாம்புகள் பாய்ந்திருந்தன. தவிர, ஆடை முழுவதும் நனைந்திருந்தது'' என்று சுட்டிக்காட்டினார் துறவி பிறகு வீரன் கொண்டு வந்து கொடுத்திருந்த உடையை அவனிடம் போட்டு, ''இதை அணிந்து கொள்'' என்று உத்தரவிட்டார்.

இதயசந்திரன் அன்று காலையில் தன் உடல்நிலை பழைய நிலைக்குத் திரும்பிவிட்டதையும் முதுகு காயங்களின் எரிச்சல் அடியோடு அகன்று விட்டதையும் வலக்கைக் கட்டு இருந்த இடத்தில் வலித்தாலும் கையை நன்றாக அசைக்க முடிவதையும் கண்டு துறவிக்கு மருத்துவம் நன்றாகத் தெரிந்திருக்க வேண்டுமென்று



தீர்மானித்தான். அதனால் ஏற்பட்ட மகிழ்ச்சியுடன் அவர் அளித்த ஆடைகளைக் கம்பளிக்குள் இழுத்து வெகு லாவகமாக அணிந்துகொண்டு மெல்ல எழுந்து நின்றான். அவன் எழுந்ததும், ''காயத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீராடுவதானால் நீராடலாம்'' என்று துறவி அனுமதி கொடுத்ததும் வெளியே செல்ல முயன்ற இதயசந்திரன் கண்களுக்கு மூலையில் சாத்தப்பட்டிருந்த வாள் தெரியவே, அவன் துறவியை ஏறெடுத்து நோக்கினான். அவன் கண்களில் ஏதோ சந்தேகச் சாயை படருவதைக் கண்ட துறவி ஏதுமறியாதவர்போல், ''நீ கிடந்த இடத்திலிருந்து சற்றுத் தள்ளிக் கிடந்தது. திரும்ப நான் சங்கு பொறுக்கச் சென்றபோது கிடந்தது'' என்று விளக்கினார்.

''சங்கு பொறுக்கப் போனீர்களா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''ஆம். இல்லாவிட்டால் நள்ளிரவில் நான் கடற்கரைக்கு வந்தது உன்னைக் காக்க என்று நினைத்தாயா?'' என்று வினவிய துறவியின் குரலில் இகழ்ச்சி ஒலித்தது.

இதயசந்திரன் அந்தக் கூடாரத்தைச் சுற்றுமுற்றும் கவனித்தான். கூடாரத்தின் மூலையில் வெண்சங்குகள் கும்பல் கும்பலாகக் கொட்டப்பட்டிருந்தன. இரவு அவர் குனிந்தும் நிமிர்ந்தும் பொறுக்கியது சங்குகளைத்தான் என்று தீர்மானித்துக் கொண்ட இதயசந்திரன் ''இங்கு சங்குகள் அதிகமோ?'' என்று வினவினான்.

''இங்குதான் அதிகம் தமிழா! இந்தக் கொங்கண நாட்டுக் கடல் உலகத்தின் மிகச் சிறந்த சங்குகளுக்குப் பெயர் போனது. இங்குள்ள பிரபல குடிமக்களில் ஒரு சாராருக்கு சங்கபாலர் என்று பெயரும் உண்டு. இந்தக் கடற்கரையில் எப்பொழுதாவது ஒருமுறை வலம்புரிச் சங்கு கிடைக்கும். அதை அடைபவன் பெரும் கீர்த்தி

யடைகிறான். தெய்வீக பலமும் அவனுக்கு ஏற்படுகிறது'' என்று துறவி விளக்கிச் சொன்னார்.

இதைக் கேட்டுத் தலையசைத்த இதயசந்திரன் வேறெதுவும் பேசாமல் கடற்கரை நோக்கி நடந்தான். கடற்கரையை அடைந்ததும் அதன் ஓரமாகத் தெற்கும் வடக்கும் சென்று அலைந்துவிட்டுக் கடைசியில் ஆடை களைந்து, கடலில் நீராடிவிட்டு, சுவாமி அளித்த காவித் துண்டால் தலை துவட்டி, பழையபடி வீரன் உடை யணிந்து கூடாரத்துக்கு வந்து சேர்ந்தான். அவன் வருவதற்குள் சுவாமி பூஜையை முடித்துவிடவே, காலை உணவு பரிமாறப்பட்டது. சுவாமியுடன் உணவருந்திய இதயசந்திரன் சுவாமியை ஏதும் கேட்கவில்லை. அவன் கச்சையைத் தேடவே கடலோரம் சென்றிருக்கிறான் என்பதை உணர்ந்த சுவாமிக்கு, அன்று பகல் முடிய அவன் ஏதும் கேட்காதிருந்தது விசித்திரமாயிருந்ததன்றி, அவன் மன ஆழமும் அவருக்கு நன்றாகப் புரிந்தது.

அன்று பகலில் மீண்டும் இதயசந்திரன் நன்றாக உறங்கினான். மாலை நேரத்தில் கூடாரங்களை வீரர்கள் பெயர்த்துச் சுருட்டினார்கள். தயாராயிருந்த பல்லக்கு களிரண்டில் தேவியும் தோழிகளும் ஏறிக்கொள்ள, வீரர்கள் காவல்புரிந்து வர, சுவாமியைச் சேர்ந்த கூட்டம் தெற்கு நோக்கிக் கிளம்பியது. சுவாமியின் கட்டளைப்படி அளிக்கப்பட்டிருந்த புரவியொன்றில் ஏறிச் சென்ற இதய சந்திரன், 'எங்கு போகிறோம் ஏன் போகிறோம்?' என்பதைப் பற்றி ஏதும் கேட்காமல் மௌனமாகவே பயணம் செய்தான்.

அவன் பேசாமடந்தையாகிவிட்டது சுவாமிக்கு விசித்திரமாயிருந்தது, தேவிக்கும் விசித்திரமாயிருந்தது. அன்றிரவு நடுநிசி வரையில் பயணம் நடந்ததும் ஒரு காட்டின் நடுவில் சுவாமி பயணத்தை நிறுத்திக் கூடாரங் களை அமைக்க உத்தரவிட்டார். கூடாரங்கள் அமைக்கப் பட்டதும் அனைவரையும் உண்டு உறங்கச் செல்லும்படி



யும், விடியற்காலை பயணம் துவங்குமென்றும் உத்தரவிட்ட துறவி தமது கூடாரத்துக்குள் சென்றார்.

சுவாமியை இதயசந்திரன் தொடரவில்லை. இதயத் தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்துலவ, காட்டின் ஊடே உலாவினான். அடர்ந்த மரங்கள் ஆகாயமளாவி நின்றன. அப்படி நின்ற மரமொன்றின் அடியில் அவன் சாய்ந்து நின்று ஏதோ யோசித்துக் கொண்டே கண்களை மூடினான். கண்ணை நீண்ட நேரம் கழித்துத் திறந்த போது அவன் எதிரே தேவி நின்றிருந்தாள். தூரத்தில் மரத்தில் கட்டப்பட்ட விளக்கு வெளிச்சம் அவள் முகத்தில் நன்றாயடிக்கவே அவள் புன்னகை கோட்டியிருந்ததை அவனால் கவனிக்க முடிந்தது.

''உறக்கம் பிடிக்கவில்லையா தேவி?'' என்று தட்டுத் தடுமாறிக் கேட்டான் இதயசந்திரன்.

பதிலுக்கு அவள் நகைத்தாள். ''உங்களுக்குப் பேச வேறு வருமா?'' என்று வினவவும் செய்தாள்.

''வரும்.''

''அப்படியானால் பகல் முழுதும் ஏதும் பேச வில்லையே நீங்கள்?''

''அது கிடக்கட்டும், இப்போது பேசட்டுமா?''

''பேசுங்களேன்.''

அவன் பேசினான். பேச்சைக் கேட்டு அவள் வாயடைத்து நின்றாள். ''அப்படியானால் நீங்கள்...'' என்று திகிலுடன் குழறினாள். பேச்சு அத்தனைப் பயங்கரமாயிருந்தது அவள் செவிகளுக்கு.

அத்தியாயம் 5

# இதயசந்திரனின் இரகசியம்

இதயசந்திரனின் இனிய இதழ்களிலிருந்து இதயத்தைத் துடிக்கவைக்கும் அத்தனை பயங்கரச் சொற்கள் வெளிப்படுமென்று மட்டும் அந்த இளங்கிளி முன்னதாக அறிந்திருந்தால், அவள் அவனைத் தொடர்ந்து வந்தும் இருக்கமாட்டாள். வந்தாலும் அவன் வாயைக் கிளறியும் இருக்கமாட்டாள். இத்தனைக்கும் அவள் 'பேசுங்களேன்' என்று தூண்டிய பிறகும் அவன் உடனடியாகப் பேச்சுக் கொடுக்காமல் அவளைச் சில வினாடிகள் இருந்த இடத்திலிருந்து ஆராயவே செய்தான். அவன் சாய்ந்திருந்த மரத்திலிருந்து சற்றுத் தள்ளியிருந்த மரத்தில் கட்டப்பட்டிருந்த மண்ணெண்ணெய் விளக்கின் ஒளி அவள் வதனத்தில் பட்டதால் அந்த முகத்தின் அழகைக் கண்டு அவன் பெரிதும் பிரமிப்படைந்து நின்றான் அவளை முழு உணர்ச்சிகளுடன் முதன்முதலாக அப்பொழுதுதான் பார்த்தானாகையால் அவள் மதி முகத்தின் முழு லாவண்யமும் அவன் கண்கள் மூலமாகச் சித்தத்துள் பாய்ந்து அவனை ஏதோ செய்து கொண்டிருந்தது.

நேரம் நள்ளிரவை எட்டிவிட்டதால் அந்தக் காட்டின் தொலை மூலைகளிலிருந்து துஷ்ட மிருகங்கள் உறுமும் ஒலிகள் காதுகளுக்குப் பயங்கரமாக எட்டிக்கொண்டிருந்தன. அவள் நின்றிருந்த இடத்திலிருந்து வெகுதூரம் தள்ளி வீரர்கள் இருவர் மூட்டிய நெருப்பில் சுள்ளிகள் வெடித்தது கூட அந்த இரவின் கடுமையையும் சூழ்நிலைகளின் கொடுமையையும் அதிகப்படுத்திக் காட்டியது. ஆகாயமளாவி நின்ற காட்டு மரங்களின் கிளைப் பொந்துகளில் நல்ல சப்தம் செய்யும் பறவை இனங்கள் உறங்கிவிட்டாலும் உறங்காத ஆந்தைகள் மட்டும் ''ஹூம், ஹூம்'' என்ற தங்கள் விபரீத ஹூங்காரத்தைக் கிளப்பிக் கொண்டிருந்ததால்



கண்ணுக்கோ காதுக்கோ இன்பமற்ற சூழ்நிலையே எங்கும் நிலவிக்கிடந்தது. அத்தகைய சூழ்நிலையில் இன்பம் இரக்கம் இரண்டையும் அள்ளிக் கொட்டிய தேவியின் அழகிய வதனம் எத்தனை மாறுபட்ட அமுதத்தைத் தன கண்களில் பாய்ச்சிவிட்டது என்பதை எண்ணி வியந்தான் இதயசந்திரன்.

உக்கிரமான சூழ்நிலையில் அவள் மோகனத் தோற்றம் எத்தனை மிகைப்பட்டுத் தெரிந்தது என்பதை நினைத்துப் பார்த்த இதயசந்திரன் உக்கிரத்துக்கும் சிருங்காரத்துக்கும் பெருத்த சம்பந்தமிருப்பதைப் புரிந்துகொண்டான் அந்தச் சில வினாடிகளில். 'அழகிய மின்னலைத் தொடர்ந்துதான் திகிலை விளைவிக்கும் இடி இடிக்கிறது. உக்கிரமான கடலலைகள்தானே அழகிய சங்குகளையும் கிளிஞ்சல்களையும் புரட்டிக்கொண்டு கரையில் தள்ளுகின்றன? அசுரரும் தேவரும் மலையிட்டுக் கடலை உக்கிரமாகக் கடைந்த பின்புதானே அமுதம எழுந்தது. சந்திரன் எழுந்தான், திருவும் எழுந்தாள்' என்று சிந்தித்த இதயசந்திரன், 'முரட்டு மரங்கள் சூழ்ந்த இந்தக் காட்டின் நடுவில் இவள் புஷ்பக் கொடிபோல் நிற்பது எத்தனை இன்பமாயிருக்கிறது?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். துஷ்ட மிருகங்களின் உறுமலுக்கிடையில், ''பேசுங்களேன்,'' என்று அவள் கேட்டது இசையின் நாதத்தைத் தோற்கடித்ததையும் எண்ணிப்பார்த்தான்.

அவள் முகத்துக்குத் தூரத்திலிருந்த விளக்கொளி மெருகு கொடுத்ததா அல்லது விளக்கொளிக்கு அவள் முகம் மெருகு கொடுத்ததா என்பது புரியவில்லை அவனுக்கு. அவள் இதழ்களிலிருந்த புன்னகையைவிட ஒரு பெரிய மோகனாஸ்திரம் இருக்கமுடியாதென்பதை அவன் ஊர்ஜிதம் செய்துகொண்டாலும் அந்தப் புன்னகையில் ஏதோ அதிகாரத் தோரணையிருப்பது மட்டும் புரிந்தது அவனுக்கு. அவள் நின்ற தோரணையிலும் அந்த அதிகாரம் நன்றாகத் தெரிந்தது. ஒரு ஆண் மகனைத் தனிமையில் சந்திக்க வந்த நேரத்திலும் அவள் கால்கள்

மிக உறுதியுடன் நிலத்தில் நின்றதையும் சிற்றிடை ஒய்யாரமாக வளைந்திருந்தாலும் அதிலும் ஒரு பெருந்தோரணையே புலப்பட்டதைக் கண்ட இதயசந்திரன், அந்தத் தோரணையைச் சற்று உடைக்கத் தீர்மானித்தான். அதன் விளைவாக உதிர்த்தான் அந்த இரக்கமற்ற சொற்களை, ''தேவி! எனக்கு ஒரு விஷயம் மிக்க மகிழ்ச்சியளிக்கிறது'' என்று துவங்கிய இதயசந்திரன் இதழ்கள் இளநகை கொண்டன.

தேவியின் இதழ்களில் புன்னகை நன்றாக விரிந்தது. ''எந்த விஷயம் வீரரே?'' என்று வினவினாள் தேவி இன்பம் சொட்டும் குரலில்.

''பதக்கம் உங்களிடமிருப்பது'' என்ற இதயசந்திரன் தனது இதழ்களில் புன்னகையைச் சற்று அதிகமாகவே படரவிட்டான்.

ஆனால் தேவியின் இதழ்களில் புன்னகை மறைந்தது. இதழ்கள் இறுகி மெல்லத்துடிக்கவே செய்தன. ''அப்படியானால்... நீங்கள்...'' என்று ஏதும் தொடர்ச்சியாகச் சொல்லமுடியாமல் குழறினாள்.

இதயசந்திரன் மரத்தில் நன்றாகச் சாய்ந்துகொண்டு கேட்டான், ''நான்... என்ன?'' என்று.

''நீங்கள் விழித்துக் கொண்டுதானிருந்தீர்களா?'' என்று வினவினாள் தேவி.

''எப்பொழுது?'' இதயசந்திரன் கேள்வி சர்வசகஜமாக எழுந்தது.

''சுவாமி என்னிடம்...'' என்று துவங்கிய தேவி பேச்சைப் பூர்த்தி செய்யவில்லை. 'ஒருவேளை இவர் ஊகத்தால் ஏதாவது கேட்டால் நான் எதற்காக உளற வேண்டும்?' என்ற எண்ணத்தால் பேச்சை அடக்கிக் கொண்டாள்.

இதயசந்திரன் அதைப் பூர்த்தி செய்தான். ''ஆமாம் தேவி! சுவாமி உங்களிடம் பதக்கத்தைப் பாதுகாக்கச்



சொன்னது எனக்குத் தெரியும். சத்ரபதியின் வரலாற்றை சுவாமி உங்களுக்கு விளக்கிய போதே நான் விழித்துக் கொண்டேன்'' என்று கூறினான் இதயசந்திரன்.

''அப்படியானால் உறங்குவதாகப் பாசாங்கு செய்தீர்களா?''

''பாசாங்கு என்று அதைச் சொல்ல முடியாது.''

''வேறு எப்படிச் சொல்வது?''

பிறர் ரகசியம் பேசும்போது கண்ணியமானவன் செய்யக் கூடியது என்று சொல்லலாம்.''

''அதாவது...''

''காதில் விழுந்தாலும் விழாததுபோல் இருந்து விடுவது.''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தேவிக்குத் தெரியவில்லை. கடைசியில் சிறிது தைரியத்துடன் கேட்டாள், ''வேறு என்ன விழுந்தது காதில்?'' என்று.

''கத்தியில்லாமல் வீரனில்லை, கச்சையில்லாமல் கத்தியில்லை'' என்று சுவாமி அன்று காலையில் அவளிடம் சொன்ன வார்த்தைகளை அப்படியே திருப்பிச் சொன்னான் இதயசந்திரன்.

தேவிக்கு அதுவரையில் சந்தேகம் ஏதாவதிருந்தால் அது அடியோடு அகன்றுவிட்டது. சுவாமி தங்களிடம் பேசியதில் ஒரு பகுதியை— அதுவும் முக்கிய பகுதியை— அவன் கேட்டுவிட்டான் என்று நன்றாக விளங்கியது. அவள் திடமாகக் கேட்டாள், ''அடுத்து நீங்கள் என்ன செய்ய உத்தேசம்?'' என்று.

''எதுவும் செய்ய உத்தேசமில்லை'' என்றான் இதயசந்திரன்.

''பதக்கத்தைத் திருப்பிப் பெற உத்தேசமில்லையா?'' என்று அவள் மீண்டும் கேட்டாள்.

''இல்லை.''

''அப்படியானால் அது என்னிடம்...?''

''பத்திரமாயிருக்கட்டும்.''

''அது உங்களுக்குத் தேவையில்லையா?''

''தேவையிருந்தால் கொடுப்பீர்களா?''

''சுவாமி உத்தரவிட்டால் கொடுத்து விடுகிறேன்.''

இதயசந்திரன் மெல்ல நகைத்தான். ''சுவாமி உத்திர விடமாட்டார்'' என்றான் அந்த நகைப்பைத் தொடர்ந்து.

தேவியின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. ''அதெப்படி அத்தனை திட்டமாகத் தெரியும் உங்களுக்கு?'' என்று வினவிய அவள் குரலிலும் சற்று குழப்பம் தெரிந்தது.

அந்தக் கேள்விக்கு அவன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. ''தேவி! இந்தக் காட்டின் சூழ்நிலை உங்களுக்குப் பயத்தை அளிக்கிறதா?'' என்று வினவினான் சம்பந்தமில்லாமல்.

''அடவியைக் கண்டு நான் என்றுமே பயந்ததில்லை'' என்றாள்.

''அப்படியானால் என்னுடன் சிறிது தூரம் வருகிறீர்களா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

இந்த அழைப்பு தேவியைச் சற்று அயரவைத்தது. எதற்காக அவன் தன்னைக் காட்டுக்குள் அழைக்கிறான் என்று எண்ணி, சற்று பயங்கூட அடைந்தாள் அவள். அவள் அலட்சியத்தையும் முகத்தில் கண்டபோது தோன்றி மறைந்த அச்சத்தையும் அவன் கூரிய விழிகள் கவனிக்கத் தவறாததால், ''தேவி! தனிமையிலிருக்கும் பெண்களுக்குத் தீங்கிழைக்கும் கயவர் குலத்தில் இதயசந்திரன் பிறக்கவில்லை'' என்று சற்று அழுத்தியே கூறிய இதயசந்திரன், ''உங்களுக்கு இஷ்டமில்லையேல் திரும்பவும் கூடாரத்துக்குச் செல்லுங்கள்'' என்றும் தெரிவித்தான்.



தேவி ஒரு வினாடி அசைவற்று நின்றாள். 'இதயசந்திரன், இதயசந்திரன்...'' என்று இருமுறை அந்தப் பெயரை அவள் வாய் முணுமுணுத்தது. ''அப்பா! என்ன அழகான பெயர்!'' என்று அவள் சிந்தையும் சிலாகித்தது.

அவள் வாய் தனது பெயரை முணுமுணுத்ததைக் கவனித்த இதயசந்திரன் இதயத்தில் அமுத வெள்ளம் பாய்ந்தது. தனது பெயரை சுவாமிகளின் பரிவாரத்தில் அவளே முதன் முதலில் அறிந்ததுகூட அவனுக்கு மகிழ்ச்சியளித்தது. அந்த மகிழ்ச்சியுடன் கூறினான் அவன், ''பெயர் அப்படியொன்றும் விகாரமில்லையென்று நினைக்கிறேன்'' என்று.

''விகாரமா!'' என்று அவனை ஏறெடுத்து நோக்கிய தேவி, ''அழகான பெயர் வீரரே உங்கள்...'' என்று ஏதோ சொல்லப் போய் வாயை மூடிக்கொண்டாள். ''உங்கள் உருவத்தைப் போலவே அழகானது'' என்று தப்பிச் சொல்லிவிட இருந்தவள் சமயத்தில் தவறை உணர்ந்து வாயை மூடிக்கொண்டாலும் முகத்தில் நாணம் பிரதிபலித்ததால் மீதி வார்த்தைகளை இதயசந்திரன் ஊகித்துக் கொண்டான். அதற்குமேல் அவளைச் சங்கடத்துக்குள் ஆழ்த்த விருப்பப்படாத அந்த வாலிபன், ''தேவி! நீங்கள் கூடாரத்துக்குச் செல்லுங்கள். நான் இந்தக் காட்டைச் சற்று சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று கூறி விட்டுச் சாய்ந்திருந்த நிலையிலிருந்து அகன்று காட்டுக்குள் செல்லத் துவங்கினான்.

அவன் காலடி எடுத்து வைத்ததும், ''இருங்கள்'' என்ற தேவி அவனை நெருங்கினாள்.

''நீங்களும் வருகிறீர்களா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''ஆம்'' என்றாள் தேவி.

''நன்றி தேவி.''

''எதற்கு நன்றி?''

''என்னிடம் நம்பிக்கை வைத்ததற்கு.''

''என்ன நம்பிக்கை வைத்துவிட்டேன் உங்களிடம்?''

''என்னுடன் காட்டுக்குள் தனித்து வர ஒப்புக் கொண்டீர்களல்லவா?''

''அதனாலென்ன?''

''என் கண்ணியத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருப்பதற்கு அது அடையாளம்'' என்று கூறிய இதயசந்திரன் காட்டின் ஊடே நடந்தான். அவளும் அவன் பக்கத்தில் நடந்தாள். அப்படி நடந்த அந்த இருவர் உள்ளத்திலும் ஏதேதோ எண்ணங்கள் உலாவிக் கொண்டிருந்தன. அந்த தமிழனுடன் தனிமையில் காட்டுக்குள் செல்லத் தனக்கேற்பட்ட துணிவை நினைத்து வியந்தாள் தேவி. தன்னைக் காணாமல் தனது தோழிகள் தேடினால் என்ன செய்வது என்ற பீதியும் அவள் சிந்தனையைப் பிடித்தது. நீண்ட நேரம் கழித்துக் கூடாரத்துக்குத் திரும்பினால், 'எங்கு இத்தனை நேரம் போயிருந்தீர்கள்?' என்று தோழிகள் வினவினால் என்ன சொல்வது என்றும் அவள் யோசித்தாள். சுவாமி காதுக்கு இது எட்டினால் என்ன ஆகும் என்ற நினைப்பும் அவள் இதயத்தைச் சற்றுக் கலக்கியது. இத்தனைக் கலக்கத்திலும் அவனருகே நடந்து சென்றது அவளுக்கு இன்பத்தையும் மகிழ்ச்சியையுமே அளித்தது. 'இவரைக் கண்காணிக்க சுவாமி எனக்கு உத்தரவிட்டிருக்க, நான் இவரைத் தொடருவது எப்படித் தவறாகும்?' என்றும் ஒரு கேள்வியைக் கேட்டுக்கொண்டு, தான் அவனுடன் செல்வதற்கு ஒரு காரணமும் கற்பித்துக்கொண்டாள்.

அவனுடன் நடந்த அவள்தான் அவனைப்பற்றி நினைத்துக்கொண்டு நடந்தாளே தவிர, இதயசந்திரன் மனத்தில் அவளைப் பற்றிய நினைப்பு ஏதுமேயில்லை. மரத்தடியில் நின்றபோது அவள் லாவண்யத்தில் மயங்கிய



இதயசந்திரன் இதயத்திலிருந்து அந்த முகம் அடியோடு மறைந்திருந்தது. ஆகவே மௌனமாகவே அவன் நடந்தான். ''என்ன மறுபடியும் மௌன சுவாமியாகி விட்டீர்கள்?'' என்று தேவி வினவிய பின்புதான் அவன் சிந்தனைக் கனவிலிருந்து மீண்டான். மீண்டதும் திரும்பி அவளைக் கவனித்த அவன் கண்களில் சோகம் படர்ந்து கிடந்தது. ''தேவி! இப்படி உட்காருங்கள்'' என்று கீழே ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டினான். அவள் உட்கார்ந்ததும் தானும் எதிரே உட்கார்ந்துகொண்டு, ''தேவி! உங்களை நான் இங்கு ஏன் அழைத்து வந்தேன் என்பது உங்களுக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் வேறு வழியில்லை தேவி. நான் உங்களிடம் சொல்லப் போவதை வேறு யாரும் கேட்பதற்கில்லை. கூடாரத்துக்கு அருகிலிருக்கக்கூடிய வீரர்களோ, உங்களை அங்கு தேடி வரக்கூடிய தோழிகளோ என்னைக் கண்காணித்து வரும் சுவாமிகளோ, யாரும் இதைக் கேட்பதற்கில்லை'' என்ற இதயசந்திரன் அவளை உற்று நோக்கினான்.

தேவி பதில் சொல்லவில்லை. அவள் மனம் திக் திக்கென்று அடித்துக்கொண்டது. இதயசந்திரனே பேசினான். ''தேவி! உங்களிடம் பதக்கமிருக்கிறதல்லவா...'' என்று துவங்கினான் குரலில் உணர்ச்சி பொங்க.

''ஆம்'' என்றாள் தேவியும் உணர்ச்சி நிரம்பிய குரலில்.

''அத்துடன் வரலாறு பிணைக்கப்பட்டிருக்கிறது என்று சுவாமி கூறினார் உங்களுக்கு...'' என்றும் தொடர்ந்தான் தமிழன்.

''ஆம்.''

''அவர் கூறிய வரலாறு அனைவருக்கும் தெரியும். அவர் அறியாத வரலாறும் இருக்கிறது தேவி'' என்றான் தமிழன்.

தேவியின் கண்கள் அவனை ஏறெடுத்து நோக்கின. அவன் முகம் உணர்ச்சிப் பிழம்பாயிருந்தது. அதில் பெரும் பிரமிப்பும் பக்தியும் கவலையும் காணப்பட்டது. அந்தக் கவலையுடன் சொற்களும் உதிர்ந்தன அவன் வாயிலிருந்து. ''அந்தப் பதக்கம் ஒரு பெண்ணுடையது. அவள் வாழ்க்கை அந்தப் பதக்கத்துடன் பிணைக்கப்பட்டிருக்கிறது'' என்ற இதயசந்திரன் குரல் நடுங்கியது.

''அவள்...'' என்று தயங்கிக் கேள்வி எழுப்பினாள் தேவி.

''அழகில் நிகரற்றவள்'' என்ற இதயசந்திரன் தனது இதயத்தையே திறந்து கொட்டுவதுபோல் சொற்களைத் திறந்து கொட்டினான்.

உட்கார்ந்த நிலையில் தேவி ஸ்தம்பித்துவிட்டாள். பதக்கத்தின் இரகசியத்தை மெள்ள விவரிக்கத் தொடங்கினான் இதயசந்திரன். பதக்கத்தின் இரகசியத்தில் ஒரு பெண்ணின் இரகசியம் மட்டுமல்ல, இதயசந்திரன் இரகசியமும் அதில் பிணைந்து கிடப்பதை தேவி அறிந்தாள்.

## அத்தியாயம் 6

# புதுக் குரல்

பதக்கத்தின் இரகசியத்துடன் ஒரு பாவையின் இரகசியமும் பிணைக்கப்பட்டிருப்பதாக இதயசந்திரன் இதயமுருகிப் பேசிய பேச்சு தேவிக்கு வியப்பை மட்டுமின்றி, சிறிது கசப்பையும் அளிக்கவே செய்ததால் அவள் மௌனமாகவே அமர்ந்திருந்தாள். அவள் அமர்ந்திருந்த இடம் அடர்த்தியான காடானாலும் இலைகளின் இடுக்குகள் வழியாக அவள் மேல் சிறுசிறு வட்டங்களாக விழுந்த நிலவு வெளிச்சம் அவளுக்கு வெள்ளி நாணயங்களால் நெய்யப்பட்ட ஆடையைப் போர்த்தியிருந்தது. அவள் தலையில் சிறிது நழுவியிருந்த முக்காட்டின் மேலும் முக்காடில்லாத இடத்தில் தெரிந்த குழல் வகிட்டின் மேலுங்கூட நிலவு நாணயங்கள் விழுந்து இயற்கை நகைகளை அவளுக்கு அணிவித்ததால் தேவி அப்பொழுது வனதேவதை போலவே விளங்கினாள். நல்ல ரசிகனாயிருப்பவன் அந்தத் தோற்றத்தை ரசிக்கத் தவறியிருக்கமாட்டான். இதயசந்திரனும் ரசிகனேயானாலும் அவன் மனநிலை ரசிகத் தன்மையை அறவே இழந்திருந்தது அந்தத் தருணத்தில். உணர்ச்சி புரண்டிருந்ததால் அவன் கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். பார்வையிழந்த புறக்கண்கள் தேவியைப் பார்த்தன. பார்வையுள்ள அகக் கண்களில் வேறொரு பெண் நடமாடிக் கொண்டிருந்தாள். அவளைத் தொடர்ந்த கண்கள் புறக்கண்களின் பார்வையின் சக்தியை உறிஞ்சிவிட்டதால் வெறித்த பார்வையுடன் அந்த வாலிபன் தேவியைப் பார்த்தான். அவன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களில் அவன் கனவுலகம் விரிந்தது. ''தேவி! நான் சொல்லப் போவது ஒரு சோகக் கதை. வரலாற்றுக் கதைதான் அது. வரலாற்றிலும் நாம் விரும்பாத கதைகள் எத்தனை எத்தனை தோன்றியிருக்கின்றன! அத்தகைய கதைகளில்

இதுவும் ஒன்று தேவி! என்று அவன் போட்ட பூர்வ பீடிகை, அந்தப் பீடிகையில் ஒலித்த உணர்ச்சி, அவளை யும் அவன் கனவுலகத்துக்குக் கூட்டிச் சென்றிருக்க வேண்டும். ஆகவே தேவி மௌனத்தைக் கலைத்து ஒரு 'ஹூம்' மாத்திரம் கொட்டினாள். அந்த ஹூங்காரத்தில் ஒரு சோகம் இருந்தது. 'அழகில் நிகரற்றவள் என்று சொன்னாரே இவர்! அவள் யார் அத்தனை அழகி?' என்ற கேள்வியும் அந்த ஹூங்காரத்தின் ஊடே ஒலித்தது. அந்தக் கேள்வியில் சோகத்துடன் கசப்பும் கலந்திருந்தது. ''அத்துடன் அந்த அழகிக்கும் வரலாற்றுக்கும் என்ன சம்பந்தம்? அத்தனை பெரியவள் யார்? அரச குடும்பத் தினளாயிருந்தால் எனக்குத் தெரியவேண்டுமே!'' என்றும் உள்ளத்தே கேட்டுக்கொண்டு 'இது சுவாமிக்கும் தெரியாத வரலாறாமே!' என்று வியப்பும் அடைந்தாள்.

இப்படிக் கசப்பும் வியப்பும் மாறிமாறி எழுந்த உணர்ச்சிகளுடன் ஹூங்காரத் தொனியைத் தவிர வேறு ஒலி எழுப்பாத தேவியை நோக்கிய இதயசந்திரன் மேலும சொன்னான், ''தேவி! சுவாமிகள் கூரிய அறிவுடையவர். அவர் கண்ணிலிருந்து எதுவும் தப்பாது என்பதைப் புரிந்து கொண்டேன். என் மேலுடைப் பட்டையின் மடிப்பி லிருந்து நான் வாளணிந்திருக்க வேண்டும் என்று ஊகித்து அவர் எனக்குத் தூக்க மருந்து கொடுத்து வாளையும் கச்சையையும் தேடிக்கொணர்ந்தது வியக்கத்தக்க விஷயந் தான். கச்சையை உங்களிடம் கொடுத்து மறைத்ததும், அவர் நிலையில் இருந்தால் யாரும் செய்யக்கூடிய காரியந் தான். ஆனால் அந்தக் கச்சையிலிருந்தோ பதக்கத்தி லிருந்தோ அவர் தெரிந்து கொள்ளக்கூடியது அதிகமல்ல. அவருக்குத் தெரிந்ததெல்லாம் பதக்கம் சத்ரபதியி னுடையது, அவர் முதல் மகன் சாம்பாஜிக்குக் கொடுக்கப்பட்டது, பிறகு இரண்டாம் மகனான ராஜா ராமிடம் சேர்ந்தது, இத்தனைதான். அத்துடன் அவர் அறிந்த வரலாறு நின்றுவிடுகிறது. அதாவது மகாராஷ் டிரத்துடன் அவர் ஆராய்ச்சி நின்றுவிடுகிறது. ஆனால்



நான் சொல்லும் வரலாறு துவங்குவது மகாராஷ்டிரத்தி லல்ல; தமிழகத்திலிருந்து துவங்குகிறது அதுவும் பெரும் சாம்ராஜ்யங்களை நிறுவிய சோழப் பெரு மன்னர்களின் தலைநகரமான தஞ்சையிலிருந்து துவங்குகிறது.''

இந்த இடத்தில் சற்று நிதானித்த இதயசந்திரன், ''ஆம் தேவி! தஞ்சையிலிருந்துதான் துவங்குகிறது. ஏற் கெனவே ஒரு சந்தேகம் கிளப்பினார் சுவாமிகள், தஞ்சை யிலிருந்து இங்கு வந்த நான் ஏன் கப்பல் மார்க்கமாக வந்தேன் என்று. வந்ததற்குக் காரணமுண்டு. ஒருவனைத் தேடி வந்தேன். ஒரு பெண்ணை நிர்க்கதியாக்கிய ஓர் அயோக்கியனைத் தேடி வந்தேன். அவன் கேரளத்திலிருப்ப தாகப் புலன் கிடைத்தது. தஞ்சையிலிருந்து கேரளம் வந்தேன். அங்கிருந்து அவன் கார்வார் துறைமுகம் போய்விட்டதாகச் சொன்னார்கள். கார்வார் சென்று கடல் வழி வந்தேன். நான் வந்த கப்பல் கொள்ளைக் காரரால் தாக்கப்பட்டது. கடலில் விழுந்தேன். பிறகு நீங்கள் சொல்லியபடி பரசுராமன் திருவடியில் விழுந்தேன். ஆனால் இன்னும் அவனை நான் காண வில்லை. காணும் வரையில் விடப்போவதில்லை. கண்ட பின் எங்கள் இருவரில் யார் உயிருடன் இருப்போமோ சொல்லமுடியாது. என் உயிர் போகலாம். ஆனால் அவன் உயிர் போவதற்கு முன்பு என் உயிர் நிச்சயமாகப் போகாது...'' என்று கூறினான். உணர்ச்சிப் பெருக்கால் அவன் உதடுகள் துடித்தன.

தேவி அவன் முகத்தைச் சற்று ஏறெடுத்து நோக்கினாள். முகம் கடுங்கோபத்தால் சிவந்து கிடந்தது. உதடுகளில் தெரிந்த கடுமை சொல்லத் தரமற்றிருந்தது; கண்கள் நன்றாக நெருப்பில் காய்ந்த இரும்புத் துண்டங்கள்போல் இருந்தன. இதயசந்திரன் ஒரு விநாடி தான் உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு இடங்கொடுத்தான். மறுவிநாடி தன்னை அடக்கிக்கொண்டு மேலும் கதையைச் சொல்லத் துவங்கி, ''தேவி! மகாராஷ்டிரத்தில் இன்று இரண்டு அரசர்கள் இருக்கிறார்கள், அதாவது இரண்டு

சிவாஜிகள் இருக்கிறார்கள். ஒரு சிவாஜி இருந்த காலத்தில் ஹிந்து சாம்ராஜ்யம் உருவாயிற்று. இரண்டு சிவாஜிகளின் காலத்தில் சாம்ராஜ்யம் உடைந்து நிற்கிறது. ஆனால் இந்த மகாராஷ்டிர மகுடத்துக்கு வாரிசு இருவர் மட்டுமல்ல தேவி! இன்னும் ஒருவரும் உண்டு...'' என்று கூறிய இதயசந்திரனை, ''என்ன! என்ன! இன்னும் ஓர் அரசனா!'' என்று துடிப்புடன் இடைமறித்துக் கேட்டாள் தேவி.

''ஆம் தேவி! இன்னும் ஓர் அரசன் இருக்கிறான். இப்பொழுது அவன் இருப்பிடம் தெரியவில்லை. அப்படியொருவன் உண்டு என்பதே யாருக்கும் தெரியாது. ராஜாராம் மகாராஜாவின் கடைசி மனைவியின் மகன் அவன்'' என்று மற்றுமொரு திடுக்கிடும் செய்தியை எடுத்து வீசினான் இதயசந்திரன்.

''இரண்டாவது மனைவியின் மகன் என்று சொல்லுங்கள். கடைசி மனைவி அம்பிகாபாய்க்குப் பெண்தானே. மகன் ஏது?'' என்று கேட்டாள் தேவி.

''இரண்டாவது மனைவியைச் சொல்லவில்லை. தாராபாயையும் ராஜஸாபாயையும் அம்பிகாபாயையும் தவிர செஞ்சிக் கோட்டையில் மணந்த வேறு ஒரு மனைவியும் ராஜாராம் மகாராஜாவுக்கு உண்டு'' என்றான் இதயசந்திரன்.

தேவிக்கு அவன் கூறியது பெரும் விந்தையாயிருந்தது ''சத்ரபதியின் இரண்டாவது மகனுக்கு அப்படியொரு ரகசிய மனைவியும் உண்டு என்பது விசித்திரமான செய்தி வீரரே'' என்றாள் குரலில் பெருவியப்பைக் காட்டி.

''விசித்திரமாயிருந்தாலும் மறுக்க முடியாத சத்தியம் தேவி. ராஜாராம் செஞ்சியில் மணந்தார். செஞ்சிக் கோட்டையை அவுரங்கசீப்பின் தளபதி ஜுல்பிகார்கான் முற்றுகையிட்ட சமயத்தில் யாரும் அறியாமல் மணந்தார். அங்கிருந்து தப்பிய வேளையில் மனைவியை அழைத்துச் செல்ல வசதியில்லாததால் கோட்டையில் விட்டுச்



சென்றார். கோட்டை மொகலாயர் வசமாகு முன்பு ராஜாராம் மகாராஜின் இந்த ரகசிய மனைவியும் அவருடைய குழந்தையும் கோட்டையிலிருந்து தப்பித் தஞ்சைக்குச் சென்றார்கள். இரண்டு பேருக்குத்தான் அவள் திருமண விஷயம் தெரியும். அவர்கள் இருவரும் அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு தஞ்சை சென்றார்கள், அவர்களில் ஒருவன் என்ன ஆனானென்று தெரியவில்லை. இன்னொருவன் கொல்லப்பட்டான் கோடாரியால். தஞ்சை அரண்மனையிலிருந்து அந்த அரச மகன் மறைந்தான்'' என்று இதயசந்திரன் பெருமூச்சு விட்டான்.

இந்த விரோதக் கதையைக் கேட்ட தேவியும் பெருமூச் செறிந்தாள். ''பிறகு?'' என்று ஒரு கேள்வியையும் கேட்டாள்.

''ஒரு காவலன் உயிரை உறிஞ்சிய கோடாரி, மறைந்த காவலனுடையது என்று தெரிய வந்தது. அவனைக் கண்டு பிடிக்கத் தஞ்சை ஒற்றர்கள் செய்த முயற்சி பலிக்கவில்லை. ஆகவே ராஜாராமின் ராணி எனக்கு அழைப்பு விடுத்தார். சங்கீத மஹாலில் என்னைச் சந்தித்தார். 'இதயசந்திரா! ஒரு நாட்டின் நலன் உன் கையிலிருக்கிறது. நீ என் மகனைக் கொணர்ந்து என்னிடம் சேர்த்துவிடு. அவனைக் களவாடிச் சென்றவனை அழித்துவிடு. அவனை அழிக்க முடியாவிட்டால் என் மகனைக் கண்டுபிடித்து அவனையாவது அழித்துவிடு!' என்று கண்களில் நீர் ததும்பக் கூறினார். முகத்திரையின்றி முக்காடின்றி அந்த மகாராஷ்டிர புஷ்பத்தை அன்றுதான் பார்த்தேன். அழகுக்கு இலக்கணம் தஞ்சையில் அரண்மனை மறைவில் உறைந்திருந்த விஷயம் அன்றுவரை எனக்குத் தெரியாது. அந்தப் பேரழகை, ராஜ கம்பீரத்தை நான் பார்த்துக் கொண்டு நீண்ட நேரம் நின்றேன். பிறகு மெள்ளக் கேட்டேன், 'அம்மணி! அந்த அதர்மனை அழிக்கச் சொன்னீர்கள். சரி, ஆனால் அரசகுமாரனை ஏன் அழிக்கச் சொல்கிறீர்கள்?' என்று.

ராணியின் கம்பீர விழிகள் கலங்கி நின்றன அவர் முகம் தியாகச் சுடர்விட்டது. ராணி துக்கம் ததும்பிய குரலில், 'இதயசந்திரா! ஹிந்து சாம்ராஜ்யம் பல தலை முறைகளுக்கு ஒரு முறைதான் ஏற்படுகிறது. அது இரண்டு தலைமுறைகளுக்காவது இருக்கட்டும். என் மகனுக்கு ஆட்சி வேண்டாம் இதயசந்திரா! ஒரு குடைக்கீழ் ஹிந்துக் களின் பெருமையாவது ஓங்கட்டும், இரண்டு நூற்றாண்டு களுக்காவது. எனது மகன் இருப்பது தெரிந்தால் பட்டத்துக்கு வீண் போட்டி ஏற்படும். போட்டிதான் மிஞ்சும், சாம்ராஜ்யம் உடைந்து போகும்! வேண்டாம் இதயசந்திரா. என் மகனுக்கு அரசு வேண்டாம், ஹிந்து சாம்ராஜ்யம் பிழைக்கட்டும்' என்றார்.

என் சித்தம் குழம்பி நின்றது. ராணியின் தியாக அக்னி என் இதயத்தைச் சுட்டெரித்தது. நான் பேசச் சக்தியில்லாமல் தலை வணங்கினேன். ராணி தன் மடி யிலிருந்த பதக்கத்தை எடுத்துக் கொடுத்தார். 'இதை என் கணவர் கொடுத்தார். மகாராஷ்டிரத்தில் இதை நீ யாரிடம் காட்டினாலும் உனக்கு வேண்டிய சகல வசதியும் கிடைக்கும்' என்று கூறிய ராணி தனது மகனைக் கடத்திச் சென்றவன் அங்க அடையாளங்களையும் சொன் னார். 'அவன் இடுப்பில் தொங்கவிட்டுள்ள கத்தியைவிட அகலமுள்ள கத்தியை நீ பார்க்க முடியாது. அவன் முகத்தின் நடுவில் குறுக்கே ஆழமான வெட்டுக் காயம் இருக்கும். முகத்தில் கொலைக் களை சுடர்விடும் மிக மெல்லிய தோற்றமுள்ளவன். ஆனால் போரில் நிகரற்றவன். அவனை வாட்போரில் சமாளிக்க முடியாது. நீ அவனைக் கண்டுபிடித்தால் என் மகனிருக்குமிடம் தெரியும்' என்று விவரித்தார் ராணி.''

''அவன் பெயர்?'' என்று தேவி கேட்டாள்.

''தனக்குத் தெரியாது என்றார் ராணி. சேவக் என்று மட்டும் சொன்னார்'' என்று கூறிய இதயசந்திரன், ''ராணி சொன்னது இதுதான். இரவில் திடீரென



சுரங்க வழியாகச் செல்ல அமாத்யர்
செஞ்சிக் கோட்டைச் சுரங்க வழியாகச் செல்ல அமாத்யர்
உத்தரவிட்டார். அரசர் மெய்க்காவலர் என்று இருவரை
என்னுடன் அனுப்பினார். பெயர் ஏதும் சொல்லவில்லை.
சுரங்க வழியாக வெளிவந்து சிறிது தூரத்தில் எதிர் வீரர்
இருவரால் மடக்கப்பட்டோம். கண்மூடிக் கண் திறப்
பதற்குள் அவர்களை வெட்டிப் போட்டான் மறைந்த
இந்த மனிதன். காற்றின் வேகத்தில் புரவிகளைவிட்டு
என்னைத் தஞ்சைக்குக் கொண்டு வந்தான். பயங்கரப்
பயணம் அது. ஆனால் வெகு சாமர்த்தியமாக என்னை
அழைத்து வந்தான். அரண்மனையில் வசித்தான்.
குழந்தையைக் கண்போல் பாதுகாத்தான். இன்னொரு
காவலனும் அவனும் ஒன்றாகவே தங்கியிருந்தார்கள்.
ஆனால் திடீரெனக் குழந்தை மறைந்தான். ஒரு காவலன்
இறந்தான், இன்னொருவன் மறைந்தான்'' என்று ராணி
யின் வார்த்தைகளிலேயே விஷயத்தை விளக்கினான்.

''பிறகு?'' என்றாள் தேவி.

''நான் பதக்கத்துடன் ராணியிடம் விடைபெற்றுக்
கிளம்பினேன். தஞ்சையிலேயே புலன் விசாரித்தேன்
அப்படியொரு மனிதன் மேல்திசைக்குச் சென்ற பொதி
வண்டியொன்றில் சென்றதாகத் தெரியவே அந்தத்
திசையில் பயணம் செய்தேன். பல மாதங்கள் விசாரித்துக்
கொண்டு சென்றதில் அவன் கேரளம் சென்றதை அறிந்து
அங்கு சென்று, அங்கிருந்து கார்வார் சென்றேன். அங்கு
திட்டமான புலன் கிடைத்தது. அதே அடையாளங்
களுள்ள ஒரு வீரன் மகாராஷ்டிரம் சென்ற ஒரு போர்க்
கப்பலில் சென்றதாகச் செய்தி கிடைத்தது. அன்று
புறப்பட இருந்த மற்றொரு வர்த்தகக் கப்பலில் நானும்
பயணமானேன். இங்கு வந்து சேர்ந்தேன்'' என்று
கதையை முடித்த இதயசந்திரன், ''தேவி! என் இரகசி
யத்தை உன்னிடம் கூறி விட்டேன் இனி அந்தப்
பதக்கத்தை என்னிடம் கொடுத்து விடுங்கள். ஒரு பெண்
ணின் வேண்டுகோள், மகாராஷ்டிரத்தின் பிற்காலம்

நான் அந்தப் பெண்ணுக்குச் செய்து கொடுத்த ஆணை இத்தனையும் அதில் புதைந்து கிடக்கிறது'' என்று கையை நீட்டினான்.

தேவி விழிகளை உயர்த்தி அவனை நோக்கி, ''வீரரே! பதக்கத்தை எப்படிக் கொடுக்க முடியும்?'' என்றாள்.

''நீங்களும் பெண்ணல்லவா? ஒரு பெண்ணின் கண்ணீரைத் துடைப்பது உங்கள் கடமையல்லவா?''

தேவியின் இதயத்தில் கருணை உணர்ச்சி பொங்கியது. தன் இடை முடிச்சில் பத்திரப்படுத்தியிருந்த பதக்கத்தை எடுத்துக் கொடுத்துவிடலாமா என்றுகூட ஒரு விநாடி நினைத்தாள்.

''கொடுத்து விடுங்கள் தேவி! சுவாமியைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். துறவிக்குப் பெண்ணின் இதயம் தெரியாது. அந்தப் பதக்கமில்லாவிட்டால் மகாராஷ்டிரத்தில் எனக்குச் செல்வாக்கில்லை. நான் ராணியின் கண்ணீரைத் துடைக்க முடியாது. லட்சியத்தைப் பூர்த்தி செய்யமுடியாது. பதக்கமில்லையேல் நான் சிறகொடிந்த பறவை'' என்று வற்புறுத்தினான் இதயசந்திரன்.

''சிறகொடிந்திருப்பதே சில சமயங்களில் நல்லது'' என்ற குரலைக் கேட்ட தேவி, இதயசந்திரன் இருவருமே திடுக்குற்று எழுந்தனர். இருவர் உள்ளத்திலும் பெரும் பிரமையும் குழப்பமும் ஏற்பட்டன. ஏனென்றால் அந்தக் குரல் சுவாமியின் குரலுமல்ல, தோழிகளின் குரலுமல்ல, இரக்கமற்ற பயங்கரப் புதுக் குரலாயிருந்தது அந்தப் புதுக்குரலில், சொற்களைத் தொடர்ந்து ஓர் அலட்சியச் சிரிப்பும் மெதுவாக உதிர்ந்தது.

அத்தியாயம் 7

# ஸார்கேல்

இதயசந்திரனையும் தேவியையும் திகிலுற்றுத் துணுக்குற்று எழுந்திருக்கச் செய்த அந்தப் புதுக் குரல் எத்தனை பயங்கரமாயிருந்ததோ, அவன் சிரித்த சிரிப்பு எத்தனை அலட்சியமாயிருந்ததோ, அத்தனை பயங்கரமான தோற்றத்துடனும், வெகு அலட்சியமான பார்வையுடனும் அந்த மனிதனே அவர்கள் நின்றிருந்த இடத்திற்கு இரண்டடி தூரத்திலிருந்த ஒரு மரத்தின் மறைவிலிருந்து வெளிவந்தான் குறுக்கே தடை செய்து தொங்கிய இரண்டொரு சிறு கிளைகளைக் கையால் அனாயாசமாக உடைத்து எறிந்துவிட்டு, அந்த அலட்சியச் சிரிப்பின் மிகுதி உதடுகளில் உறைந்து நிற்க அந்த இருவரையும் நோக்கி, ''காரிருளில் காதலர் இருவரைத் தடை செய்து விட்டேனா?'' என்றொரு வினாவையும் வீசி மீண்டும் அனாயாசமாக நகைத்தான்.

அவன் முதல் தடவை சிரித்த சிரிப்பே காட்டைக் கடுமையாக ஊடுருவிவிட்டதால், காவலர் சிலர் பந்தங்களுடன் அந்தத் திசையை நோக்கி நகர முற்பட்டுவிட்டது தூரத்திலாடிய வெளிச்சத்திலிருந்து இதயசந்திரனுக்குத் தெரிந்துவிட்டதால் இரண்டாவது சிரிப்புக் கண்டிப்பாய் அவர்களைத் தங்களருகில் கொணர்ந்துவிடும் என்பதைத் திட்டவட்டமாகத் தெரிந்துகொண்டான் அவன். அப்படிக் காவலர் வந்தால் அவர்களும் இந்தப் பயங்கர மனிதனைப் போலவே தன்னையும் தேவியையும் தவறாகப் புரிந்து கொண்டால் என்ன செய்வது என்று ஏங்கினான் அந்த வாலிபன். அந்த ஏக்கம் சினத்தையும் விளைவிக்கவே வந்தவனை நோக்கி, ''உன் கற்பனைக்குச் சிறிது எல்லை கட்டிவிடு'' என்று சீறவும் செய்தான்.

இதயசந்திரன் சினத்தைச் சிறிதளவும் லட்சியம் செய்யாத அந்த மனிதன், ''என் கற்பனையா? என்ன கற்பனை?'' என்று வினவினான் கரகரத்த விஷமக் குரலில்.

''எங்களைக் காதலர் என்று குறிப்பிட்டது. காதல் புரிய இங்கு வரவில்லை நாங்கள்'' என்று சினம் தலைக் கேறக் கூறினான் இதயசந்திரன்.

''அதற்காக வந்திருக்க முடியாது'' என்று வந்த மனிதனும் விஷமக் குரலில் ஒப்புக்கொண்டான்.

''இப்பொழுதாவது உன் மண்டையில் அந்த உண்மை ஏறுகிறதா?'' இதயசந்திரன் குரலில் சினம் சற்றுக் குறைந்து ஏளனம் ஒலித்தது.

''ஏறிவிட்டது.'' வந்தவன் குரல் இதயசந்திரன் குரலைவிடப் பன்மடங்கு அதிக ஏளனத்தைக் கொட்டியது.

''மகிழ்ச்சி.''

''நீங்களிருவரும் இங்கு வந்த காரணமும் புரிந்து விட்டது.''

''என்ன காரணம்?''

''தவம் செய்ய வந்திருக்கிறீர்கள்.''

''தவமா?''

''ஆம். இது தாமினிக் காடல்லவா?'' என்ற அந்த மனிதன் மீண்டும் அந்தக் காடு அதிரும்படியாக நகைத்தான்.

இதயசந்திரன் அவன் தன்னுடன் விளையாடுகிறானென்பதைப் புரிந்துகொண்டான். ஏளனம் செய்து நகைக்கிறானென்பதும் நன்றாகப் புரிந்தது தமிழனுக்கு. தேவியின் நிலை பரிதாபமாயிருந்தது. அவள் தலைகுனிந்து வெட்கி நின்றிருந்தாள். அவன் தாமினிக் காட்டைப் பற்றிப் பிரஸ்தாபித்த பின்பு சட்டென்று தலையைத் தூக்கி, ''இதுவா தாமினிக் காடு! ஒரு நாள் பயணத்தில் கடற்கரையிலிருந்து இதை அடைந்துவிட்டோமா?'' என்று வியப்பும் அதிர்ச்சியும் நிறைந்த குரலில் வினவினாள் தேவி.



''ஆம் பெண்ணே, இதுதான் தாமினிக் காடு! இங்குதான் நான் பிரும்மேந்திர சுவாமியைச் சந்திப்பதாகக் கூறினேன்'' என்றான் அந்த மனிதன்.

பிரும்மேந்திர சுவாமி என்ற பெயரைக் கேட்டதும் பெரும் பிரமிப்படைந்தான் இதயசந்திரன். பல விஷயங்களுக்குத் திடீரென அவன் மனத்துக்கு விளக்கம் கிடைத்தது. 'பிரும்மேந்திர ஸ்வாமி! பிரும்மேந்திர ஸ்வாமி!' என்று இருமுறை தனது மனத்திற்குள் ஜபம் செய்துகொண்டான். அப்பொழுதும் சந்தேகம் நிவர்த்தியாகாதிருக்கவே, ''எந்த பிரும்மேந்திர ஸ்வாமி?'' என்றொரு கேள்வியையும் தொடுத்தான் புதிதாக முளைத்த மனிதனை நோக்கி.

''தமிழா! எங்கிருந்து வருகிறாய்? வானிலிருந்தா அல்லது இந்த நாட்டில் எங்கிருந்தாவதிருந்தா?'' வந்த வீரன் கேள்வியில் நகைப்பொலி மண்டிக் கிடந்தது.

''தஞ்சையிலிருந்து.''

''இந்த நாட்டவனாயிருந்தாலும் சரி, பிற நாட்டவனாயிருந்தாலும்கூட பிரும்மேந்திர ஸ்வாமி என்று இரண்டாமவர் கிடையாதென்பது உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே. பிரும்மேந்திர ஸ்வாமி ஒருவர்தான், தாமினிக் காடும் ஒன்றுதான். இந்த இரண்டு பெயர்களும் இந்துக்களுக்குத் தெரியும், மொகலாயருக்குத் தெரியும், வெள்ளைக்காரர்களுக்கும் தெரியும், மனித வர்க்கம் அனைத்துக்குமே தெரியும். உனக்குத் தெரியாவிட்டால் நீ எந்த வர்க்கமென்பதைத் தீர்மானிப்பது சிறிது கஷ்டம்'' என்று சொல்லி இதயசந்திரனை நெருங்கி அவன் முதுகில் தட்டியும் கொடுத்தான்

முதுகில் அவன் தட்டியது பேய் தட்டியது போலிருந்தது. ஆனால் அந்தத் தட்டுக்கும் அசையவில்லை இதயசந்திரன். அவன் மனம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தது. பாரதம்மே தலை வணங்கும் பிரும்மேந்திர சுவாமியே தன்னைக் காத்தவர் என்ற உண்மை ஏதேதோ விவரங்

களை அவனது சிந்தனையில் துளிர்க்கவிட்டிருந்தது. பிரும்மேந்திர ஸ்வாமியின் சரித்திரம் நாடறிந்தது. அதைத் தமிழகத்திலேயே பலர் சொல்லக் கேட்டிருக் கிறான் இதயசந்திரன். கடற் கொள்ளைக்காரர்களும், மகாராஷ்டிர மன்னர்களும், மொகலாயரும், ஜன்ஜீரா தீவின் அபிஸீனிய ஸித்திகளும், சகலருமே வணங்கிய பிரும்மேந்திர ஸ்வாமி பரசுராம கிராமத்துக்குப் புத்துயிர் அளித்ததும், பரசுராமன் கோயிலைக் கட்டியதும், அந்தக் கோயில் விழாக்களுக்கு முஸ்லீம்கள், இந்துக்கள் இரு சாராருமே வருவது வழக்கமென்பதும் உலகமறிந்திருந்த தால் அப்பேர்ப்பட்ட மகானிடம் தான் வந்து சேர்ந்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதிய இதயசந்திரன் பல விநாடிகள் ஏதும் பேசாமல் மௌனமே சாதித்தான். அந்தச் சில விநாடிகளில் பந்தங்களுடனும் விளக்குக ளுடனும் காவலர்கள் அந்த இடத்துக்கு வந்து சேரவே, நல்ல வெளிச்சத்தில் வந்த மனிதனை இதயசந்திரன் பார்த்தான். காவலர்கள் அந்த மனிதனைக் கண்டதும் தலை வணங்கி அச்சத்துடன் நோக்கியதைக் கண்ட இதய சந்திரன், வந்த மனிதன் யாரோ பிரமுகனாயிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான். அவன் யார் என்ன வென்பதை விசாரிக்கு முன்னமேயே அந்த மனிதன் காவலரை நோக்கி, ''இவர்களை அழைத்து வாருங்கள்'' என்று உத்தரவிட்டுத் துறவியிருந்த கூடாரத்தை நோக்கி நடந்தான்.

இதயசந்திரன் இதயத்தில் பிரமிப்புச் சூழ்ந்திருந்த தால் சில வினாடிகள் அசைவற்று நின்ற இடத்தில் நின்ற அவன் தேவியை நோக்கினான். வந்த மனிதன் நகர்ந் ததும் கவிழ்ந்த தலையைத் தூக்கிய தேவி அவனை ஒரு வினாடி பார்த்தாள். பிறகு பக்கத்திலிருந்த காவலன் கையிலிருந்த விளக்கொன்றைப் பிடுங்கிக்கொண்டு தனது கூடாரத்தை நோக்கி நடந்தாள்! அவள் சென்ற பிறகும் இருந்த இடத்தைவிட்டு இதயசந்திரன் நகர



வில்லை. பிறகு விளக்குடன் நின்ற ஒரு காவலனை நோக்கி, ''நீ போ. நான் வருகிறேன்'' என்றான்.

''உங்களை அழைத்துவரக் கட்டளையிட்டு அவர் செல்லவில்லை?'' என்று காவலன் வினவினான்.

இதயசந்திரன் இகழ்ச்சியுடன் காவலனை நோக்கினான். ''அவர் கட்டளையிட்டாரா!'' என்று இகழ்ச்சி குரலில் ஒலிக்க வினவவும் செய்தான்.

காவலன் அவனை வியப்புடன் நோக்கினான். "ஏன்? அவர் கட்டளையிடக் கூடாதா?'' என்று பதில் கேள்வி கேட்டான் காவலனும் இகழ்ச்சி ததும்பிய குரலில்.

''எனக்கு இடமுடியாது!'' என்று திட்டமாக அறிவித் தான் இதயசந்திரன்.

''அப்படியானால் தாங்கள் பிரும்மேந்திர ஸ்வாமி யாகத்தான் இருக்க வேண்டும்.''

''என்ன உளறுகிறாய்?''

''பிரும்மேந்திர ஸ்வாமிக்கு அடுத்தபடி அவர் கட்டளை தான் மகாராஷ்டிரத்தில் செல்லும். ஆகையால் உளறுவது யாரென்று நீங்களே தீர்மானித்துக் கொள்ள லாம்'' என்றான் காவலன் இதயசந்திரனை இம்மியளவும் லட்சியம் செய்யாமல்.

இதயசந்திரன் காவலனை உற்று நோக்கினான். பிறகு வினவினான். ''அவர் கட்டளைக்கு நான் கீழ்ப்படியா விட்டால் என்ன ஆகும்?'' என்று.

''மண்ணில் வசிக்க முடியாது'' என்றான் காவலன்.

''அப்படியானால்?'' என்று வினவினான் இதய சந்திரன் சற்றுக் குழப்பத்துடன்.

''நீர்மேல் வசிக்கலாம்'' என்றான் காவலன்.

''நீ சொல்வது புரியவில்லை.''

''அவரிடம் அகப்பட்டுக் கொண்டால் புரியும்.''

''என்ன புரியும்?''

''துடுப்புத் தள்ளுவது எவ்வளவு கஷ்டமென்பது'' என்று கூறிய காவலன் மேற்கொண்டு பேச இஷ்டப்படாமல், ''மீதி ஏதாவது கேட்க வேண்டியிருந்தால் சுவாமியிடம் கேளுங்கள். இல்லையேல் அவரிடமே கேளுங்கள், அவரும் சுவாமி கூடாரத்தில் இருப்பார்'' என்று கூறி மெல்ல நகைத்த காவலன் சுவாமியின் கூடாரத்தை நோக்கி விளக்கைக் காட்டிக்கொண்டு சென்றான்.

இதயசந்திரன் மெளனமாக அவனைப் பின்பற்றிச் சென்றான். சுவாமியின் கூடார வாயிலுக்கு வந்ததும் வெளியிலேயே காவலன் நின்றுவிட இதயசந்திரன் மட்டும் உள்ளே நுழைந்தான்.

அங்கிருந்த காட்சியைக் கண்டு அசைவற்று நின்றான் இதயசந்திரன். பார்ப்பதற்கு ராட்சதன் போலிருந்த அந்த மனிதன் பசுங்கன்றுபோல் அடங்கி ஒடுங்கி, நெற்றி ஸ்வாமியின் திருவடிகளில் படும்படி மண்டியிட்டு வணங்கியிருந்தான். பிரும்மேந்திர சுவாமி அவனுக்கு ஆசி மந்திரங்களை வாயில் முணுமுணுத்துக்கொண்டார். பிறகு அவனை எழுந்திருக்கச் சொல்லித் தாம் மட்டும் ஆசனத்திலமர்ந்தார். பிறகு இதயசந்திரன்மீது கண்களை ஓட்டிய பிரும்மேந்திர ஸ்வாமி, ''தமிழா! நீ தேவியுடன் தனித்துப் பேசியதாகக் கேள்விப்பட்டேன்'' என்றார் சர்வ சாதாரணமாக.

''ஆம்'' என்றான் இதயசந்திரன் மெதுவாக.

''நீ ஏதோ வரலாறு சொன்னதாகவும் இவர் சொன்னார்!'' என்றார் அந்த மனிதனைச் சுட்டிக் காட்டிய சுவாமி.

''ஆம்.''

''அந்த வரலாற்றை மீண்டுமொருமுறை சொல்.''

சொல்லுமுன்பு அந்தப் புது மனிதனை உற்று நோக்கினான் இதயசந்திரன். அவன் பரந்த முகத்திலிருந்த



வேல்களைப் போன்ற கரிய கண்கள் அலட்சிய சிரிப்பை அப்பொழுதும் கொட்டிக் கொண்டிருந்தன விசாலமான உரத்த நெற்றியில் முரட்டு மயிர்கள் தொங்கிக் கொண்டிருந்தன. நடுவிலே வாரப்பட்டு 'காகபட்சகம்' (காக்கை இறகுகள்) போல் இரு புறமும் காட்சியளித்த மயிரும் சரியாக வாரப்படாததால் சில இடங்களில் எழுந்து நின்றிருந்தன. கறுத்து அடர்ந்து நாகரிகமாக வளைந்திருந்த மீசை நடுக்கத்தை அளிக்கும் வண்ணம் அமைந்திருந்தது. அவன் சதைப்பிடிப்புள்ள தடித்த கன்னங்களும் பருத்த கழுத்தும், கழுத்துக்குச் சற்றுக் கீழே அவிழ்ந்திருந்த மேலங்கிக்குள்ளிருந்து எட்டிப் பார்த்த மார்பின் முரட்டு ரோமமும் அவன் இணையற்ற ஆண்மைக்கும் வலுவுக்கும் சான்று கூறின. நல்ல உயரத்துடனும் அவசியமான பருமனுடனும் இருந்த அவன் உடலின் வலிமை அவன் நின்ற தோரணையிலேயே தெரிந்தது. அவன் இடைக் கச்சையில் தொங்கிய ஒரு வளைந்த வாளும், நெற்றியில் வளைந்து தீட்டப்பட்டிருந்த சந்தனத் திலகமும் அவன் மகாராஷ்டிரனென்பதை வலியுறுத்தின. இடைக்கச்சையில் நடுவில் அவன் செருகியிருந்த இரு கைத் துப்பாக்கிகள் அவனிடம் எச்சரிக்கையுடன் பழகவேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டின. காதிலிருந்த பெரும் தங்க வளையங்களும், இடது கையின் மூன்று விரல்களிலிருந்த கல் மோதிரங்களும் செல்வத்துக்கு அவனிடம் குறைவில்லையென்பதைப் பறைசாற்றின

இதயசந்திரன் இப்படி அந்த மனிதனை அணு அணுவாக ஆராய்ந்ததைக் கண்ட பிரும்மேந்திர ஸ்வாமி புன்முறுவல் கொண்டார். அவனைக் காணக் காண இதயசந்திரன் முகபாவங்கள் பலவிதமாக மாறியதையும் அவர் கண்டார். பிறகு சொன்னார்: ''தமிழா! வரலாற்றின் மடியில் நீ வீழ்ந்துவிட்டதை நீ வந்த அன்றே நான் உணர்ந்து கொண்டேன். இன்று அது ஊர்ஜிதமாகிறது'' என்று. அத்துடன், ''உன் முன் நிற்பவர் யார் தெரியுமா?'' என்றும் வினவினார்.

''தெரியாது'' என்றான் இதயசந்திரன்.

''அப்படியானால் தெரிந்து கொள்'' என்று பிரும்மேந்திர ஸ்வாமி வந்த மனிதனின் பெயரை மெள்ளவும், ஆனால் ஸ்பஷ்டமாகவும் உச்சரித்தார்.

அந்தப் பெயரைக் கேட்ட இதயசந்திரன் அப்படியே மலைத்து நின்றுவிட்டான். அவன் சுயநிலைக்கு வர வெகு நேரம் ஆயிற்று. எந்தப் பெயரைக் கேட்டமாத்திரத்தில் பதினேழாவது நூற்றாண்டின் இறுதியிலிருந்து பதினெட்டாவது நூற்றாண்டின் நடுக்காலம்வரை அரபிக் கடல் பிராந்தியமே நடுங்கியதோ அந்தப் பெயருக்குடைய வனை நோக்கிய இதயசந்திரன், உணர்ச்சிகள் அடியோடு உறைந்து போயின. மகாராஷ்டிரர்களால் ஸார்கேல் (கடற்படைத் தளபதி) என்றும் மாற்றாரால் கடற் கொள்ளைக்காரனென்றும் அழைக்கப்பட்ட அந்த மனிதனைக் கண்டதும், உணர்ச்சி உடல் இரண்டும் ஸ்தம்பிக்கச் சிலையென நின்றுவிட்டான் தமிழகத்தின் அந்த வாலிப வீரன். பாரத சரித்திரத்தின் மிகப்பெரிய இருபாத்திரங்களின் முன்பு தானிருப்பதை உணர்ந்ததால் எல்லையில்லா வியப்பு அவனுடைய சித்தத்தைப் பிரமிக்கு வைத்திருந்தது.

அத்தியாயம் 8

# அதிர்ச்சி, ஆசை, மகிழ்ச்சி!

வந்த மனிதன் பெயரை எந்தக் கணத்தில் பிரும்மேந்திர ஸ்வாமி உச்சரித்தாரோ அந்தக் கணத்தி லிருந்து பல கணங்கள்வரை பிரமித்து அசைவற்று வந்தவனை நோக்கியது நோக்கியபடி நின்றுவிட்ட இதயசந்திரன் சித்தம், பிரமிப்பிலிருந்து விடுபட்ட பின்பும் பல விஷயங்களைச் சிந்திக்கவே செய்ததால், தமிழகத்தின் அந்த வாலிப வீரன் உதடுகளைத் திறந்து சொற்கள் எதையும் கொட்டவில்லை. வந்தவனை நோக்கி வணக்க உரைகளோ வாழ்த்துரைகளோ சொல்லவும் முற்பட வில்லை. பிரும்மேந்திர ஸ்வாமியைத் தவிர அந்த மனிதனுக்குக் கட்டளையிடக் கூடிய யாரும் மகாராஷ்டிரத் தில் இல்லையென்றும், அந்த மனிதனின் கட்டளையை மீறினால் தான் நீர்மேல் வாழ நேரிடுமென்றும், துடுப்புத் தள்ள வேண்டியிருக்குமென்றும் தன்னை சுவாமி கூடாரத் துக்கு அழைத்து வந்த காவலன் கூறியதெல்லாம் இதய சந்திரன் எண்ணத்தில் எழுந்து சுழலவே அவற்றின் உட்பொருளெல்லாம் மெள்ள மெள்ள விளங்கலாயிற்று அவனுக்கு.

வந்தவன் பெயர் கனோஜி ஆங்கரே என்று பிரும்மேந்திர ஸ்வாமி கூறியதுமே மின்னலால் தாக்குண்டது போல் பெரும் வெளிச்சம் சித்தத்தில் பளிச்சிடப் பிரமித்து உறைந்துவிட்ட இதயசந்திரன் சித்தம், அந்த மின்னல் மறைந்ததும் உறைந்த நிலையி லிருந்து மீண்டது. உண்மையை உணரவும் அந்த உண்மை நிலையில் சுயநிலையை ஆராயவும் சக்தி பெற்றது ஆகவே கனோஜி ஆங்கரேயை மீண்டும் இதயசந்திரன் கவனித்தான். ராட்சதன்போல் இரக்கமற்ற கரிய கூரிய கண்களுடன் நின்ற கனோஜி ஆங்கரேயின் முகம் பயங்கரத் திலும் ஒரு அழகையும் கவர்ச்சியையும் பெற்றிருந்ததைக்

கண்டான் அந்த வாலிபன். ஒவ்வொரு சமயம் அந்த இரக்கமற்ற முகத்தில் சிறிது கனிவும் விஷமமும் கலந்து காணப்பட்டன அவன் கண்களுக்கு. உண்மையில் மகாராஷ்டிரக் கடல வீரனான கனோஜி ஆங்கரே புரியாத பெரும் புதிராயிருந்தார் இதயசந்திரன் இதயத்துக்கு.

பதினேழு பதினெட்டாவது நூற்றாண்டுகளில் கனோஜி ஆங்கரே பலருக்கும் புரியாத புதிராகவே இருந்தார். பிரிட்டிஷ் வர்த்தகர்கள் அவரை, 'கடற் கொள்ளைக்காரன் ஆங்கரே'' என்றே அழைத்தார்கள், கடலில் அவர்கள் கப்பலகளைப் பிடித்து கப்பம் விதித்த தால். மொகலாயர் அவரை 'நிலச்சுறா' என்றழைத் தார்கள், அவர் தரைக்கும் வந்து அவர்கள் பிராந்தியங் களையும் சொத்து சுதந்திரங்களையும் விழுங்கியதால். மகாராஷ்டிரர்கள் அவரை ஸார்கேல் (கடற்படைத் தளபதி) என்றும் தெய்வமென்றும் தொழுதார்கள், மொகலாயர் போர்ச்சுக்கீஸியர் கொடுமைகளிலிருந்து தங்களை நீரிலும் நிலத்திலும் காத்ததால்.

இப்படிப் பலர் பலவிதமாக கனோஜி ஆங்கரேயை அழைத்ததற்குக் காரணமும் உண்டு. அரபிக்கடல் பிராந்தி யத்தில் தனது அனுமதியில்லாமல் *சௌதாய் கொடுக் காயல் எந்தக் கப்பலும் உலாவக் கூடாதென கனோஜி ஆங்கரே தடை விதித்திருந்தார். அனுமதியில்லாமல் உலாவிய கப்பல்கள் தாக்கப்பட்டுச் சூறையாடப்பட்டன. சில கப்பல்கள் பிடிக்கப்பட்டு அவருடைய தளங்களான சுவர்ண துர்க்கத்துக்கும் விஜய துர்க்கத்துக்கும் கொண்டு செல்லப்பட்டன. அந்தக் கப்பல்களிலிருந்து அத்தனை சரக்குகளும் கப்பம் என்ற பெயரில் கைப்பற்றப் பட்டன. நிலத்தின் பகுதிகளுக்கு அவர் ஸர்தேஷ் முகி விதித்தார். இது, நிலச்சுவான்கள் கட்டவேண்டிய கப்பம்.

---

* சௌத் அல்லது சௌதாய், ஆள்பவர் விதிக்கும் கப்பம். கடல் பகுதியை ஆண்ட கனோஜி ஆங்கரே கப்பல் களுக்கு சௌதாய் விதித்தார்.



அந்த முக்கியஸ்தர் செலுத்த வேண்டிய வரி ஸர்தேஷ் முகியாயிற்று. இப்படி நீரிலும் நிலத்திலும் இஷ்டப்படி ஆண்டு வந்த கனோஜி ஆங்கரேயின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் சகலரும் நடுங்கினார்கள். ஆனால் அவரை ஆராய்ந்த அந்தச் சில விநாடிகளில் இதயசந்திரனுக்கு நடுக்கம் ஏதும் ஏற்படவில்லை. மிகுந்த மரியாதையும் பணிவும் அவன் இதயத்தில் ஏற்பட்டன.

மெள்ளத் தரையில் மண்டியிட்டு அவன் ஆங்கரேயை யும் சுவாமியையும் வணங்கினான். ''இந்த சமுதாயத்தைக் காக்க வந்த இரு பெரும் மகான்களைக் கண்டது என் பாக்கியம்'' என்றும் கூறினான். அதுவரை அவனை ஆராயவிட்டு ஏதும் பேசாமலிருந்த கனோஜி ஆங்கரே ஓர் அடி எடுத்து வைத்து அவனைத் தன் இரு கைகளாலும் குழந்தை போல் தூக்கினார். ''தமிழா! உன்னைக் கண்டதும் எனது பாக்கியம். அதிக வீரர்களை, அதுவும் கர்ம வீரர்களை ஹிந்து சமுதாயத்தில் இந்த நாட்களில் காண்பது அரிதாகிவிட்டது'' என்று பாராட்டவும் செய்தார். கரகரத்த அந்தக் குரலில் சற்றுக் குழைவும் காணப்பட்டது பெரும் விந்தையாயிருந்தது இதயசந்திர னுக்கு.

இதயசந்திரன் தன் கண்களை உயரத் தூக்கிச் சொன்னான்: ''கடல் வீரரே! ஹிந்துக்கள் மானங்காத்த தங்களைவிடக் கர்ம வீரர் யார் இருக்க முடியும்? அபிஸீனியர்களும் மொகலாயர் கடல்வழித் தலைவர் களுமான ஸித்திகளின் பிராந்தியத்தில் பரசுராமன் கோவில் கட்டிய பிரும்மேந்திர சுவாமியைவிட மகான் யார் இருக்க முடியும்? உங்கள் இருவருக்கும் முன்பு நான் துரும்பல்லவா?''

கனோஜி ஆங்கரேயின் கண்கள் ஒரு விநாடி கருணை காட்டின. ''வீரனே! பெரும் காரியங்களைச் சாதிப்பவன் மட்டுமல்ல கர்ம வீரன். எவன் ஒரு கடமையைக் கைப்பற்றி அத்துறையில் அசையாத சித்தத்துடன்

உழைக்க முன் வருகிறானோ அவனும் கர்மவீரன்தான். காரியத்தின் மிகுதியல்ல குணத்தை சித்தரிப்பது, காரியத்தின் தகுதிதான் ஒருவன் குணத்தை நிர்ணயிக்கிறது ஒரு பெண்ணின் துயர் தீர்க்க நீ வந்திருக்கிறாய் தமிழ்நாட்டிலிருந்து அதுவும் மகாராஷ்டிரத்தின் மகுடச் சண்டையைத் தவிர்க்கத் தொலைதூரம் வந்திருக்கிறாய். இதில் உன் பங்கு சிறியதாயிருக்கலாம். ஆனால் சிறிய காரியங்கள் சில சமயங்களில் பெரிய காரியங்களைச் சாதிப்பதற்குக் காரணமாயிருக்கின்றன'' என்று கூறிய கனோஜி ஆங்கரே, ''இப்பொழுது சுவாமியிடம் சொல் உன் கதையை!'' என்றும் உத்தரவிட்டார்.

இதயசந்திரன் ஒரு விநாடி சுவாமியை ஏறெடுத்து நோக்கினான். அவர் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லை. முகம் மிக சாந்தமாக இருந்தது. ''சொல்...'' என்ற ஒரே ஒரு சொல்லைச் சொல்லிய சுவாமி அவன் பெயர் தெரியாததால் சிறிது தயங்கினார்.

''இதயசந்திரன்'' என்று சுவாமியின் வாக்கியத்தைப் பூர்த்தி செய்தான் வாலிபன்.

''சொல் இதயசந்திரா! ஆங்கரே சொன்னதிலிருந்து உன் கதை விசித்திரமாயிருக்கிறது'' என்று மீண்டும் கட்டளையிட்டார் பிரும்மேந்திர ஸ்வாமி.

''உத்தரவு,'' என்று கூறி வணங்கிய இதயசந்திரன் சற்றுமுன்பு தேவியிடம் கூறிய கதையை நிதானமாகவும் தெளிவாகவும் திரும்பவும் கூறினான்.

மிகுந்த ஊக்கத்துடனும் சிரத்தையுடனும் வாலிபன் சொன்ன கதையைக் கேட்ட பிரும்மேந்திர சுவாமியின் சாந்த முகத்தில் சிறிது கவலையும் தோய்ந்தது. ஆகவே அவர் கேட்டார் சற்றுக் கவலை தொனித்த குரலில். ''எங்களுக்கும் தெரியாத ஒரு மனைவி மகாராஷ்டிர மன்னனான ராஜாராமுக்கு உண்டு என்கிறாயா இதயசந்திரா?'' என்று.



''ஆம் சுவாமி,'' என்றான் இதயசந்திரன்.

''இதயசந்திரா! நான் சொல்வதை உற்றுக் கேள், ராஜாராமுக்கு மொத்தம் மனைவிகள் நான்கு பேர் உண்டு. ஜானகிபாய், சீதாபாய், ராஜஸ்பாய், அம்பிகாபாய். இவர்கள் தவிர அவரால் மனைவி போல் நடத்தப்பட்டவளும் பலராலும் மனைவியென்றே நினைக்கப்பட்டவளுமான சகுணாபாய் என்ற ஆசைநாயகியும் உண்டு இவர்களில் ஜானகிபாய் முன்பே இறந்து போனாள் இரண்டாவது மனைவியான சீதாபாய் புக்ககத்தில் தாராபாய் என்ற பெயருடன் விளங்கினாள். அவள் மகன்தான் சிவாஜி. ராஜஸ்பாய்க்கு ஒரு மகன் சாம்பாஜி என்ற பெயரில் இருக்கிறான். அம்பிகாபாய்க்கு மகனில்லை, மகள்தான் உண்டு. சகுணாபாய்க்குக் கர்ணன் என்ற மகனிருக்கிறான்...'' என்ற சுவாமி, ''நான் சொல்வது விளங்குகிறதா?'' என்று இதயசந்திரனைக் கேட்டார்.

''விளங்குகிறது'' என்றான் இதயசந்திரன்.

''மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த சத்ரபதி சிவாஜியின் இரு பிள்ளைகளில் மூத்த மகன் சாம்பாஜிக்கு ஒரு மகன் சிவாஜி இவன் அவுரங்கசீப்பிடம் சிறையிருந்து அன்புடன் வளர்க்கப்பட்டு, ஷாஹூ என்ற பெயருடன் மகாராஷ்டிரத்தின் ஒரு பகுதிக்கு அரசனாயிருக்கிறான். இளையமகன் ராஜாராமின் நேர்வழிப் புதல்வர்களில் தாராபாயின் மகன் சிவாஜி இன்னொரு பகுதியின் அரசனாயிருக்கிறான். ராஜஸ்பாயின் மகன் சாம்பாஜி இளவரசனாயிருக்கிறான். இப்பொழுது மகாராஷ்டிரத்தின் இன்னொரு இரண்டு அரசர்கள் இருக்கிறார்கள். நீ சொல்வது உண்மையாயிருந்தால் அரியணைப் போட்டிக்கு மூன்றாவது வாரிசும் இருப்பான்'' என்றார் சுவாமி.

''ஆம்.''

''நீ கூறும் திருமணம் செஞ்சிக்கோட்டையில் நடந்ததாகக் கூறுகிறாய்.''

''ஆம்.''

''இதயசந்திரா! *ராஜாராம் அவுரங்கசீப்பால் துரத்தப்பட்டு செஞ்சிக்கு ஓடியபோது அங்கு அவரது அமாத்யர் அவரைக் குடியிலும் கூத்திலும் திளைக்கவிட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் அவர் யாரையும் மணந்ததாகக் கேள்விப்பட்டதில்லை.''

''மகாராஷ்டிரத்திலிருந்து ராஜாராமின் மனைவிகள் செஞ்சிக்கு வருமுன்பே இத் திருமணம் நடந்தது.''

''உனக்கெப்படித் தெரியும்?''

''தஞ்சை அரண்மனையிலுள்ள பெண்மணி கூறினாள். கழுத்திலிருந்த மங்கல சூத்திரத்தையும் காட்டினாள்'' என்ற இதயசந்திரன், ''மனைவியைத் தவிர வேறு யாரிடமாவது நீங்கள் எனது கச்சையிலிருந்து எடுத்த பதக்கத்தை ராஜாராம் கொடுத்திருப்பாரா?'' என்றும் வினவினான்.

பிரும்மேந்திர ஸ்வாமி சிறிது சிந்தனையில் இறங்கினார். ''மாட்டார். ராஜாராம் மற்ற விஷயங்களில் சீரழிந்திருக்கலாம். மகாராஷ்டிர கௌரவத்தை அவர் என்றும் கைவிட்டதில்லை. ஆகவே அந்தக் கௌரவச் சின்னத்தைக் கண்டவரிடம் கொடுக்கமாட்டார். ஆனால் தமிழா! நாம் இந்த விஷயத்தை ராஜாராம் மகாராஜா இறந்த எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு பேசுகிறோம் என்பதையும் நினைவில் வைத்துக் கொள். இந்தச் சமயத்தில் மகாராஷ்டிரம் திரும்ப இணைய முடியாதபடி பிளவுபட்டுக் கிடக்கிறது. இதுவே எனக்குப் பெருங் கவலை. இப்பொழுது நீ மூன்றாவது வாரிசையும் கொண்டு வந்திருக்கிறாய்!'' என்று சலித்துக் கொண்டார் பிரும்மேந்திர ஸ்வாமி

---

* *Pranlad Niraji, Minister threw Rajaram into a life of debauchery, intoxicated him with opium and gunja-Tara Bai & Her Times By Briz Kishore—P. 38*



சுவாமி சொன்னது இதயசந்திரனுக்குப் பெரும் விந்தையாயிருந்தது. முற்றுந் துறந்தவரான சுவாமிக்கு அரசியல் விஷயத்தில் எதற்கு இத்தனை அக்கறை என்று எண்ணினான். அவன் இதயத்திலோடிய எண்ணங்களை சுவாமி புரிந்து கொண்டிருக்கவேண்டும். ஆகவே, அவர் இதயசந்திரனை நோக்கி, ''இதயசந்திரா! அரசியலுக்கும் துறவிகளுக்கும் சம்பந்தம் தேவையில்லை. ஆனால் துறவிக்கும் தர்மத்துக்கும், தத்துவத்துக்கும் வேதாந்தத்துக்கும் சம்பந்தமுண்டு. இந்நாட்டில் எவ்வளவு மதஸ்தர்கள் வேண்டுமானாலும் வாழலாம், ஒரு மதத்தினரை இன்னொருவர் அழிக்க முயலாதிருந்தால். தர்மங்கள் அழியும்போது, கோவில்கள் இடிபடும்போது, பிரார்த்தனை ஸ்தலங்கள் நாசமாகும்போது துறவி பாதிக்கப்படுகிறான் அவன் விரும்பாமலே அரசியல் அவனைப் பாதிக்கிறது'' என்று சொன்னார். அத்துடன் மேலும் விளக்கத் தொடங்கி, ''நாளை பகல் நாம் பரசுராம பட்டணத்தில் இருப்போம். அங்கு பார்; மொகலாயரும் ஸித்திகளும், ஹிந்துக்களும் சண்டை சச்சரவின்றி வாழ்கிறார்கள். விழாக்களில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். பரசுராம பட்டணத்திலிருப்பது நாட்டிலிருந்து விட்டால் எனக்குக் கவலையில்லை. ஆனால் நாட்டு நிலைமை பயங்கரமாயிருக்கிறது. அந்தப் பயங்கரத்தில் நீயும் ஒரு புதுச் செய்தியுடன் தலையிடுகிறாய்'' என்றும் கூறினார்.

இதயசந்திரனுக்கு அவர் சொன்னதெல்லாம் வியப்பாயிருந்தது. இருப்பினும் அவன் பதில் கூறவில்லை. சுவாமியே மீண்டும் கேட்டார், ''இந்தப் புது இளவரசனுக்கு வயது என்ன இருக்கும்?'' என்று.

''ஒன்பது'' என்றான் இதயசந்திரன்.

''அவன் செஞ்சியிலிருந்து கிளம்பும்போது?''

''ஒரு வயது.''

''எட்டு ஆண்டுகள் தஞ்சை அரண்மனையில் வளர்ந்திருக்கிறான்.''

''ஆம்.''

''எட்டு ஆண்டுகள் முகம் வெட்டப்பட்ட காவலனும் அவனுடன் இருந்திருக்கிறான்?''

''ஆம்.''

''எட்டு ஆண்டுகளாக அவன் பெயரை யாரிடமும் சொல்லவில்லையா?''

''இல்லை. கேட்டதற்கு சேவக் என்றழைத்தால் போதுமென்று கூறிவிட்டதாக ராணி சொன்னார்கள்.''

''தஞ்சை அரண்மனையிலிருக்கும் ராணியா?''

''ஆம்.''

''அந்த ராணி தஞ்சை அரண்மனையிலிருப்பது யாருக்காவது தெரியுமா?''

''வதந்தி உண்டு. தெரியாது.''

''நீ தஞ்சையிலிருந்து கிளம்பி எத்தனை நாளா யிற்று?''

''நான்கு மாதங்களாயின. பல இடங்களில் இந்த வாரிசைத் தேட வேண்டியிருந்ததல்லவா?''

இதைக் கேட்ட பிரும்மேந்திர ஸ்வாமி, ''ஆம் ஆம்'' என்று தலையசைத்து ஆமோதித்தார். பிறகு கேட்டார் கனோஜி ஆங்கரேயை நோக்கி, ''இதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய் கனோஜி?'' என்று.

கனோஜி ஆங்கரே கடகடவென நகைத்தார். ''மகாராஷ்டிரத்துக்கு வாரிசுகள் பெருகிவிட்டார்கள். ராஜ்யம்தான் பெருகக் காணோம்'' என்று கூறினார் நகைப்புக்கிடையே

சுவாமியின் முகத்தில் கவலையிருந்தது. அவர் தீவிர யோசனையிலிருந்தார். ''இந்தச் சிக்கலை பரசுராமன் தான் அவிழ்க்கவேண்டும்'' என்ற சுவாமி, போதாக் குறைக்கு இந்தச் சமயத்தில் ஷாஹுவின் வார்த்தையைக்



கேட்டு பானுதேவியையும் அழைத்து வந்திருக்கிறேன்'' என்றார்.

பானுதேவியென்ற பெயரைக் கேட்டதும் இதய சந்திரன் சித்தம் பேரதிர்ச்சியுற்றது. எதற்கும் அசையாத கனோஜி ஆங்கரேயின் புருவங்கூடச் சற்று உயர்ந்தது. அந்தக் கடல் வீரன் கண்கள் இதயசந்திரனை மிகுந்த பரிதாபத்துடன் நோக்கின. ''பாவம்!'' என்ற சொல் லொன்றும் ஸார்கேலின் உதடுகளிலிருந்து உதிர்ந்தது. அன்றிரவு இரண்டாம் முறையாக இதயசந்திரன் இடிந்து நின்றான். ''பானுதேவி! பானுதேவி!'' என்று இதயம் முணுமுணுத்தது. அதிர்ச்சி, ஆசை, மகிழ்ச்சி ஆகிய மூன்றுவித உணர்ச்சிகள் அவன் உள்ளத்தில் வலம் வந்தன.

அத்தியாயம் 9

# தொட்டும் சுடவில்லை

பானுதேவியென்ற பெயரைக் கேட்டதும் இதய
திரன் இடிந்து நின்றதற்கும் பலவித உணர்ச்சிகளின்
ப்பட்டதற்கும் காரணமிருந்தது கனோஜி ஆங்கரேயின்
வம் வினா எழுப்பும் தோரணையில் உயர்ந்ததற்கும்
பர் "பாவம்" என்று இதயசந்திரனை நோக்கி பரிதாபப்
டதற்கும் காரணமிருந்தது. மகாராஷ்டிரத்தின்
ரிய பெரிய அரசியல் பிரமுகர்களின் பெயருக்கு அடுத்த
யாகப் பிரசித்தி பெற்றிருந்த பெயர் அதுதான்.
ஹூ மகாராஜாவின் சிற்றன்னையான தாராபாய்
ந்த அழகியானாலும் அவள் அழகில் ஆண்மைத்
மும் அரசியல் வேகமும் கலந்திருந்தமையால் அவளை
ஜதந்திரியாக மக்கள் மதித்து அச்சப்பட்டார்களே
ர அவளை ஒரு பேரழகியென்றோ, கவர்ச்சிமிக்க
ரிகையென்றோ எண்ணியவர்கள் யாருமேயில்லை.
ஞ்சிக் கோட்டையில் அவளுக்கு ஆண்மகவு பிறந்ததுமே
ள் மகாராஷ்டிர மகுடத்தை அவனுக்குச் சூட்ட
சியல் சதிகளில் இறங்கினாளேயொழிய, பத்தினி
ன்ற முறையில் பர்த்தாவுடன் உறவு கொள்வதை
டாள். அவளிடம் அச்சம் கொண்டவர் பலர், இச்சை
ண்டவர் யாருமில்லை. மொகலாயரே அவளைக்
டு நடுங்கினார்கள். *"தாராபாய் அசாத்திய
வுள்ளவள். ராஜ்யச் சிக்கல்களையும் ராணுவப்
ச்சினைகளையும் நிர்வகிப்பதில் நிகரற்றவள்" என்று
ாகலாய சரித்திர ஆசிரியர் காபிகான் எழுதுகிறார்.

தாராபாயின் இந்தப் பிரசித்திக்கு நேர்விரோதமான
ழைப் பெற்றிருந்தாள் பானுதேவி. ஷாஹூவின் ஒன்று

*History of India By its Own Historians Elliott
vson, P. 367.



விட்ட மருமகளைப்போன்ற அழகி யாருமில்லையென
மக்கள் பகிரங்கமாகப் பேசினார்கள் அவள் ராஜபவனத்தி
லிருந்து பல்லக்கில் செல்லும்போதும் புரவிமீதேறி மலைச்
சரிவுகளில் பாய்ந்து செல்லும்போதும் அவளைப் பார்க்கக்
கூடிய் கூட்டங்களும், பார்த்து ஏங்கிய வாலிபர் உள்ளங்
களும் பலப்பல. அவள் புரவியில் சென்றபோது அசைந்த
அவள் லாவண்ய உடல் எத்தனை வாலிபர்களின் சித்தங்
களைச் சிதைத்தன! எத்தனை பருவப் பெண்களின்
பொறாமையைப் பொங்க வைத்தன! எத்தனை
மனைவிமார்களின் எரிச்சலைக் கிளப்பிவிட்டன!
எத்தனைக் கணவன்மார்கள் பானுதேவியின் எழிலைப்
பாராட்டிவிட்டு வீட்டில் திண்டாடியிருக்கிறார்கள்!
இப்படிப்பட்ட கதைகள் அனந்தம். அவளைப்பற்றி எக்கச்
சக்கமாகப் பேசிவிட்டதற்காக அரண்மனை வீரர்களுக்குள்
நிகழ்ந்துள்ள வாட்போர்கள் பல அவற்றில்
காயமடைந்தோரும் உண்டு உயிர் விட்டோரும் உண்டு.
நிலாக் காலங்களில் அவள் ஸதாரா கோட்டை அரண்மனை
யின் உப்பரிகையில் உலாவுவாள். அதைப் பார்த்துப்
பார்த்து மனமொடிந்தவர்கள் உண்டு. அந்தக் காட்சியைப்
பார்க்கப் புகழ்ந்த கணவர்களை உள்ளிழுத்து சாளரங்
களைச் சாத்திய சாகச மனைவிமார்கள் எவ்வளவோ
பேர்!

அழகுக்கே ஓர் இலக்கணமாகவும், கருணைக்கே
இருப்பிடமாகவும், ஷாஹூவின் ஒன்றுவிட்ட மருமகளாக
வும் விளங்கிய பானுதேவியின் புகழ் அவள் ஸதாராவுக்கு
வருமுன்பே ஷாஹூவின் அரண்மனையில் அடிபட்டது.
அப்படியொரு தூர உறவினள் ஒருத்தி தனக்கு உண்டு
என்பதே ஷாஹூ மகாராஜாவுக்கு நீண்டநாள் வரை
தெரியாது. அவுரங்கசீப்பிடம் சிறையிலிருந்து அரை
மயக்கந்தரும் பௌஸ்தாவைக் கலந்து அவுரங்கசீப்
கொடுக்க, உண்டு உண்டு, அரை மயக்கத்தில் பதினெட்டு
ஆண்டுகளைக் கழித்து அவுரங்கசீப்பின் மரணத்துக்குப்
பிறகு மகாராஷ்டிரத்தில் மகுடம் சூட வந்து தாரா

பாயுடன் போரிலேயே காலம் கழித்துவந்த ஷாஹுவுக்கு
அழகைப்பற்றியோ, வேறு சிறப்புகளைப் பற்றியோ
ஆராய நேரமில்லாதிருந்தது அவர் போர்ப் பாசறைகளி
லிருந்த போதே மகாராஷ்டிரத்தில் ஒரு சிறு பெண் ஆண்
மனங்களைக் கலங்க வைக்கிறாளென்று வதந்தி வந்தாலும்
அவர் அதைப்பற்றி அப்பொழுது கவனிக்காவிட்டாலும்,
ஸதாராவில் சத்ரபதியாக முடிசூடிய பின்பு அதைப்
பற்றிக் கவனிக்கும்படியாயிற்று பானுதேவியின் புகழ்
அரண்மனைச் சுவர்களையும் அந்தப்புரச் சீலைகளையும்
அசைக்கவே ஷாஹு தமது மருமகளைக் கொணர
உத்தரவிட்டார். வந்தவள் புரவியில் வந்தாள் மற்றும்
நான்கு பெண்களுடன். எங்கோ கிளம்பப் புரவியிலேறிக்
கொண்டிருந்த ஷாஹு முன்பு கோட்டை முகப்பிலேயே
புரவியிலிருந்து குதித்தாள். ஒருமுறை சுற்றுமிருந்த
மலைச்சிகரங்களையும் பள்ளத்தாக்குகளையும் பார்த்தாள்.
ஏதோ காணாததைக் கண்ட காட்டுப் பெண் போல்
ஷாஹுவையும் சுற்றிலும் நின்றிருந்த வீரர் குழுவையும்
பார்த்தாள் பிறகு, ''தாங்கள்தான் சத்ரபதியாயிருக்க
வேண்டும்'' என்று கூறித் தலை வணங்கினாள்.

அவளைக் கண்ட ஷாஹு குதிரைமேல் அசைவற்று
உட்கார்ந்துவிட்டார். இப்படி ஓர் அழகும் கம்பீரமும்
மகாராஷ்டிரத்தில் இருக்க முடியும் என்று அவர் நினைக்க
வில்லை. அவள் கண்கள் அவரை ஏறெடுத்து நோக்கிய
போது அதில் ஓரளவு கர்வமும் காணப்பட்டதைக்
கண்ட ஷாஹு அவள் அரசவம்சத்தினள் என்பதைச்
சந்தேகமறப் புரிந்து கொண்டார். அன்றிலிருந்து
ஷாஹுவின் பாடு பெரும் திண்டாட்டமாயிற்று எந்தக்
கட்டுப்பாட்டுக்குள்ளும் பானுதேவி அடங்காததால்
அரண்மனைப் பிரச்சினைகள் வளர்ந்தன. அவள் போர்
முறைகள் பழகுவதற்காகக் காவலர் கூடாரங்களுக்குத்
தனிமையில் சென்று வாட்போரும் துப்பாக்கி சுடவும்
பழகினாள். சில நேரங்களில் யாரும் அச்சமுறும்
வகையில் மலைச் சரிவுகளில் புரவியில் அதிவேகமாகச்



சவாரி செய்தாள். அவளைச் சதா கூட்டம் சுற்றியதும்,
கோட்டைக்குள் அவள் காரணமாகச் சண்டைகள்
நிகழ்ந்ததும் ஷாஹுவுககுப் பெரும் தலைவலியாகப்
போய்விடவே, பிரும்மேந்திர ஸ்வாமி ஸதாரா வந்த
சமயத்தில் அவரிடம் பானுதேவியை ஒப்படைத்து, ''சில
நாட்கள் இந்த முரட்டுப் பெண் உங்கள் கண்பார்வை
யில் இருக்கட்டும். உங்கள் ஆசிரமத்தில் இவளை
அடைத்து வையுங்கள்'' என்று கூறி ஒப்படைத்தார்.
அவளை அழைத்துக் கொண்ட பிரும்மேந்திர ஸ்வாமி
ஸதாராவிலிருந்து காட்மாதாவின் சரிவிலிறங்கி, சற்று
சுற்றுவட்டமாகப் பயணம் செய்து ஸித்திகளின் ஆட்சி
யிலிருந்து கடல் பகுதிக்கு வந்து இரண்டு நாட்கள் தங்கி
வலம்புரிச் சங்கு தேடினார். இரண்டு நாட்களும் பெண்
களுக்கும் அந்தப் பணியைப் பழக்கி வைத்தார். சங்கை
வாயில் வைத்து ஒலிக்கும் முறைகளையும் சொல்லிக்
கொடுத்தார். அவசர அறிவிப்புக்கு சங்கு எப்படி
ஊதுவது, சாதாரண அறிவிப்புக்கு எப்படி அதில் ஒலி
கிளப்புவது, எப்படி அதைக் கொண்டு அபிஷேகம்
செய்வது என்பதையும் பெண்களுக்கு விளக்கினார்.
கடைசியாக மறுதினம் காலை பயணப்படத் திட்டமிட்
டிருந்த சமயத்தில் இதயசந்திரன் அவர் காலடியில் இடறிக்
கிடந்தான்

அன்றிலிருந்து பிரும்மேந்திர ஸ்வாமி சித்தத்திலும்
சிறிது கவலை பாய்ந்துவிட்டது. இதயசந்திரன் பானுதேவி
யைத் தனிமையில் அழைத்துச் சென்றதும் வரலாறு
கூறியதும், பிறகு தன்னிடம் விவரித்ததும் எல்லாமே
மகாராஷ்டிர வரலாற்றுடன் பிணைக்கப்பட்டு வலை
யாகப் பின்னப்பட்டு வருவதை நினைத்துப் பெரும்
சிந்தனையிலாழ்ந்தார் பிரும்மேந்திர ஸ்வாமி கனோஜீ
ஆங்க்ரே இதயசந்திரனை நோக்கி, ''பாவம்,'' என்று
அனுதாபப்பட்டதன் காரணமும் புரியாமலில்லை
துறவிக்கு. இருப்பினும் அவர் இதயசந்திரனின் ஆசா
பாசங்களைப்பற்றிக் கவலைப்படாமல், ''பானுதேவி

தான் இன்னாரென்று உன்னிடம் கூறவில்லை இதய சந்திரா?'' என்று வினவினார்.

பானுதேவியென்ற பெயரைக் கேட்டதால் அதிர்ச்சியும், அவள் அழகு உருவமும் உள்ளத்தில் வலம் வந்ததால் ஆசையும், அவள் தன்னுடன் தனித்துக் காட்டுக்குள் வந்ததால் ஒருவேளை தன்னிடம் அவளுக்கு அன்பும் இருக்கலாமென்ற நினைப்பால் மகிழ்ச்சியும் மாறி மாறி வரக் குழம்பி நின்ற இதயசந்திரன், சுவாமியின் கேள்வியால் இவ்வுலகு வந்து, ''இல்லை சுவாமி'' என்றான்.

சுவாமி பிறகு கனோஜி ஆங்கரேயை நோக்கி, ''பானுதேவியைப் பற்றி உனக்குமா தெரியாது?'' என்று வினவினார்.

''கேட்டிருக்கிறேன். பார்த்ததில்லை. ஆனால் பெயர் பொருத்தமாயிருக்கிறது'' என்ற கனோஜி புன்முறுவல் கொண்டார்.

இதயசந்திரன் இமைகளைத் தூக்கி கனோஜியைப் பார்த்துக் கேட்டான், ''என்ன பொருத்தத்தைக் கண்டீர்?'' என்று.

''பானு என்றால் சூரியனல்லவா?''

''ஆம்''

''அந்த உஷ்ணம் இந்தப் பெண்ணிடமும் இருக்கிறது. என்னைப் பார்த்த விழிகளில் நெருப்பு இருந்தது.''

''அதனால்?''

''தொட்டால் சுடும். நினைவில் வைத்துக்கொள்!'' இதைச் சொன்ன கனோஜி ஆங்கரே நகைத்தார். நகைப்பு சற்று அதிகப்பட்டிருக்கும், சுவாமியின் விழிகள் அதைத் தடை செய்திராவிட்டால்.

ஒரு பார்வையில் கனோஜியை அடக்கிய சுவாமி, ''கனோஜி! ஆண்பெண் மயக்கத்தைவிடப் பெரும் பிரச்சினைகள் நம் முன்னிருக்கின்றன. இப்பொழுது மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் பிற்காலத்துக்கு இந்த



வாலிபன் பெரும் முட்டுக்கட்டையைக் கொண்டு வந்திருக்கிறான். இவன் கூறும் மனிதன் யாரென்பதை உன்னால் ஊகிக்க முடியுமா?'' என்று வினவினார்.

''ராஜாராம் ரகசிய மகனைத் தூக்கிச் சென்றவனையா?'' என்று பதில் கேள்வி கேட்டார் கனோஜி.

''ஆம்'' என்றார் சுவாமி.

''செஞ்சியிலிருந்த அமாத்யரைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டும். மகாராஷ்டிர சாம்ராஜ்ய சிக்கலில் பிரஹ்லாத் நீராஜியும் விளையாடுவதாகத் தெரிகிறது'' என்றார் கனோஜி.

''அப்படித்தானிருக்க வேண்டும். சுமார் எட்டு ஆண்டுகள் தஞ்சையில் உறைந்து ராஜாராம் மகவைக் காக்கக்கூடிய ஒரு காவலன் இருக்கவேண்டுமானால் அவன் ராஜாராம் குழுவைச் சேர்ந்தவனாகத்தான் இருக்க முடியும், சாமானியக் காவலனாக இருக்க முடியாது'' என்று ஒப்புக் கொண்டார் சுவாமியும்.

சிறிது நேரம் மூவருமே மௌனம் சாதித்தனர். பிறகு, ''இந்த வாலிபன் அவனைப்பற்றித் தெளிவான அடையாளங்களைக் கூறுவதால் அவனைக் கண்டு பிடிப்பது சாத்தியம் என்று நினைக்கிறேன்'' எனக் கூறினார்.

கனோஜி அதை அத்தனை சுலபமான வேலையாக நினைக்கவில்லை. ''அவன் வெளியிலிருந்தால் தேடலாம். மகாராஷ்டிரம் வந்ததும் சிறையில் அடைக்கப்பட்டாலோ அல்லது அவனைக் கொன்றிருந்தாலோ நாம் கண்டுபிடிக்க முடியாது'' என்றார் கனோஜி.

''அவனைக் கொல்ல முடியாது'' என்றார் பிரும்மேந்திர ஸ்வாமி திட்டவட்டமாக.

''ஏன்?''

''அந்த ஆண்மகவு ராஜாராமின் மகன் என்பதற்கு குழந்தையின் தாயைத் தவிர இவன் ஒருவன்தான் சாட்சி.

அந்த சாட்சியை அகற்றிவிட்டால் அந்த வாரிசை வளர்த்ததும், தூக்கி வந்ததும் பயனற்றுப் போய் விடுமல்லவா?''

கனோஜி ஆங்கரே ஆமோதிப்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தார். ''அவன்மீது ஒரு கண் வைப்போம்'' என்றும் கூறினார்.

''எப்படிக் கண் வைப்பாய்?''

''விசாரிக்கச் சொல்லி மாலுமிகளிடம் சொல்லுகிறேன்.''

''அது தவறு. நாம் தேடுவது தெரிந்தால் அவன் எச்சரிக்கையடைந்து விடுவான்.''

''வேறு வழி?''

வழியைச் சொன்னார் சுவாமிகள். அந்த வழி இதயசந்திரன் வாழ்வையே நிர்ணயித்துவிட்டது. ''இந்த வாலிபனை உன்னுடன் அழைத்துச் செல்'' என்று கூறினார் சுவாமி.

''என்னுடனா!'' கனோஜியின் கேள்வியில் வியப்பு இருந்தது.

''நான் சதா போரில் இருக்கிறேனே!'' என்று குறிப்பிட்டார் கனோஜி.

''போரிலிருப்பதால் பல இடங்களுக்குப் போகிறாய். கனோஜி! உன்னைவிட அரபிக்கடல் பிராந்தியத்தில் நிலத்திலோ நீரிலோ சஞ்சரிப்பவர்கள் கிடையாது. ஏதாவது ஓர் இடத்தில் ஒரு சமயத்தில் அந்த மனிதன் அகப்படலாம்'' என்றார் சுவாமி.

உலகத்தைச் சல்லடைப் போட்டுச் சலிக்கும் கதையாக இருந்தது கனோஜிக்கு. இருப்பினும் சுவாமி சொன்னதை மீற முடியாமல் ஒப்புக் கொண்டார். பிறகு சந்தேகத்துடன் கேட்டார் இதயசந்திரனை நோக்கி, ''தமிழா! உனக்குக் கப்பல் இயக்கிப் பழக்கமுண்டா?'' என்று.



''இல்லை. ஆனால் வெகு சீக்கிரம் பயிலமுடியும்'' என்றான் இதயசந்திரன்.

கனோஜி இகழ்ச்சிப் புன்முறுவல் கோட்டினார். ''சரி, பார்ப்போம். நீ உறங்கிவிட்டுக் காலையில் வா'' என்றார்.

சரியென்று தலையை ஆட்டிவிட்டு வெளியே வந்த இதயசந்திரன் ஏதேதோ யோசனைகளுடன் அந்த அடவியில் நடந்தான். உண்மையில் அவன் படுக்க வேண்டிய இடம் சுவாமியின் கூடாரந்தான் அதைக்கூட சிந்திக்காமல் கனோஜி ஆங்கரே, ''உறங்கிவிட்டுக் காலையில் வா'' என்றதும் கூடாரத்தைவிட்டு வெளியே வந்தான், வந்ததும் சிந்தனைகள் சித்தத்தைக் குழப்ப நடந்து சென்றான், எங்கோ நடந்து அடுத்திருந்த கூடாரங்களுக்காக வந்தவன் சட்டென்று சில வினாடிகள் நின்றான். கூடாரத்தின் வாயிலில் கீழே இலைகளைப் பரப்பிப் படுத்துக் கிடந்தாள் பானுதேவி. அவளைச் சுற்றிலும் அவளுடைய தோழிகளும் படுத்திருந்தார்கள். அவர்கள்மீது உயரத்தில் வளைந்திருந்த காட்டு மரம் ஒன்று தனது ஊதா நிறப் புஷ்பங்களை உதிர்த்திருந்தது. கூடாரத்திலிருந்து மங்கலான வெளிச்சம் அவர்கள் மீது லேசாக விழுந்திருந்தது.

அந்தச் சமயத்தில் பானுதேவியின் அழகு பிரமிக்கத்தக்கதாயிருந்தது. உன்னித்தெழுந்திருந்த அவள் அழகு பிம்பங்கள் மூச்சில், எழுந்து தாழ்ந்தன, அவனுக்கு இதய வேதனையை அளித்தது. அங்கு நிற்பது தவறென்று நினைத்து சட்டென்று செல்லத் திரும்பினான். அவன் கால் பட்ட இடத்திலிருந்து இலைச் சருகுகள் விளைவித்த லேசான சப்தத்தில் பானுதேவி விழித்து அவனைப் பார்த்தாள். அவள் விழிகளில் நெருப்புப் பொறி பறந்தது. ''தொட்டால் சுடும்'' என்று சற்றுமுன்பு பானுதேவியைப் பற்றி ஆங்கரே எச்சரித்ததை நினைத்துப் பார்த்த இதயசந்திரன், 'தொட்டாலென்ன பார்த்தாலே சுடும்' என்று எண்ணினான். ஆனால் அடுத்த விநாடி அந்த விழிகளின்

பார்வை கனிந்தது. அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அவள் இதழ்கள் குறுநகை கூட்டின. குறுநகையிலிருந்த குளிர்ச்சி, அவன் இதயத்தைக் குளிர வைத்தது. ''பார்வையில் நெருப்பும் இருக்கிறது நீரும் இருக்கிறது. என்ன விசித்திர சேர்க்கை?'' என்று எண்ணிய இதயசந்திரன் அவளுக்குத் தலை வணங்கிச் செல்ல எத்தனித்தான்.

''இருங்கள்'' என்பதற்கு அறிகுறியாக பானுதேவி கையால் ஜாடை காட்டினாள். பிறகு மெல்ல எழுந்து அவனருகில் வந்தாள். ''இப்படி வாருங்கள்'' என்று சற்று மறைவிடத்திற்கும் அழைத்துச் சென்றாள். அப்படிச் சென்றபோது அவன் கை அசைப்பில் அவள்மீது பட்டது. தொட்டுவிட்டோமே சுட்டுவிடுமோ என்று அச்சமும் கொண்டான். ஆனால் தொட்டும் சுடவில்லை குளிர் விழிகள் அவன்மீது திரும்பின. திரும்பிய விழிகளில் ஆவலும் தெரிந்தது.

அத்தியாயம் 10

# காதலனும் கள்வனும்

மேலிருந்த மரக்கிளைகள் ஊதாநிற மலர் தூவ, மரக்கிளைகளின் இடுக்குகள் வழியாக மதி நிலவை பாய்ச்ச, கூடார உள்விளக்கு மங்கிய ஒளி வீச, மல்லாந்து படுத்திருந்த மங்கையைப் பார்த்ததுமே மதிமயங்கி மனம் நெகிழ்ந்து விட்ட இதயசந்திரனுக்கு, பானுதேவி தன்னை மறைவிடத்துக்கு அழைத்து வந்ததும், ஆவல் ததும்பிய விழிகளைத் தன்மீது திருப்பியதும், புரியாத விந்தையாக மட்டுமல்ல, ஆபத்துக்கு அறிகுறியாகவும் தெரிந்தது. சற்று முன்பு தன்னுடன் காட்டுக்குள் தனித்து வர யோசனை செய்த தேவியின் துணிவு எத்தனை அத்துமீறிவிட்டது. தோழிகளுக்குத் தெரியாமல் எழுந்திருந்து. தன்னைத் தனி யிடத்துக்கு அழைத்து வர என்று எண்ணினான். அந்த எண்ணத்தில் எழுந்த மோகனக் கற்பனைகள் பல. ஆனால் பானுதேவியின் முதல் கேள்வி அந்தக் கற்பனைகளை உடைத்தெறிந்தது. அவள் விழிகளில் பூத்த ஆவலுக்குக் காரணம் தான் நினைத்தது அல்ல என்பதை நொடி நேரத்தில் புரிந்து கொண்டான் இதயசந்திரன். புரியாத விந்தை புரிந்துவிட்டது மட்டுமல்ல, அவள் குணமும் நன்றாகப் புரிந்துவிட்டது தமிழனுக்கு. தான் மிக எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டியவர்களில் பானுதேவியும் ஒருத்தி என்பதை உணர்ந்து கொண்டான் அந்த வாலிப வீரன்.

கூடாரத்துக்குப் பின்னிருந்த மறைவிடத்துக்கு அவனை அழைத்து வந்த பானுதேவி ஆவலுடன் நோக்கினாள் அவனை. அத்துடன் ஆவலுடன் கேட்கவும் செய்தாள், ''புதிதாக வந்தானே அந்த மனிதன் யார்?'' என்று.

அவள் விழிகளில் தெரிந்த ஆவலின் காரணத்தை அப்பொழுதுதான் உணர்ந்த இதயசந்திரன் ஒரு கணம்

திகைத்துவிட்டுப் பதில் கேள்வி கேட்டான், ''ஏன், உங்களுக்குத் தெரியாதா?'' என்று.

''தெரியாது. ஆனால் ஊகிக்க முடிகிறது. ஊர்ஜிதம் செய்து கொள்ளவே கேட்கிறேன்'' என்றாள் பானுதேவி.

''பானுதேவி...'' என்று துவங்கினான் இதயசந்திரன் பதில் சொல்ல. ஆனால் அவன் மேற்கொண்டு ஏதும் பேசு முன்பே, ''என்ன! என்ன! என் பெயரைச் சொல்லி விட்டாரா சுவாமி?'' என்று வினவினாள் பானுதேவி. அவள் குரலில் லேசாகப் பதற்றமும் தெரிந்தது.

அந்தப் பதற்றத்தைக் கவனித்த இதயசந்திரன் அதற்குக் காரணம் என்னவாயிருக்குமென்பதை உள்ளூர நினைத்துப் பார்த்தும் விளங்காததால் பாராட்டுதலாகப் பதில் சொல்லத் துவங்கி, ''சூரியனை மறைக்க முடியுமா தேவி...'' என்று மெல்ல இழுத்தான்.

பானுதேவி குறுநகை கொண்டாள். ''வீரரே! தமிழர்கள் குறும்புக்காரர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்...'' என்ற பானுதேவி குறுநகை கோட்டி, பவள இதழ் நீக்கி மேலும் ஏதோ சொல்லப் போனாள்.

''தேவியின் சொல்லில்தான் சிறிது மாறுபாடு இருக்கிறது. ஆனால் மகாராஷ்டிர ராஜ வம்சத்தினருக்கு இத்தனை தமிழ் தெரிந்திருப்பதும் பாராட்டத்தக்கது தான்'' என்றான் இதயசந்திரன் குறுக்கே புகுந்து.

''என்ன மாறுபாடு வீரரே?''

''தமிழர்கள் குறும்புக்காரர்க்ள என்கிறீர்கள்...''

''ஆம்.''

''நகைச்சுவையுள்ளவர்கள் என்று சொன்னால் பொருத்தமாயிருக்கும்.''

''அப்படியானால் என்னைப் பார்த்து நகைக்கிறீர்களா?''



''அதல்ல அர்த்தம் தேவி! தங்களைப் பார்த்து அடிமை நகைக்க முடியாது. ஈயாடாது நற்கருடற்கெதிரே, நரி யாடாது உறுவெம்புலிமுன், மின்மினியும் ஆடாது வெங்கதிரோன் முன்பு...'' என்று சொன்ன இதயசந்திரன், ''இப்படியொரு கருத்துள்ள பாட்டுண்டு தமிழிலே'' என்றும் பணிவுடன் தெரிவித்தான்.

பானுதேவி மெல்ல நகைத்தாள். தான் பெண் என்பதையும் காட்டிக் கொண்டாள். அந்த ஆண்மகன் புகழ்ச்சியில் சற்று விழவே செய்து, ''வீரரே!...'' என்று மெல்ல அழைத்தாள் அந்த நகைப்பின் ஊடே.

''தேவி...'' என்றான் இதயசந்திரன் மெல்ல.

''நீங்கள் லேசுப்பட்டவரல்ல...'' என்றாள் தேவி கண்களை நிலத்தில் தாழ்த்தி.

''ஏன் தேவி?''

''பெண்களை உங்களுடன் தனித்து விடுவது பெரும் தவறு.''

''அத்தனை கயவனா தேவி நான்!''

''இல்லை. கெட்டவரில்லை. நீங்கள் நல்லவராயிருக்கலாம். ஆனால் உங்கள் புகழ்ச்சியில் எந்தப் பெண்ணும் மயங்கி விடுவாள்.''

இதயசந்திரன் சற்றுத் தயக்கமான குரலில் பதில் சொன்னான், ''எந்தப் பெண்ணும் என்று சொல்வது தவறு தேவி விலக்கும் உண்டு'' என்று

அவன் சுட்டிக் காட்டியது யாரை என்பது புரிந்தது தேவிக்கு சற்று வெட்கமும் சங்கடமும் அவளை ஆட்கொண்டாலும் அவற்றை உதறிவிட்டு நகைத்தாள் தேவி. ''வீரரே! ஏதோ பேச்சைக் கிளப்பி எங்கோ போய் விட்டோமே அந்த மனிதன் சொன்னது சரியாகப் போய் விடப் போகிறது'' என்று கூறினாள் நகைப்புக்கு இடையே. அந்தச் சமயத்தில் உணர்ச்சி வசப்பட்ட

முந்திய குரல் மாறிவிட்டது அவளிடத்தில். கேலியும், இகழ்ச்சியும் லேசாக அகம்பாவமும் கூடிய குரல் ஒலித்தது.

குரல் மாற்றத்தை இதயசந்திரனும் கவனித்தான். எந்த உணர்ச்சியையும் நினைத்த மாத்திரத்தில் உதறி விடவும், காதலர்கள் என கனோஜி ஆங்கரே குறிப்பிட்ட தைக்கூட அலட்சியமாகத் திரும்பவும் குறிப்பிடும் திறனும் உள்ள அவள் நெஞ்சுரத்தை எண்ணிப் பார்த்து வியக்கவும் செய்தான். மேற்கொண்டு அவளிடம் சகஜ வார்த்தைகள் பேசுவதில் அர்த்தமில்லையென்பதை உணர்ந்துகொண்ட இதயசந்திரன், ''ஆம் தேவி! வேறு ஏதோ பேசிவிட்டோம். வந்த மனிதன் பெயரை ஊகிக்க முடியுமென்று கூறினீர் களல்லவா?'' என்று வினவினான்.

பானுதேவியின் விழிகளில் பழைய ஆவல் மீண்டும் துளிர்த்தது. ''ஆம், கூறினேன்'' என்றாள் குரலிலும் ஆவல் தொனிக்க.

'அவர் பெயர் கனோஜி ஆங்கரே!'' என்றான் இதய சந்திரன் மிகப் பணிவுடன்.

பானுதேவி ஆமோதிப்பதற்கறிகுறியாக மெல்லத் தலையசைத்தாள் அவள் விழிகளில் ஆவல் மறைந்தது. குளிர்ச்சியும் மறைந்தது. நெருப்புப் பொறி பறந்தது. ''நினைத்தேன், அப்பொழுதே'' என்ற அவள் குரலில பூரண உஷ்ணம் தெரிந்தது.

மகாராஷ்டிரர் அனைவரும் மதிக்கும் அந்த மாபெரும் கடல் வீரன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் பானுதேவி ஏன் கொதித்தெழ வேண்டும் என்பதை எண்ணிப் பார்த்த இதயசந்திரன், ''தேவி! அந்த மனிதரைப் பெரிய வீரர் என்று சொல்கிறார்களே! உங்களுக்குப் பிடிக்கவில்லையா அவரை?'' என்று வினவவும் செய்தான் பானுதேவியை நோக்கி

பானுதேவியின் அடுத்த கேள்வி மிகுந்த பதட்டத்துடன் வெளி வந்தது ''வீரனுக்கும் கொள்ளைக்காரனுக்கும் வித்தியாசமில்லையா?'' என்று கேட்டாள் பானுதேவி.



''மகாராஷ்டிரக் கடற்படைத் தளபதியல்லவா அவர்? ஸார்கேல் அல்லவா?'' என்று கேட்டான் வியப்புடன் இதயசந்திரன்.

''ஸார்கேல்! ஸார்கேல்!'' என்று இருமுறை இகழ்ச்சி யுடன் நகைக்கவும் செய்த பானுதேவி, ''ஸார்கேல்'' யாருக்கு ஸார்கேல்? யார் நியமித்தது ஸார்கேலாக?'' என்று சீற்றத்துடன் வினவவும் செய்தாள்.

''மகாராஜாவால் நியமிக்கப்பட்டார்...''

''மகாராணியென்று சொல்லுங்கள்......''

''மகாராணியா!''

''ஆம் வீரரே! இந்தக் கொள்ளைக்காரரை, ஸார்கே லாக நியமித்ததும் ஒப்புக் கொண்டதும் மகாராணி தாராபாய். தனது முட்டாள் செல்வன் சிவாஜியை மகாராஷ்டிர அரியணையில் ஏற்ற பன்ஹாலாவிலிருந்து சதி செய்யும் தாராபாய்தான் இவருக்குக் கடற்படைத் தளபதி பதவி அளித்தாள். மகாராஷ்டிரத்துக்கு சத்ரபதி சிவாஜியின் நேர்வழியில் வந்த பரம்பரை ஒன்றுதான். சத்ரபதி சிவாஜி அவர் மூத்த மகன் ஸம்பாஜி, ஸம்பாஜி யின் மூத்த மகன் ஷாஹு என்றழைக்கப்படுபவரும் தற்சமயம் சத்ரபதியுமான ஷாஹு—இதுதான் பரம்பரை. மகாராஷ்டிரர்கள் வேறு மன்னரை ஒப்புக் கொள்ள வில்லை. இந்த மனிதன்— இந்தக் கொள்ளைக்காரர்... மகாராஷ்டிரத்தைத் துண்டாடச் சதி செய்யும் தாரா பாயின் கையாள்... இவருடைய கடற் படையும் மகாராஷ்டிரர் கடற்படையல்ல, இவரும் மகாராஷ்டிரர் களின் ஸார்கேல் அல்ல'' என்று விடுவிடுவென வார்த்தை களை உதிர்த்தாள் பானுதேவி. அவள் குரலில் விவரிப்புக்கு அப்பாற்பட்ட கோபம் ஒலித்தது.

இதயசந்திரன் சில விநாடிகள் மௌனம் சாதித்தான். மகாராஷ்டிர சாம்ராஜ்ய சரித்திரத்தை அவன் நன்கு அறிந்திருந்தாலும் அதைப்பற்றி விவாதித்து, பானுதேவி

யின் மனத்தைப் புண்படுத்த அவன் விரும்பவில்லை. சிவாஜியின் இரண்டாவது மகனான ராஜாராம் மகாராஜா ஷாஹூவின் தாய் ஏசுபாயின் விருப்பப்படி ராஜப்பிரதிநிதியாகவே இருந்தாரென்பதையும், இறக்கும்போது ஷாஹூவைச் சத்ரபதியாக்கும்படி வேண்டிக்கொண்டார் என்பதையும் அவன் உணர்ந்திருந்தான் தாராபாய் தன் மகன் நலத்துக்காக மகாராஷ்டிரத்தைத் துண்டாடி வருவதும் அவனுக்குத் தெரியாத விஷயமல்ல. இருப்பினும் மகாராஷ்டிர வரலாற்றில் தலையிடத் தான் யார் என்று நினைத்ததால், ''பானுதேவி! நீங்கள் வரலாறு கூறுகிறீர்கள். நானோ சாதாரண வீரன்...'' என்று இழுத்தான்.

பானுதேவியின் பதில் பட்டென்று வந்தது. ''வீரனில் சாதாரண வீரன் உயர்ந்த வீரன் என்பது கிடையாது. வீரன் வீரன்தான் வரலாற்றில் சிறு மணல் அளவுக்காவது சம்பந்தப்பட வேண்டியவன்தான்'' என்ற பானுதேவி, ''ஆகையால் கேட்கிறேன், சொல்லுங்கள். நீங்கள் யார் பக்கம்? சத்ரபதியின் பக்கமா? சதிகாரர்கள் பக்கமா? கொள்ளைக்காரர் பக்கமா, மக்கள் ஒப்புக்கொண்ட மகாராஷ்டிர மன்னன் பக்கமா?'' என்ற கேள்விகள் தடங்கலின்றி விடுவிடுவென எழுந்தன.

''தேவி! நான் மகாராஷ்டிரனல்லவே?'' என்றான் இதயசந்திரன்.

''இல்லாவிட்டால் என்ன?'' என்று வினவினாள் பானுதேவி.

''மகாராஷ்டிர வரலாற்றில் நான் ஏன் தலையிட வேண்டும்?''

''இந்தக் கேள்வியைத் தஞ்சையிலேயே கேட்டுக் கொண்டிருக்கலாமே?''

''தஞ்சையிலா?''

''ஆம். தஞ்சையில்தான். எந்தப் பெண்ணின் பேச்சைக் கேட்டு அவன் மகனைத் தேட இங்கு வந்தீர்களோ அவளை இக் கேள்வி கேட்டிருக்கலாமே?''



இதற்குப் பதில் சொல்ல முடியாமல் திணறிய இதயசந்திரன் மௌனம் சாதித்தான். பானுதேவியே பேச்சைத் தொடர்ந்து, ''இஷ்டமிருந்தோ இஷ்டமில்லாமலோ நீங்கள் மகாராஷ்டிர வரலாற்று வலையில் விழுந்து விட்டீர்கள். இனி அதிலிருந்து தப்புவதும் சாத்தியமல்ல. ஆகவே, இந்த அரசியல் சமரில் நீங்கள் யார் பக்கம் என்பதை நிர்ணயித்துக் கொள்வது நல்லது. ஷாஹூதான் உண்மையான சத்ரபதி, அவர் பக்கத்தில் சேருவதுதான் தர்மம். இந்தக் கனோஜி ஆங்கரே மகாராணி தாராபாயின் கட்சியைச் சேர்ந்தவர். அவருடன் நீங்கள் எந்தச் சம்பந்தமும் வைத்துக்கொள்வது உசிதமல்ல'' என்றாள்.

இதயசந்திரன் தலைவிதியை நினைத்து நகைத்தான். சற்று முன்பு சுவாமிகள் தன்னை கனோஜி ஆங்கரேக்கு அடிமைப்படுத்தியதும், இப்பொழுது தன்னை அதிலிருந்து விடுபட பானுதேவி உத்தரவிடுவதும் பெரும் சங்கடமாயிருந்தது அவனுக்கு. அந்தச் சங்கடத்துடன் நகைத்து விட்டுச் சொன்னான். ''தேவி! சுவாமிகள் அபிப்பிராயம் இதில் எப்படியோ?'' என்று.

''எப்படியிருந்தால் நமக்கென்ன!'' என்று பானுதேவி கேட்டாள்.

''சுவாமிகள் உத்தரவை யாராவது மீற முடியுமா?'' என்று மீண்டும் கேட்டான் இதயசந்திரன்.

''அப்படியென்ன உத்தரவிடப் போகிறார் சுவாமி?'' பானுதேவியின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

''உத்தரவிட்டுவிட்டார்'' என்ற இதயசந்திரன் அவள் விழிகளைச் சந்திக்க முடியாமல் வேறு பக்கம் பார்த்தான்.

''யாருக்கு உத்தரவிட்டார்?''

''எனக்கு.''

''என்ன உத்தரவு?''

''கனோஜி ஆங்கரேயிடம் பணிபுரியச் செல்லுமாறு.''

அசைவற்று நின்றாள் பானுதேவி. ''ஆங்கரேயிடமா உங்களையா?'' என்ற சொற்கள் எரிச்சல் கலந்த வியப்பில் உதிர்ந்தன.

''ஆம்'' என்றான் இதயசந்திரன்.

சில விநாடிகள் சிந்தனையில் ஆழ்ந்த பானுதேவி, ''வீரரே! அக் கட்டளைக்கு நீர் கீழ்ப்படியக் கூடாது'' என்று கூறினாள் கடைசியில் திட்டமாக.

''அதெப்படி முடியும்?'' என்று கேட்டான் இதய சந்திரன்.

''முடியவேண்டும். என் மாமனுக்கு எதிராக நடக்கும் எதையும் நான் அனுமதிக்க முடியாது'' என்றாள் பானுதேவி

தனக்கு உத்தரவிட பானுதேவிக்கு என்ன உரிமையுண் டென்று நினைத்துப் பார்த்தான் இதயசந்திரன். இருப் பினும் அவள் உரிமை கொண்டாடியது அவனுக்கு இன்பமாகவே இருந்தது. ஆகவே அவளுக்கு அதிருப்தி விளைவிக்காமல் பதில் கூறினான், ''அதைக் காலையில் யோசிப்போமே தேவி'' என்று.

''சரி வீரரே! காலையில் யோசிப்போம். ஆனால் முடிவு நான் கூறியபடியே இருக்கட்டும்'' என்ற பானு தேவி மறைவிடத்திலிருந்து வெளியே நடந்தாள்.

அவள் சென்ற சில விநாடிள் கழித்து இதய சந்திரன் மீண்டும் சுவாமியின் கூடாரத்தை நோக்கிச் சென்று, வாயிற் புறத்திலேயே வாளை அவிழ்த்து வைத்துத் தரையில் நன்றாகப் படுத்துக் கொண்டான். கூடாரத்துக்கு வெளியில் அவன் படுத்த இடம் இருட்டா யிருந்தபடியால் நனறாகக் கால் நீட்டிப் படுத்து ஓர் ஆசுவாசப் பெருமூச்சும் விட்டான். அவன் பக்கத்தி லிருந்து ஒரு பெரும் முரட்டுக்கை அவன் மீது விழுந்தது.

''தமிழா! நீ கைகாரன். சட்டென்று பெண்களை வளைக்கிறாயே?'' என்ற முரட்டுக் குரல் காதுக்குச் சற்றுத் தூரத்தில் ஒலித்தது.

கனோஜி ஆங்கரேயின் பக்கத்தில் தான் படுத்து விட்டது அப்பொழுதுதான் புரிந்தது இதயசந்திரனுக்கு. அவர் எதற்காகக் கூடாரத்துக்குள் படுக்காமல் இருட்டில் வந்து படுத்திருக்கிறார் என்று எண்ணிப் பார்த்தான் இதயசந்திரன். அவன் எண்ணத்தைக் கனோஜி புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவர் சொன்ன பதில் அத்தனைத் தெளிவாயிருந்தது. ''காதலனுக்கும் இருட்டு அவசியம். கள்வனுக்கும் இருட்டு அவசியம்!'' என்று கூறி ஆங்கரே நகைத்தார். அத்துடன் இதயசந்திரனை அதிர்ச்சிக்கு உள்ளாக்கக் கூடிய பெருண்மையொன்றையும் விளக்க முற்பட்ட ஆங்கரே கூறினார், ''இருட்டில் கிடப்பது நல்லது தமிழா! இல்லையேல் நீயும் நானும் எந்தச் சமயத்திலும் கொலை செய்யப்படலாம்!'' என்று. இதயசந்திரன் திகைத்தான். ''என்ன! என்ன சொல் கிறீர்கள்?'' என்று வினவவும் செய்தான். ''காதலனும் சரி கொள்ளைக்காரனும் சரி, எந்த விநாடியிலும் உயிரிழக்கத் தயாராயிருக்கவேண்டும். இரண்டிலும் பயனும் உண்டு பயங்கரமும் உண்டு'' என்று கூறிய ஆங்கரே மீண்டும் நகைத்தார் இடி இடியென்று.

## அத்தியாயம் 11

# கனோஜியின் சகஜம்

மகாராஷ்டிரர்களின் கடற்படைத் தளபதியும், மாலுமிகளிற் சிறந்தவரும், மகாவீரனுமான கனோஜி ஆங்கரே இருட்டில் திருட்டுத்தனமாகப் படுத்திருந்ததே விசித்திரமாயிருந்ததென்றால், அவர் பேச்சு பரம விசித்திரமாயிருந்தது இதயசந்திரனுக்கு. அவர் படுத்திருந்த இடம் கூடார வாயிலைவிட்டு நன்றாகத் தள்ளி, சந்திர வெளிச்சத்தை அடியோடு மறைக்கும் நாலைந்து நெருங்கிய பெரு மரக் கூட்டத்தின் நடுவேயிருந்தபடியால் இருட்டு நன்றாகக் கவிந்திருந்தது. அந்த இருட்டில் மரங்கள் உதிர்த்திருந்த சருகுகளின்மேல் கால்களை நன்றாகப் பரப்பிக்கொண்டு படுத்திருந்த ஆங்கரே அந்த இலைகளுக்கடியிலிருந்த பாறையின் முகப்புகளின் குத்தல்களைக்கூட லட்சியம் செய்யாமல் கிடந்தாரென்றாலும், இதயசந்திரன் முதுகில் முரட்டுக் கற்கள் குத்தவே, 'இத்தகைய தரையில் ஏதோ பஞ்சணையில் படுத்திருப்பது போல் இவர் எப்படி படுத்திருக்கிறார்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டான் தமிழகத்தின் அந்த வாலிபன். அப்படிப் படுத்தும் அவர் உறங்காமல் தான் படுத்ததும் தன்மீது கையைப் போட்டுப் பரிகாச வார்த்தைகள் பேச ஆரம்பித்ததும் வியப்பாயிருந்தது அவனுக்கு. தவிர அவர் தம்மைக் கள்வன் என்று கூறிக் கொண்டது பெரும் விசித்திரமாயிருக்கவே அதை மறுக்கும் வகையில் கூறினான், ''நானும் காதலனல்ல; தாங்களும் கள்வரல்ல!'' என்று.

''உண்மை தமிழா! நீ இந்தத் தாமினிக் காட்டைச் சுற்றி வேடிக்கை பார்த்துப் போக வந்திருக்கிறாய். நான் பிறநாட்டார் கப்பல்களைத் தர்மத்துக்காக வளைக்கிறேன்'' என்று ஆங்கரே நகைச்சுவையைக் காட்டினார்.



இதயசந்திரனுக்கு அவருடைய சொற்கள் சங்கடத்தை அளிக்கவே, ''ஏன், காட்டைச் சுற்றிப் பார்க்கக் கூடாதா?'' என்று வினவினான் ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காக.

''சுற்றிப் பார்க்கலாம் சுற்றிப் பார்க்கலாம். அதற்கு இதுதான் சமயம். காலையில் பார்த்தால் அவ்வளவு சுகப்படாது'' என்று ஆங்கரே மெல்ல நகைத்தார்.

''ஏன் சுகப்படாது? இந்தக் காட்டின் அழகு காலையில் மறைந்துவிடுமா?'' என்று வினவினான் இதயசந்திரன் எரிச்சலுடன்.

''மறைந்துவிடாது தமிழா. காலையில் மற்றவர்களும் இதன் அழகைப் பார்ப்பார்கள். மற்றவர்கள் விழித்திருக்கும்போது நாம் விரும்பும் அழகை நாம் துணிவுடன் பார்க்க முடியாது. ஆனால்...'' என்று கனோஜி ஆங்கரே இழுத்தார்.

''என்ன ஆனால்?''

''ஒரு வேளை அந்தத் துணிவும் உனக்கு உண்டோ என்னவோ?''

''எந்தத் துணிவு?''

''பகலில் பாவையரை நெருங்கும் துணிவு!'' என்று ஆங்கரே மீண்டும் பலமாகச் சிரித்தார்.

ஆங்கரே எத்தனை பெரிய வீரனாயிருந்தாலும் விரசமுள்ளவர், கேவலமான மனிதர் என்று தீர்மானித்த இதயசந்திரன் மேற்கொண்டு அவருடன் பேச்சுக் கொடுக்க இஷ்டப்படாமல் வேறுபுறம் திரும்பிப் படுக்க எத்தனித்தான். ஆனால், அவன்மேல் விழுந்திருந்த ஆங்கரேயின் இரும்புக்கரம் அவனை நகரவொட்டாமல் அழுத்தியது. ''தமிழா! பெண்களை அணுகுவதில் துணிவு ஒன்றுதான் தேவை இரவில் அணுகுவது துணிவின் குறையைக் குறிக்கிறது. தவிர நீ என்னுடன் வரப்போவதால் இரவு பகல்

வித்தியாசத்தை மறந்துவிடவேண்டும். நமக்கு இரவும் ஒன்றுதான்; பகலும் ஒன்றுதான். கிடைக்கும் வேளையில் எதையும் அனுபவிக்க வேண்டும். என்னைப் போன்ற கொள்ளைக்காரன் வாழ்க்கை அப்படிப்பட்டது. நீ என்னுடன் வரும்போது பல நாட்டு மக்களைப் பார்ப்பாய். அவர்களில் பலவித மாதர்களைப் பார்ப்பாய். விதவிதமான அழகிகள் உன் கைக்கு எட்டுவார்கள். அவர்களிடம் நீ எப்படி நடந்துகொண்டாலும் நான் கவனிக்க மாட்டேன். பலரைச் சந்திக்கும் சந்தர்ப்பம் உனக்குக் கிடைக்கும். அனுபவங்கள் பலவகையாயிருக்கும். இந்த வாழ்க்கைக்குத்தான் நீ வருகிறாய் சுவாமி சொற்படி'' என்றார் ஆங்கரே.

இதயசந்திரனின் வியப்பும் வெறுப்பும் பன்மடங்காகியது. பெண்களைப்பற்றி அவர் தாறுமாறாகப் பேசியதும், தன்னை இஷ்டப்படி அனுபவிக்குமாறு கூறியதும் அவனுக்குப் பெரும் மனக்கசப்பை அளித்தது. ஆகவே சொன்னான், ''மகாராஷ்டிர தளபதி ஒரு கொள்ளைக்காரரென்று நான் இதுவரை கேட்டதில்லை'' என்று.

''கொள்ளைக்காரராயிருப்பது அத்தனைத் தவறா?''

''சரியென்று நினைக்கிறீர்களா?''

''ஆம் தமிழா! சுற்றிலும் நாட்டைப் பார். யார் கொள்ளைக்காரனில்லை? முகம்மது கஜினி ஸோம்நாத்தைக் கொள்ளையிடவில்லையா? அவரைப்போல் படையெடுத்து வந்த எத்தனை பேர் கோவில்களை இடிக்கவில்லை, அங்குள்ள பொருள்களைச் சூறையாடவில்லை? ஏன், முந்திய சக்கரவர்த்தி அவுரங்கசீப் எத்தனை கோயில்களைச் சூறையாடியிருக்கிறார்! அதற்காக அவர்களை யார் கொள்ளைக்காரர்கள் என்றழைத்தார்கள்? நமது ராஜபுத்திரர்களே அவர்களிடம் கைகட்டி சேவகம் செய்யவில்லையா? ராஜபுத்திரர்கள் அவர்கள் படைத்தலைவர்களாக நம்மீது போர் தொடுத்து நம்மைச் சூறையாடவில்லையா? அவர்களைச் சரித்திரம் இகழ்ந்து



விட்டதா தமிழா! எப்பொழுதும் எந்தக் காலத்திலும் அரசியலில் கொள்ளை இருக்கும். கொள்ளைக்காரர்கள் பெரும் புகழும் பெறுவார்கள். நல்லவர்கள் திண்டாடுவார்கள். ராணா பிரதாப சிம்மன் திண்டாடினான் அக்பரால் ஆயுள் மட்டும். சிவாஜி மலைமலையாகத் திரிந்து போரிட்டார் எதிர்த்து ஆயுள் மட்டும். மகாராஷ்டிர சாம்ராஜ்யத்துக்காகத் தந்திரப்போர் நடத்திய அவரைக் கொள்ளைக்காரன் என்றார்கள் மொகலாய சரித்திராசிரியர்கள். இது மனித சமுதாயத்தின் இயற்கை நீதி. இந்த நீதியை மறக்காதே. கொள்ளைக்காரனாவதும் அவசியம் நாட்டு நன்மைக்காக. உன் நன்மைக்கும் அதுதான் நல்லது. காதலை நிறைவேற்றிக் கொள்ள எத்தனைத் தந்திரங்களைக் கையாளுகிறோமோ அத்தனை தந்திரங்களை வாழ்வை மற்ற வழிகளில் வளப்படுத்திக் கொள்ளவும் கையாளவேண்டும். நாட்டுக்குப் பணி புரிவதற்கும் அந்தத் தந்திரங்கள் தேவை!'' என்று உபதேசித்தார் கனோஜி.

அவர் பேசியபோது பொதுவாக அவர் குரல் சாதாரணமாகத் தெரிந்தாலும் இடையிடையே அதில் சிறிது உணர்ச்சி மின்னல்கள் பளிச்சிட்டதை இதயசந்திரன் கவனித்தான். அவர் பேச்சு மேலுக்குப் பொறுப்பற்ற பேச்சுப்போல் காணப்பட்டாலும் அதில் உள்ளூர ஒரு கோபமும் உறுதியும் புதைந்து கிடப்பதையும் ஊகித்துக் கொண்டான் இதயசந்திரன். அந்தப் பேச்சின் சாரத்தை அவன் எடை போட்டுக்கொண்டிருக்கையிலே கனோஜி ஆங்கரே மேலும் பேசத் தொடங்கினார். ''தமிழா! ஏதோ மொகலாயர்மேல், அவர்கள் மதத்தின்மேல் நான் சினப்பட்டுப் பேசுகிறேனென்று நினைக்காதே. மற்றவர்களும் அவர்களுக்கு விலக்கல்ல. கோவாவிலிருக்கும் போர்ச்சுக்கீஸியர் என்ன செய்கிறார்கள்? இங்கு வர்த்தகம் செய்ய வந்தார்கள், சில ஊர்களைச் சொந்தமாக்கிக் கொண்டார்கள். அவர்கள் ஊரிலிருந்து சாராய புட்டிகளை நிரம்பக் கொண்டு வருகிறார்கள். வேறு கண்ணாடி

சிப்பு முதலிய அலங்காரப் பொருள்களும் வருகின்றன. அவற்றைக் காட்டி இங்கு மக்களை மயக்குகிறார்கள். எதிர்ப்போரை இம்சை செய்கிறார்கள். கோவாவில் விபசார விடுதிகள் வைத்து அவற்றில் இந்த நாட்டுப் பெண்களைக் கொண்டு போய் அடைத்துப் போர்ச்சுக்கீஸிய மாலுமிகளுக்கும் மற்ற பிரபலஸ்தர்களுக்கும் ஆனந்தம் அளிக்கிறார்கள். இதையும் நாடு சகிக்கிறது, அவர்களுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்யும் அரசர்களும் நவாப்புகளும் இங்கிருக்கிறார்கள்'' என்ற ஆங்கரே சற்று நிதானித்துவிட்டு, ''போர்ச்சுக்கீஸியர்கள் கொள்ளையடிக்கிறார்கள். காமவெறி களியாட்டங்கள் நடத்துகிறார்கள். டச்சுக்காரர்கள் அத்தனை தூரம் போகவில்லை, வர்த்தகக் கொள்ளையோடு நிற்கிறார்கள். இந்த இரு நாட்டவரையும் விடப் பேராபத்து விளைவிக்கிறது இன்னொரு நாடு!'' என்றும் கூறினார்.

''அது எந்த நாடு?'' இதயசந்திரன் உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்ததால் தழுதழுத்த குரலில் வெளிவந்தது அவன் கேள்வி.

''இங்கிலாந்து, கிரேட்பிரிட்டன் என்று அதைக் கூறுகிறார்கள். பிரிட்டிஷ்காரர்கள்தான் நமக்குப் பேராபத்து'' என்று கூறினார் ஆங்கரே.

''அத்தனை கெட்டவர்களா அவர்கள்!'' இதயசந்திரன் குரலில் வியப்பு இருந்தது. சென்னையிலிருந்த ஆங்கிலேயர் கூடியவரையில் நல்ல பெயரே எடுத்திருந்தபடியால் அவர்களைக் குறைகூறும் காரணம் விளங்கவில்லை இதயசந்திரனுக்கு.

''கெட்டவர்களில்லை தமிழா! நாணயஸ்தர்களுங்கூட. அவர்களுக்கென்று சட்டதிட்டங்கள் உண்டு. அவர்கள் போக்குதான் பயங்கரம். மற்ற நாட்டினரைவிட அவர்கள் கப்பல்களில் அதிக சரக்கு போகிறது. அவர்கள் நிர்வாகம் நமது மக்களாலேயே போற்றப்படுகிறது. பம்பாயில் உள்ள அவர்கள் கம்பெனி அரசு, பிரிட்டிஷ் சட்ட



திட்டங்களின் முறையில் நடக்கிறது. இப்பொழுது நாட்டிலுள்ள சர்க்கார்களில் பம்பாயிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார்தான் திடமானது. அவர்கள் கப்பல்கள் மற்ற நாட்டுக் கப்பல்களைவிடத் திடமானவை. அவர்கள் பீரங்கிகள் மற்ற நாட்டுப் பீரங்கிகளை விட உறுதியும் சக்தியும் வாய்ந்தவை. அவர்கள் மாலுமிகள் கடற்போரில் மிகச் சிறந்தவர்கள். இந்த அரபிக் கடலில் எனக்கு அடுத்தபடியாக ஆட்சி செய்யக்கூடியவை பிரிட்டிஷ் கப்பல்தான். இப்பொழுது பிரிட்டிஷ் கூட்டம் சிறிய வர்த்தகக் கூட்டம். ஆனால் உறுதியுள்ள ராஜ்யக் கூடு அது. வர்த்தகக் கொள்ளை மட்டும் அவர்கள் நடத்துகிறார்கள். அதுவும் பிரிட்டிஷ் மன்னரின் பெயரால் சட்ட ரீதியாக நடக்கிறது. ஆனால் அந்தச் சிறு கூட்டம் இந்த நாட்டை மெள்ள கறையான் மாதிரி அரித்து விழுங்கி விடும். இது நமது நாடு இதயசந்திரா. இந்த நாட்டை ஓரளவு இத்தனை எதிர்ப்புக்களிலிருந்து காத்தவர் சத்ரபதி சிவாஜி. கொள்ளையால்— திடீர்த் தாக்குதல்களால் காத்தார். வேறுவிதமாக இந்த விபரீதங்களுக்கு யாரும் அணை போட்டிருக்க முடியாது. அவரது பாதையில், சிவாஜி மகாராஜாவின் பாதையில் நான் நடக்கிறேன். கொள்ளைக்காரனாயிருப்பதில் தவறில்லை தமிழா! எதுவாயிருப்பதும் தவறில்லை, விளைவு நல்லதாயிருந்தால்'' என்று சுட்டிக் காட்டினார் ஆங்கரே.

இதயசந்திரன் மனம் பெரும் போராட்டத்திலிருந்தது. ஆங்கரேயின் வார்த்தைகள் அவன் மனத்தில் ஆழப் புதைந்து அவன் முந்திய கருத்துகளைச் சிதைத்துக் கொண்டிருந்தன. அந்தச் சில விநாடிகளில் அவன் பானுதேவியை மறந்தான். தான் வந்த பணியை மறந்தான். ஆங்கரேயின் வார்த்தைகள் அனைத்தையும் மறக்க அடித்து விட்டதால் நாட்டின் நிலைமை அவன் சித்தத்தில் உறைந்து கிடந்தது. 'இந்த நிலையில் நான் யார் பக்கம் சேருவது? ஆங்கரேயின் பக்கமானால் நான் தாராபாயின் பக்கம். பானுதேவியின் பக்கமானால் நான் ஷாஹூவின்

பக்கம் இந்தத் தொல்லையில் சிக்க வேண்டாமென்றாலும் முடியாதே' என்று உள்ளூர எண்ணமிட்டான். இந்த எண்ணங்களால் குழப்பம் அதிகமாகவே கேட்டான், ''இதில் சுவாமி யார் பக்கம்?'' என்று.

''சுவாமி எந்தப் பக்கமும் இல்லை'' என்றார் ஆங்கரே.

''யார் பக்கமும் இல்லையென்றால்?'' என்று கேட்டான் இதயசந்திரன்.

''சுவாமி நாட்டில் அமைதியை விரும்புகிறார். நீதியையும் தர்மத்தையும் விரும்புகிறார். ஆகவே அவர் எந்தப் பக்கமும் சாயவில்லை; மொகலாயர் கடற்புரத்தலைவர்களான அபிஸீனிய ஸித்திகளைக்கூட அவர் வெறுக்கவில்லை. அவர் நடத்தும் விழாக்களில் ஜன்மவைரியான ஸித்திகளும் என்னைப் போன்ற மகாராஷ்டிரர்களும் வந்திருப்பார்கள். ஆனால் ஒரு சண்டையோ சச்சரவோ நடக்காது'' என்றார் ஆங்கரே.

''அப்படியா!''

''ஆம்.''

''முஸ்லீம்களும் ஹிந்துக்களும் ஒரே விழாவில் கலந்து கொள்கிறார்களா?''

''ஆம்.''

''விரோதிகள் அங்கு சண்டையிடுவதில்லை?''

''இல்லை.''

''அதெப்படி சாத்தியம்?'' என்று வியப்பு மிதமிஞ்சிக் கேட்டான் இதயசந்திரன்.

''மற்றவர்களுக்குச் சாத்தியமில்லாதது சுவாமிக்கு சாத்தியம். அவர் சொல்வது பலிக்கும், நடக்கும். ரஸூல் யாகூத்கான் ஜன்ஜீராவின் தலைமை ஸித்தியாவானென்று அவன் சாதாரண மாலுமியாயிருக்கையில் சுவாமி



கூறினார். அவன் இப்பொழுது ஜன்ஜீரா தீவின் சர்வாதிகாரி. எனது பால்ய நண்பன் பாலாஜி விசுவநாத் சிப்ளன் உப்பு ஆலையில் குமாஸ்தாவாயிருந்தான். 'நீ மகாராஷ்டிரத்தின் பேஷ்வா ஆவாய்' என்றார் சுவாமி. இப்பொழுது அநேகமாக அவன் பேஷ்வாவுக்கு அடுத்தபடி. சீக்கிரம் பேஷ்வா ஆடுவிடுவான். நானும் சாதாரண மாலுமியாகத்தானிருந்தேன்! ஒரு முறை தசரா விழாவுக்குப் பரசுராமபுரம் சென்றிருந்தேன். பரசுராமனுக்கு சுவாமிகள் பூஜை செய்து கொண்டிருந்தார். பெரும் கூட்டம் அவரைச் சுற்றி நின்று கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் என்னை மட்டும் தனித்து அழைத்தார் சுவாமி. பரசுராமன் திருவடியிலிருந்து ஒரு புஷ்பத்தை எடுத்துக் கையில் கொடுத்து, 'நீ மகாராஷ்டிரத்தின் கடற்படைத் தளபதியாகி மேல் கடலைப் பாதுகாத்துவா' என்றார். புஷ்பத்தை வாங்கிக் கொண்டேன். சுவாமியின் திருவடிகளில் விழுந்தேன். அடுத்து நடந்தது சுவர்ண துர்க்கத்தில் போர். ஸித்தி காஸிம்கான் சுவர்ண துர்க்கத்தைப் பிடிக்க முடியவில்லை. அப்பொழுது சுவர்ண துர்க்கத்தைக் காத்ததும் சுவாமியின் ஆசி.''

''எங்கு வழங்கினார் சுவாமி தமது ஆசியை?''

''இங்குதான். மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தைத் தகர்க்க எந்த ஸித்திகள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களோ எந்த ஸித்திகள் என் பரம வைரிகளோ அந்த ஸித்திகளின் அரசில்தான். இப்பொழுது நாம் இருப்பது ஸித்திகளின் அரசு. நாளை நீயே பார்ப்பாய் தமிழா. பரசுராமன் கோவிலும் அவர்கள் எல்லைக்குள் கட்டப்பட்டிருப்பதை. அந்தக் கோவிலுக்கு இரண்டு கிராமங்களை ஸித்தி ரஸூல்யாகூத்கான் தானம் செய்திருக்கிறான். பரசுராமபுரத்தின் எல்லை ஒன்றுதான் ஹிந்துக்களுக்குத் தற்சமயம் பாதுகாப்பு. ஆனால் அந்தப் பாதுகாப்பும் சில நாட்களாக உடைபட்டு வருகிறது. ஹிந்துக்களின் பரம எதிரி

யொருவன் இங்கிருந்து இரண்டு காத தூரத்தில் இருக்கிறான். இப்பொழுது நீயும் நானும் படுத்திருக்கும் பூமி அவன் ஆட்சியில் இருக்கிறது.''

''அத்தனை பயங்கர மனிதன் யார்?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''அஞ்சனவேல் கோட்டையின் அதிபதி. ஸித்திகளின் தரைப் படைகளின் தலைவன் ஸாத்ஸித்தி'' என்ற கனோஜி, அநேகமாக நாளை நாம் அவனைப் பரசுராம புரத்தில் சந்தித்தாலும் சந்திக்கலாம்'' என்றும் தெரிவித்தார்.

கனோஜி ஆங்கரே அளித்த தகவல்கள் இதயசந்திரன் இதயத்தில் ஏதேதோ எண்ணங்களைக் கிளப்பிவிட்டிருந்தது. பரம எதிரிகளைத் தனக்கு சீடர்களாக வைத்துக் கொண்டிருக்கும் பிரும்மேந்திர ஸ்வாமியின் அமானுஷ்ய சக்தியை எண்ணிப் பெரும் பிரமிப்பை அடைந்திருந்தான் அவன். கனோஜி ஆங்கரே தனது உயிர் அந்தப் பகுதியில் செல்லாக்காசு பெறாது என்பதை அறிந்தும் அங்கு சுவாமியைப் பார்க்க வந்த துணிவும், சுவாமியின் சொல்லால் சாதாரண மாலுமிகள், குமாஸ்தாக்கள், பெரும் பதவிகளுக்கு வந்ததும் நம்பத்தகாததாயிருந்தது அவனுக்கு.

அவன் அவநம்பிக்கை கனோஜி ஆங்கரேக்குப் புரிந்து தானிருந்தது. ஆகவே மீண்டும் சொன்னார்: ''தமிழா! உனக்கு நான் சொல்வதில் இப்பொழுது நம்பிக்கை வராது. நாளை பரசுராம பட்டணத்தைப் பார்த்ததும் புரிந்து கொள்வாய்'' என்று.

ஆனால் அதுவரை அவன் தாமதிக்க அவசியமில்லாது போயிற்று. அடுத்த நாழிகைக்குப் பிறகு நடந்த விபரீதம் தூங்கிக் கொண்டிருந்த அவனை வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருக்க வைத்தது. அவன் எழுந்து



உட்கார்ந்த பொழுது கனோஜி சகஜத்துடன் உட்கார்ந்திருந்தார். அவர் இடையிலிருந்து கைத் துப்பாக்கியொன்று புகைந்து கொண்டிருந்தது. சற்று தூரத்தில் யாரோ முனகும் சப்தமும் கேட்டது. திடீரென்று நாலைந்து பேர் அடவிக்குள் ஓடும் காலொலிகளும் கேட்டன.

இதயசந்திரன் எழுந்திருக்க முயன்றான். கனோஜியின் இரும்புக் கை அவனை அழுத்தியது. ''உயிரின் மீது ஆசையிருந்தால் இந்த இடத்தை விட்டு நகராதே'' என்ற சொற்களும் அவர் வாயிலிருந்து உஷ்ணத்துடன் உதிர்ந்தன.

## அத்தியாயம் 12

# ஸாத் ஸித்தி

குறுக்கே கனோஜியின் கை இரும்பு உலக்கையைப் போல் விழுந்தழுத்த, அவர் எச்சரிக்கைச் சொற்கள் உஷ்ணத்துடன் ஒலிக்க, தூரத்தே யாரோ ஒருத்தன் முனகல் தொடர்ந்து கேட்க, இத்தகைய விபரீத சூழ்நிலையிலிருந்த இதயசந்திரனுக்குப் பல விஷயங்கள் விளங்கவில்லை. இதே இரவுக்கு முந்திய இரவில் கரையருகே கப்பல் போர் நடந்து பீரங்கிகள் முழங்கியிருந்தும் கடற்கரையருகே பானுதேவியோ அவள் தோழிகளோ காவலரோ வராதிருந்ததையும் சுவாமிகள் மட்டும் ஏதும் நடவாததுபோல் சங்கு பொறுக்கியதையும் எண்ணிப் பார்த்த அந்த வாலிப வீரன், 'நேற்றிரவுதான் அப்படி. இன்றைய இரவில் கைத் துப்பாக்கியின் வெடிச் சத்தம் கேட்டும் சுவாமிகளோ பானுதேவியோ மற்றவர்களோ எந்தப் பதற்றத்தையும் காட்டாமல் எப்படிப் படுத்திருக்கிறார்கள்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான். அந்தக் கூட்டத்தின் போக்கு மனித இயற்கைக்கு முழுதும் மாறுபட்டிருப்பதை நினைக்க நினைக்க ஏதும் விளங்கவில்லை அவனுக்கு. அவனுக்கு விளங்க வைக்க யாரும் முன்வரவும் இல்லை. சுவாமிகள் கூடாரத்திலிருந்த காவலர் கூட்டத்திலும் எந்தப் பரபரப்பையும் காணோம் சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் மீதிருந்த கையை எடுத்த கனோஜி ஆங்கரே தீர்க்க நித்திரையில் ஆழ்ந்து விடவே அவர் சுவாசம் பெரியதாகவும் ஒரே சீராகவும் வந்து கொண்டிருந்தது. அந்தத் தாமினிக் காடு மீண்டும் அமைதி பெற்றது. அந்த அமைதியைக் கலைத்தது தூரத்தே கிடந்த யாரோ ஒரு மனிதனின் முனகல்தான்.

அந்த முனகல் மற்றவர்களைப் பாதிக்காவிட்டாலும் இதயசந்திரனைப் பாதிக்கவே செய்ததால் அவன் உறக்கம்



பிடிக்காமல் அசைந்து அசைந்து படுத்தான். சற்று நேரத்திற்கொருமுறை பக்கத்தில் படுத்திருந்த ஆங்கரேயின் ஆழ்ந்த நித்திரையைக் கவனித்ததும் வியப்படைந்தான். 'இப்படி ஆழ்ந்த நித்திரை செய்யும் இவர் சின்னஞ்சிறு ஓசை கேட்டதும் எப்படி எழுந்திருக்கிறார்? ஆழ்ந்த நித்திரையும், விநாடி நேர எச்சரிக்கையில் விழிப்பும் எப்படி ஏற்பட முடியும்?' என்று நினைத்துப் பார்த்தும் விடை கிடைக்கவில்லை அவனுக்கு அந்த இரவில். அது தவிர வேறொரு விஷயமும் விசித்திரமாயிருந்தது அவனுக்கு. காவலர் கூடாரங்களை அமைத்திருக்க பானுதேவி, அவள் தோழிகள், ஆங்கரே முதலிய அனைவரும் ஏன் வெளியில் படுக்கிறார்கள் என்பதையும் எண்ணிப் பார்த்தான் இதயசந்திரன். 'வெப்பத்துக்காக' இவர்கள் வெளியே படுத்திருக்க முடியாது. பனிக் குளிரும் அதிகமாகத்தானே இருக்கிறது. எதற்காக இந்தக் குளிரில் இவர்கள் விரைக்கவேண்டும் என்ற வினாவையும் எழுப்பிக் கொண்டான். ஆனால் எதற்கும் விளக்கம் கிடைக்காது போகவே அரைத் தூக்கமும் அரை விழிப்புமாக அன்றிரவைக் கழித்தான்.

பொழுது புலருவதற்குக் கால் ஜாமத்திற்கு முன்பே அந்த முகாம் விழித்துக்கொண்டது. காவலர் நடமாட்டம் துரிதமாகக் கேட்டது. கூப்பிடு தூரத்தில் அமைதியான அந்தக் காட்டின் ஊடே எழுந்த காற்சிலம்பு ஒலிகள் பெண்களும் விழித்தாகிவிட்டதையும் நிரூபித்தன. இதயசந்திரனும் மெள்ள எழுந்து கண்களைக் கசக்கிக் கொண்டான். அவன் காதுகளில் வேத ரிக்குகளின் ஓசை கம்பீரமாக விழுந்தது. ஸ்வரங்களைத் திட்டமாக உச்சரித்து ரிக்குகளைச் சொல்லிக் கொண்டிருந்தார் கூடாரத்துக்குள்ளே பிரும்மேந்திர ஸ்வாமி. அந்த பஞ்ச உஷத்காலத்தில் வேதசப்தங்கள் உடம்பின் ஒவ்வொரு நரம்புக்கும் உணர்ச்சிக்கும் பெரும் ஆறுதலையும் சாந்தியையும் இன்பத்தையும் அளிப்பதை உணர்ந்த இதயசந்திரன் அதை நீண்ட நேரம் கேட்டுக்கொண்டு உட்கார்ந்தான். அடுத்து ஏதோ

மகாராஷ்டிர பஜன்களையும் அவற்றை அடுத்துத் திருப்பல்லாண்டிலிருந்து இரண்டு பாட்டுகளையும் சுவாமிகள் சொல்லவே, சுவாமிக்குத் தெரியாதது ஏதுமிருக்க முடியாது என்று நினைத்ததோடு அவர் தமிழ்ப் பிரபந்தப் பாட்டுகளைச் சொன்னது பேரின்பமாயிருந்தது அவன் செவிகளுக்கு. இப்படிக் கேட்டு, எத்தனை நாளாகிறது என்று நினைத்த இதயசந்திரன் மிக இன்பமான எண்ணங்களுடன் எழுந்திருந்து கூடாரத்துக்குள் சென்று சுவாமிகளை வணங்கிவிட்டு வெளியே சென்றான். வாயிலில் வந்து தூரத்தில் தானும் ஆங்கரேயும் படுத்திருந்த மரக்கூட்டத்தைக் கண்டான். ஆங்கரேயை அங்குக் காணோம். பிறகு இரவில் முனகல் கேட்டுக்கொண்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றான். அங்கும் யாரையும் காணோம். இரண்டொரு இடங்களில் ரத்தக்கறை மட்டும் இருந்தது. அதனால் தீர்க்க சிந்தனையுடன் காட்டுக்குள் நடந்த இதயசந்திரன் காடு வர வர உயரத்தில் போவதையும் அது ஒரு மலைச்சரிவில் இருப்பதையும் புரிந்து கொண்டான். காட்டின் பல பகுதிகளில் அருவிகள் ஓடும் சலசலப்புச் சத்தம் கேட்கவே, ஓர் அருவியின் திசை நோக்கிச் சென்று அதில் நீராடி காலைக் கடன்களை முடித்துக்கொண்டு சுவாமிகளின் கூடாரத்துக்குத் திரும்பினான்.

பிரும்மேந்திர ஸ்வாமி ஆழ்ந்த நிஷ்டையிலிருந்தார். அவர் கண்கள் விழித்திருந்தாலும் புருவ மத்தியை நோக்கித் திரும்பிக் கிடந்தன. அவருக்கு முன்பு கனோஜி ஆங்கரேயும் பானுதேவியும் தோழிகளும் நீராடிப் புத்தாடை அணிந்து நெற்றியில் திலகம் தீட்டி நின்றிருந்தார்கள். சுவாமிஜியின் பூஜைப் பெட்டி அவர் முன்பு திறந்திருந்தது. அதிலிருந்து சாளக்கிராமங்கள் வாய்களில் சந்தனக் காப்புடன் காட்சியளித்தன. ஒரு சுவேத லிங்கமும் ஸ்படிக விநாயகர் பிம்பமும் அவற்றுக்கிடையே பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. எங்கும் ஒரு



தெய்வீகச் சூழ்நிலையிருந்தது சுமார் இரண்டு நாழிகைகள் கழித்துத்தான் சுவாமிஜி கண்களைத் திறந்தார். அவர் கண்ணைத் திறந்ததும் பக்கத்திலிருந்த வலம்புரிச் சங்கிலிருந்து தீர்த்தமெடுத்துப் பிம்பங்களுக்குப் புரோக்ஷித்து விட்டுத் தமக்கெதிரே வணங்கியவர்களுக்கும் தீர்த்தப் பிரசாதம் வழங்கினார் எல்லோரும் வணங்கி தீர்த்தப் பிரசாதம் பெற்றதும் பூசைப் பெட்டியை மூடி எடுத்து ஒரு மான் தோலில் கட்டிய பிரும்மேந்திர ஸ்வாமி, "நாம் காலைப் போஜனத்தை இங்கேயே முடித்துக் கொண்டு கிளம்புவோம்" என்று கூறினார் கனோஜி ஆங்கரேயை நோக்கி. கனோஜி ஆங்கரே அந்த உத்தரவை ஏற்றுக்கொண்டு சுவாமிகளின் திருவடியில் படுத்து எழுந்திருந்து வெளியே சென்றார்.

அவர் சென்றதும் இதயசந்திரன் பானுதேவியை நோக்கினான். அவள் முகம் அந்தக் காலையில் களையிழந்து கிடந்தது. களையிழந்த சமயத்திலும் அது எத்தனை அழகாயிருக்கிறதென்பதைக் கவனித்த இதயசந்திரன் 'களையிழப்பதால் சந்திரன் அழகு குன்றுகிறதா என்ன?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான். தவிர அவள் முகம் களையிழந்திருப்பதற்குக் காரணமும் புரிந்தது அவனுக்கு. தாராபாயின் ஸார்கேல் அந்தக் கூட்டத்துக்கு வந்ததும் அதில் கலந்து கொண்டதும் ஷாஹுவின் மருமகளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லையென்பதைப் புரிந்துகொண்டான் இதயசந்திரன். அவன் அப்படி நினைக்கையிலேயே பானுதேவி அதைப்பற்றி சுவாமிகளையே கேட்டுவிட்டாள், 'இந்த மனிதன் எங்கள் எதிரி என்று கேள்விப்பட்டேன். உண்மைதானா?'' என்று.

பிரும்மேந்திர ஸ்வாமியின் கூர்ய கண்கள் பானுதேவியை நோக்கித் திரும்பின "எந்த மனிதன் எந்த மனிதனுக்கு விரோதியில்லை தேவி? எந்த மனிதன் தனக்கே விரோதியில்லை?" என்று வினவினார் சுவாமிகள் வெகு சாதாரணமாக.

''சுவாமி, நான் தத்துவம் பேச இஷ்டப்படவில்லை'' என்றாள் ஷாஹூவின் மருமகள் தைரியத்துடன்.

''தத்துவம் பேச யார் இஷ்டப்படுவார்கள்? தத்துவம் என்பது அடிப்படை உண்மையல்லவா?'' என்று வினவினார் பிரும்மேந்திர ஸ்வாமி.

''நான் உண்மையைப் பேச இஷ்டப்படுகிறேன் சுவாமி! இந்த மனிதன் என் மாமனின் பரம வைரி அவனும் நானும் ஒரே இடத்தில் எப்படி இருக்க முடியும்?'' என்று வினவினாள் பானுதேவி குரலில் சிறிது உஷ்ணத்தையும் காட்டி

பிரும்மேந்திர ஸ்வாமி அவளை அனுதாபத்துடன் நோக்கினார் ''பரசுராமபுரம் உனக்குப் பதில் சொல்லும். இன்று மாலையில் கதிரவன் அஸ்தமிக்கு முன்பே அங்கு நாம் சென்று விடுவோம்'' என்றும் கூறினார் அனுதாபம் குரலில் ஒலிக்க.

பானுதேவி அப்பொழுதும் அசையாமல் கேட்டாள் ''என்ன பதில் சொல்லும் சுவாமி?'' என்று.

''மனிதகுலம் ஒன்று என்று.''

''எப்படித் தெரியும்?''

''பரசுராமபுரத்தில் முஸ்லிம்களும் ஹிந்துக்களும் ஒற்றுமையாய்ப் பூசலில்லாமல் வாழ்வதைப் பார்ப்பாய் பெண்ணே! பரமவைரிகள் அக்கம் பக்கத்தில் கைகட்டி நிற்பதைப் பார்ப்பாய். இம் மாநிலத்தில் மற்ற இடங்களில் அதாவது தரையிலும் கடலிலும் மரணப் போராடுபவர்கள், ஆயுதங்களை எடுக்கவும் துணியாத காட்சியைப் பார்ப்பாய் பரசுராமபுரத்தில் தாங்கக் கூடிய ஆயுதம் பரசு அதைத் தாங்கி நிற்பவர் பார்க்கவரான பரசுராமன். வேறு ஆயுதம் எதுவும் அங்கு உருவப்படுவதில்லை பரசுராமபுரம சாந்தி நகரம் அங்கு வைரிகளுக்கு இடமில்லை. உன் மனத்தில் யார் மீதாவது வைரமிருந்தால் அதை இங்கேயே அகற்றிவிடு ஷாஹூவின் மருமகளே! இந்தத் தாமினிக் காடு எனது தபோவனம். இது பரசுராம



மலையின் வடபுறம் இருக்கிறது. மலையின் தென் சரிவிலிருக்கிறது பரசுராமபுரம் மலைக்காட்டில் ஏறி அப்புறம் இறங்கினால் இதுவரையில் நீ காணாத காட்சியைப் பார்ப்பாய். ஹிந்துக்களை அறவே வெறுக்கும் ஸாத் ஸித்திகூடத் தனது ஆட்களைப் பகலில் அனுப்பத் துணியாமல் இரவில் அனுப்புவதை நீ நேற்றிரவு உணர்ந்திருக்கலாம்'' என்ற பிரும்மேந்திர ஸ்வாமி பானுதேவி போகலாம் என்பதற்கு அறிகுறியாகக் கையசைத்தார்.

பானுதேவி சுவாமிகளுக்கு கோபத்துடன் தலை வணங்கிச் சென்றாள் வெளியே. அவளுடன் அவள் தோழிகளும் சென்றனர். இதயசந்திரன் மட்டும் தாமதிக்கவே சுவாமி அவனை நோக்கிப் புன்முறுவலுடன் கேட்டார், ''நீ ஏதாவது கேட்க வேண்டியிருக்கிறதா?'' என்று.

இதயசந்திரனுக்கு இரவு நிகழ்ச்சியைப்பற்றிக் கேட்கத் தோன்றினாலும் பிரும்மேந்திர ஸ்வாமியிடம் உள்ளூர இருந்த பயத்தால், ''இல்லை ஸ்வாமி, ஏதும் கேட்க வேண்டியதில்லை'' என்றான்.

பிரும்மேந்திர ஸ்வாமி அவனைக் கருணையுடன் நோக்கிவிட்டுச் சொன்னார், ''குழந்தாய்! இதய சந்தேகத்தைவிடப் பொய் மிகவும் கெடுதலானது. உன் மனத்தில் எழுந்துள்ள சந்தேகங்கள் எனக்குத் தெரியும். நேற்றிரவு கப்பல் போர் நடந்ததும் அருகாமையிலிருந்த நாங்கள் துடிப்பைக் காட்டாதது உனக்கு வியப்பு. ஆனால் கொங்கணியில் அதில் வியப்புக்குரிய அம்சம் ஏதுமில்லை. அரபிக்கடலில் சதா பல நாட்டுக் கொள்ளைக்காரர்கள் உலாவுகிறார்கள் சதா கப்பல் போர்கள் ஏற்படுகின்றன. சில கொள்ளைக்காரர் படகுகளில் தரைக்கும் வந்து தங்குவதுண்டு. ஆகவே எந்தப் போரும் எந்த நிலையும் கிராம மக்களுக்கு சகஜமாகிவிட்டது. யாரும் போர்களைச் சட்டை செய்வதில்லை. நேற்றிரவு ஆங்கரே ஒருவனைச் சுட்டதும் உனக்கு வியப்பாயிருக்குமே ஸாத் ஸித்தி இப்படி இரவில் தாக்குவதும் ஆட்களைத் தூக்கிச்

செல்வதும் வழக்கமாகிவிட்டது. அப்படி அவன் அனுப்பிய வீரர்களில் ஒருவனைத்தான் ஆங்கரே சுட்டார். இரவில் அந்த இடத்துக்கு நீங்கள் யார் சென்றிருந்தாலும் உங்களை ஸாத் ஸித்தி ஆட்கள் சுட்டிருப்பார்கள். ஆகையால்தான் சுடப்பட்டவனைக் காலையில் எழுந்திருந்த பின்பு ஆங்கரே கவனித்தார். அவனுக்குத் துப்பாக்கிக் காயம் தொடையில்தான் பட்டிருந்தது. அவனுக்குக் கட்டுப் போட்டுக் காவலர் கூடாரத்தில் தூக்கிப் போட்டிருக்கிறார்'' என்று. ''இனி சந்தேகம் ஏதாவதிருக்கிறதா தமிழா?'' என்றும் வினவினார்.

''அவர்கள் வந்தது, ஆழ்ந்த தூக்கத்திலிருந்த கனோஜிக்கு எப்படித் தெரிந்தது?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''புலி உறங்கும்போது விழித்திருக்கும். விழித்திருக்கும் போது உறங்கும், அதன் போக்குத்தான் கனோஜிக்கும். அவர் ஓர் அற்புத மனிதர் இதயசந்திரா! மகாராஷ்டிரத்தின் விமோசனம் அவர் கையில்தானிருக்கிறது'' என்ற சுவாமியின் குரல் மிகவும் கனிவாயிருந்தது.

கனோஜியிடம் அவருக்கிருந்த பெருமதிப்பையும் அன்பையும் புரிந்து கொண்ட இதயசந்திரன் வெளியே செல்லக் கிளம்பினான். போகும்போது அவனை, ''இதயசந்திரா!'' என்றழைத்து சுவாமி கூறினார். ''எக்காரணத்தை முன்னிட்டும் உன் வாளை உருவாதே. ஸாத் ஸித்தி உன்னை அவமதித்தாலும் பொறுத்துக்கொள்'' என்றும் எச்சரித்தார்.

''ஸாத் ஸித்தி பரசுராமபுரத்துக்கு வருவானா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''வருவான், காயமடைந்த அவன் வீரனை அழைத்துச் செல்ல. அவன் வீரன் காரணமின்றிச் சுடப்பட்டதாகப் புகாரும் செய்வான். நாளை பரசுராமபுரத்தில் பல விசித்திரங்களை நீ பார்ப்பாய். எதைப் பார்த்தாலும் கவலைப்படாதே. ஆனால் ஸாத் சித்தியிடமிருந்து விலகி



நில்'' என்று எச்சரித்த சுவாமி அவனுக்குப் போக விடையளித்தார்.

ஆனால் பரசுராமபுரத்தில் விதி அவனைத் தொடர்ந்து வந்தது. பரசுராமபுரத்திற்குள் பிரும்மேந்திர ஸ்வாமி நுழைந்தபோது அவருடன் செல்லாமல், கண்ணைக் கவர்ந்த அந்த நகரத்தின் சூழ்நிலையைப் பார்த்துப் பிரமித்துக் கொண்டிருந்த இதயசந்திரனை நோக்கிப் புரவி வீரர் கூட்டமொன்று பாய்ந்து வந்தது. அதன் முகப்பில் அராபியப் புரவியில் வெகு கம்பீரமாக அமர்ந்து வந்த ஒருவன் அவனருகே வந்ததும் புரவியை நிறுத்தி, ''டேய்! பாதையில் நிற்காதே! விலகி நில்'' என்று அதட்டியதன்றி அவனை உதைக்க இடது காலையும் தூக்கினான். அந்த உதை இதயசந்திரன்மீது விழவில்லை. பதிலுக்கு அந்த ஆஜானுபாகு அடுத்த விநாடி மலைச் சரிவில் புரண்டுகொண்டிருந்தான். அக்கம் பக்கத்திலிருந்தவர் திகிலுற்றுத் திக்பிரமையடைந்து நின்றனர், உருண்டவன் ஸாத் ஸித்தியென்ற காரணத்தால்.

## அத்தியாயம் 13

# மரண அணைப்பு

வாழ்வில் ஏற்படும் சின்னஞ்சிறு நிகழ்ச்சிகள் வாழ்வின் பாதையில் பெரும் திருப்பங்களை ஏற்படுத்தி விடுகின்றன. பிரும்மேந்திர சுவாமியுடன் செல்லாமல் தனித்து நின்று பரசுராமபுரத்தின் அழகைப் பருகிய இதய சந்திரனும் அத்தகைய ஒரு பெரும் திருப்பத்தில் நின்று கொண்டிருந்தானானாலும் அதை அவன் அறிந் தானில்லை.

பரசுராமபுரத்து தெய்வீக அழகில் மயங்கி நின்று கொண்டிருந்தான் அவன், மஞ்சள் வெய்யில் வீசிய அந்த மாலை வேளையில். தாமினிக் காட்டிலிருந்து புறப்பட்டுக் கஷ்டப்பட்டு மலையில் ஒருபுறம் ஏறியதால் ஏற்பட்ட கஷ்டங்கள்கூட, அதே மலையின் இன்னொரு புறச் சரிவிலிருந்து பரசுராமபுரத்தின் இணையற்ற அழகைப் பார்த்ததால் அடியோடு அகன்று விட்டது அவனுக்கு. அன்றைய பகலில் உச்சிவேளைக்குச் சற்றுமுன்பு கூடாரங் களைக் கழற்றிச் சுருட்டிப் பயணப்படும்படி சுவாமிகள் உத்தரவிட்டபோதும் சரி, பிறகு மிகக் கஷ்டமான பயணத்தின் போது கனோஜி கூறிவந்த பரசுராமபுரத்தின் அற்புதக் கதையின் போதும் சரி, அவர் சாதாரண ஒரு மலைப்பட்டிணத்தை எதிர்பார்த்தானே தவிர, இத்தகைய இதயத்தை அள்ளும் காட்சியை எதிர்பார்க்கவில்லை. காவல் வீரர்கள் கூடாரங்களைச் சுருட்டியதும் பிரும் மேந்திர சுவாமி காயமடைந்த அபிஸீனியனை பானுதேவி யின் பல்லக்கில் படுக்க வைத்துத் தூக்கிவர உத்தரவிட்டு, தமது பூஜைப் பெட்டியுடன் ஒரு புரவியில் ஏறிக் கொள்ள, பானுதேவியும் காவலன் புரவியொன்றில் ஏறிவர, இதயசந்திரன் மற்றொரு காவலன் புரவியில் ஆரோகணிக்க, கூட்டம் பயணப்பட்டது. கூட்டம் நகர்ந்து ஒரு நாழிகைக்குப் பிறகுதான் கனோஜி ஆங்கரே



ஒரு பெரிய வெண்புரவியில் அவர்களுடன் கலந்து கொண்டார். அப்படிக் கலந்து கொண்டபோதும் அவர் சுவாமிகள் பக்கலில் செல்லாமல் தமது புரவியைத் தேக்கிக் கடைசியில் வந்துகொண்டிருந்த இதயசந்திரன் புரவியுடன் இணைத்துக் கொண்டார். சுவாமிகள் பக்கத்தில் சென்று கொண்டிருந்த பானுதேவி, கனோஜி ஆங்கரே இதய சந்திரன் அருகே சென்றதும் அவர்கள் இருவர்மீதும் உஷ்ணப்பார்வையொன்றை வீசி விட்டு மீண்டும் தலையை அலட்சியமாகத் திருப்பி எதிர்ப் பாதையைக் கவனித்துக் கடிவாளத்தை உலுக்கிப் புரவியை நடத்தினாள்.

தாமினிக் காடு அடர்த்தியாயிருந்ததன்றி, மலைச் சரிவில் அவர்கள் ஏற வேண்டியிருந்ததாலும், பாதை மிகக் கரடுமுரடாயிருந்தபடியாலும் புரவிகள் சற்றுச் சிரமப் பட்டே நடந்தன. அந்தப் புரவிக் கூட்டத்தில் கனோஜி ஆங்கரேயின் புரவி மட்டும் தனிப்பட்ட வேகத்தைப் பெற்றிருந்ததைப் பார்த்த இதயசந்திரன் வீரனுக்கு இயற்கையாகவுள்ள ஆசையால் கேட்டான், ''இந்தப் புரவி தனிரகம் போலிருக்கிறதே?'' என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்த கனோஜி ஆங்கரே, ''அரபு நாட்டுப் புரவி இது. பாலைவனங்களில் வேகமாகச் செல்லும். மலையில் செல்ல நான்தான் பழக்கினேன். இதை சுவாமிகளுக்குக் கொடுக்கத்தான் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று.

''சுவாமிகளுக்கா! அடிக்கடி சுவாமி புரவியில் ஏறிச் செல்வாரா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''சாதாரணமாக நடந்துதான் செல்வார். பாரதம் முழுதும் யாத்திரை செய்திருக்கும் சுவாமிக்கு நடை ஒரு பிரமாதமல்ல. இருப்பினும் அவசியமானால் புரவியிலும் செல்வார்'' என்றார் கனோஜி ஆங்கரே.

''பாரதம் முழுவதும் பயணம் செய்திருக்கிறாரா!'' இதயசந்திரன் வியப்புடன் வினவினான்.

கனோஜி இக் கேள்விக்கு உடனடியாகப் பதில் சொல்ல வில்லை. சற்றுச் சிந்தித்துவிட்டு, ''வீரனே! உனக்குக் கதை முழுதும் சொன்னால்தான் புரியும். சொல்கிறேன் கேள்!'' என்ற அவர் மெள்ளத் துவங்கினார் கதையை:

''பிரும்மேந்திர சுவாமியின் பெயர் விஷ்ணு. அவர் தந்தையின் பெயர் மகாதேவ் பட். தாயின் பெயர் உமா பாய் சுமார் எட்டு வயதிலிருந்தே விஷ்ணு என்ற சிறுவன் சமாதியில் திளைத்து மணிக்கணக்கில் மூச்சுப் பேச்சின்றி இருப்பதைத் தாய் தந்தையர் பார்த்து வியாகூலமடைந்தனர். அந்த மோனநிலை வயதுடன் வளர்ந்து, வேத பாடங்களுடன் விருத்தியாயிற்று. சுமார் பன்னிரண்டு வயதில் சுவாமி துறவறம் பூண்டு காசிக்குப் போய்ப் பல ஆண்டுகள் வேத சாஸ்திரங்களைக் கற்றறிந்தார். பிறகு பிரும்மேந்திர சுவாமியென்ற பட்டமும் பெற்று, பாரத யாத்திரை கிளம்பினார். ஹிமாலயத்திலிருந்து கன்னியாகுமரிவரை அத்தனை தலங்களையும் தரிசித்தார். அத்தனை புண்ணிய நதிகளிலும் புஷ்கரணிகளிலும் நீராடினார். பிறகு உள்ளே ஏதோ ஒரு சக்தி உத்தரவிட, கொங்கண நாடு வந்தார். பரசுராமபுரத்தை அடைந்தார்...'' இந்த இடத்தில் கனோஜி தமது சொற்களைச் சிறிது தேக்கி இதயசந்திரனைக் கவனித்தார். இதயசந்திரன் பிரமித்துக் கேட்டுக் கொண்டிருந்தான். கனோஜி பயத்துடன் மேலே தொடர்ந்தார்:

''அவர் இங்கு வந்தபோது மலைச்சரிவின் உச்சியிலிருந்த பரசுராமன் கோவில் இடிந்து கிடந்தது. சித்பவன் அந்தணர்களின் பிறப்பிடமான பரசுராமபுரத்தில் இடிந்த வீடுகள் சில இருந்தன. சித்பவன் அந்தணர்களையும் அவர்களுக்காகக் கொங்கணத்தையும் சிருஷ்டித்த பார்கவ ராமனான— பரசுராமன் இருப்பிடம் கேடுற்றுக் கிடந்ததைக் கண்ட சுவாமி கண்ணீர் விட்டார். இடிந்த கோயிலிலேயே தியானத்தில் உட்கார்ந்துவிட்டார்......

''அன்ன ஆகாரமின்றி, கண் திறவாமல், உயிரே உடலில் இல்லாதது போல் நாற்பது நாட்கள் சமாதியி



லிருந்த சுவாமியைப் பார்த்து பலர்— சில முஸ்லிம்கள் உள்பட— பிரமித்துப் போயினர். இப்பொழுது பரசுராமபுரம் இருக்கும் பெத்தே என்ற கிராமத்தையும் அம்பாஸ் என்ற கிராமத்தையும் ஜன்ஜீராத் தீவின் தலைவர் ஸித்திரஸுல்யாகூத்கான், சுவாமிக்கு இனாமாகக் கொடுத்திருக்கிறார். பட்டண நிர்மாணத்துக்குப் பணம் நிரம்பக் கொடுத்திருக்கிறார். அவர் உதவியால் நிர்மாணமான பரசுராமன் கோயிலையும் பட்டணத்தையும் பார். அங்குள்ள மற்றக் கோவில்களையும் பெரும் பிரார்த்தனை மண்டபத்தையும், தனித்து உயர்ந்து நிற்கும் ஜோதி ஸ்தம்பத்தையும் பார். உனக்கு சுவாமியின் சக்தி, செல்வாக்கு இரண்டும் தெரியும்!'' என்றார் கனோஜி ஆங்கரே.

இதற்குப் பிறகு அவரும் பேசவில்லை. இதயசந்திரனும் பேசவில்லை. மௌனமாகவே பயணம் நடந்தது. மெள்ள பரசுராம மலையின் வடபுறத்திலிருந்த தாமினிக்காட்டைக் கடந்து தென்புறத்தில் கீழிறங்கிய பாதையில் சுவாமிஜியின் கூட்டம் நகர்ந்தது. அந்தப் பகுதி வந்ததும் கனோஜி ஆங்கரே தமது புரவியை நிறுத்திக் காட்டு முகப்பிலேயே நின்றுவிட்டார். இதயசந்திரன் மனம் பரசுராமபுர விருத்தாந்தங்களில் திளைத்திருந்ததால் அவர் நின்றுவிட்டதைக் கவனிக்காமல் புரவியை நடத்திச் சென்றான்.

சுவாமி கூறியபடி அவர்கள் பரசுராமபுரத்தின் தெற்கு வாயிலை மாலை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் அடைந்தார்கள். சுவாமிகள் வந்துவிட்டதை மலை உச்சியிலிருந்து பார்த்த ஒருவர் கையசைக்க, பரசுராமன் கோவிலின் மணி 'டணார் டணார்' என்று பலமாக அடித்தது. உடனே வாயிலுக்குப் பெருங்கூட்டம வந்து அவரை எதிர்கொள்ளவே சுவாமிகள் புரவியிலிருந்து இறங்கி ஒரு கையில் பூஜைப்பெட்டியையும் இன்னொரு கையில் பூண் போட்ட பெருந்தடியையும் தாங்கிக்கொண்டு நடந்தார். எங்கும் மக்கள் கூட்டமாகத் திரண்டு வந்தனர். அவர்களில் பல நாட்டு மக்களும் இருந்தனர்.

பலதரப்பட்ட மக்களும் இருந்தனர். சுவாமியைப் பற்றிய ஜெயகோஷம் வானைப் பிளந்தது. இதையெல்லாம் பார்த்துப் பிரமித்து நின்று கொண்டிருந்த இதயசந்திரனை இடை புகுந்த கூட்டம் சுவாமியிடமிருந்து பிரித்து விட்டாலும் அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் இதயசந்திரன் அந்த மாலை அழகை, பட்டணத்தின் அற்புதத்தை, சூழ்நிலையின் சிறப்பைப் பருகிக்கொண்டிருந்தான்.

அந்த மாலை நேர மஞ்சள் வெய்யிலில் பரசுராம மலையின் தென்புறத்திலிருந்த பரசுராம பட்டணம் பொன்மெருகோடியிருந்தது அதன் தெற்கு வாயில்கூடக் கிட்டதட்டக் கோட்டை வாயில் போல இருந்ததன்றி, அதன் முகப்பில் நின்றிருந்த இரு துவார பாலகர்கள் சிலைகளும் சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருந்தன. அந்த பிம்பங்களையும் அதற்குப் பின்புறம் மலைச்சரிவில் தெரிந்த பெரும் கட்டிடங்களையும் உச்சியில் தெரிந்த பரசுராமன் கோவிலையும் கண்ட இதயசந்திரன் 'என்ன ரம்மியமான இடம்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவன் நின்றிருந்த இடத்திற்கு நேர் கீழே வாசிஷ்டி நதியின் பெரும் பிரவாகம் அந்த மலையின் அடிவாரத்தை அணைத்து ஓடிக் கொண்டிருந்ததையும், அந்த நதியில் அரபிக்கடலின் எதிர் அலைகள் பாய்ந்ததால் பேராழம் அதற்கிருந்ததையும், இரண்டு மூன்று சிறு மரக்கலங்கள் அந்த நதியில் ஆடி நின்று கொண்டிருந்ததையும் கண்ட இதயசந்திரன் பரசுராமபுரம் தெய்வீக இருப்பிடமாகவன்றி நல்ல வர்த்தக ஸ்தலமாகவும் இருக்கக்கூடுமென்று கணக்குப் போட்டான். எதிரே நதியைத் தாண்டியிருந்த சிப்ளன் நகரத்தையும் சற்றுத் தொலைவில் தெரிந்த கோவில் தீவு, அதன் கோட்டை இவற்றையும் பார்த்த இதயசந்திரன், அந்தப் பிராந்தியம் வர்த்தகத்துக்கும் போருக்கும் எத்தனைப் பிரதானமென்பதை உணர்ந்து கொண்டான். இந்தச் சமயத்தில் அவனிருந்த இடத்தைச் சுற்றி வளைத்துச் சென்ற மலைப்



பாதையில் புரவி வீரர்கள் கூட்டம் வருவதை அவன் கவனிக்காததால் பாதையை விட்டு நகர அவனுக்கு அவகாசமும் இல்லாது போயிற்று. இந்த நிலையில் நிகழ்ந்தது அந்த விபரீத சம்பவம். புரவிக் கூட்டத்தின் முகப்பில் வந்தவன் சற்றுப் புரவியை நிறுத்தி இதயசந்திரனைக் கண்டித்திருந்தால் இந்தக் கதையின் திருப்பம் முற்றிலும் மாறாயிருந்திருக்கும். ஆனால் என்றுமே பிரும்மேந்திர ஸ்வாமியை மதிக்காதவனாக அவரைத் துன்புறுத்துவதையும், அவர் அதிகாரத்துக்குட்பட்ட கிராமங்களைத் தனது அதிபதியான ஸித்தி ரஸூல் யாகூத்கானுக்குத் தெரியாமல் கொள்ளையிடுவதையுமே குறிக்கோளாகக் கொண்ட ஸாத் ஸித்தி, இதயசந்திரன் பாதையின் நட்டநடுவில் நின்றதை அதிகாரத்தாலும் ஆணவத்தாலும் அகற்றக் கருதிக் காலைத் தூக்கிவிட்டதால் வந்த விபரீதம் அது.

ஜன்ஜீராவின் ஸித்தி ரஸூல் யாகூத்கான் பொறுமையுள்ளவன், மகாராஷ்டிரர்களோடு நட்புரிமை கொண்டாட நினைத்தும், மொகலாய சக்ரவர்த்தியின் உத்தரவால் போரிட்டு வந்தவன். ஆனால் அவன் தரைப் படைத் தலைவனும் அஞ்சன்வேல் கோட்டை அதிகாரியுமான ஸாத் ஸித்தி, அப்படி இல்லை. சுவாமியின் எல்லையற்ற பொறுமையையும் சோதித்து வந்த அவன் இதயசந்திரனை உதைத்துத் தள்ளக் காலைத் தூக்கினான். ஏதோ யாரோ பராக்குப் பார்க்கிறானென்று தப்புக் கணக்குப் போட்டான் ஸித்தி. பராக்குப் பார்த்த முகத்தில் சினம் மின்னல்போல் பளிச்சிட்டது. உதைக்க எழுந்த ஸித்தியின் கால் இரும்பு போன்ற பிடியில் கண்ணிமைக்கும் நேரத்தில் சுழன்றது. அடுத்த விநாடி மலைச் சரிவில் புரண்டதைத் தவிர வேறெதுவும் தெரியவில்லை ஸாத் ஸித்திக்கு.

ஸித்தியின் காலைத் திருகி அவனைப் புரவியிலிருந்து உருவிவிட்டதும் கையைத் துடைத்துக்கொண்டு நின்ற அந்த தமிழக வாலிபனை ஸித்தியின் வீரர்கள் அங்கேயே

வெட்டிப் போட்டிருக்கலாம். ஆனால் நடந்த காரியம் சிறிதும் எதிர்பாராததால் பிரமிப்பு அவர்களை ஆட்கொள்ளவே, நீண்ட நேரம் சிலையெனச் சமைந்து நின்றனர். சற்றுச் சுரணை வந்ததும் வாட்களை உருவிய அவர்களைச் சரிவிலிருந்து எழுந்த கம்பீரக் குரல் தேக்கி யது. ''நில்லுங்கள்!'' என்று கூவிய ஸாத் ஸித்தி, எழுந் திருந்து தனது ஆடையிலிருந்த தூசியைத் தட்டிக்கொண்டு மலைச் சரிவில் நிதானமாகவும் கம்பீரமாகவும் நடந்து பாதைக்கு வந்தான். பல வினாடிகள் பேசாமலே இதய சந்திரனை ஆச்சரியத்துடன் உற்று நோக்கினான். ''நீ எந்த நாட்டவன்?'' என்று வினவினான் கடைசியில் ஸாத் ஸித்தி.

''தமிழ் நாட்டவன், போரில் என்னைக் கொல்லலாம். காலால் உதைக்க முடியாது'' என்றான் இதயசந்திரன் முகத்தில் சுடர்விட்ட கோபம் சிறிதும் தணியாமல்.

ஸாத் ஸித்தியின் முகத்தில் கோபம் சிறிதும் இல்லை. மிக நிதானத்துடன் இதயசந்திரனைப் பார்த்த அவன், ''தமிழா! உன்னை இங்கு கொல்ல முடியாது. உனக்குத் தெரியுமல்லவா அது?'' என்று வினவினான்.

''ஏன்?''

''இந்தத் துறவியின் எல்லையில் யாருமே ஆயுதம் உருவக் கூடாது என்பது அனைவரும் ஒப்புக்கொண்ட ஏற்பாடு. ஆனால்...'' என்று சற்று நிதானித்த ஸாத் ஸித்தி, ''ஆயுதம் உருவாமல் உன்னைத் தண்டிக்கலாம்'' என்று கூறி சற்றும் எதிர்பாராத வகையில் தன் முஷ்டி யைத் தூக்கி வெகு பலமாக இதயசந்திரன் முகத்தில் பாய்ச்சினான்.

அடுத்த வினாடி ஸாத் ஸித்தியின் வியப்பு எல்லையை யும் மீறியது. அவன் பலமான முஷ்டி தமிழன் முகத்தை அணுகவில்லை. மெல்லிய கரம் அவன் கணுக்கையை இரும்பு போல் பிடித்து நிறுத்தியிருந்தது.



ஸாத் ஸித்தி கையை முறுக்கி முஷ்டியை விடுவித்துக் கொண்டான். இரண்டாம் முறை அவன் கையை ஓங்க முற்படவில்லை. இதயசந்திரனை மார்புறத் தழுவிக் கொண்டான்.

''வீரன் வீரனைப் புரிந்துகொள்ள முடியும். இன்று முதல் நாம் நண்பர்கள்'' என்று கூறிவிட்டு மீண்டும் புரவி மீதேறிப் பட்டண வாயிலில் நுழைந்து சென்றான்.

ஸாத் ஸித்தி சென்ற திக்கைப் பார்த்துக்கொண்டே நின்ற இதயசந்திரன் மனம் குழம்பிக் கிடந்தது. மஞ்சள் வெய்யில் மறைந்து இருட்டும் கவிந்துகொண்டிருந்தது பட்டணத்தின் விளக்குகள் எரிய ஆரம்பித்தன. ஜோதி ஸ்தம்பம் ஆயிரம் விளக்குகளால் அற்புதமாகக் காட்சி யளித்தது. அந்தச் சமயத்தில் அவன் பின்புறத்திலிருந்து வந்த கனோஜி ஆங்கரே, ''தமிழா! ஸாத் ஸித்தியின் அணைப்பைப்பற்றி மகிழ்ச்சி கொள்ளாதே. அது உனக் கேற்பட்டுள்ள மரண அணைப்பு'' என்றார்.

அத்தியாயம் 14

# அன்பில் பயங்கரம்

காதுக்கு வெகு அருகில் ஒலித்த கனோஜியின் குரலால் பரசுராம பட்டண அழகின் பிரமையிலிருந்து சற்றே விடுபட்ட இதயசந்திரன் சட்டெனத் திரும்பி மகாராஷ்டிரர் கடற்படைத் தலைவரை நோக்கி, ''இத்தனை நேரம் எங்கிருந்தீர்கள்?'' என்று வினவினான்.

கனோஜி ஆங்கரே தமக்குப் பின்னாலிருந்த காட்டின் முகப்பைத் தமது இடது கையால் சுட்டிக் காட்டி, ''அங்குதானிருந்தேன்'' என்று தெரிவித்தார் புன்முறுவலுடன்.

''அங்கு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? சண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தீர்களா?'' என்று வினவினான் இதயசந்திரன் எரிச்சலுடன்.

கனோஜி ஆங்கரேயின் இதழ்களில் விஷமப் புன்முறுவல் படர்ந்தது. ''இதயசந்திரா! வேடிக்கை பார்ப்பது உனக்கு மட்டும் பிரத்தியேக உரிமையாயிருக்க முடியாது'' என்று சுட்டிக் காட்டினார் புன்முறுவலுக்கிடையே.

''வேடிக்கை பார்ப்பதற்குச் சமய சந்தர்ப்பம் உண்டு'' என்று இதயசந்திரனும் கூறினான் இகழ்ச்சியுடன்.

''அதைத்தான் நானும் கூறுகிறேன்'' என்ற ஆங்கரே சற்றுப் பலமாகவே நகைத்தார். மேலும் சொன்னார்: ''தமிழா! நேற்றிரவே உனக்குக் கூறினேன் நம்மிருவரையும் யாரும் எந்த விநாடியிலும் வெட்டிப் போடலாம் என்று. இது ஸாத் ஸித்தியின் அதிகாரத்துக்குட்பட்ட பகுதி. ஆகையால் எச்சரிக்கையாயிருக்க வேண்டும் என்று சொன்னேன் உனக்கு. அத்தனை எச்சரிக்கையையும் துடைத்துவிட்டுப் பிரும்மேந்திர ஸ்வாமியிடமிருந்து பிரிந்துவிட்டதும் சரி, நட்ட நடுப்பாதையில் நின்றுவிட்டதும் சரி, சமய சந்தர்ப்பங்களுக்குச் சரிப்படாதது.



புது இடத்துக்கு வருபவன் மிகுந்த எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். அதுவும் ஸித்திகள் எல்லைக்குள் இருக்கும்போது எச்சரிக்கை மிக மிக அதிகமாயிருக்க வேண்டும்.''

இதயசந்திரன் சில விநாடிகள் மௌனம் சாதித்தான். பிறகு அவரையும் அவருக்குப் பின்னால் நின்றிருந்த அந்த அராபிய வெண்புரவியையும் நோக்கினான். மகாராஷ்டிர ஸார்கேலின் எச்சரிக்கையை எண்ணியதால் சற்று இகழ்ச்சியுடனேயே உரையாடலைத் தொடர்ந்த அந்த வாலிபன், ''அந்த எச்சரிக்கையின் விளைவாகத்தான் பட்டணம் கிட்டே வந்ததும் நீங்கள் ஸ்வாமியிடமிருந்து பிரிந்து மறைந்து, ஸித்தி சென்ற பின்பு இங்கு தலையைக் காட்டுகிறீர்களா?'' என்று வினவினான்.

மகாராஷ்டிர கடற்படைத் தளபதி அவனைத் தமது கூரிய கரிய கண்களால் ஊன்றிக் கவனித்தார். ''தமிழா! ஸாத் ஸித்தியின் முஷ்டியைத் தேக்கிவிட்டதால் நீ எல்லாரையும்விடப் பெரிய வீரனென்றும் பலசாலியென்றும் நினைக்கிறாயல்லவா?'' என்று கேட்டார் சர்வசாதாரணமாக.

''நினைத்தால் அது தவறா?'' என்றான் இதயசந்திரன்.

கனோஜி நகைத்துவிட்டு, ''எங்கே, இந்தக் கையைப் பிடித்து வளை பார்ப்போம்'' என்று கூறித் தமது கையை நீட்டினார்.

இதயசந்திரன் அவரை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு மின்னல் வேகத்தில் அவரது மணிக்கட்டைத் தனது கையால் பிடித்து நாடி ஓடிக் கொண்டிருந்த இடத்தை அழுத்தித் திருகினான் தனது முழு பலத்துடன். அவன் வேகம், நாடி அழுத்தும் தந்திரம், எல்லாம் பயனற்று விட்டதால், பெரும் பிரமிப்பு அவனை ஆட்கொண்டது. கனோஜி ஆங்கரேயின் கை இரும்பு உலக்கை போல் நீட்டியது நீட்டியபடி நின்றுகொண்டிருந்தது. நாடி இருக்குமிடம்கூட அவன் விரல்களின்

அழுத்தத்தில் தெரியவில்லை. நாடி இருந்த இடத்தில் நல்ல தடிப்பாயிருந்த மேல்சதை அழுந்த மறுத்தது. இத்தனைக்கும் கனோஜி ஆங்கரே அந்தக் கையை சர்வ சாதாரணமாகவே நீட்டிக் கொண்டிருந்ததையும், தசைகளைக் கெட்டிப்படுத்த எந்த முயற்சியும் எடுக்காததையும் பார்த்த இதயசந்திரன், 'இந்தக் கை ஒருவேளை இயற்கையாகவே இப்படி இரும்பாக அமைந்திருக்கிறதா?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான். அந்தக் கையை அழுத்த அழுத்த அவன் விரல்கள் வலி கண்டனவேயொழிய, ஆங்கரேயின் கை அடியோடு அசையாததைக் கண்ட இதயசந்திரன், அதைத் திருக எடுத்த தனது முயற்சியைக் கைவிட்டுப் அவரைப் பெரு வியப்புடன் நோக்கினான். "ஸாத்ஸித்தியின் கை இதைவிடத் தடிப்பாயிருந்தது. இருப்பினும் அதை நான் திருகிவிட்டேன்" என்று ஆங்கரேயை நோக்கிக் கூறவும் செய்தான்.

அவன் கூற்றில் கேள்வியொன்றும் அடங்கியிருந்ததைக் கண்ட ஆங்கரே, "தமிழா! தடிப்பாயிருப்பதெல்லாம் சக்தியுள்ளதென்று அர்த்தமில்லை. புத்தி தடிப்பாயிருப்பதைவிடக் கூர்மையாயிருப்பது நல்லது. போரில் மிருக பலத்தைவிட மனித அறிவு அதிக பலனைக் கொடுக்கிறது. இப்பொழுது இந்தக் கையைப் பார்" என்று மீண்டும் தமது கையை நீட்டினார்.

இதயசந்திரன் அந்தக் கரத்தைப் பற்றிப் பார்த்தான். முன்னைவிட அதில் கடினம் குறைந்திருந்தது. உரம் பழையபடியிருந்தும் இரும்புத் தன்மை சிறிது மாறியிருந்தது. சற்றுமுன் அசேதனமாயிருந்த அந்தக் கை உயிரைப் பெற்றுவிட்டதற்கறிகுறியாக நாடி புஷ்டியாக அடித்தது. இப்படி நாடியையும் உடல் தசைகளையும், முகத்தைக்கூடச் சுளிக்காமல், 'எந்தப் பிரயத்தனத்தையும் காட்டாமல், எப்படி இஷ்டப்படி அடக்கி விடுவிக்க முடியும்' என்று எண்ணிய இதயசந்திரன், "நாடியை எப்படிக் கட்டுப்படுத்துகிறீர்கள்" என்று வியப்புடன் வினவினான் ஆங்கரேயை நோக்கி.



"சுவாமியிடம் கொஞ்ச நாள் பயின்றால் இந்த முறை உனக்குத் தெரியும். இது ஒரு தனிப்பட்ட யோகப் பயிற்சி" என்று விளக்கினார் ஆங்கரே.

"யோகப் பயிற்சி போர் வீரனுக்கு அவசியமா?" இதயசந்திரன் கேள்வியில் சந்தேகம் தொனித்தது.

"அனைவருக்கும் அவசியம் என்று சுவாமி கருதுகிறார். அவரவர் வாழ்க்கை முறைக்குத் தகுந்த பயிற்சிகள் இருக்கின்றன" என்ற ஆங்கரே, "வா சுவாமிகள் இருப்பிடம் போவோம். பேசுவதை இரவில் பேசிக் கொள்வோம்" என்று முன்னே நடந்தார். இதயசந்திரனும் அவருடன் நடந்து கோட்டை வாசலுக்குள் நுழைந்தான்.

பரசுராமர் கிராமமாயிருந்து, பிரும்மேந்திர சுவாமியால் பட்டணமாக்கப்பட்ட அந்த மலைநகரத்தின் தெற்குக் கோட்டை வாசலில் தொடர்ந்த விசாலமான தெரு, நேராகப் பரசுராமன் கோயிலுக்குச் சென்றதால் கோட்டை வாசலிலிருந்தே பரசுராமன் கோயிலைப் பார்க்க முடிந்தது இதயசந்திரனால். கோயில் கோபுரத்தின் பெருவிளக்கின் வெளிச்சம் அந்தப் பாதையின் முக்கால் தூரத்துக்கு விழுந்திருந்ததால் ஏற்பட்ட அழகை, கோபுர வாயிலிலிருந்து சற்றுத் தள்ளித் தொடர்ச்சியாக இருபுறமும் இருந்த கடைகளின் வெளிச்சமும், அவற்றின் பின்னால் எழுந்து மகுடங்களுடன் விளங்கிய நாலைந்து பெரும் கட்டிடங்களின் விசாலமும் பன்மடங்கு அதிகப்படுத்தின. கோட்டை வாயிலை நோக்கி வந்தும் போய்க் கொண்டுமிருந்த மனிதர்கள் பல நாட்டவராயும் பல இனத்தவராயும் இருந்ததைக் கண்ட இதயசந்திரன், 'இவர்கள் அத்தனை பேருக்கும் இங்கு என்ன இருக்கிறது?" என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அந்தப் பாதையில் மேலும் நடந்து கடைகளுக்கருகில் வந்ததும் அங்கு டச்சுக்காரர் சிலரும், பல இஸ்லாமியரும், ஹிந்து சாதுக்களும் ஏதோ சாமான்களை வாங்கிக்

கொண்டிருப்பதைப் பார்த்த இதயசந்திரனுக்கு அந்தப் பட்டணத்தின் போக்கு அடியோடு புரியவில்லையென்றாலும் பிரும்மேந்திர சுவாமியின் அபரிமித செல்வாக்கு மட்டும் நன்றாகப் புரிந்தது. இப்படி அந்த நகரத்தை அணு அணுவாக எடை போட்டுக் கொண்டு வந்த இதயசந்திரன் கடைகளுக்கருகாமையில் வந்ததும் கனோஜி ஆங்கரே அவனை நோக்கி, ''இதயசந்திரா! இந்தக் கடைகளைத் தாண்டி வலதுபுறம் போனால் கோயிலின் அதோ அந்த மண்டபம் வரும்'' என்று உருண்டையாக பிரும்மாண்டமாக எழுந்து முப்பெருங் கலசங்களுடன் பளிச்சிட்ட ஒரு மகுடத்தைக் காட்டி, ''அதுதான் பிரார்த்தனை மண்டபம். அங்குதான் சுவாமி இருக்கிறார். போய் அவரைச் சந்தி. நான் உன்னைப் பிறகு சந்திக்கிறேன்'' என்று கூறினார்.

''ஏன் நீங்கள் வரவில்லையா சுவாமியிடம்?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''இப்போது வரவில்லை'' என்றார் கனோஜி.

''ஏன்?''

''சுவாமிக்குச் சங்கடம் விளைவிக்கக் கூடாது கூடிய வரையில்.''

''நீங்கள் வருவதால் என்ன சங்கடம்?''

இதற்குக் கனோஜி உடனடியாகப் பதில் சொல்லாமல் சிறிது சிந்தித்துவிட்டு ஏதோ தலையை அசைத்துக் கொண்டு பிறகு சொன்னார், ''ஸாத் ஸித்தி இப்பொழுது சுவாமியிடம் இருக்கிறான்; நான் அவனைச் சந்திப்பது சுவாமிக்கு இடைஞ்சலாயிருக்கும்'' என்று.

''இங்குதான் யாரும் ஆயுதம் உருவக் கூடாதே'' என்றான் இதயசந்திரன்.

''ஆம்.''

''அப்படியிருக்க ஸாத் ஸித்தியை நீங்கள் சந்திப்பதால் என்ன கஷ்டம் சுவாமிக்கு?''



''சுவாமியின் நீதி பாதிக்கப்படும்.''

''நீதியா!''

''ஆம் தமிழா! ஸாத் ஸித்தியின் வீரனொருவனை நான் சுட்டுவிட்டேனல்லவா நேற்று?''

''சுட்டீர்கள்.''

''அதைப்பற்றிப் புகார் செய்ய வந்திருக்கிறான் ஸாத் ஸித்தி. சுவாமி உத்தரவுக்கு மாறாக நான் ஆயுதமெடுத்ததைப் பற்றிக் கூறுவான். அதற்குப் பரிகாரம் கேட்பான்.''

''என்ன பரிகாரம் கேட்பான்?''

''ஸித்தி கேட்கக்கூடியது ஒரே ஒரு பரிகாரந்தான். தன்னிடம் என்னை ஒப்படைக்கக் கேட்பான்.''

''சுவாமி ஒப்புக்கொள்வாரா அதற்கு?''

''ஒப்புக்கொள்ள மாட்டார். தற்காப்புக்கு ஆயுதம் உபயோகப்படுத்துவது தர்மம். அதைச் சுவாமி எப்படித் தடுக்க முடியும்?''

''அப்படியானால் ஸித்தி ஏமாற்றமடைய மாட்டானா?''

''ஏமாற்றமடைய மாட்டான். சுவாமி என்னை ஒப்படைக்க மறுப்பாரென்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் ஸித்தி இந்த நிகழ்ச்சியை உபயோகப் படுத்திப் பெரும் நாடகமாடுவான். நீ சென்று வேடிக்கை பார். ஆனால் நான் முன்பு சொன்னது நினைவிருக்கட்டும். ஸித்தியிடம் மிகுந்த எச்சரிக்கையுடனிரு. அவன் உன்னால் வீழ்த்தப்பட்ட பின்பும் உன்னை அணைத்திருக்கிறான். ஆகவே ஏதோ பெரும் திட்டம் அவன் மனத்திலிருக்கிறது. இரவில் எங்கும் போகாதே. சுவாமியுடன் தங்கிவிடு'' என்று கடைசியாகக் கூறிய கனோஜி ஆங்கரே இதயசந்திரனுக்குக் கோயில் கோபுரத்தை அணுகி காட்டியப் பாதைக்கு நேர் எதிர்புறத்தில் சென்றுவிட்டா

அந்த வெண்புரவி அவரைத் தொடர்ந்து சீராக நடை போட்டுச் சென்றது.

இதயசந்திரன் ஒரு விநாடி அப்புரவியைப் பார்த்துக் கொண்டு நின்றான். எத்தனை விசுவாசமுள்ள சேவகனுங் கூட அத்தனைப் பணிவுடன் எசமானைப் பின்பற்ற முடியாது என்ற நினைப்பில் திளைத்துப் பரவசப்பட்டுக் கொண்டே திரும்பி அந்தப் பெரும் மகுடங்கொண்ட பிரார்த்தனை மண்டபத்தை நோக்கிச் சென்றான். பிரார்த்தனை மண்டபத்தின் வழி மிகச் சுத்தமாக வைக்கப் பட்டிருந்ததன்றி ,'தை அணுகுவதற்குச் சற்றுத் தூரத்திற்கு முன்பே புரவிகளைக் கட்ட நீண்ட தளைத்தண்டு அமைக்கப்பட்டிருந்ததையும், அந்தத் தளைத்தண்டுகளில் சில புரவிகளும் கட்டப்பட்டிருப்பதையும் கண்டு, 'இவை ஸாத்ஸித்தி, அவன் வீரர்கள் புரவிகளாயிருக்க வேண்டும்,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு மேலும் பிரார்த்தனை மண்டப வாயிலுக்கு வந்தான், அங்கு வந்த பின்புதான் அவன் மனத்துக்கு நல்ல தெளிவு ஏற்பட்டது. பரசுராம பட்டணத்திற்கு தெற்கு வாயிலில் எல்லோருடனும் புரவியிலிருந்து தான் மற்றவர்களுடன் இறங்கிய பிறகு தனது கையிலிருந்த கடிவாளத்தை சுவாமி பரிவாரத்தின் வீரனொருவன் வாங்கிக்கொண்டு புரவியை அழைத்துச் சென்றதும், பிறகு தான் மட்டும் தனித்து வாசிஷ்டி நதியையும், எதிரே தெரிந்த தீவையும் பார்த்துக்கொண்டு நின்று விட்டதும் தெளிவாக நினைவுக்கு வரவே, ''அப்பா! இந்தப் பட்டணம் எத்தனை மயக்கிவிட்டது என்னை!'' என்று வியப்புற்று பிரார்த்தனை மண்டப வாயிலில் நுழையப்போனான். அவனை வாயிலிலிருந்த இரு சாதுக்கள் மறித்து, ''அப்பா, உன் பாதுகைகளை எடுத்துவிடு. அதோ அந்த மலைச் சுனைக்குச் சென்று அதோ இருக்கும் கலசத்தில் நீர் எடுத்து கைகால்களைச் சுத்தம் செய்துவா'' என்று உத்தரவிட்டனர். இதயசந்திரன் வாயிற்படி ஓரத்தில் ஸாத் ஸித்தியின் காலணிகள் இருப்பதையும், வாயிலிலிருந்து சற்றுத் தள்ளி அவன் வீரர்கள் பணிவுடன்



நின்றிருப்பதையும் கவனித்துவிட்டு சாதுக்கள் சொற்படி அருகிலிருந்த சுனைக்குச் சென்றான். அதனருகில் பளபளவென்று தேய்த்து வைக்கப்பட்டிருந்த செம்புக் கலசங்களிலொன்றை எடுத்துக் கைகால் முகம் கழுவிவிட்டு வாயிலுக்கு வந்ததும் அவன் முகம் கைகால் துடைக்க சாதுக்கள் இரண்டு காவித்துண்டுகளை அளித்தனர். அவற்றால் முகம் கைகால்களைத் துடைத்துக் கொண்ட அவனிடம் ஒரு சாது பக்கத்தில் சந்தனம், விபூதி வைக்கப் பட்டிருந்த இரண்டு வெள்ளிக் கோப்பைகளை நீட்டி, ''இதில் ஏதாவதொன்றைப் பூசிக்கொள்'' என்றார். விபூதியைத் தரித்துக் கொண்ட இதயசந்திரன் மண்டப வாயிலுக்குள் நுழைந்தான். நுழைந்ததும் முதலில் வந்த நீண்ட தாழ்வாரத்திலிருந்து ஒரு சாது சிறு மணியொன்று லேசாக அடிக்க, அங்கிருந்த பெருங்கதவு இம்மியும் சத்தம் இல்லாமல் திறக்க இதயசந்திரன் உள்ளே சென்றான். கதவுகள் மீண்டும் மூடப்பட்டன. எதிரே விரிந்த காட்சி அவனைப் பிரமிக்க வைத்தது.

தஞ்சைப் பெரும் கோயிலின் பெருமண்டபத்தைவிட விசாலமாக இருந்தது அந்தப் பிரார்த்தனை மண்டபம். மேலே பிருமாண்டமாக வளைந்திருந்த கூரையில் தசாவதாரமும், கங்காவதாரமும், சிவ விஷ்ணு லீலைகளும் பலபல வர்ணங்களில் தீட்டப்பட்டிருந்தன. தூண்கள் எல்லாம் சுவர் ஓரங்களிலிருந்ததால் எந்த இடைஞ்சலுமின்றி, பெருங்கூட்டம் பிரார்த்தனை செய்ய அந்தக் கூடம் வசதியளித்தது.

சிறிது நேரத்தில் பிரார்த்தனை முடிந்து கூட்டம் அமைதியாகக் கலைந்தது. கடைசியில் கூடத்திலிருந்தது சுவாமியைத் தவிர ஸாத் ஸித்தியும் தானும்தானென்பதை உணர்ந்த இதயசந்திரன் அடுத்த கட்டத்துக்குத் தயாரானான். சுவாமி மேடையிலிருந்து கொண்டு ஸாத் ஸித்தியை அருகில் வரும்படி அழைத்தார்.

ஸாத் ஸித்தி மிகுந்த நிதானத்துடனும் கம்பீரத்துடனும் அவரை அணுகினான். ''உன் வீரனை சொஸ்தப் படுத்தியிருக்கிறேன். நீ அவனை அழைத்துப் போகலாம்'' என்றார் சுவாமி.

''வேறு கோரிக்கையும் இருக்கிறது'' என்றான் ஸாத் ஸித்தி.

''சொல் அப்பனே! என்னால் முடிந்தால் பூர்த்தி செய்கிறேன்'' என்றார் சுவாமி அன்புடன்.

ஸாத் ஸித்தி மிகுந்த அடக்கத்துடன்தான் கோரிக்கையைத் தெரிவித்தான். அவன் கோரிக்கை வாயிலிருந்து வெளிவரும் வரை அது தனக்கு எத்தனை அதிர்ச்சியைத் தரக் கூடும் என்று இதயசந்திரன் சொப்பனங்கூடக் காணவில்லை. ஸாத் ஸித்தியின் குரலில் அன்பு ஒழுகியது. அந்த அன்பு எத்தனை பயங்கரமாயிருக்க முடியும் என்பதைப் பிரார்த்தனை மண்டபத்தில் உணர்ந்து கொண்ட இதயசந்திரன் கல்லாய்ச் சமைந்து நின்றான்.

அத்தியாயம் 15

# இரவில் ஓர் அழைப்பு

ஜன்ஜீராத் தீவின் தலைவனான ஸித்தி ரஸூல் யாகூத்கானின் தரைப்படைத் தளபதியும் அஞ்சன்வேல் கோட்டையின் அதிபதியுமான ஸாத் ஸித்தி அந்தப் பிரார்த்தனை மண்டபத்தில் மிகுந்த அடக்கத்தைக் காட்டி சுவாமியிடம் வெளியிட்ட கோரிக்கை தமிழகத்தின் வாலிப வீரனை அதிர்ச்சியுறச் செய்ததென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. தனது காவல் வீரனொருவனைச் சுட்டவனைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும், அல்லது அவன்மீது தக்க நடவடிக்கையெடுக்க வேண்டுமென்றும் நினைத்திருந்த இதயசந்திரனுக்கு ஸாத் ஸித்தியின் முதல் கோரிக்கை தன்னைப்பற்றியே இருந்ததைக் கேட்டதும் திக்பிரமை உண்டாவது சகஜமேயல்லவா? ''இவனை என்னிடம் சுவாமி ஒப்படைக்க வேண்டும்'' என்று ஸாத் ஸித்தி தன் பக்கம் கைகாட்டிக் கேட்டதும் சற்றும் எதிர்பாராத அந்தக் கோரிக்கையால் இதயசந்திரன் சித்தம் சில விநாடிகள் உடைந்துவிட்டதானாலும் பிறகு சுயநிலைக்கு அதிவேகமாகத் திரும்பவே, வியப்பு நிரம்பிய விழிகளை அந்த அபிஸீனியன்மீது நிலைக்கவிட்டான் அவன். ஸாத் ஸித்தியின் முகம் அந்தக் கோரிக்கைக்குப் பிறகுங்கூட எந்தவித உணர்ச்சியையும் காட்டாதிருந்ததையும் அவன் அடக்கம் சிறிதளவும் குறையாததையும் கண்ட தமிழக வீரன் அஞ்சன்வேல் அதிபனைப் பற்றிப் பெருமதிப்புக் கொண்டதன்றி அவனைப்பற்றி ஆங்கரே எச்சரித்ததில் அர்த்தமுமிருக்கிறதென்பதைப் புரிந்தும் கொண்டான்.

ஆனால் சுவாமியின் நிலை ஸித்தியின் நிலையைவிட அதிக நிதானத்திலிருந்தது. அவர் கண்களில் சற்று முன்பு வேதம் சொன்னபோதிருந்த சாந்தி அப்பொழுது

இருந்தது ஒரு விநாடி அவர் ஸாத் ஸித்தியையும் பார்த்துத் தமக்கு முன்பு ஜ்வாலை அடங்கித் தணிந்துவிட்ட ஹோமாக்கினியையும் பார்த்தார். ஜ்வாலை அடங்கி விட்டாலும் உள்ளூரத் தணல் இருக்கிறதென்று மனத்துக்குள் நினைத்துக்கொண்ட பிரும்மேந்திர ஸ்வாமி ஸாத் ஸித்தியைப் பார்த்து, ''இவனை முன்பே தெரியுமா உனக்கு?'' என்று வினவினார் சாந்தி குரலிலும் ஒலிக்க.

சுவாமியின் கண்கள் தன்னை நோக்கி ஹோமாக்கினியையும் நோக்கியதைக் காணத் தவறாத ஸித்தியும் சாதாரணக் குரலிலேயே பதில் சொன்னான், ''சற்று முன்புதான் தெரிந்துகொண்டேன்'' என்று.

காரணத்தையோ வேறு விவரணத்தையோ சுவாமி விசாரிப்பாரென்று எதிர்பார்த்த இதயசந்திரன் ஏமாந்தே போனான். சுவாமி சாதாரணமாக ஸித்தியை நோக்கி, ''அதற்குள் இவனிடம் அன்பு ஏற்படக் காரணம்?'' என்று வினவினார்.

''வீரன் வீரனை விரும்பாதிருக்க முடியுமா?'' என்று வினவினான் ஸாத் ஸித்தி.

''இவன் வீரனென்பதையும் புரிந்துகொண்டாயா? ஒரு வேளை வாளை உபயோகப்படுத்தினானா?'' என்று வினவினார் சுவாமி.

''இந்தப் பட்டணத்தில் வாள் உருவக்கூடாது என்று சுவாமியின் கட்டளை இருக்கும்போது அதை யார் மீற முடியும்?'' என்று பதில் கேள்வி விடுத்துத் தனக்கு சுவாமியிடத்தில் மதிப்பிருப்பதாக நடித்தான் ஸித்தி.

''வேறு எந்த விதத்தில் இவனை வீரனென்று புரிந்து கொண்டாய்? வாளை இடுப்பில் கட்டியிருப்பதாலா?'' என்று கேட்டார் சுவாமி.

''இல்லை சுவாமி, வாளை யார் வேண்டுமானாலும் இடுப்பில் கட்டித் தொங்கவிட்டுக் கொள்ளலாம்'' என்று குறிப்பிட்டான் ஸித்தி.



''உன் அன்பை ஈர்க்க ஏதாவது நிகழ்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டுமே ஸித்தி?'' என்றார் பிரும்மேந்திர ஸ்வாமி ஸித்தியை நோக்கி.

ஸாத் ஸித்தியின் அடுத்த சொற்கள் சுவாமியின் கண்களில் லேசாகக் கவலை ரேகையைப் படரவிட்டது. ''என் காலை ஒருவன் கணநேரத்தில் திருகிப் புரவியிலிருந்த என்னை மலைச்சரிவில் உருளவிட்டால் அவன் வீரத்தையும் துணிவையும் பற்றி என்ன நினைக்கிறீர்கள் சுவாமி!'' என்ற ஸாத் ஸித்தியின் உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்தது. அந்தப் புன்முறுவலுடன் இதயசந்திரனையும் திரும்பி ஒரு முறை நோக்கிவிட்டு மீண்டும் சுவாமியின்மீது கண்களைத் திருப்பினான் ஸாத் ஸித்தி.

சுவாமியின் கண்களில் லேசாகப் படர்ந்த கவலைகூட இதைக் கேட்டதும் அகன்றுவிட்டது. அவர் உள்ளத்தில் எந்த உணர்ச்சி இருந்தாலும் அது அவர் முகத்திலோ நின்றிருந்த தோரணையிலோ சற்றும் தெரியவில்லை. மிகச் சாவதானமாகவே சொன்னார் சுவாமி, ''அப்படி அவன் செய்திருந்தால் அது பெரும் குற்றம்'' என்று.

அதுவரை பொறுத்துக் கேட்டுக்கொண்டிருந்த இதயசந்திரன் அவர்கள் சம்பாஷணையில் குறுக்கிட்டு, ''சுவாமி! நான் தமிழ் நாட்டவன். இங்குள்ள சட்ட திட்டங்கள் எனக்குத் தெரியாது'' என்று தாழ்மையுடன் விண்ணப்பித்துக் கொண்டான்.

சுவாமியின் கண்கள் இதயசந்திரனை அனுதாபத்துடன் நோக்கின. சொற்களிலும் அந்த அனுதாபம் ஒலிக்க, ''இதயசந்திரா! எந்த நாட்டிலும் அந்த நாட்டுப் படைத்தலைவனை மலையில் உருட்டித் தள்ளிவிட்டுத் தப்பிச் செல்ல அனுமதிக்கும் சட்டம் கிடையாது'' என்று கூறினார்.

''இந்த நாட்டுச் சட்டம் எனக்குத் தெரியாது சுவாமி. ஆனால் எங்கள் நாட்டில் படைத்தலைவராயிருந்தாலும்

சாதாரண வீரனைக்கூடக் காலால் உதைக்க முடியாது' என்றான் இதயசந்திரன் சற்றுக் கோபத்தைக் குரலில் காட்டி.

சுவாமி இதைக் கேட்டதும் வியப்புடன் ஸாத் ஸித்தியை நோக்கினார். "இவன் ஏதோ சொல்கிறானே?" என்றும் கேட்டார் வியப்பைக் குரலில் நன்றாகக் காட்டி.

"இவன் நடுப்பாதையில் நின்றிருந்தான். என் புரவி வேகமாக வந்தது. இவனை நான் அகற்றாவிட்டால் புரவி இவனை மிதித்துத் தீர்த்திருக்கும். உதைத்து இவனை அகற்றுவதைத் தவிர வேறு என்ன வழி இருந்தது?" என்று வினவினான் ஸாத் ஸித்தியும் குரலில் உஷ்ணத்தைக் காட்டி.

"புரவியின் கடிவாளத்தை இழுத்து அதை நிறுத்தவோ பக்கச்சரிவில் சற்று இறங்கவோ முடியாதவன் புரவியேறுவது எப்படிச் சரியாகும்? தவிர என்னை உதைக்கக் காலை ஒருவன் தூக்கும்போது அந்தக் காலைத் திருகி அதற்குடையவனைக் கீழே வீழ்த்துவதைத் தவிர எனக்கு வேறு என்ன வழி இருந்தது?" இந்தக் கேள்வியை இதயசந்திரன் பாதி சுவாமியையும் ஸித்தியை யும் பார்த்துக் கேட்டான்.

சுவாமி சில விநாடிகள் சிந்தித்தார். பிறகு ஸித்தியை நோக்கி, "ஸாத்! நீ பெரிய வீரன். இவன் வேறு நாட்டவன். இவனை நீ மன்னிக்க முடியாதா?" என்று வினவினார்.

ஸாத் ஸித்தி சுவாமியை நோக்கி, "சுவாமி! சாதாரண மாகக் காட்டைக் காவல் புரியும் என் வீரரில் ஒருவன் முதலிரவு சுடப்படுகிறான். மறுநாள் காலையில் என்னையே ஒருவன் மலைச்சரிவில் உருட்டுகிறான். அத்தனையும் நான் பொறுக்க வேண்டும். இது எந்த நியாயத்தில் சேர்ந்தது?" என்று வினவினான்.

"ஸாத்! உன் வீரனைச் சுட்டவனை நீ பிடித்துப் போகலாம். பரசுராம பட்டணத்து எல்லைக்கு வெளியில் அவன் இருந்தால், அவனுக்கு நான் பரியவில்லை. அவனைக் காப்பதும் என் வேலையல்ல. ஆனால் இவன் இந்த நாட்டு விதிகளை அறியாதவன். நீ யாரென்பதும் இவனுக்குத் தெரியாது. தவிர தன்னை உதைக்க ஒருவன் காலைத் தூக்கும்போது எந்த வீரனும் பொறுக்க மாட்டானென்பது வீரனான உனக்கு நான் சொல்ல வேண்டுமா?" என்று வினவினார்.



ஸாத் ஸித்தியின் முகத்தில் கோபம் திடீரெனச் சுடர் விட்டது. அவன் மண்டபம் அதிரும்படியான குரலில் இரைந்து கூவினான், "இதுதான் உங்கள் முடிவா?" என்று.

பிரும்மேந்திர சுவாமி மிக நிதானமாக, "ஆம்" என்ற ஒரே சொல்லில் பதில் கூறினார்.

"என் வீரனைச் சுட்டது யாரென்பதை நான் ஊகிக்க முடியும்" என்று மீண்டும் இரைந்தான் ஸித்தி.

"ஊகத்துக்கு அவசியமில்லை ஸாத்! காலின் அரவத்தைக் கொண்டு இருட்டில் நோக்கிச் சுடக்கூடியவர் ஆங்கரே ஒருவர்தான்" என்றார் சுவாமி ஏதோ அனைவரும் அறிந்த சாதாரண உண்மையைக் கூறுபவர் போல.

"ஸித்திகளின் பரம வைரி."

"ஆம்."

"அவரை நீங்கள் பாதுகாக்கிறீர்கள்."

"நானல்ல. பரசுராமன்."

"பரசுராமனை எனக்குத் தெரியாது. உங்களை எனக்குத் தெரியும்."

"யாராவது ஒருவரைத் தெரிந்து கொண்டால் இன்னொருவரைத் தெரிந்து கொண்ட மாதிரிதான்" என்றார் சுவாமி.

''எங்கள் எதிரியை எங்கள் மாநிலத்தில் நீங்கள் எப்படி அனுமதிக்கலாம்?'' என்று வினவினான் ஸாத் ஸித்தி அதிக எரிச்சலுடன்.

''பரசுராம பட்டணம் யார் மாநிலத்தையும் சேர்ந்த தல்ல. இங்கு யாரும் யாருக்கும் வைரியுமில்லை. இங்கு யாரும் யாரையும் பிடித்துப் போகவும் முடியாது. கொல்லவும் முடியாது. இங்கு இனபேதம் மனபேதம் அரசுபேதம் எதுவும் கிடையாது. இங்கு மேலிருப்பது ஆண்டவன் கூரை, கீழிருப்பது அவன் நிலம். இங்கு எல்லாரும் சமம். இது உன் தலைவன் ஸித்தி ரஸூலும் ஒப்புக்கொண்டது'' என்று மிக நிதானமாகச் சொன்ன சுவாமி அத்துடன் பேட்டி முடிந்துவிட்டதென்பதற்கறிகுறி யாகப் பக்கத்திலிருந்த மணியை அதனருகிலிருந்த தண்டத்தால் தட்டினார். அதன் மெல்லிய வெண்கல ஒலி மண்டபத்தில் பரவியதும் மண்டபப் பின்கதவைத் திறந்துகொண்டு இரு சாதுக்கள் வரவே சுவாமி அவர் களை நோக்கி, ''அஞ்சன்வேல் தலைவரிடம் அவர் வீரனை ஒப்படையுங்கள். அவரும் அவர் வீரர்களும் தங்க வசதி செய்யுங்கள்'' என்று உத்தரவிட்ட சுவாமி ஸித்தியை நோக்கி, ''ஸாத்! பெரிய வீரன் சிறு நிகழ்ச்சிகளை மறந்து விடுவது நல்லது'' என்று அறிவுரையும் கூறிவிட்டு உள்பக்கம் சென்றுவிட்டார்.

சுமார் ஆறரை அடி உயரத்துக்கு மேல் ஆஜானுபாகு வாய், திடமான வைரம் பாய்ந்த புஷ்டியான தேகத்துட னும், உருண்ட கெட்டியான கன்னக் கதுப்புக்களுடன், ராட்சதப் பார்வையுடனும், கூச்சாகக் கத்தரித்துவிட்ட தாடியுடனும் அந்த மண்டபத்தின் கூரையை அளந்து விடுபவன்போல் நின்றிருந்த ஸாத் ஸித்தி ஒருமுறை மண்டபத்தில் பூமியை உதைக்கக் காலைத் தூக்கினான். அடுத்த விநாடி அந்த நோக்கத்தை நீக்கிக்கொண்டு சாதாரணமாகக் காலைத் தரையில் ஊன்றிவிட்டுத் திரும்பி மண்டப வாயிலை நோக்கி நடந்தான். ஒரே சீராக திடமாகச் சென்ற அவன் கால்களைக் கவனித்துக்



கொண்டு நின்ற இதயசந்திரன், அவன் வாயிலுக்கு வெளியே சென்று மறைந்ததும் பெருமூச்சு விட்டு மண்டபத்தைச் சுற்றுமுற்றும் பார்த்தான். தன்னந் தனியே நின்றிருந்த அந்தச் சமயத்தில், மண்டபத்தில் பெரு விதானங்களும், சிற்பங்களும், ஹோமாக்கினியின் மெல்லிய சமித்துப் புகையும், சற்றுத் தூரத்தில் ஒரு மூலையில் தூபக் காலிலிருந்து கிளம்பிக்கொண்டிருந்த அகிற்புகையும் பெரும் சாந்தியை அளித்திருக்கக்கூடும் இதயசந்திரனுக்கு, அவன் மனநிலை அன்றைய மாலை நிகழ்ச்சிகளால் சிதறியிராத பட்சத்தில். ஆனால் எதை யும் ரசிக்கச் சக்தியற்ற நிலையில் பெருமூச்சே அவன் நாசியிலிருந்து வெளிவந்தது அந்தச் சமயத்தில். பெருமூச்சு விட்டு எங்கு செல்வதென்று தெரியாமல் வாயிலை நோக்கி நடக்கத் திரும்பிய அவனை உள்வாயிலிலிருந்து வந்த ஒரு சாது தம்மைத் தொடரும்படி சைகை செய்து முன் நடந்தார். அவரைத் தொடர்ந்து இரண்டு கட்டுகளைத் தாண்டி மண்டபத்தின் வடக்கு வாசலுக்கு வந்த இதய சந்திரனை அங்கிருந்த தோட்டத்தைத் தாண்டி எதிரே தெரிந்த ஒரு சிறு விடுதிக்கு அழைத்துச் சென்றார் சாது. ''உள்ளே போகலாம். சுவாமி இருக்கிறார்'' என்று கூறி விட்டு சாது போய்விட அந்த விடுதிக்குள் நுழைந்து சுவாமியின் எதிரே நின்றான் இதயசந்திரன்.

வியாக்கிராசனத்தில் அமர்ந்திருந்த சுவாமி, ''தமிழா! உட்கார்'' என்று எதிரேயிருந்த ஒரு மான் தோலைச் சுட்டிக் காட்டினார்.

சுவாமியின் அறைக்கும் பிரார்த்தனை மண்டபத் துக்கும் சம்பந்தம் அறவே இல்லாதிருந்ததைக் கவனித்தான் இதயசந்திரன். கோடியில் பூஜைப் பெட்டி, சுவாமி தாங்கி நடக்கும் தங்கப் பூண்போட்ட பெரும் தடி, இரண்டு குத்து விளக்குகள், ஒரு மந்திர தண்டம், தாமரை மணி மாலைகள், இரண்டு மூன்று புலித்தோல்கள், மான் தோல்கள், ஒரு கமண்டலம் இவற்றைத் தவிர வேறு

எந்த வசதியுமில்லாத அறையில் இல்லை. எந்த வசதியுமில்லாத ஏதுவும் அந்த அறையில் இல்லை. எந்த வசதியுமில்லாத அந்த அறைக்கு வெளியே இருந்த பூந்தோட்டமும் கிணறும் சுவாமியின் ஸ்நானத்துக்கும் பூஜைக்கும் மட்டும் உபயோகப்படுமென்பதையும் புரிந்துகொண்ட இதய சந்திரன, ''அரசுகளை அசைக்கவல்ல இந்த சுவாமி எத்தனை எளிய வாழ்க்கை நடத்துகிறார்'' என்று தனக்குள் வியந்துகொண்டதன்றி அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் அடக்கத்துடன் கைகட்டி அமர்ந்தும் கொண்டான்.

சற்றுச் சிந்தித்துவிட்டு சுவாமி சொன்னார்: ''தமிழா! உனக்கும் இந்த நாட்டுக்கும் ஏதோ பிணைப்பு இருக்கிறது. இல்லையேல் நீ வந்த இரண்டு நாட்களுக்குள் ஷாஹுவின் மருமகள், மகாராஷ்டிரக் கடற்படைத் தலைவர், ஸித்தியின் தரைப்படைத் தளபதி இத்தனை பேருடன் மோதியிருக்கமாட்டாய். விதியை நான் மாற்ற முடியாது. அது வகுக்கும் வழிகளிலிருந்து நான் உன்னை மீட்க முடியாது. ஆனால் முடிந்தவரை எச்சரிக்கிறேன். உன் முன்கோபத்தை விட்டு விடு. பொறுமையாயிருக்கப் பழகிக் கொள். வேறு நாட்டில் கொந்தளிக்கும் அரசியல் சூழ்நிலையில், சதா போர்கள் நிகழும் பகுதியில், ஒரு முக்கிய பணியை மேற்கொண்டு மகாராஷ்டிர அரசின் ஒரு வாரிசைத் தேடி வந்திருக்கும் நீ, பெரும் பொறுமையையும் அடக்கத்தையும் கைப்பிடித்தாலொழிய உன் பணியை நிறைவேற்றுவது கஷ்டம். உதையைக்கூடச் சில சமயங்களில் பொறுப்பது நல்லது. சமயம் வரும்போது அதைத் திருப்பலாம். இன்று நீ ஸாத் ஸித்தியின் விரோதத்தைப் பெற்றுவிட்டாய், இனி உனக்கு இந்தப் பரசுராம பட்டிணத்தில்கூடப் பாதுகாப்பு இருக்காது. ஸாத் ஸித்தி எதையும் மதிக்காதவன். என்னை மதிப்பதற்குக்கூட அவன் தலைவனுக்கு என்னிடமிருக்கும் பயமும் பக்தியுமே காரணம். ஆனால் அந்தப் பயபக்திகூட உனக்குப் பாதுகாப்பை அளிக்காது. ஆகவே இங்கு இருக்கும் போது உனக்குக் கொடுக்கப்பட்டுள்ள இடத்தைவிட்டு



அகலாதே. இரவில் அறவே வெளியே போகாதே. பகலில் கோவில், கடைவீதி, பிரார்த்தனை மண்டபம் இவற்றின் எல்லைகளை விட்டுவிட்டுத் தாண்டாதே. சதா கூட்டத்தோடு கலந்து நடமாடு ''

இப்படி உபதேசித்த பிரும்மேந்திர சுவாமி, ''இந்த விடுதியிலிருந்து சற்றுத் தள்ளி ஒரு விடுதியிருக்கிறது. அதன் வலப்பாகத்தை உனக்கு ஒழித்துவிடச் சொல்லியிருக்கிறேன்'' என்றும் கூறி அவனை அழைத்துக்கொண்டு அறைக்கு வெளியே வந்து அங்கிருந்த ஒரு சீடனிடம் அவனை ஒப்படைத்தார். அந்த விடுதியை நோக்கிச் சென்ற இதயசந்திரன் வியப்படைந்து ஒரு விநாடி நின்றான். அந்த வாயிற் படியில் அவன் மண்டப வாயிலில் விட்டு வந்த காலணிகள் வைக்கப்பட்டிருந்தன. உள்ளே அவனுக்கு அதிக வியப்புக் காத்திருந்தது ஒரு மஞ்சத்தில் அவன் அளவுக்குச் சரியான புத்தாடைகள் கிடைத்தன. பெரும் கச்சையும் ஒரு கைத்துப்பாக்கியுங் கூட இருந்தன. அவனை உள்ளேயும் தொடர்ந்து வந்த சீடப்பிள்ளை, ''நீங்கள் நீராட அடுத்த அறையில் உஷ்ணோதகம் (சுடுநீர்) தயாராயிருக்கிறது'' என்று அரை மராத்தியிலும் அரை சமஸ்கிருதத்திலும் கூறினான். வியப்பில் அடியோடு ஆழ்ந்துவிட்ட இதயசந்திரன் தனது வாளை மஞ்சத்தில் போட்டுவிட்டு அந்தச் சீடப்பிள்ளை காட்டிய பக்கத்தறைக்குச் சென்று சுகந்தப்பொடியிட்டு நீராடித் திரும்பிப் புத்தாடையணிந்து அதற்கு முன்பே அறைக்கு வந்துவிட்ட உணவையும் அருந்திவிட்டு மஞ்சத்தில் படுத்தான். 'என்ன வசதிகள், ராஜபோகத்துடன் முறைப்படி சகலமும் நடக்கிறது! இப்படியோர் அதிசய பட்டணம் இருப்பதாக நான் கேள்விபட்டதுகூட இல்லையே!' என்று திரும்பத் திரும்ப ஆச்சரியத்தில் ஆழ்ந்து கிடந்த இதயசந்திரன், ஒரு நாழிகைக்குப் பிறகு கதவைத் திறந்து கொண்டு வந்த சீடன், ''நாங்கள் கோவிலுக்குப் போகிறோம். வருகிறீர்களா?'' என்று வினவியபோதுகூட வர மறுத்து, கதவைத் தாளிட்டுக்

கொண்டு மஞ்சத்திலேயே படுத்துக் கிடந்தான். அவன் சிந்தனைகள் எங்கெங்கோ சுழன்றன. தமிழகத்திலிருந்து கொங்கணம்வரை நடந்த நிகழ்ச்சிகள் முடிய கண்களுக்கு முன்பாக வலம் வந்தன. அத்தனை எண்ணங்களையும் கடைசியாக உதறிவிட்டு, ''இன்றிரவாவது நன்றாக உறங்கலாம். நல்லவேளை, கனோஜி ஆங்கரேகூட பக்கத்தில் இல்லை. இன்று யாரும் என்னைத் தொந்தரவு செய்யமாட்டார்கள்'' என்று தனக்குத்தானே கூறிக் கொண்டு மஞ்சத்தில் நன்றாகக் கால் நீட்டிப் படுத்தான். ஆனால் அவன் வாழ்க்கையின் அமைதி தஞ்சையுடன் போய்விட்டதை உணரவில்லை. அன்று நள்ளிரவில் அவன் கதவு மெல்ல இருமுறை தட்டப்பட்டதும் இதயசந்திரன் மஞ்சத்தில் எழுந்து உட்கார்ந்தான். கையில் கைத்துப்பாக்கியையும் எடுத்துக்கொண்டான்.

''யார்?'' இதயசந்திரன் குரல் அதட்டலுடன் ஒலித்தது.

வெளியிலிருந்து பதில் ஏதுமில்லை. மெள்ள மஞ்சத்திலிருந்து எழுந்த இதயசந்திரன் கைத்துப்பாக்கியை வலது கையில் சுடுவதற்குத் தயாராக ஏந்தியவண்ணம் சரேலெனக் கதவைத் திறந்தான். கதவு திறந்த வேகத்தில், வெளியே இருந்த உருவம் இதயசந்திரன்மீது பலமாக விழவே, இதயசந்திரனும் நிலை தடுமாறித் தரையில் விழுந்தான். கைத்துப்பாக்கி சிதறித் தூரத்தில் போய் விழுந்ததால் அதை எடுக்கவோ உபயோகிக்கவோ வசதி இல்லாது போயிற்று அவனுக்கு.

அத்தியாயம் 16

# தூது

இதயசந்திரன் திடீரெனக் கதவைத் திறந்ததற்குக் காரணமே, கதவுக்கு வெளியிலிருந்தது யாராயிருந்தாலும் அவரை நிலைகுலையச் செய்து தனது கைத்துப்பாக்கியின் குறியில் அவரை நிறுத்தவேண்டுமென்பதுதான். ஆனால் கதவுக்கு வெளியிலிருந்தவர் கதவை ஒட்டி நின்றிருந்தபடியாலும் கதவைத் திறந்தவுடன் தடாலென்று அவன் மீது விழுந்து அவனையும் பூமியில் தள்ளி தரையில் கிடந்ததாலும், இதயசந்திரன் எச்சரிக்கையும் முன்னேற்பாடும் தளர்ந்து போனதன்றி, பாதுகாப்புக்கான கைத்துப்பாக்கியும் எட்ட விழுந்துவிடவே அவன் ஒரு விநாடி திணறவே செய்தான். அந்தத் திணறல் மட்டும் கோபத்தின் விளைவாகவோ எதிரியைச் சமாளிக்க முடியவில்லையே என்ற ஏமாற்றத்தின் விளைவாகவோ இருந்தால், தன்னைத் தள்ளியவரை ஒதுக்கித் தள்ளி, கைத்துப்பாக்கியிருந்த இடத்தை நோக்கித் தாவவோ கைநீட்டி அதைப் பற்றவோ முயன்றிருப்பான். அத்தகைய முயற்சி எதையும் செய்யும் நிலையில் அவன் இல்லை. அவனிடமிருந்து கிளம்பிய திணறலின் 'ஊம்'காரம்கூட அச்சம் கலந்த வியப்பின் காரணமாக ஏற்பட்டதால் தன்னைத் தள்ளியவரை நோக்கிக் கோபிப்பதற்குப் பதில் ''மன்னிக்க வேண்டும்... மன்னிக்கவேண்டும்'' என்ற சொற்களே அவனிடமிருந்து வெளிவந்தன

தள்ளப்பட்ட அவன் கோபிப்பதற்குப் பதில் தள்ளியவரே சினத்தைக் காட்டி, ''உங்களுக்குப் புத்தி இருக்கிறதா?'' என்று சீறினார்.

தன்னை மோதித் தள்ளிச் சற்று அப்பால் விழுந்து விட்ட பானுதேவி ஆடைகளைச் சரி செய்துகொண்டு தன்னை நோக்கிச் சீறியதைக் கண்ட இதயசந்திரன் பதில் ஏதும் சொல்லத் தெரியாமல் விழித்தான். பிறகு மெல்ல

எழுந்திருந்து நின்றுகொண்டு, ''கதவைத் தட்டியது நீங்களென்று தெரியாது. ஒரு குரல் கொடுத்திருந்தால்...'' என்று சொற்களை மென்று விழுங்கினான்.

பானுதேவி அவனைப்போல் எழுந்திருக்கவுமில்லை. பணிவுடன் பேசவும் இல்லை. விழுந்த இடத்தில் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து முழந்தாள்களைத் தனது இரு கைகளாலும் கட்டிக்கொண்டு அவனை நோக்கி வெகு அலட்சியமாகப் பார்த்து, ''உங்களுக்குப் புத்தியில்லையென்பது தெளிவாகத் தெரிகிறது'' என்று வெறுப்பு மண்டிய குரலில் கூறினாள்.

இதயசந்திரன் அவளோடு அந்தச் சமயத்தில் வாதாட இஷ்டமில்லை. ஆதலால் மௌனமாகவே நின்றான் அவள் எதிரே. அவள் அந்த இரவில் தனது அறைக்கு வந்ததற்கும் கீழே விழுந்து விட்டதற்கும் தானே காரணமென்று நினைத்ததால் ஏதோ பெரும் தவறைச் செய்துவிட்ட எண்ணம் அவன் மனத்தை அரித்துக்கொண்டிருந்தது. அத்துடன் அவள் அங்கிருப்பதை யாராவது அறிந்து விட்டால் என்ன செய்வதென்ற பீதியும் அவன் உள்ளத்தைப் பீடித்தது.

ஆனால் அத்தகைய உணர்ச்சிகளால் பாதிக்கப்படாத பானுதேவியோ அவனை உஷ்ணத்துடன் நோக்கி, ''இந்த இரவில் நான் உங்கள் அறைக்கு வந்து கதவைத் தட்டுவதை யாராவது பார்த்தாலே விகற்பமாக அர்த்தம் செய்து கொள்வார்கள். நான் குரல் கொடுத்தால் விஷயம் திவ்வியமாயிருக்கும். இதுகூடப் புரியவில்லையா உங்களுக்கு?'' என்று வினவினாள்.

அதுவரை மௌனமாயிருந்த இதயசந்திரன், ''ஷாஹூ மகாராஜாவின் மருமகள் ஓர் அற்ப வீரனின் அறைக் கதவை இரவில் தட்டுவாரென்று ஊகிக்கும் அளவுக்கு என் புத்தி வேலை செய்யவில்லை. கதவைத் தட்டிய பிறகு, குரல் கொடுப்பதால் மட்டும் எதுவும் முழுகிப் போய்விடாது'' என்று பணிவுடன் கூறினான்.



அவன் சொற்களில் உறைந்து கிடந்த பொருளை ஊகிப்பது பானுதேவிக்குச் சிறிதும் கஷ்டமாயில்லை. அந்த ஊகத்தின் விளைவாக அவள் வெட்கப்படவோ சங்கடப்படவோ இல்லை. லேசாகச் சிரிக்கவே செய்தாள். சிரித்து அவள் சொன்ன சொற்கள் இதயசந்திரனுக்கே சங்கடத்தை விளைவித்தன. ''வீரரே! நான் உங்களைக் காதல் புரிய வரவில்லை. அப்படிப் பிறர் நினைத்து விட்டால் என்ன செய்வது என்பதைத்தான் சுட்டிக் காட்டினேன்'' என்றாள் ஷாஹூவின் மருமகள்.

இதயசந்திரன் சங்கடத்தால் தனது உடலை மெல்ல அசைத்தான் நின்ற நிலையில். அவள் சொற்கள் அவனை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டன. அவன் அவளை நன்றாக உற்று நோக்கினான். அந்த அறை விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அவள் நாசியின் ஒரு பக்கத்திலிருந்த நத்தின் வைரங்களிரண்டு பளபளத்து, அவள் கண்கள்மீது தனி ஒளி பாய்ச்சியதால், சாதாரணமாகவே ஒளி பெற்ற அவள் கருவிழிகள் அதிக அழகாகப் பளிச்சிட்டன. அவள் முகத்திலும் பரவி உதட்டிலும் துளிர்த்திருந்த ஏளனப் புன்முறுவல் முகப்பொலிவை ஆயிரம் மடங்கு அதிகப் படுத்தியது. நடு வகுடெடுத்து வாரிப் பின்பகுதி அடியில் மட்டும் கட்டி அதன் கீழ் அவிழ்ந்தவண்ணம் தொங்கிக் கொண்டிருந்த நீள் குழல் அவளும் நீராடியிருக்கிறாள் என்பதை அறிவுறுத்தியது. கீழே விழுந்த நிலையிலும் சற்றும் அகலாத மேலாடை எந்த அசந்தர்ப்பத்திலும் அவள் நிலை குலையாதவள் என்பதை அறிவுறுத்தியது. கழுத்திலிருந்த அந்தப் புலிநகம் பதிக்கப் பெற்ற ஆபரணங் கூட இடமகலாதிருந்தது, விழுந்தபோதும் அவள் எத்தனை லாவகமாக விழுந்திருக்கிறாள் என்பதை உணர்த்தியது. நள்ளிரவு மோகினிபோல் அவள் உட்கார்ந் திருந்ததைக் கண்ட இதயசந்திரன் நீண்ட நேரம் மவுனமே சாதித்தான். அவன் உள்ளத்தில் ஓடிய உணர்ச்சிகளை அவன் மௌனத்திலிருந்தும் அவன் தன்னைப் பார்த்த தினுசிலிருந்தும் புரிந்து கொண்ட பானுதேவி அவள்

மேலும் பீதியடையக் கூடிய அலுவலில் இறங்கினாள். உட்கார்ந்த நிலையிலிருந்து மெள்ள எழுந்திருந்து கதவை நோக்கிச் சென்று வெளியே எட்டிப் பார்த்தாள். பிறகு உள்ளே இதயசந்திரனை நன்றாகச் சாத்தித் தாழிட்டாள்! பிறகு இதயசந்திரனை நோக்கி வந்து, ''வீரரே! மஞ்சத்தில் உட்காருங்கள். நான் உங்களிடம் பேச வேண்டியிருக்கிறது'' என்றாள்.

''கதவு'' என்று ஆரம்பித்த இதயசந்திரனை, ''காரணமாகத்தான் சாத்தினேன்'' என்று இடையிலேயே மறித்து, ''வீரரே! அசாதாரணமான காலங்களில் சாதாரண சட்டதிட்டங்களை, ஒழுக்க முறைகளை, சமூக விதிகளை நாம் கடைப்பிடிக்க முடியாது. மகாராஷ்டிரத்தின் நிலை இன்று அசாதாரண நிலை. சதா பிறர் பொருள்களைச் சூறையாடுவதும் பெண்களைத் தூக்கிச் செல்வதும் ஆண்களைக் கொன்று குவிப்பதுமான சூழ்நிலையில் இன்று மகாராஷ்டிரம் இருக்கிறது. தவிர மகாராஷ்டிரர்களே இருகூறாகப் பிரிந்து ஒரு கூறு இன்னொரு கூறை அழிக்கும் விபரீத நிலையிலும் இருக்கிறது. நாட்டு நிலை ஒருபுறமிருக்க, நம்மிருவர் நிலையும் சாதாரண விதிகளை மீறியிருக்கிறது. அரச மாளிகையில் இருக்க வேண்டியவள் துறவி ஆசிரமத்துக்கு வந்திருக்கிறேன். மகாராஷ்டிர அரச குடும்பத்துடன் எந்தச் சம்பந்தமுமில்லாத உங்களுக்கும் ஒரு சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. மற்றொரு வாரிசைத் தேடி நீங்கள் வந்திருக்கிறீர்கள். போதாக்குறைக்கு ஸாத் ஸித்தியோடும் மோதிவிட்டீர்கள். நம் இருவர்மீது சதா பிறர் கண்கள் இருந்து கொண்டிருக்கும். மிகுந்த எச்சரிக்கையுடன் நாம் நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது கதவை மூடியதன் காரணத்தை இப்பொழுது புரிந்து கொண்டீர்களா?'' என்று வினவினாள்.

புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த இதயசந்திரன், ''தேவி, நீங்கள் வரவேண்டிய அவசியமில்லை. எனக்குச் சொல்லியனுப்பியிருக்கலாமே!'' என்றான் உபசாரத்துக்கு.



''சொல்லியனுப்புவதானால் என் தோழிகளில் ஒருத்தியை அனுப்ப வேண்டும். அவர்களால் சாமர்த்தியமாக வந்துபோக முடியாது. ஆனால் பயப்பட வேண்டாம். நான் உங்களை நாடி வந்திருப்பது என் தோழிகளுக்குத் தெரியும்'' என்று விளக்கினாள் பானுதேவி.

''தோழிகளுக்குத் தெரியுமா?'' என்று வினவினான் இதயசந்திரன் வியப்புடன்.

''தெரியும். தவிர தோழிகளும் அதிக தூரத்தில் இல்லை'' என்று மேலும் சொன்னாள் பானுதேவி.

''அதிக தூரத்திலில்லையா!''

''இல்லை.''

''அப்படியானால் நீங்கள்...''

''இந்த விடுதியின் இடது பக்கத்தில் தங்கியிருக்கிறோம். உங்களுக்கு வலது பக்கத்தை ஒழித்து விட்டிருக்கிறார்கள்.''

''இது யார் ஏற்பாடு?''

''சுவாமியின் ஏற்பாடு.''

''துறவி ஆசிரமத்தில் பெண்கள் தங்கலாமா?''

''துறவி நான்கைந்து பெண்களைத் தனித்துத் தம்முடன் அழைத்து வரும்போது ஆசிரமத்திலேயே அவர்களுக்கு இடம் கொடுத்தால் என்ன முழுகிப் போய்விடும்?''

இதற்குப் பதில் சொல்ல இதயசந்திரனால் முடியவில்லை. ஆகவே, கேள்வியை மாற்றி, ''நீங்கள் எதற்கு வந்தீர்கள் இப்பொழுது?'' என்று வினவினான்.

பானுதேவியின் பதில் அவனுக்கு ஏற்கனவேயிருந்த சங்கடத்தையும் அதிர்ச்சியையும் ஆயிரமடங்கு அதிகப்படுத்தியது. ''உங்களை அழைத்துப் போக'' என்றாள் பானுதேவி.

''எங்கு?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''இந்த ஆசிரமத்துக்கு வெளியே'' என்று கூறினாள்.

''எதற்கு?''

''உங்களிடம் பேச வேண்டிய முக்கிய விஷயம் இருக்கிறது.''

''என்ன பேச வேண்டும்?''

''தனிமையில் சொல்லுகிறேன்.''

''இங்கு தனிமையில்லையா?''

''இருக்கிறது. ஆனால் உங்கள் அறைக்குள் நான் அதிக நேரமிருப்பது என் தோழிகளுக்குச் சந்தேகத்தை விளைவிக்கும்.''

''வெளியே சென்றால் தோழிகள் சந்தேகப்பட மாட்டார்களா?''

''மாட்டார்கள். நான் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் திரிவது மகாராஷ்டிரத்தில் பிரசித்தம். அந்த விஷயத்தில் என்மீது யாருக்கும் சந்தேகம் வராது. புரவி மீது நேரம் காலம் இல்லாமல் நான் திரிவது எல்லோருக்கும் தெரியும். ஆனால் பரபுருஷன் அறைக்கு நேரம் காலமில்லாமல் போவது சகஜமாயிருக்காது'' என்ற பானுதேவி மெள்ள நகைத்துவிட்டு, ''வீரரே! நான் என் அறைக்குச் சென்று மாற்றுடை அணிந்து வருகிறேன். இந்த விடுதிக்குப் பின்புறம் என் காவலர் புரவிகள் கட்டப்பட்டிருக்கின்றன. பின்புறமிருக்கும் வழியும் கோவில் மதிலுக்குச் செல்கிறது. இன்னும் சற்று நேரத்திற்குள் அங்கு வந்து ஒரு புரவியை அவிழ்த்துக்கொண்டு வெளியே சென்று கோவில் தென்புற மதில் சுவருக்கருகில் வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுக் கதவைத் திறந்துகொண்டு வெளியே சென்றுவிட்டாள் ஷாஹுவின் மருமகள்.

இதயசந்திரனுக்கு எல்லாமே சொப்பனம் போலிருந்தது. இப்படியொரு அரச குலமகள் இருக்க முடியுமென்று அவன் நினைத்துப் பார்க்கவும் முடியாதிருந்தது. அவள் துணிவும் அரசியலில் அவளுக்கிருந்த அபார சிரத்தையும்



உற்சாகமும் அவன் உணர்ச்சிகளை உலுக்கியிருந்தன.
மகாராணி தாராபாயின் துணிவைப்பற்றி அவன் கேட்
டிருந்தான். ஆனால் அவளுக்கு ஒரு ஜோடி மகாராஷ்டிரத்
தில் இருக்க முடியும் என்று அவன் சற்றும் எதிர்பார்க்க
வில்லை. தவிர அவள் அழைப்புக்கு இணங்குவதா
அல்லவாவென்ற சந்தேகமும் அவனை வாட்டி வதைத்தது.
'முடியாதென்றால் அவள் அழைத்தவுடனல்லவா கூறி
யிருக்க வேண்டும்?' என்று தன்னைத்தானே கேட்டுக்
கொண்டு பெருமூச்செறிந்தான். ஸாத் ஸித்தியிருக்கும்
தருணத்தில் அந்தப் பரசுராம் பட்டணங்கூடத் தனக்கோ
ஷாஹுவின் மருமகளுக்கோ பாதுகாப்பளிப்பது கஷ்டம்
என்பதை இதயசந்திரன் நன்றாக உணர்ந்திருந்தான்.
பானுதேவியை அழைத்துக் கொண்டு அந்த இரவில்
தனியே செல்வது பேராபத்து என்பதை அவன் மனம்
சுட்டிக்காட்டியது. ''பெண் அழைக்கும்போது பேராபத்
தைப் பற்றியோ வேறு விளைவுகளைப் பற்றியோ யார்
கவனிக்க முடியும்! மாயமானைப் பிடிக்கப் பிராட்டி
கட்டளையிட்டபோது பரந்தாமன் கவனித்தானா?''
என்று புராண உவமை கூறி, தன் நடவடிக்கைகளுக்குச்
சான்றையும் காட்டிக்கொண்டு வெளியே கிளம்ப
வேண்டிய முஸ்தீப்புக்களைச் செய்து கொண்டான் அவன்.
மஞ்சத்தில் கிடந்த வாளை இடுப்புக் கச்சையில் கட்டிக்
கொண்டு தரையில் கிடந்த கைத்துப்பாக்கியையும் சரி
பார்த்துக் கச்சையில் செருகிக் கொண்டான். பிறகு
மெள்ள கதவைத் திறந்து லேசாக வெளியில் மூடிவிட்டு
அந்த விடுதியைச் சுற்றிப் பின்புறம் சென்றான்.

பானுதேவி கூறியதுபோல் அங்கு புரவிகள் நாலைந்து
கட்டப்பட்டிருந்தன. அவள் கூறியதுபோல் பின்புறத்தில்
நேர்வழியும் இருந்தது பரசுராமர் கோவில் மதிள் நோக்கி.
மெள்ளப் புரவியொன்றை அவிழ்த்துச் சிறிது தூரம் அதன்
மீது ஏறாமலே மெதுவாக அழைத்துச் சென்ற இதய
சந்திரன் வெகு லாவகமாக அதன் மேல் தாவி மிக மெது

வாகவும் புரவிக் காலடி ஓசை அதிகமாகக் கேட்காமலும் மதிளை நோக்கி நடத்தினான்.

பரசுராமன் கோவில் மதிளை அணுகியதும் பானுதேவி குறிப்பிட்ட இடத்தில் நின்று மலைச்சரிவை நோக்கினான். இருள் கவிந்து நின்ற நேரத்திலும் பரசுராம மலை மிகக் கவர்ச்சியுடன் காட்சியளித்தது. மலைக்குக் கீழே தெரிந்த வாசிஷ்டி நதியின் பிரவாகம் சற்றுச் சத்தத்துடனேயே ஓடிக்கொண்டிருந்தது! கிருஷ்ணபட்ச நிலவு தலை தூக்க வில்லையானாலும் நதி ஓரத்தில் தெரிந்த படகுத் துறை யிலும், அதற்கப்பால் ஆடி நின்ற மரக்கலங்களிலும் ஒளி விட்டு விளக்குகள் அவசியமான வெளிச்சத்தைக் கொடுத் திருந்தன. ஆனால் வடபுறத்திலிருந்த தாமினிக் காட்டுப் பகுதி மட்டும் இருட்டில் கருமை தட்டிக் கிடந்தது. ஒரு பாதி இருளும் ஒரு பாதி ஒளியும் பெற்ற அந்த மலை வாழ்வின் இரவையும் பகலையும் போலவும், சுகதுக்கங் களைப் போலவும் இணைந்து கிடந்ததைக் கண்ட இதய சந்திரன் இயற்கையின் கம்பீரத்தையும் நியதியையும் எண்ணிப் பெரிதும் வியந்தான். அப்படி அவன் சூழ்நிலை யைக் கண்டு வியந்திருந்த சமயத்தில் பானுதேவியும் ஒரு புரவியின் மீதமர்ந்து அவனிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தாள். வந்ததும் ஏதும் பேசாமல் தன்னைத் தொடரும்படி சைகை செய்து மலைச்சரிவில் புரவியைச் செலுத்தினாள். இதயசந்திரனும் ஏதும் கேட்காமல் அவளைத் தொடர்ந்து சென்றான்.

அந்த மலைச்சரிவு சில இடங்களில் சின்னஞ்சிறு புதர் களை உடையதாகவும் சில இடங்களில் வழுக்கைப் பாறை களை உடையதாகவும் இருந்தது. இன்னும் சில இடங் களில் உயர்ந்த மரக்கூட்டங்களும் இருந்தன. செப்பனிடப் பட்ட பாதைகூட அவர்கள் சென்ற பகுதியில் கரடுமுரடா யிருந்ததால் அந்தப் பாதையில் செல்லுவதே கஷ்டமா யிருந்தது இதயசந்திரனுக்கு. போதாக் குறைக்குப் பானுதேவி திடீரெனத் தனது புரவியைச் செப்ப னிடாத குறுக்கு வழிகளில் செலுத்தினாள். குத்துக்



குத்தான பாறைகளையும் சின்னஞ்சிறு புதர்களையும் அலட்சியமாகத் தாண்டித் தாண்டிச் சென்றாள். இதய சந்திரன் மலைச்சரிவுகளில் புரவிகளை நடத்திப் பழக்க மில்லாத காரணத்தால் சற்று சிரமப்பட்டே அந்தப் பாறை களையும் புதர்களையும் தாண்டினான்.

அவன் சங்கடத்தைப் பார்த்த அவள் மெல்ல நகைத் தாள். புரவி ஏற்றத்தில் அவளுக்கிருந்த உற்சாகம் அதிக மாகவே மலைச்சரிவில் கண்மண் தெரியாமல் கனவேகத்தில் புரவியைச் செலுத்தினாள் பானுதேவி. எந்த நிமிஷத்தில் அவள் விழுந்துவிடப் போகிறாளோ என்ற திகிலில் அபாயத்தையும் மறந்து தனது புரவியையும் ஓரளவு வேக மாகச் செலுத்திய இதயசந்திரன் சிறிது தூரத்திற்குப் பிறகு அவள் புரவியிலிருந்து கீழே குதித்து உட்கார்ந்த இடத்திற்குச் சற்றுத் தாமதித்தே வந்து அவளுக்குச் சற்று எட்ட உட்கார்ந்து தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண் டான். சுற்றி வளைக்காமல் நேரே விஷயத்துக்கு வந்தாள் ஷாஹுவின் மருமகள். "வீரரே! உமது உதவி எனக்கு அவசரமாகத் தேவை" என்று துவங்கினாள் அவள்.

"உத்தரவிடுங்கள் தேவி" என்றான் இதயசந்திரன் பணிவுடன்.

"எதுவாயிருந்தாலும் காரணம் கேட்காமல் செய்வீர் களா?"

"செய்வேன்." உறுதியுடன் வந்தது இதயசந்திரன் பதில்.

"தூது செல்ல வேண்டும்" என்றாள் தேவி, அவன்மீது தன் கண்களை நிலைக்கவிட்டு.

"செல்கிறேன்" என்றான் இதயசந்திரன்.

"யாரிடமென்று கேட்கவில்லையே" என்றாள் தேவி.

"சொல்லுங்கள்" என்றான் இதயசந்திரன்.

"ஸாத் ஸித்தியிடம்" என்ற தேவியின் குரல் திடமாக ஒலித்தது.

## அத்தியாயம் 17

# புறக் கண்களும் புலக் கண்களும்

முட்டு முட்டான முட்புதர்கள் சில எட்டக் கவிந்து கிடக்க, மட்டமட்ட மரங்கள் நாலைந்து இடம் விட்டு விட்டு அரை வளையமாகக் காவல் வீரர்போல் காத்து நிற்க, எட்டாத விண்ணில் அப்பொழுதே எழுந்த கிருஷ்ண பட்ச வான்மதியும் தனது மந்தக் கிரணங்களை லேசாக வீசத் தொடங்க, காலை அரைவாசி நீட்டிய வண்ணம் கற்பாறையொன்றின்மீது இரவு மோகினி போலும் இராக்கால வனதேவதை போலும் அமர்ந்து தனக்கு விபரீதக் கட்டளையிட்ட பானுதேவிக்கு உடனடியாகப் பதில் சொல்லத் திராணியில்லாததால், இதயசந்திரன் இமை கொட்டாமல் அவளைப் பல விநாடிகள் பார்த்துக் கொண்டு மௌனமாகவே இருந்தான. நள்ளிரவுக்குப் பிறகு தன்னைத் தனியாக அழைத்து வந்த அந்தக் கன்னியின் கொள்ளையழகு தன்னைக் கள்வெறி கொள்ளச் செய்யும் அளவுக்கு அந்தப் பயங்கர இரவிலும் விகசித்துக் கிடந்ததைக் கண்ட இதயசந்திரன், என்ன செய்வது என்ன சொல்வது என்று தெரியாமல் திகைத்து நிற்கவே செய்தான். ஸ்நானம் செய்ததன் விளைவாகத் தன் அறைக்கு வந்தபோது நன்றாக விரிந்து பரந்து நுனியில் மட்டும் முடிச்சிடப்பட்டிருந்த அவள் கருங்குழல் அப்பொழுது நன்றாக எடுத்து முடிக்கப்பட்டிருந்ததால் தலையின் முன்பகுதியிலிருந்த முக்காடு சரிந்து அந்த முடிச்சில் தொக்கியிருந்ததும், அது தொக்கி மறைக்க முயன்றும் முடியாததன் விளைவாகக் குழல் முடிப்பில் சுற்றிக் கிடந்த வண்ணம் மலர்ச்சரம் நீண்டு வெளியே தெரிந்ததும், புரவியை அவள் மலைச்சரிவில் காற்றினும் கடிய வேகத்தில் விட்டு வந்ததால் முடிப்பிலிருந்து விலகிவிட்ட குழல் கூறுகள் இரண்டு பக்கக் கன்னங்களின் மேல் பரந்து கிடந்ததும், மேலாடை லேசாக



விலகியிருந்ததால் மதியின் மந்த வெளிச்சத்தைப் பார்த்து நகையாடுவதுபோல் அதிக வெண்மையுடன் தெரிந்த சங்குக் கழுத்து தலைகுனிந்திருந்ததால் சிற்பி செதுக்கிய சலவைக் கற்துண்டம்போல் காட்சியளித்ததும், தலை சற்றே குனிந்ததைக் கண்டும் வணங்க இஷ்டப்படாத அவள் மார்பகம் இறுமாப்புடன் நிமிர்ந்திருந்ததும், நிற்கும் நிலையில் அடியோடு மறைந்துவிடும் சிற்றிடை மட்டும் அவள் உட்கார்ந்த பின் அதுவரை தாங்கிய சுமையிலிருந்து ஆசுவாசம் செய்துகொள்ள சற்று மடிந்து விரிந்ததும், புரவிச் சவாரியின்போது விரிந்த அவள் கால்கள் உட்கார்ந்த நிலையில் நன்றாகச் சேர்க்கப்பட்ட பின்பு சேலையின் அப்பகுதி நீண்ட மலைப்பிரிவுக்கிடையில் ஓடும் நீரருவிகளைப் போல சுருண்டு சுருங்கியும் அவள் தொடைகளைத் தழுவிச் சென்றதும் பார்க்கப் பார்க்க உன்மத்தத்தை விளைவித்ததால் சற்றுப் பெருமூச்சும் விட்ட இதயசந்திரன் கண்களை அவள் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து வேறிடத்துக்குத் திருப்பினான்.

மலையின் மற்றைய பகுதிகள் சிலவிடங்களில் அடர்ந்த கன்னங் புதர்களையும், சிலவிடங்களில் ஏதும் விளையாத கன்னங் கரேலென்ற பாறைகளையும் இன்னும் சில இடங்களில் தலை மட்டத்துக்கு மேல் வளர்ந்த அடர்த்தியான மரங்களையும் உடையனவாயிருந்ததால், பயங்கரமும் அழகும் கலந்து கிடந்ததைப் பார்த்த இதயசந்திரன் மனத்தில் அந்த மலைக்கும் பானுதேவிக்கும் எத்தனை ஒற்றுமையிருக்கிறதென்ற எண்ணமும் மேலோங்கி நின்றது. அவள் உட்கார்ந்திருந்த கற்பாறைக்குச் சற்று எட்ட இருந்த மரங்கள்கூட அவளைக் கண்டு அச்சப்படுவன போலிருந்ததைக் கண்ட இதயசந்திரன், வான்மதியின் கதிர்கள் சில புதர்களின்மீது தவழ்ந்தாலும் அவள் காலடிக்குச் சற்று முன்பாகவே நின்று விட்டதைப் பார்த்ததால் சந்திரனும் இவளை அணுக அஞ்சுகிறான் போலிருக்கிறது என்று நினைத்தான். சந்திரன் கதிர்வீச்சை நோக்கிக் காலை நீட்டி உட்கார்ந்திருந்த அந்தச் சமயத்தில், அவள்

தோரணையில் மன்னர் குல தோரணை இருந்ததையும், அவள் பார்வையில் வேண்டுகோளுக்குப் பதில் கட்டளையே களை விட்டதையும் கண்ட அந்த வாலிப வீரன், அவள் எதைக் கேட்டாலும் யாரும் மறுக்க முடியாதென்பதையும் உணர்ந்து கொண்டான். அவளை முதல் நாள் சந்தித்தபோதே சுயநிலையிழந்த தன் மனம் அடுத்த இரண்டு நாட்களுக்குள் சுதந்திரத்தை அடியோடு இழந்து விட்டதையும், அவள் ஒவ்வோர் அசைவையும் பார்த்துப் பார்த்து வேதனையையும் விருப்பத்தையும் ஒருங்கே அடைந்து தவிப்பதையும் எண்ணிய அவன் அன்றைய அவள் கட்டளை மிகுந்த அத்துமீறிவிட்டதை உணர்ந்ததால், உடனடியாக அதற்கு இசையவில்லையே என்ற வருத்தத்தால் பெருமூச்சே விட்டான்.

அந்தப் பெருமூச்சையும், உடனடியாக அவள் பதில் சொல்ல முடியாமல் தவித்ததையும், தன்னை அளவுக்கு மீறி ஆராய்ந்து ஆராய்ந்து, அந்த ஆராய்ச்சியின் விளைவாகப் பெருத்த சங்கடத்துக்குள்ளாகித் திகைப்பதையும் கண்ட ஷாஹுவின் மருமகள், இருவருக்குமிடையே நிலவிய மௌனத்தைத் தானே கலைத்து, ''என்ன யோசிக்கிறீர்கள் வீரரே! ஸாத் ஸித்தியிடம் செல்ல அச்சப்படுகிறீர்களா?'' என்று வினவினாள் குரலில் சிறிது ஏளனம் ஒலிக்க.

இதயசந்திரன் அந்த ஏளன ஒலியைக் கவனித்ததும் அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் உட்கார்ந்த நிலையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு அதுவரை அவள் அழகில் சிக்கி அலைந்த மனத்தைச் சற்றுக் கட்டுப்படுத்திக் கொண்டு அவளை உற்று நோக்கி, ''ஆம் தேவி! அச்சப்படுகிறேன்'' என்று திடமான குரலில் கூறினான் ஷாஹுவின் மருமகளை நோக்கி

அச்சப்படுகிறீர்களா என்று வீரனான அவனைப் பார்த்துக் கேட்டால் எந்த வீரனும் இருக்கும் பலவீனத்தில் தனக்கு அச்சமில்லையென்று சொல்லுவான். அந்தப் பலவீனத்தை உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று



நினைத்த பானுதேவிக்கு அவன் பதில் பேரதிர்ச்சியை அளித்ததால், ''தங்களை வீரரென்று அழைத்தேன்'' என்று சுட்டிக் காட்டினாள் சற்றே கடுகடுத்த குரலில்.

அவளை நோக்கி இரண்டடி எடுத்து வைத்து அவளுக்கு வெகு அருகில் வந்து, அவள் அழகுப் பாதங்கள் ஊன்றியிருந்த இடத்திற்கு அருகாமையில் தன் பாதங்களையும் வைத்துத் தலைகுனிந்து அவளை நோக்கி இதயசந்திரன், ''ஆம் அழைத்தீர்கள் தேவி! அதற்கென்ன?'' என்று வினவினான், தன் குரலிலும் கடுமையைக் காட்டி.

''அழைத்தது மட்டுமல்ல...'' என்று மெல்ல இழுத்தாள் பானுதேவி.

''வேறென்ன தேவி?''

''அப்படி நினைக்கவும் செய்தேன்.''

''அந்த நினைப்பை இப்பொழுது மாற்றிக்கொண்டு விட்டீர்களா?''

''நான் மாற்றிக் கொள்ளவில்லை.''

''வேறு யார் மாற்றியது?''

''நீங்கள்தான்.''

''நானா!''

''ஆம்'' என்று பதில் சொன்னாள் பானுதேவி.

''எப்பொழுது வீரனல்லவென்று ஒப்புக் கொண்டேன் உங்களிடம்?'' என்று சீறினான் இதயசந்திரன்.

இதற்கு உடனடியாகப் பதில் சொல்லாத பானுதேவி தன் தலையைச் சற்று உயர்த்தித் தன் அழகிய விழிகளை அவன் விழிகளுடன் கலந்தாள். அவள் பவள இதழ்கள் மெல்ல அசைந்தன. ''அச்சப்படுவதாக நீங்கள்தானே சொன்னீர்கள்?'' என்ற சொற்கள் மெல்ல உதிர்ந்தன பானுதேவியின் உதடுகளிலிருந்து.

அவள் விழிகளுடன் கலந்த விழிகளை அப்புறப்படுத்த முடியவில்லை அவனால். அப்புறப்படுத்த முயன்றபோது அசைந்த அவள் செவ்வுதடுகள் மற்றொரு விலங்கை மாட்டின அவன் விழிகளுக்கு. அந்த மயக்கத்தில் நின்ற நிலையிலும் சிறிது நடுங்கினான் தமிழகத்தின் அந்த வாலிபன். அந்த நடுக்கத்தில் சிறிது அசையவும் செய்தான். அப்படி அசைந்தபோது அவன் பாதங்கள் அவள் மலர்க் கால்களில் பட்டுவிடவே பதறி, கீழே மண்டியிட்டு உட்கார்ந்து அவள் பாதங்களைக் கையால் எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு, ''மன்னிக்க வேண்டும் தேவி'' என்று குழப்பத்துடன் சொற்களை உதிர்த்தான்.

அவன் கையின் ஸ்பரிசத்தால் அவள் மலர்ப் பாதங்கள் மெல்ல அசைந்தன. அவற்றின் ஊடே சென்ற உணர்ச்சி உடல் பூராவும் மின்னல் போல் பரவவே சற்று வியப்பே அடைந்தாள் அவள். அவன் காயப்பட்டுக் கடற்கரையில் விழுந்து கிடந்தபோது அவனை நன்றாகத் தொட்டுக் கட்டுப் போட்ட சமயத்தில் சிறிதும் கலங்காத தனது மனம் இன்று அவன் கை தனது காலில் பட்டவுடன் ஏனிப்படித் திக்கு முக்காடுகிறது என்று நினைத்துப் பிரமித்த அவள், ''எதற்கும் வளர்ச்சியிருக்கிறது, காலமிருக்கிறது, சந்தர்ப்பமிருக்கிறது, சூழ்நிலையிருக்கிறது,'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அவள் காலடியில் உட்கார்ந்து இதயசந்திரன் மீண்டும் அவள் பாதங்களில் தனது வலது கரத்தை நன்றாகப் பதிய வைத்தான்.

பானுதேவி பெரும் சங்கடத்திற்குள்ளானாள். ''இது சரியல்ல. எடுங்கள் கையை'' என்று மெல்ல கூறவும் செய்தாள்.

''அரசிகளின் பாதத்தை அடிமைகள் தொடுவது தவறாகுமா தேவி?'' என்று வினவினான் இதயசந்திரன்.



''தாங்கள் என் அடிமையென்று யார் சொன்னது?'' என்று வினவினாள் பானுதேவி குழப்பம் தெளியாத குரலில்.

''அரசகுலத்தார் யாருக்குக் கட்டளையிடுவார்கள்? யாரைத் தூது அனுப்புவார்கள்?'' என்று வினவினான் இதயசந்திரன் காலிலிருந்து கையை அகற்றாமலே.

பானுதேவி இஷ்டப்பட்டால் காலைச் சற்றுப் பின்னுக்கிழுத்து அவன் ஸ்பரிசத்திலிருந்து விடுவித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவள் காலை விடுவித்துக் கொள்ளாமல் பேச்சிலேயே இறங்கி, ''நான் உங்களைக் கட்டளையா இட்டேன்? உதவி செய்ய முடியுமா என்று தானே கேட்டேன்?'' என்றாள்.

''சொற்களில் என்ன இருக்கிறது தேவி?'' என்ற இதயசந்திரன் குறுநகை கோட்டினான்.

''வேறு எதில் என்ன இருக்கிறது?''

''பார்வையிலிருக்கிறது.''

''உம்.''

''ஒலியிலிருக்கிறது.''

''உம்.''

''தோரணையில்ருக்கிறது.''

''எது?''

''கட்டளையும் சரி...கா''

''ஏன் நிறுத்தி விட்டீர்கள்? சொல்லுங்கள.''

''உம்... கோரிக்கையும் சரி.''

பானுதேவி மெல்ல நகைத்தாள். ''வீரரே! நீர் கோழை?'' என்றும் கூறினாள் நகைப்புக்கிடையே.

''நானா! கோழையா!'' என்று சீற்றத்தைக் காட்டினான் இதயசந்திரன்.

''ஆம் வீரரே! 'கா' என்ற மெய்யெழுத்தில் அறுந்து 'கோ'வென்ற பொய்யெழுத்தில் துவங்கி விடும் சொல் முடியுமா?'' என்று வினவினாள் பானுதேவி அவனை நோக்கி நன்றாகக் குனிந்து.

இதயசந்திரன் அந்தச் சமயத்தில் உண்மையில் கோழையானான். அவள் குனிந்தபோது அவள் கழுத்திலிருந்து கிளம்பிய ஸ்நானப்பொடியின் நறுமணம் அவனை எந்த உலகத்துக்கோ கொண்டு சென்றது. அவள் உதடுகளைத் திறந்து பேசியதால் அவள் உணவுக்குப் பின்பு போட்டிருந்த சுபாரியின் சுகந்தம் அவனுக்கு உன்மத்தத்தை ஊட்டியது. அவன் உடலில் உணர்ச்சிகள் வேகமாக ஓடியதால் அவன் வலக்கை அவள் பாதத்தில் மிக அழுந்தப் பதிந்தது. ''தேவி...'' என்ற சொல் நடுக்கத்துடன் உதிர்ந்தது அவன் உதடுகளிலிருந்து.

''என்ன வாலிபரே!'' என்றாள் தேவி. இம்முறை அவள் வீரரே என்றழைக்காமல் வாலிபரே என்றழைத்தது விசித்திரமாகவும் அன்பு ஊடுருவிய வேதனையாகவும் அலைபாய்ந்து சென்றது அவன் உடலில்.

''வீரனுக்கும் அச்சமுண்டு கோழைத்தனமும் உண்டு என்று இப்பொழுது புரிகிறதா?'' என்று தட்டுத் தடுமாறி மென்று விழுங்கிக் கூறினான் அந்த வாலிபன்.

அவள் மேலும் குனிந்து காலில் பதிந்திருந்த கையை மெள்ள எடுத்தாள் தன் கையினால். ''நீங்கள் மட்டும்...'' என்ற ஒரு சொல்லைத் திணறிய மூச்சில் வெளியிடவும் செய்தாள்.

''நான் மட்டும் என்ன தேவி?'' என்று மெல்லக் கேட்டான் வாலிபன்.

''கோழையல்ல...''

''வேறு யார்...''

''நானும் கோழைதான். எனக்கும் அச்சமாகத்தானிருக்கிறது.''



''அதில் தவறில்லை தேவி.''

''ஆம், ஆம்.''

''நெறியுள்ளவர்களுக்கு அச்சம் சில விஷயங்களில் அவசியம்.''

''ஆம் ஆம்'' உணர்ச்சிக் குரலில் மெல்ல உதிர்ந்தன அந்த ஆம் ஆம் அவனிடமிருந்து.

''எந்தக் கடமையும் நெறிக்குப் பிறகுதான் தேவி.'' இதயசந்திரன் வேதாந்தமாகச் சொன்னான் வார்த்தையை ஆனால் அந்த வேதாந்தத்தில் உண்மையைக் காணோம் உண்மையைப் பொய்யாகவும் காட்டும் சூழ்நிலை அது. அதற்கு மாயை என்பது வேதாந்தப் பெயர்.

நெறியைப்பற்றி அவன் பேசினான் நெறியைப்பற்றி அவளும் ஒப்புக் கொணடாள். ஆனால் நெறியை அறுக்கும் அந்த நிலையில் மாயையின் அற்புத வலையில், உணர்ச்சியின் விபரீதக் கொந்தளிப்பில், அர்த்தமுள்ள வார்த்தைகளும் அர்த்தமற்று ஒலிக்கும் மானிட அறிவின் அதிர்ச்சியில் எதுவும் நிலைகுலையத்தானே செய்யும்? அந்த நேரத்தில் சொல்லுக்குப் புறம்பான எண்ணமும் செயலுமே மேலோங்கியதால் அவன் கைவிரல்கள் அவள் பாத விரல்களில் புகுந்தன. அவள் பாதவிரல்கள் உண்மையாகவே அவன் விரல்களை நெருங்கி நொறுக்கினவா? இருக்காது இருக்காது அந்த மலர் விரல்களுக்கு ஏது அத்தனைக் கடினம்? இருக்கும் இருக்கும் அவன் உள்ளங்கைக்கு அடியிலிருந்த பாதத்தின் மேற்புறம் முழுவதும் கடினப்பட்டு விட. விரல்கள் ஏன் கடினமாகா? அவள் கால் விரல்கள் அவன் கைவிரல்களை நொறுக்கின. கைவிரல்கள் அப்படியே நொறுங்கி விட்டாலும் இன்பமாயிருக்கும் போலிருந்தது அவனுக்கு பெரும் திகைப்பினால் உறவாடிய அவர்கள் கண்கள் பிரிந்து விலகின. வேறெங்கோ பார்த்தன. பார்வைக்கெதிரே குத்தான

கற்கள் தெரிந்தன, புதர்கள் தெரிந்தன. மரங்கள் தெரிந்தன. வாசிஷ்டியின் பிரவாகமும் தெரிந்தது. இத்தனையும் தெரிந்தும் தெரியாமலே இருந்தன அந்த இரு ஜோடி கண்களுக்கும். அவன் கண்கள் விழித்திருந்தாலும் பார்வை உள்ளே திரும்பி விட்டதால் வேறு கடினப் பாறைகள் புஷ்ப வகைகள் இப்படிப் பலப்பல தெரிந்தன. அவள் கண்களுக்கு வீர முகமொன்று தன்னை உற்று நோக்குவதும் தெரிந்தது. முரட்டுக் கை விரல்கள் கால் விரல்களை ஊடுருவுவதும் உள்ளே தெரிந்தது. வாசிஷ்டி நதியின் அலைகளைவிடப் பேரலைகள் கொந்தளித்தன அவள் உடலில். புறக் கண்கள் பார்வையிழந்ததால் புலக் கண்கள் வெற்றியடைவதை அவளும் உணர்ந்தாள். அவனும் உணர்ந்தான். புலக்கண்கள் வெற்றி கொண்டன. அச்ச நிலை நீங்கி, கோழை நிலை நீங்கி, துணிவு நிலை ஓங்கவே அவன் கை அவள் இடையில் பாய்ந்தது. இடை இறுகவில்லை. வளைந்தே கொடுத்தது. மனம் வளைய, உணர்ச்சிகள் வளைய, புலக் கண்களின் ஆட்சி பேயாட்சியாயிருந்தது. அந்த ஆட்சி வலையில் மெள்ள மெள்ள நுழைந்தார்கள் அந்த இரு வாலப்பருவத்தினரும். அந்த வேளை தித்திக்கும் பானகந்தான் இருவருக்கும். ஆனால் பானகத் துரும்பு என்று ஒரு பழமொழியும் தமிழகத்தில் உண்டு என்பதை உணர்த்தியது அவர்களை ஆட்கொண்ட அந்தப் பாழும் விதி.

அத்தியாயம் 18

# தேவியின் கட்டளை

புலன்கள் ஐந்தும் பொருந்தும் இடங்கள் இரண்டு. காமத்திடம் பொருந்தும். கடவுளிடம் பொருந்தும். காலத்தால் அழியாத நமது பாதிக் கிரகங்கள் காமத்தைக் காட்டி கடவுளைக் காட்டியதற்குக் காரணம், இதுதான். கடவுளிடம் புலன்கள் அனைத்தும் பொருந்துவதைக்கூட ஒருவிதக் காமம் என்று கூறுவதும் உண்டு. ''மற்றை நம் காமங்கள் மாற்று'' என்று ஆண்டாள் சொன்னதற்கு ஆன்மிகக் காதலும் ஒருவகைக் காமம் என்பதும் காரணமாகும். இருவகைக் காமத்துள் ஒரு வேறுபாடும் உண்டு. ஆன்மிகக் காமத்தில் அறிவு விரிகிறது, தெளிவடைகிறது. உடலுணர்ச்சிக் காமத்தில் அறிவு குழம்புகிறது, மயங்குகிறது.

பிந்திய மயக்கத்தில், வாலிப பருவத்தின் உணர்ச்சி வேகத்தில், இதயப் படபடப்பில் உணர்ச்சிகள் தழுவியதால் உடல்களும் தழுவத் துடித்த அந்த நேரத்தில், தங்கள் புறக் கண்கள் பார்வையிழந்து விட்டதால் உலகமே கண்களை மூடிவிட்டதாகப் பிரமை முற்றுகையிட்ட நிலையில் இருந்த இடம், பிறந்த நிலை, மொழி, இனம் அனைத்தையும் காற்றில் விட்டுக் கவலையொழித்து, பரஸ்பரஸ்பரிசத்திற்கு மட்டுமே ஏங்கிய அந்த இருவரும், சூழ்நிலை மறந்து தன்னிலை துறந்து கிடந்தனர்.

அவளுக்கும் அவனுக்கும் இந்த நிலை நீடித்திருந்தால் வேறெந்த நிலையில் முடிந்திருக்கும் என்பது ஊகத்தால் எட்டமுடியாத ஒன்றல்ல. ஆனால் அசைக்க முடியாத எதையும் அசைக்கவல்ல விதி அவர்களுக்குக் குறுக்கே பாய்ந்ததால் அவ்விருவரும் திடீரென சுயநிலைக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. பானகத் துரும்பு எப்படி பானகத்தின் இனிப்பைத் தடை செய்யுமோ அப்படித் தடை செய்தது விதி அவ்விருவர் இன்ப நிலையையும்.

சலனமற்ற குளத்தில் சிறு கல் வீசப்பட்டாலும் சலனச் சுழல்கள் நீரில் கிளம்பி விடுவதைப்போல, திடீரென மரங்களுக்குப் பின்னால் ஏற்பட்ட பட்டென்ற ஓசை அவர்கள் உணர்ச்சிகளிலும் சலனத்தைக் கிளப்பி இருவரையும் சற்று விலக வைத்தது. ஏதோ சின்னஞ்சிறு செடிகள் அருகில் அசைந்த ஓசைதான் அவர்கள் திடீரென விலகிப் பிரிய விசையிட்டது. சட்டென்று இதயசந்திரன் கைகளை எடுத்துக்கொண்டு ஓசை வந்த திசையை நோக்க, அரசகுல மகளும் அவன் கரம் விலக்கிய மேலாடையைச் சரி செய்து கொள்ள, புறக் கண்களும் உணர்ச்சிகளும் இவ்வுலகத்துக்கு வரவே, இருவரும் இருந்த இடத்திலிருந்து எழுந்து நின்றனர். எழுந்த பின்னரும் அவள் நின்ற இடத்தை விட்டு நகராதிருந்தாலும், அவன் மட்டும் இடையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்துக்கொண்டு அரவம் எழுந்த இடத்தை நோக்கி மெல்ல நடந்து சென்றான். எதிரே வட்டமாக நின்ற செடிக் குவியலைத் தாண்டி நடந்த அவன் அடர்ந்த புதர்களிடம் சென்று பார்த்ததும் யாரும் அங்கிருந்ததாகவோ அகன்றதாகவோ தெரியாததால் மீண்டும் பானுதேவி இருந்த இடத்துக்கே வந்தான்.

பானுதேவி அவனை நோக்கினாள், பேசவில்லை. ஆனால் கண்களில் கேள்வியிருந்தது. ''ஒன்றுமில்லை. வீணாகப் பயந்துவிட்டோம்'' என்று அந்த வாலிபன் சிரித்தான்.

அந்த அசட்டுச் சிரிப்பு! இச்சை நிறைவேறாத சமயத்தில் ஆண்கள் சிரிக்கும் அசட்டுச் சிரிப்பு அது. சாதாரண காலத்தில் பெண்கள் வெறுக்கும் அசட்டுச் சிரிப்பு அந்தச் சமயத்தில் பானுதேவிக்குப் பேரின்பமாயிருந்தது. அந்த அசட்டுச் சிரிப்பில் அர்த்தங்கள் ஆயிரமாயிரம் இருந்ததை அவள் உணர்ந்தாள். ''வீணாகப் பயந்துவிட்டோம்'' என்று அவன் தன்னையும் சேர்த்துக்கொண்டு சொன்னதில் பொதிந்து கிடந்த பொருள்களையும் துணிவையுங்கூடப் புரிந்து கொண்டாள் பானுதேவி. ஆனால் எதையும் வெளிக்குக் காட்டாமல் மறைக்கக் கூடிய பெண்ணின் சக்தியால் உணர்ச்சிகளை அடியோடு மறைத்து, ''ஒன்றுமில்லையா வீரரே?'' என்று சர்வசாதாரணமாகக் கேள்வியொன்றை வீசினாள்.



''ஒன்றுமில்லை...தேவி...'' என்று சற்று தயக்கத்துடன் பதில் சொன்னான் தமிழகத்தின் வாலிபன்.

அந்தப் பதிலிலிருந்து, அவன் தயக்கத்திலிருந்து, உணர்ச்சி நிலையிலிருந்து உண்மை நிலைக்கு அவன் மீள முயல்வதையும், அது அவனுக்குப் பெரும் சங்கடமாயிருந்ததையும் உணர்ந்தாள் பானுதேவி. ஆனால் அவனைவிட வெகு சீக்கிரத்தில் தன் உணர்ச்சிகளைக் கட்டுக்குக் கொண்டுவந்துவிட்ட ஷாஹுவின் மருமகள், ''என்ன ஒன்றுமில்லயையா! ஒன்றுமேயில்லையா?'' என்று வினவினாள் வியப்புடன்.

''இல்லை தேவி!'' இம்முறை இதயசந்திரன் பதில் திடமாயிருந்தது.

''கிளையொன்று ஒடிந்ததை நான் கேட்டேனே'' என்று கூறினாள் பானுதேவி கண்களை அவன் முகத்தில் தைரியத்துடன் நாட்டி.

அந்தக் கண்களில் அப்பொழுது மயக்கமில்லை, குழப்பமில்லை, சலனமில்லை. பழைய அரசகுல மகளின் கட்டளைக் கண்கள் தன்னை நோக்குவதைக் கண்டான் இதயசந்திரன். அவள் உடல்கூடத் துவண்ட நிலையிலிருந்து உறுதிப்பட்டு நிமிர்ந்து விட்டதையும், புரவியேற்றத்துக்காக அவள் பின்னால் இழுத்துக் கட்டியிருந்த மகாராஷ்டிரக் கட்டின் சேலைப்பகுதியின் முன்புறத்தைக்கூட அவள் சரிப்படுத்திக் கொண்டுவிட்டதையும் கண்ட இதயசந்திரன் மீண்டும் தான் பானுதேவியின் முன்பு நிற்பதைப் புரிந்துகொண்டான். ஆகவே அவனும் பழைய இதயசந்திரனாக மாறி, ''நானும் கேட்டேன் தேவி. ஆனால் கிளை உடைந்ததையும் காணோம். வேறு

யாரும் இங்கு வந்ததற்கான அறிகுறியும் தெரியவில்லை'' என்று பணிவுடன் கூறினான்.

''என்னுடன் வாருங்கள். நான் பார்க்கிறேன்'' என்று கூறி அவள் மரக்குவியலை நோக்கி நடந்தாள். தான் காணாததை அவள் மட்டும் என்ன கண்டுவிட முடியும் என்ற எண்ணத்தில் இதயசந்திரனும் அவளைப் பின்பற்றி நடந்தான். மரக்குவியலை அடைந்த அவள் அந்தக் குவியலில் எதையும் தேடாமல் அதைத் தாண்டி நடந்தாள். மரக்குவியலிலிருந்து நாலைந்து அடிகள் தாண்டி யிருந்த புதர்கள் முன்பு சில விநாடிகள் நின்றாள். பிறகு மரக்குவியலுக்கும் முட்புதர்களுக்கும் இடையேயிருந்த வெறும் நிலத்தை உற்றுப் பார்த்து, முட்புதர்களுக்கு அப்பாலிருந்த செடிகளின் அடர்த்தியையும் கவனித்தாள். பிறகு தானாகவே தலையை ஆட்டிக்கொண்டு முட்புதர் களுக்கும் மரக்குவியலுக்கும் இடையே இருந்த வெறும் நிலத்தை ஊன்றிக் கவனித்தாள். கன்னங்கரேலென்ற சின்னஞ்சிறு பாறைகள் குத்துக் குத்தாய், தள்ளித் தள்ளி நிற்கவும் வெள்ளைக் கூழாங்கற்கள் உருண்டு கிடக்கவும் கருப்பும் வெண்மையும் கலந்ததாகத் தெரிந்த அந்த இடைநிலம் மேற்கு நோக்கிப் பாதைபோல் சென்றது. அதன் இருபுறமும் புதர்களும் மரக்குவியல்களும் அடர்த்தி யாகத் தெரிந்தன. நிலவொளியிருந்தும் பாதைமீது பக்க மரங்கள் நிழல் வீசியதால் அற்ப ஒளியே அங்கு தெரிந்தது. அறவே மரங்களோ புதர்களோ இல்லாத இடங்களில் பெரும் பாறைகளிலிருந்ததால் அங்கு மட்டும் நிலவொளி பூரணமாக விழுந்திருந்தது. அந்த முழுப்பாதையின் மீதும் தன் கண்களை ஒரு விநாடி ஓட்டிய பானுதேவி சரேலெனத் தானிருந்த பாறையைக் குனிந்து நோக்கி னாள். ''இங்கு யாரோ ஒருவன் வந்திருக்கிறான். நம்மை உற்று நோக்கியிருக்கிறான்'' என்று கூறவும் செய்தாள்.

ஏதும் விளங்காததால் இதயசந்திரன் கேட்டான், ''எப்படித் தெரிகிறது தேவி? எனக்கேதும் தெரிய வில்லையே'' என்று.



''நீங்கள் மகாராஷ்டிரர் அல்லவே'' என்றான் பதிலுக்கு.

''மகாராஷ்டிரர் கண்கள் வேறு போலிருக்கிறது?'' என்றான் இதயசந்திரன் சற்று சலிப்புடன், தனது ஆராய்ச்சித் திறனுக்கு அவள் பழுது சொல்கிறாள் என்ற நினைப்பில்.

''ஆம் வாலிபரே'' என்றாள் பானுதேவி சர்வ சகஜமாக.

''எதனாலோ?''

''மகாராஷ்டிரர்கள் மலைவாசிகளல்லவா?''

''ஆம்.''

''மலையின் சூட்சுமங்கள் உங்களைவிட அவர்களுக்குத் தெரிவது சகஜமல்லவா?'' என்ற பானுதேவி, ''அதோ அந்த இடத்தைப் பாருங்கள்'' என்று தனது காலிலிருந்து சற்று எட்ட இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினாள்.

அந்த இடத்தைப் பார்த்த இதயசந்திரனுக்கு ஏதும் விளங்காததால் கேட்டான், ''என்ன இருக்கிறது அங்கே?'' என்று.

''பெரிய கூழாங்கற்கள் சில, குழவிகள் அளவுக்கு இருக்கின்றன அல்லவா?''

''ஆம். இருக்கின்றன.''

''அவை புரண்டு கிடக்கின்றன.''

''ஆம். புரண்டு கிடக்கின்றன. அவை இன்றுதான் புரண்டு கிடக்க வேண்டுமென்பதில்லை ''

''புரண்ட கற்களின் அடிப்பாகத்தைப் பாருங்கள். பசுமையாயிருக்கிறது. மலைக்கற்கள் புரண்டு ஒரு நாளானாலும் அடிப்பாகத்தில் பசுமையிருக்காது. அதுவும் இந்த வேனிற்காலத்தில் மலைச்சூட்டில் புரளும் கற்களின் அடிப்பகுதி ஒரே நாழிகையில் காய்ந்து கருகிவிடும்'' என்ற பானுதேவி, ''யாரோ ஒருவன் இங்கு வந்திருக்கிறான். நாம் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகாமையில் தாழ்ந்த

மரக்கிளையைப் பிடித்து நின்றிருக்கிறான் கிளை உடைந்ததும் துரிதமாக ஓடியிருக்கிறான். ஓடிய நேரத்தில் தான் இந்தப் பெரும் குழவிகள் புரண்டிருக்கின்றன'' என்று விளக்கினாள்.

வியப்பின் வசப்பட்டு நின்றான் இதயசந்திரன். 'மகாராஷ்டிரர்கள் மலைகளின் ரேகைகளை இப்படி அணு அணுவாய் அறிந்திருப்பதால்தான் மகாசக்தி வாய்ந்த மொகலாய சாம்ராஜ்யத்தால்கூட அவர்களை வெல்ல முடியவில்லை' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவள் விளக்கம் அவனுக்கு விஷயத்தை தெளிவுபடுத்திய தென்றாலும் அவன் கேட்டான், ''நேரில் பார்த்ததுபோல் சொல்கிறீர்களே?'' என்று.

''நேரில்தான் பார்க்கிறேன்'' என்று கற்கள் சரிந்த இடத்தை மீண்டும் சுட்டிக் காட்டினாள் அவள்.

''என் கண்களுக்கு மட்டும் ஏன் தெரியவில்லை?'' என்று வினவினான் அவன்.

''உங்களுக்கு மலைக்கண்கள் இல்லை'' என்ற அவள் லேசாக நகைத்தாள்.

அவன் அந்தச் சிரிப்பிலும் அழகைக் கண்டான். யார் நகைத்தாலும் யார் இழிவு செய்தாலும் முன்கோபம் அடையும் அவன் இதயம், அவள் நகைப்பைப் பெரிதும் ரசிக்கவே செய்தது. ஆகவே பணிவுடன் கேட்டான், ''தேவி! அப்படியொருவன் வந்திருந்தால் எங்கு மறைய முடியும்?'' என்று.

''அதோ அந்தப் புதர்களுக்குப் பின்னால் மறைந் திருக்க முடியும். அல்லது அந்தச் செடிகளின் குவியலில் மறைந்திருக்கலாம்'' என்று எட்ட இருந்த புதர்களையும் செடிக்கூட்டத்தையும் சுட்டிக் காட்டினாள் பானுதேவி.

''கிளை உடைந்த ஒலி கேட்டதும் நான் ஓடிவந்தேன். அதற்குள் அவன் எப்படி மறைந்திருக்க முடியும்?'' என்று வினவினான் இதயசந்திரன்.



வெட்கம் கலந்த புன்னகையொன்று அவள் இதழ் களிலே விரிந்தது. ''ஓசை கேட்டவுடன் நீங்கள் ஓட வில்லை'' என்றாள் அவள் பார்வையைக் கூழாங்கற்கள் மீது ஓட்டி.

''இல்லை தேவி! ஓடினேன்'' என்று வலியுறுத்தினான் வாலிபன்.

''இல்லை வீரரே! சிறிது நேரம் பிடித்தது. நாம் யார் என்பதை மறந்ததால் ஏற்பட்ட தடுமாற்றம் அது'' என்ற பானுதேவி மீண்டும் மரக்கூட்டத்தை நோக்கி நடந்தாள்.

அலையும் உணர்ச்சிகளுடன் அவள் பின் சென்ற இதய சந்திரன், ''அப்படியானால் உடைந்த கிளை என்ன ஆயிற்று!'' என்று வினவினான்.

''வந்தவன் கையோடு எடுத்துச் சென்றிருப்பான்'' என்று கூறி மரக்கூட்டத்தில் நுழைந்த பானுதேவி தாழ்ந்த ஒரு கிளையைக் காட்டினாள். மெல்லிய கிளை அது. அப்பொழுதே முறிந்ததால் ஏற்பட்ட விரிசலும் பச்சையும் அதில் இருக்கத்தான் செய்தது.

இதயசந்திரன் அவள் நுண்ணிய அறிவை வியந்து கொண்டே அவளுடன் சென்றான். அவள் சற்று வேக மாகவே நடந்து புரவிகள் கட்டிய இடத்திற்கு வந்து தனது புரவியை அவிழ்த்து அவன் புரவியையும் அவிழ்த்துக் கொள்ளச் செய்து, ''வாருங்கள் வீரரே! போவோம்'' என்று புரவிமீது தாவி ஏறினாள்.

இதயசந்திரன் தனது புரவியின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு சிறிது தாமதித்தான். ''உம். ஏறுங்கள்'' என்றாள் தேவி.

''நம்மைக் கண்காணித்தவனைத் தொடர்ந்தா லென்ன?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''இந்த மழலைக்காட்டுக் குவியலிலும் புதர்க் குவியலி லும் பெரும் பாறைகளின் எழுச்சியிலும் அவனை இனிக்

கண்டுபிடிக்க முடியாது. தவிர நாம் இங்கிருக்கும் ஒவ்வொரு விநாடியும் அபாயகரமானது. நாம் அவனைக் காண முடியாது. ஆனால் அவன் நம்மைக் கண்டு கொண்டுதானிருக்கிறான்'' என்றாள் தேவி.

''அதற்காக அஞ்சுபவனல்ல நான்'' என்றான் இதயசந்திரன்.

''வீரரே! ஒரு சமயம் அச்சப்படுவதாகச் சொல்கிறீர்கள்; இன்னொரு சமயம் அச்சமில்லையென்றும் சொல்கிறீர்கள். மிக மாறுபாடாயிருக்கிறது உமது பேச்சு. அது கிடக்கட்டும். இப்பொழுது நாம் காட்டும் துணிவு அசட்டுத்தனமானது. பாறையின் மறைவிலோ புதர்களின் மறைவிலோயிருக்கும் மனிதனுக்கு நாம் இப்பொழுது சிறந்த குறி. தாமதிக்காதீர்கள். நமது பாதுகாப்பு வேகத்திலிருக்கிறது'' என்று கூறித் தனது புரவியின் வயிற்றைக் காலால் உதைக்கப் புரவி பறந்தது.

இதயசந்திரனும் தாவி ஏறி வெகு வேகமாகத் தனது புரவியைச் செலுத்தி அவளை அடைய முயன்றானானாலும் அது மிகக் கஷ்டமாகவே இருந்தது அவனுக்கு. ஆனால் மலைகளில் சஞ்சரித்த அந்தப் புரவி அவனையும் மீறி வேகத்தைக் காட்டி முன்சென்ற புரவியைப் பிடிக்க முனைந்தது. சிறிது தூரம் சென்றதும் ஒரு மலைப் பாறையின் மறைவில் புரவியை நிறுத்திக்கொண்ட பானுதேவி இதயசந்திரன் புரவி வந்ததும் தரையில் குதித்து, ''வீரரே! உமது கைத்துப்பாக்கியைத் தயாராக வைத்துக்கொள்ளும். இந்தப் பாறையின் மறைவில் நாம் பயமின்றி உரையாடலாம். நம்மை ஒட்டுக்கேட்க யாராலும் முடியாது. ஏற்கெனவே ஒட்டுக் கேட்டவன் மறைவிடத்திலிருந்து வெளிவந்தால் அவன் உமக்கு நல்ல இலக்கு!'' என்று கூற இதயசந்திரனும் புரவியை விட்டு இறங்கினான்.

மேற்கொண்டு எந்த ஆலசியமும் செய்யாமல் தான் கூற வந்ததை விடுவிடு என்று கூற முற்பட்டு, ''வீரரே!



அதோ அந்தப் பெருமாளிகை எது தெரியுமா?'' என்று வினவினாள்.

''தெரியும். பிரார்த்தனை மண்டபத்தின் மகுடம் அது'' என்றான் இதயசந்திரன்.

''அதிலிருந்து நேரே தெற்கில் மலைச்சரிவில் நான்கு மாளிகைகள் தெரியவில்லை?'' அவற்றையும் சுட்டிக் காட்டினாள் பானுதேவி.

''தெரிகின்றன.''

''அவற்றின் மகுடங்கள் எப்படியிருக்கின்றன?''

''மொகலாயர் கலைமுறையில் இருக்கின்றன.''

''அவற்றில் நடுவிலிருக்கும் பெரிய மகுடந்தான் ஸாத் ஸித்தியின் வீடாயிருக்க வேண்டும்.''

''உங்களுக்கு எப்படித் தெரியும்? இந்தப் பரசுராம புரத்துக்கு முன்பே வந்திருக்கிறீர்களா?''

''இல்லை. ஆனால் பிரும்மேந்திர ஸ்வாமி எந்த மதத்தினர் மனத்தையும் புண்படுத்தாதவர் என்றும் அவரவர்கள் இஷ்டப்படி மாளிகைகளைக் கட்டிக்கொள்ள அனுமதித்திருப்பதாகவும் கேள்விப்பட்டிருக்கிறேன். வேறு மகுடங்கள் மொகலாய அமைப்பில் இல்லை பாருங்கள்'' என்றாள் அவள்.

இதயசந்திரன் கவனித்தான். இல்லையென்பதைப் புரிந்துகொண்டான். அவள் ஊகம் சரியானதுதானென்பதையும் புரிந்துகொண்டு அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினான். அவன் தலையசைத்ததும் அவள் பேச முற்பட்டு, ''அந்த மாளிகைக்குச் செல்லுங்கள். சென்று ஸாத் ஸித்தியிடம் நான் உங்களை அனுப்பியதாகச் சொல்லுங்கள்'' என்றாள்.

''சொல்கிறேன்.'' இஷ்ட விரோதமாக வந்தது அவன் பதில்.

''கனோஜி ஆங்கரே இங்கு தனிமையில் வந்திருப்பதாகச் சொல்லுங்கள்.''

"என்ன! என்ன!" என்று அதிர்ச்சியுடன் கேட்டான் தமிழன்.

"பதட்டப்படாதீர்கள். அவரைக் கைது செய்யக் கூடிய சமயத்தை நான் தெரிவிப்பதாகக் கூறுங்கள்."

இதயசந்திரன் ஸ்தம்பித்து நின்றான் "இது துரோக மல்லவா தேவி" என்று வினவினான்.

"இல்லை. துரோகமில்லை. மகாராஷ்டிரத்தின் உண்மை மன்னரின், சிவாஜியின் நேர் பரம்பரையின், திலகத்தின், பரம வைரியை அழிப்பது என் கடமை" என்றாள் பானுதேவி உணர்ச்சி மிகுந்த குரலில்.

"ஸாத் ஸித்தி அதற்கு உடன்படுவானென்பது என்ன நிச்சயம்?"

"உடன்படுவான். ஸாத் ஸித்தி ஜன்ஜீராத் தீவின் தலைவனின் தரைப்படைத் தளபதி. ஜன்ஜீராத் தீவின் தலைவன் மொகலாய மன்னரின் கடற்புறப் பிரதிநிதி. சத்ரபதி ஷாஹுவையே மகாராஷ்டிர மன்னராக மொகலாய மன்னர் ஒப்புக் கொண்டிருக்கிறார். போய் வாருங்கள். உங்களை நான் நாளைக் காலையில் சந்திக்கிறேன்" என்று கூறி மீண்டும் புரவியில் தாவி வெகு வேகமாகச் சென்றுவிட்டாள் தேவி.

புரவியைப் பார்த்துக் கொண்டே நீண்ட நேரம் நின்றான் இதயசந்திரன். அவன் உள்ளத்தை மாறுபட்ட உணர்ச்சிகளும் சிந்தனைகளும் குழப்பிக் கொண்டிருந்தன. என்ன செய்வதென்று தெரியாமல் திண்டாடிக் கொண்டிருந்த அவனுக்கு, செல்லும் மார்க்கமறியாது திணறிக் கொண்டிருந்த அவனுக்கு, வழிகாட்ட ஓர் உருவம் அதே பாறையின் மறுபுறத்திலிருந்து எழுந்தது. "துப்பாக்கியைக் கீழே போடு" என்ற குரலும் அதனிடமிருந்து எழுந்தது. திரும்ப முயன்றான் இதயசந்திரன். "திரும்பாதே. திரும்பினால் பிணமாகிவிடுவாய்" என்ற எச்சரிக்கைக் குரல் பயங்கரமாக ஒலித்தது.

## அத்தியாயம் 19

# பதிலும் விளைவும்

சித்தத்தை அலையவிட்டு இக்கட்டில் இதயசந்திரன் சிக்கிக்கொண்ட இரண்டாம் முறை அது. பரசுராம பட்டணத்து மதிளுக்குப் புறம்பே நின்று பராக்குப் பார்த்து ஸாத் ஸித்தியுடன் முந்திய மாலையில் மோதிய அவன், இரவின் பின் பகுதியில் அதே ஸாத் ஸித்தியிடம் தூது போக நேர்ந்ததை நினைத்து மலைத்து, தேவி போன திசையை நோக்கி நின்றுவிட்டதால் பாறைக்குப் புறம்பே ஒருவன் எழுந்ததையோ தன் முதுகுக்கு நேரில் கைத் துப்பாக்கியைக் குறி வைத்ததையோ பார்க்க இயலாது போயிற்று. தேவியின் கட்டளையால் சிந்தனை கிளப்பிய பல போராட்டங்கள் அவன் மனத்தை உளைத்ததால் வேறெதையும் நினைக்கவும் சக்தியற்றவனானான் இதய சந்திரன்.

கனோஜி ஆங்கரேயை ஸாத் ஸித்தியிடம் ஒப்படைக்கத் தன்னை ஒரு கருவியாக உபயோகிக்கப் பானுதேவி தீர்மானித்து அவனைப் பரம சங்கடத்தில் ஆழ்த்தியிருந்ததால், 'இந்த விபரீதத்துக்கு என்ன செய்வது?' என்று திணறினான் தமிழகத்தின் வாலிபன்.

ஆரம்ப முதல் ஒரு மன்னன் இன்னொருவனைக் காட்டிக் கொடுத்தே வேறு மதங்களும் நாகரிகங்களும் நாட்டில் ஊன்ற வழி வகை செய்ததை அவன் அகக் கண்ணில் கண்டான். சுயமதத்தைப் பழிப்பவர்கள், சுய இனத்தில் சிறந்து விளங்குவதைவிட வேறு இன நடை உடை பாவனைகளைக் கடைப்பிடித்து அவற்றுக்கு அடிமைகளாகத் திகழ்பவர்கள், உயர முடியாதென்பதற்கு இந்நாட்டுச் சரித்திரமே சான்று என்பது தெள்ளென விளங்கிற்று இதயசந்திரன் இதயத்துக்கு. ஆழ்ந்த அசையாத மதநம்பிக்கையால் மற்ற இனத்தவர் உலகெங்கனும்

பெரும் சாம்ராஜ்யங்களை நிறுவியதும், மதாபிமான அஸ்திவாரமில்லாததால் பாரத நாட்டவர் நீண்ட காலம் அடிமை வாழ்வில் இருந்ததும், நியாயந்தானென்றுங்கூடப் பட்டது இதயசந்திரனுக்கு. 'சமாதானம் என்ற பெயரில் தனது பலவீனத்துக்குச் சப்பைக் கட்டு கட்டுவதும், புரட்சி என்ற பெயரில் இனக்கோட்பாடுகளை உடைப்பதும் நம்மைத் தவிர வேறு யாரும் செய்வதில்லை' என்றும் உள்ளுக்குள் கூறி வெறுத்துக்கொண்டான் இதயசந்திரன். இந்த விபரீத வரலாற்றின் கடைசி கட்டமாகப் பானுதேவி தன்னை ஸாத் ஸித்தியிடம் தூது அனுப்பத் தீர்மானித்த தில் எத்தனை பொருத்தமிருக்கிறது என்றும் எண்ணித் திகைத்ததால் பின்னால் 'துப்பாக்கியைக் கீழே போடு' என்ற சொல் எழும் வரையில் அவன் சூழ்நிலையை மறந்தே இருந்தான். முதல் கட்டளை எழுந்ததும் திரும்ப முயன்ற அவனை, ''திரும்பாதே!'' என்ற இரண்டாவது பயங்கரக் கட்டளை அசையவொட்டாமல் நிறுத்தியது.

''உம், துப்பாக்கியைக் கீழே போடு'' என்று மீண்டும் பின்னாலிருந்து எழுந்த குரல் அதட்டியதால் இதயசந்திரன் இடைக் கச்சையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்துக் கீழே எறிந்தான். கீழிருந்த கற்களில் 'கிளிங்' என்ற சத்தத்துடன் விழுந்த துப்பாக்கியை உற்றுப் பார்த்த இதயசந்திரனை மேலே ஏதும் யோசிக்கவிடாத பின் குரல், ''இப்பொழுது மெல்லத் திரும்பு. ஆனால் கையை வாளிடம் கொண்டு செல்லாதே!'' என்று திட்டமாக உத்திரவிட சூத்திரக் கயிற்றால் இயக்கப்படும் பாவைபோல் மெல்லத் திரும்பினான் இதயசந்திரன்.

பாறைக்கு அப்புறத்தில் நீண்ட துப்பாக்கியைத் தனக்கு நேரே குறிவைத்த வண்ணம் நின்றிருந்த மொகலாய வீரனைக் கண்டதும் அவன் யாரென்பதைப் புரிந்துகொண்ட இதயசந்திரன், ''நீயா என்று சர்வ சாதாரணமாக அவனை நோக்கி வினவினான்.



மொகலாய வீரன் குறிவைத்த துப்பாக்கியை அசைக் காமலும், கண்களை இதயசந்திரனிடமிருந்து இம்மி யளவும் விலக்காமலும், ''நான்தான், நாம் ஏற்கெனவே சந்தித்திருக்கிறோம்'' என்று பதிலுறுத்தான்.

''சென்றுவிட்ட மாலையில் சந்தித்தோம். பட்டணத்து மதிளுக்கு வெளியே'' என்று பேச்சுக் கொடுத்தான் இதய சந்திரன்.

மொகலாய வீரன் கண்கள் வியப்பைக் கக்கின. துப்பாக்கி முனையில் இதயசந்திரன் காட்டிய நிதானத்தை நினைத்து அவனிடம் மதிப்பும் கொண்ட அந்த மொகலாய வீரன், ''மதிளுக்கு வெளியே மாலையிலும் நிலை மாற வில்லை, இரவிலும் நிலை மாறவில்லை'' என்றான்.

''என்ன சொல்கிறாய்?'' இதயசந்திரன் கேள்வியில் வியப்பிருந்தது.

''எங்கள் தலைவரை நீ புரவியிலிருந்து புரட்டிய போது உன்னை வெட்ட வாளையெடுத்தவன், நான் தான்'' என்று சுட்டிக் காட்டினான் மொகலாய வீரன்.

''ஆம்.''

''அப்பொழுதும் தலைவர் உன்னை வெட்டுவதைத் தடுத்தார்.''

''ஆம் ''

''இப்பொழுதும் தடுத்திருக்கிறார், உன்னை உயிரு டன் பிடித்து வரும்படி. ஆகையால் மாலைக்கும் இரவுக்கும் நான் சம்பந்தப்பட்ட வரையில் மாற்றம் ஏதுமில்லை.'' இதைச் சொன்ன மொகலாய வீரன் சிறிது வருத்தத்தைக் காட்டினான்.

இதயசந்திரன் இதழ்கள் குறுநகை காட்டின. ''என்னைக் கொல்லாதது அத்தனை வருத்தமாகவா இருக் கிறது உனக்கு?'' என்று வினவினான் கேலி ஒலித்த குரலில்.

''தைக்கும் முள்ளையும் இடறும் செடியையும் எடுத்தெறிவதுதான் விவேகமென்பது என் கருத்து'' என்றான் மொகலாய வீரன்.

''நல்ல கருத்துதான் வீரனே, எனக்கும் அது உடன்பாடுதான்'' என்ற இதயசந்திரன், ''என்னை நீ மட்டும் அழைத்துச் சென்றுவிட முடியுமென்று நினைக்கிறாயா?'' என்று வினவவும் செய்தான்.

''என் நினைப்பு அப்படித்தான். ஆனால் தலைவர் அப்படி நினைக்கவில்லை.''

''யார், ஸாத் ஸித்தியா?''

''ஆம்''

''அதனால்?''

''இன்னும் சிலரையும் அனுப்பியிருக்கிறார்.''

''எங்கே அவர்கள்?''

''திரும்பிப் பார். ஆனால் குனிந்து துப்பாக்கியை எடுக்க முயலவேண்டாம். குனிந்தால் நான் தலைவர் உத்தரவையும் மீறி, சுவாமியின் நிபந்தனையையும் மீறி, உன்னைச் சுட வேண்டியிருக்கும்'' என்ற மொகலாய வீரன் மெல்ல நகைத்தான்.

அவன் கூறியபடி திரும்பிய இதயசந்திரன் சற்று எட்ட இருந்த இரண்டு பாறைகளின் மறைவிலிருந்து எழுந்துவிட்ட நான்கு அபிஸீனிய வீரர்கள் துப்பாக்கிகளைத் தனக்காகக் குறி வைத்துக்கொண்டு நெருங்குவதைக் கண்டான். இனித் தப்ப வழியில்லையென்பதை உணர்ந்து கொண்ட அந்த வாலிப வீரன் அந்நக் கணத்தில் விதியைத்தான் நினைத்தான். 'தஞ்சையிலிருந்து கிளம்பியது மகாராஷ்டிர அரசுப் போட்டியில் மூன்றாவது வாரிசைத் தவிர்க்க, தவறி விழுந்தது போட்டியும் போரும் முற்றிய கொங்கணியின் மடியில், சுவாமி பணித்தது தாராபாயின் தளபதி ஆங்கரேயுடன் செல்ல, தேவி பணித்தது மொகலாய தளபதியிடம் அதே ஆங்கரேயைக் காட்டிக் கொடுக்க! விதி எப்படி எங்கே கொண்டு திணிக்கிறது என்னை!' என்று நினைத்து, 'சரி, எங்கு கொண்டு செல்கிறதோ பார்ப்போம்' என்று தீர்மானித்து, மீண்டும் மொகலாய வீரர்களை நோக்கித் திரும்பி, ''நல்ல ஏற்பாட்டுடன்தான் வந்திருக்கிறீர்கள். சரி, போகலாமா?'' என்று வினவினான். போகலாமென்று துப்பாக்கியாலேயே திசையைச் சுட்டிக் காட்டிய மொகலாய வீரன், இதயசந்திரன் நான்கைந்து அடிகள் நடந்து சென்றதும் அவனைச் சூற்றிக் கொண்ட மற்ற வீரர்களிடம், ''அவன் வாளை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று உத்தரவிட்டு வலக்கையிலிருந்த துப்பாக்கியையோ, கண்ணையோ இதயசந்திரனைவிட்டு அகற்றாமலே முழந்தாளை மெள்ள வைத்துத் தனது இடது கையால் இதயசந்திரன் கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டான் பிறகு இதயசந்திரனைக் காத்து அழைத்துக்கொண்டு முன்னேறும்படி உத்தரவிட்டு இதயசந்திரன் புரவியில் தான் ஏறிக்கொண்டு, தனது பெரும் துப்பாக்கியைப் புரவிச் சேணத்தில் பொருத்தியும், கடிவாளத்தை இடதுகையில் பிடித்தும், இதயசந்திரன் கைத்துப்பாக்கியை அவன் தலைக்குக் குறி வைத்துக் கொண்டும் புரவியை நடத்தினான். துப்பாக்கியேந்திய நான்கு வீரர்கள் சூழ்ந்துவர பின்னால் புரவி மேல் மொகலாய வீரன் கைத்துப்பாக்கியைத் தனக்குக் குறி வைத்து எச்சரிக்கையுடன் தொடர்ந்துவர, நடந்த இதயசந்திரன் இரண்டு நாழிகை நேரத்திற்குப் பிறகு ஸாத் ஸித்தியின் மாளிகைக்குள் கொண்டுபோய் நிறுத்தப்பட்டான்.

பட்டுப் படுதாக்களால் அலங்காரிக்கப்பட்ட மஹாலின் மத்திய மண்டபத்தில், திண்டு திவாசுகளின் மேல் கம்பீரமாகச் சாய்ந்து கொண்டிருந்த ஸாத் ஸித்தி, வருக வீரனே! வருக!'' என்று முகமன் கூறி அழைத்தான் புன்சிரிப்புடன்.

அந்தச் சமயத்தில் ஸாத் ஸித்தியின் நிதானத்தைக் கண்டு, பெரிதும் வியந்தான் இதயசந்திரன். அஞ்சன்வேல் கோட்டையின் பெருந்தலைவன், பலர் முன்னிலையில் விபரீதமாக வீழ்த்தப்பட்டவன், அத்தனை நிதானத்தைக் காட்டியதைக் கண்டதும், உணர்ச்சிகளைச் சிறிதும் பறக்க விடாதவனும் வெகு ஆழமான மனமுள்ளவனுமான ஒரு பெருவீரன் முன்பு தான் நிற்பதைப் புரிந்துகொண்டான் தமிழகத்தின் வீரன். அவன் இதயத்தில் ஏற்பட்ட மதிப்பை உயர்த்த ஸாத் ஸித்தி கூறினான். தனது வீரரில் ஒருவனை நோக்கி, "இவனுக்கு ஓர் ஆசனத்தை எடுத்துப் போடு" என்று.

வீரனொருவன் சற்று எட்டப் போட்ட ஆசனத்தில் அமர்ந்த இதயசந்திரன் ஸாத் ஸித்திக்குத் தலைவணங்கி, "அஞ்சன்வேல் அதிபரே! இந்தப் பட்டணத்தில் யாரும் ஆயுதமெடுக்கக் கூடாதென்று நிபந்தனையிருக்கிற தல்லவா?" என்று கேட்டான்.

"இருக்கிறது. பிரும்மேந்திர ஸ்வாமியின் நிபந்தனை." ஸாத் ஸித்தியின் குரலில் ஏளனமிருந்தது.

ஏளனத்தை இதயசந்திரன் கவனித்தும் கவனிக்காதவன் போலவே நடித்து, "அப்படியிருக்க, இவர்கள் துப்பாக்கி முனையில் என்னை எப்படிக் கொண்டு வரலாம்?" என்று வினவினான்.

"வீரனுக்கு வீரன் காட்டும் மரியாதை இது."

"கைது செய்வது மரியாதையா?"

"கைது செய்வதே ஒரு மரியாதை. சுட்டும் புதைத்து விடலாம்!"

"சுட்டுப் புதைத்தால் பிரும்மேந்திர ஸ்வாமிக்குப் பதில் சொல்ல வேண்டாமா?"

"சொல்ல வேண்டும். அதனால்தான் இங்கு சுட வில்லை."



"வேறு எங்கு சுட உத்தேசம்?"

"அஞ்சன்வேல் கோட்டையில். அங்கு சென்றபின் சுட்டாலும் சுடலாம்; தூக்கில் மாட்டினாலும் மாட்ட லாம். அங்கு வழிகள் பல உண்டு." இதைச் சர்வ சாதாரணமாகச் சொன்னான் ஸாத் ஸித்தி.

இதயசந்திரன் ஸாத் ஸித்தியை வியப்புடன் நோக்கி னான். "இப்பொழுது என்ன செய்ய உத்தேசம் என்னை?" என்று வினவவும் செய்தான்.

"அதுதான் சொன்னேனே, அஞ்சன்வேல் கோட்டைக் குக் கொண்டு செல்ல உத்தேசம் என்று" என அறிவித்த ஸாத் ஸித்தி, "ஆமாம். பானுதேவியை நீ சந்தித்து நீண்ட நாளாகிறதா?" என்று வினவினான்.

"இல்லை. மூன்று நாட்கள்தான் ஆகின்றன."

"அதற்குள் எப்படி அவளை வலையில் போட்டுக் கொண்டாய்?" என்று வினவிய ஸாத் ஸித்தியின் கண் களில் ஆவல் தெரிந்தது.

"வலையில் போட்டுக் கொண்டதாக யார் சொன்னது?" சற்றே நிதானத்தை கைவிட்டுச் சீற்றத்தைக் காட்டினான் இதயசந்திரன்.

ஸாத் ஸித்தி மட்டும் நிதானத்தைச் சிறிதும் இழக் காமலே சொன்னான்: "தமிழா! எந்த வினாடியில் நீ என்னைப் புரவியிலிருந்து வீழ்த்தினாயோ அந்த வினாடி யிலிருந்து நீ என் வீரர்களின் கண்களிலிருந்து தப்ப வில்லை. உனக்குத் துறவி காட்டிய இடம், நீ அறை யிலிருந்து வெளிக் கிளம்பி புரவி ஏறி மதில்களுக்கு வெளியே சென்றது. பிறகு அந்தப் பெண் உன்னைத் தொடர்ந்தது, அனைத்தும் எனக்கு அவ்வப்பொழுது அறிவிக்கப்பட்டது. பெண் ஆணைத் தொடர்ந்தாலும் ஆண் பெண்ணைத் தொடர்ந்தாலும் விவகாரம் லேசில் முடியாதென்று எனக்குத் தெரியுமாதலால் என் வீரர்களை அனுப்பினேன்..."

வாசகத்தை ஸாத் ஸித்தி முடிக்கு முன்பு மொகலாய வீரன் இடை புகுந்து, "இருவரும் தென் சரிவு மரக் கூட்டத்தில் நுழைந்தார்கள். ஒரு வீரனை நான் புதர்கள் வழியாகச் சுற்றிச் சென்று மரக்கூட்டத்தில் மறைந்து கண்காணிக்கச் சொன்னேன். மற்றவர்களை அவர்கள் திரும்பும் வழியில் எழுந்திருந்த பாறைகளின் மறைவில் பதுக்கினேன். நானும் பதுங்கினேன். இவரை அந்தப் பெண் விட்டுச் சென்றதும் மறைவிலிருந்து எழுந்து மடக்கினேன்" என்று நடந்ததை எடுத்துச் சொன்னான்.

இதயசந்திரன் முகத்தில் சிந்தனை ஒரு வினாடி தோன்றி மறைந்தது. அவன் ஸாத் ஸித்தியை நோக்கிக் கேட்டான், "உங்கள் வீரர்கள் கண்டதைக் கேட்டீர்கள் கேட்டதையும் கேட்கலாமல்லவா?" என்று.

"தேவையில்லை. ஆணும் பெண்ணும் இரவில் மரக் கூட்டமளிக்கும் பாதுகாப்பில் தனித்துச் சந்திக்கும்போது நிகழக்கூடிய காதல் களியாட்டத்தை ஊகிக்க முடியாதா?" என்று ஸாத் ஸித்தி கேட்டான் நகைப்புக்கிடையே.

"காதல் களியாட்டத்துக்குத் தவிர வேறு எதற்கும் ஆணும் பெண்ணும் சந்திக்க முடியாதா?" என்று வினவினான் இதயசந்திரன்.

அவன் குரலிலிருந்த வெறுப்பைக் கவனித்தான் ஸாத் ஸித்தி. அதற்குக் காரணம் புரியாமல் கேட்டான், "வேறெதற்குச் சந்தித்தாய் அவளை?" என்று சினத்தைச் சிறிது காட்டி.

இதயசந்திரன் தனக்கும் ஸாத் ஸித்திக்கும் எதிரே நின்ற மொகலாய வீரனைக் காட்டி, "இவனுக்குத் தெரியும்" என்று கூறினான்.

ஸாத் ஸித்தியின் முகத்தில் சற்றுக் குழப்பம் தெரிந்தது. "என்ன தெரியும் இவனுக்கு?" என்ற ஸாத் ஸித்தியின் குரல் இடியென ஒலித்தது.



"நானும் தேவியும் நின்று பேசிய பாறையின் இன்னொரு புறத்தில் இவன் மறைந்திருந்தான். ஆகையால் தேவியின் கட்டளையை இவன் கேட்டிருக்க வேண்டும்."

ஸாத் ஸித்தியின் கண்கள் மொகலாய வீரன்மீது பதிந்தன. அந்தக் கண்களிலேயே கேள்வியிருந்ததால், மொகலாய வீரன் தலைவணங்கி, "தேவி இவனைத் தங்களிடம் தூது செல்ல உத்தரவிட்டாள்" என்றான்.

"இவனையா! என்னிடமா?"

"ஆம் நவாப்! கனோஜியைத் தங்களிடம் காட்டிக் கொடுக்க உதவுவதாகக் கூறச் சொன்னாள் தேவி" என்று வீரன் பெரு வெடியை எடுத்து வீசவே, பேரதிர்ச்சியடைந்த ஸாத் ஸித்தி திண்டை விட்டு எழுந்து மஞ்சத்தில் பஞ்சணையில் காலை மடித்து உட்கார்ந்தான். "உண்மையாகவா?" என்று அவன் பெருங்குரலில் கேட்ட கேள்வி மண்டபச் சுவர்களில் தாக்கிப் பலமுறை எதிரொலி செய்தது.

"ஷாஹூ மகராஜ் மொகலாய மன்னரால் ஆதரிக்கப் பெற்றவராதலால் அவரது வைரியை உங்களிடம் ஒப்படைப்பது தனது கடமை எனக் கூறினாள் அவள்" என்ற வீரன் வார்த்தையைக் கேட்ட ஸாத் ஸித்தி அசந்து பல வினாடிகள் உட்கார்ந்துவிட்டான். பிறகு கூவினான், "நீங்கள் செல்லுங்கள்" என்று வீரர்களை நோக்கி. வீரர்கள் சென்றதும் இதயசந்திரனை நோக்கி, "இனி நீ எனது வீரன். ஸாத் ஸித்தி விரோதிகளை நசுக்குவதில் எப்படிப் பின் வாங்குவதில்லையோ அப்படியே தனது வீரர்களுக்கு நலன் செய்வதிலும் பின்வாங்குவதில்லை யென்பதை சீக்கிரம் உணருவாய்" என்று கூறிவிட்டு, "அடுத்து என்ன செய்ய உத்தேசம்?" என்று வினவவும் செய்தான் ஸாத் ஸித்தி ஆவல் நிரம்பிய குரலில்.

இதயசந்திரன் பதில் அந்த ஆவலைத் தகர்த்தது, அதிர்ச்சியை அளித்தது, ஸாத் ஸித்தியின் வெறியை உச்ச

நிலைக்குக் கொண்டு சென்றது. "முட்டாள்! உன் கழுத்துக்குத் தூக்குக் கயிற்றை நீயே மாட்டிக்கொண்டு விட்டாய்" என்று இரைந்து கூறினான் ஸாத் ஸித்தி. அந்தக் கூவலைக் கேட்டு ஓடிவந்த வீரனிடம், "இவனைக் கொண்டு போய் அஞ்சன்வேல் சிறையில் அடையுங்கள். நான் வந்தபின் இவனை அணு அணுவாகச் சித்திரவதை செய்து கொல்லுகிறேன்" என்று உத்தரவும் இட்டான்.

வீரர் நால்வர் இதயசந்திரனைச் சூழ்ந்து நெருங்கினர்.

## அத்தியாயம் 20

# இன்று போய் நாளை வா

ஜன்ஜீரா ஸித்திகளின் பரம வைரியான கனோஜி ஆங்கரேயைத் தன்னிடம் காட்டிக் கொடுக்க பானுதேவி முடிவு கட்டிவிட்டாள் என்பதைக் கேட்டுப் பரவசப்பட்டதால், இதயசந்திரன் முந்திய நாள் மாலை தன்னைப் புரவியிலிருந்து உருட்டியதைக் கூட அறவே மறந்து, அவன் இனி, தனது வீரனென்று உரிமை கொண்டாடிய ஸாத் ஸித்தி "அடுத்து என்ன செய்ய உத்தேசம்?" என்று கேட்டபோது அவன் எதிர்பார்த்த பதில் வேறு, கிடைத்த பதில் வேறு. எங்கிருந்தோ திடீரென்று கொங்கணியில் வந்து முளைத்த அந்தத் தமிழ் வீரனிடம் பானுதேவி அதிக அன்பு வைக்காவிட்டால் அவளுடன் வந்த காவலரை விட்டு அவனை மட்டும் தனித்து அழைத்துச் செல்லவோ, அத்தகைய அபாயமான தூதை விடுக்கவோ அவள் தீர்மானித்திருக்க மாட்டாளென்று ஊகித்துக்கொண்ட ஸாத் ஸித்தி, அத்தகைய ஒரு பெண்ணின் கண் அசக்கலுக்கு எந்த ஆடவனும் அடிமையாகாதிருக்க முடியாதென்ற தீர்மானத்துக்கு வந்தானாகையால், இதயசந்திரன் இனித் தன் கைப்பாவைதான் என்று மனப்பால் குடித்தே அவனை அன்புடன் நடத்தியதன்றி, கனோஜியைக் கைப்பற்றுவதற்கு அடுத்தபடியாகச் செய்ய வேண்டிய முயற்சியை உட்பொருளாக வைத்து உவகையுடன் அந்தக் கேள்வியை வீசவும் செய்தான். பதில், உவகையை உடைத்தது. சினத்தைக் கிளறியது. ஸாத் ஸித்தியை வெகு அலட்சியத்துடன் ஏறெடுத்துப் பார்த்த இதயசந்திரன், "மகாராஷ்டிரர் கடற்படைத் தலைவரை எச்சரிக்க உத்தேசம்" என்று கூறியதன்றி இகழ்ச்சி நகை புரியவும் செய்தான். அந்தப் பதிலின் விளைவாகத்தான் வெடித்தது ஸாத் ஸித்தியின் இடிக் குரல். அஞ்சன்வேல் கோட்டைச் சிறையில் தமிழனை அழைத்துச் சென்று அடைக்கும்படி வீரர்களுக்கு

உத்தரவு பிறந்தது காலாக்கினியைப் போல் உதிர்ந்த சொற்களில்.

ஸாத் ஸித்தியின் முகத்திலும் சொற்களிலும் சுடர் விட்ட காலாக்கினியைப் பற்றியோ, உருவிய வாட்களுடன் நெருங்கிய வீரர்களைப் பற்றியோ சிறிதும் லட்சியம் செய்யாத இதயசந்திரன் கூறினான், ''அஞ்சன்வேல் தலைவருக்கு ஆத்திரம் சிறிது அதிகம்'' என்று.

அந்தச் சொற்களில் ஏதோ பணிவிருந்ததாக நினைத்த ஸாத் ஸித்தி தனது பெரிய புருவங்களைச் சிறிது குறுக்கி யும் மீசையை லேசாகக் குவியும்படி உதடுகளைச் சிறிது கூட்டியும் ஒரு விநாடி சிந்தித்துவிட்டு, ''உன் எண்ணத்தில் மாறுதலிருந்தால் இப்பொழுதும் நீ தப்பலாம்'' என்று கூறி விட்டுத் தனது தீட்சண்யமான கண்களைத் தேக்க விட்டான் தமிழன் மீது.

''தமிழன் முகம் சிலையெனக் கல்லாயிருந்தது. ''மாறுதல் தங்கள் எண்ணத்தில்தான் ஏற்படவேண்டும்'' என்ற சொற்கள் உணர்ச்சியற்று வரண்டு ஒலித்தன.

ஸாத் ஸித்தியின் கோபம் வந்த வேகத்தில் மறைந்த தால் அவன் உள்ளத்தில் வியப்பு மேலிட்டதை முகம் நன்றாக உணர்த்தியது. ''உன்னிடம் எனக்குப் பொறாமை ஏற்படுகிறது'' என்று கூறினான் ஸாத் ஸித்தி வியப்பு குரலிலும் ஒலிக்க.

''என்னிடமா! யாரும் பொறாமை படக்கூடிய நிலையில் நான் தற்சமயம் இல்லையே!'' என்றான் இதயசந்திரன்.

''சாதாரண மனிதர்கள் பொறாமைப்படக்கூடிய நிலைமையில் நீ இல்லையென்பது உண்மை. ஆனால் வீரர்கள் பொறாமைப்படக்கூடிய நிலைமையில் இருக் கிறாய்'' என்றான் ஸாத்ஸித்தி.

''புரியவில்லை தளபதி.''



''புரியாதது இதில் ஏதுமில்லை வீரரே! என் கையில் நீ சிக்கியிருக்கிறாய் நிதானமாக இருக்கவேண்டியவன் நான். பதட்டப்பட்டுக் கூச்சல் போட வேண்டியவன் நீ. வேடன் வலையில் சிக்கும் புறாக்கள்தான் கூச்சலிடும் அச்சத்தால். வேடன் கூச்சலிடுவதில்லை. இங்கு நிலைமை மாறியிருக்கிறது'' என்று சுட்டிக்காட்டினான் ஸாத் ஸித்தி.

அஞ்சன்வேல் தலைவன் சுட்டிக்காட்டியது எதை என்பது நன்றாகத் தெரிந்தது இதயசந்திரனுக்கு. அப் பொழுது தன்னைச் சுற்றி வீரர்கள் வாட்களை உருவிக் காவல் நிற்க, அக்கம் பக்க அறைகளில் ஆயுதந்தரித்த வீரர்கள் பலர் உதவிக்கிருக்க, அவர்கள் அதிபனான தான் வேகத்தில் கூவி விட்டதை நினைத்து அந்தப் பெருவீரன் வெட்கப்படுகிறானென்பதைப் புரிந்து கொண்டதால், அவனிடமிருந்த மதிப்புப் பன்மடங்காகியது இதய சந்திரனுக்கு. அப்பேர்ப்பட்ட வீரனின் மனம் வேதனைப் படுவது தகாதென நினைத்த இதயசந்திரன், ''உங்கள் உவமையில் தவறிருக்கிறது'' என்றான் பணிவு துளிர்த்த குரலில்.

''என்ன தவறு?''

''சிக்குவது புறாவாயிருந்தால் உவமை சரிதான். சிக்குவது ராஜாளியானால் உவமை தவறாகும். ராஜாளி கூவாது. கம்பீரமாகச் சுற்றுமுற்றும் நோக்கும்; சிறகை மட்டும் ஒருமுறை அடிக்கும். பிறகு அடுத்து நடப்பது என்ன என்பதைக் கவனிக்கும்.''

அந்த உவமையைக் கேட்ட ஸாத் ஸித்தி, ''நன்று நன்று!'' எனக் கூறித் தலையசைத்துப் புன்முறுவலும் செய்தான். ''தமிழா! உன் உவமைதான் சரி. புறாவென நினைத்து வேடன் ராஜாளியைப் பிடித்துவிட்டான். ஆனால் ராஜாளி ஏன் புறவாக வேண்டும்? ராஜாளி யாகவே ஏன் இருக்கக் கூடாது?'' என்று கேட்கவும் செய்தான்.

இதயசந்திரனின் கல் முகத்திலும் உணர்ச்சி சிறிது படர்ந்தது. "ராஜாளி புறாவானதாக யார் சொன்னது!" என்று வினவினான்.

"ராஜாளியை யாரும் தூது விடுவதில்லை. புறாவைத் தான் தூது விடுவார்கள்."

"உண்மை."

"ராஜாளி வலிமையுள்ளது. புறாவென்று அது தன்னை நினைத்துக் கொண்டதுதான் தவறு."

"உண்மை."

"ராஜாளி சுதந்திரப் பறவை."

"ஆம்."

இந்தப் பதிலைக் கேட்ட ஸாத் ஸித்தி பஞ்சணை மஞ்சத்திலிருந்து கீழே இறங்கி இதயசந்திரனுக்கு வெகு அருகில் வந்து அவன் தோள்மீது தனது பெரும் கைகளில் ஒன்றை வைத்து, "உன் சுதந்திரத்தை ஏன் போக்கடித்துக் கொள்ள வேண்டும்?" என்று வினவினான்.

"போக்கடித்துக் கொண்டதாக யார் சொன்னது?"

ஒலியிலிருந்து தமிழன் உள்ளத்தை ஊகித்த ஸாத் ஸித்தி, "தமிழா! நான் இதயம் திறந்து பேசுவதுபோல் நீயும் பேசு. கனோஜி ஆங்கரே எங்கள் எதிரி. அவரை அழிப்பது எங்கள் கடமை. இங்கு நடப்பது மொகலாய சாம்ராஜ்யத்துக்கும் மகாராஷ்டிர சாம்ராஜ்யத்துக்கும் நடக்கும் போர். நானும் கனோஜியும் அந்தப் போரின் இரு கட்சிகளைச் சேர்ந்தவர்கள். ஆனால் இந்தப் போரில் தமிழனான உனக்கென்ன சம்பந்தம்? சம்பந்தமில்லாத உனக்கு யார் கட்சி வெற்றி பெற்றாலென்ன, தோற்றாலென்ன? எங்கு லாபம் அதிகமிருக்கிறதோ அங்கு சேர்ந்தால் தவறென்ன?" என்று வினவினான்.



இதயசந்திரன் இதழ்களில் புன்முறுவல் படர்ந்தது. "வீரரே! என்னை உங்கள் பக்கம் இழுக்கும் ஆவலில் முன் பின் முரணாகப் பேசுகிறீர்கள். ஒன்று உங்களுக்குச் சொல்ல இஷ்டப்படுகிறேன். சுதந்திரத்தைத் தற்சமயம் நான் விரும்பவில்லை" என்று கூறினான்.

"ஏன்?"

"என் சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது."

"தெரியும். காதலால்."

"மீண்டும் தவறு செய்கிறீர்கள். காதல் என்னைக் கட்டுப்படுத்துவதாயிருந்தால் பானுதேவி சொன்னபடி நான் உங்கள் பக்கம் சேர்ந்திருக்க வேண்டும். ஆங்கரேயைப் பிடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்."

ஸாத் ஸித்தி தமிழன் அருகாமையிலிருந்து பின்னடைந்து மஞ்சத்தின் முனையில் உட்கார்ந்து அவனை ஏறிட்டு நோக்கினான்.

"ஆகையால் மூன்று நாட்களுக்கு முன்பே சந்தித்த பானுதேவியை நான் காதலிப்பதாகக் கனவு கண்டாலும் அந்தக் காதல் என்னைக் கட்டுப்படுத்தவில்லையென்பதை நீங்கள் உணர்ந்து கொண்டிருக்கலாம். அப்படி ஒருவேளை கட்டுப்படுத்தியிருந்தாலும் அந்தக் கட்டு உடைந்துவிட்டதென்பதையும் உணர்ந்து கொண்டிருக்கலாம். காதல் என்னைக் கட்டுப்படுத்தவில்லை. இங்குள்ள போர் பூசல் எதுவும் கட்டுப்படுத்தவில்லை. என் உயிரைக் காப்பாற்றியதால் பிரும்மேந்திர ஸ்வாமியிடம் இருக்கும் நன்றிகூட தற்சமயம் என்னைக் கட்டுப்படுத்தவில்லை. என்னைக் கட்டுப்படுத்துவது கடமை ஒன்றுதான்."

"என்ன கடமை தமிழா?"

"தமிழகத்திலிருந்து நான் ஒருவனைத் தேடி வந்திருக்கிறேன்."

"யார் அவன்?"

''பெயர் தெரியாது. ஆனால் பார்த்தால் அடையாளம் கண்டு கொள்வேன்.''

''அப்படியா!''

என்ன அடையாளம் என்று ஒருவேளை அவன் கேட்டிருந்தால் இக்கதைப் போக்கு மாறியிருக்கலாம். ஆனால் கனோஜி ஆங்கரேயைப் பிடிக்கும் மும்முரத்திலிருந்த ஸாத் ஸித்தி, ''கனோஜி ஆங்கரேயைப் பாதுகாப்பதால் உனக்கு அந்த மனிதன் கிடைத்து விடுவானென்பது நிச்சயமா?'' என்று வினவினான்.

''நிச்சயமில்லை'' என்று ஒப்புக்கொண்டான் இதயசந்திரன்.

''பின் அவரை நீ பாதுகாக்க வேண்டிய அவசியம்?''

''கனோஜி ஆங்கரே பெயருக்குத்தான் மகாராஷ்டிர கடற்படைத் தலைவர்...'' என்று துவங்கிய இதய சந்திரனை குதூகலத்துடன் இடைமறித்த ஸாத் ஸித்தி, ''உண்மை தமிழா உண்மை'' என்று கூறினான் குரலிலும் குதூகலம் கோட்டி.

''அவர் உண்மையில் கொள்ளைக்காரர்......''

''பலே பலே.''

''அவர் கப்பலில் பல துறைமுகங்களுக்குச் செல்கிறார்...''

''ஆம் ஆம்.''

''நான் அவருடன் சென்றால் அந்தத் துறைமுகங்களுக்கும் செல்லலாம். பல இடங்களில் நான் நாடி வந்தவனைத் தேடலாம்.''

நிறுத்து என்பதற்கு அடையாளமாகக் கையை அமர்த்திய ஸாத் ஸித்தி பல விநாடிகள் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டுக் கேட்டான், ''தமிழா! நீ சொல்வதெல்லாம் உண்மையா?'' என்று.



''என் வாளைக் கொடுங்கள். அதன்மேல் ஆணையிடுகிறேன்'' என்றான் இதயசந்திரன்.

''தேவையில்லை. உன் சொல்லே போதும்'' என்ற ஸாத் ஸித்தி, ''தமிழா! உனக்கொரு மாற்றுத்திட்டம் தருகிறேன். யோசித்துப் பார்'' என்று கூறியதன்றி, ''நீ ஒருவனை நாடி வந்திருக்கிறாய். அவனைப் பிடிக்கக் கனோஜியிடம் சேர்ந்து மரக்கலப் பயணம் செய்ய நினைக்கிறாய். அத்தகைய பயணத்திற்கும் உன் பகைவனைக் கண்டுபிடிப்பதற்கும் நான் சகல வசதிகளும் அளித்தால் என்னுடன் சேர உனக்கு என்ன தடை'' என்று கேட்கவும் செய்தான்.

சில விநாடிகள் இதயசந்திரனும் சிந்தனையில் இறங்கினான். ''அஞ்சன்வேல் தலைவரே! உங்கள் உதவி கனோஜியின் உதவியை விடச் சிறந்ததாக இருக்கும் என்பது என்ன நிச்சயம்?'' என்று வினவினான்.

''கொங்கணிக் கடற்கரையின் கோட்டைகளில் முக்கால்வாசி துறைமுகங்களில் நூற்றுக்கு எண்பது ஸித்திகளிடம் இருக்கின்றன. கனோஜி திறமையுள்ள கடற்படை வீரர். ஆனால் துறைமுகங்கள் முழுவதையும் பிடிக்க இன்னும் அவரிடம் போதிய பலமில்லை'' என்றான் ஸாத் ஸித்தி.

கொங்கணிப் பிரதேசத்தில் ஸித்தியின் பலத்தைப் பற்றிப் பெரிதும் கேட்டிருக்கிறான் இதயசந்திரன். ஆகவே ஸாத் ஸித்தி கூறியது உண்மையென்பது அவனுக்குத் தெரிந்திருக்கிறது. இருப்பினும் என்ன காரணத்தாலோ ஸாத் ஸித்தியிடம் சேர அவன் மனம் ஒப்பவில்லை. அப்படி ஒப்பவில்லையென்பதை உடனடியாகக் கூறாமல், ''இதை யோசிக்க எனக்கு அவகாசம் வேண்டும்'' என்றான்.

ஸாத் ஸித்தி அறிவிற் சிறந்தவன். மனிதர்களை எடை போடுவதில் ஈடுஇணையற்றவன். ஆகையால் சற்று

யோசித்துவிட்டு, ''நீ கேட்பதில் நியாயமிருக்கிறது'' என்று கூறினான்.

இதயசந்திரன் கண்களில் வியப்புத் தாண்டவமாடியது. ''நியாயமிருப்பதாக நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். எதிரியான என்னிடம் நீங்கள் காட்டும் பரிவு அபரிமித மானது. ஆனால் சிந்திக்க அவகாசம் கொடுத்தால் என் முடிவைத் தெரிவிப்பேன். நமக்குள் நடந்ததை யாரிடமும் தெரிவிப்பதில்லையென உறுதியும் கூறுவேன்'' என்றான் வியப்பும் நன்றியும் கலந்து ஒலித்த குரலில்.

ஸாத் ஸித்தி சாமர்த்தியமாக மெள்ள தனது வலையை வீசினான். ''அந்த உறுதி மட்டும் போதுமென்று தோன்ற வில்லை எனக்கு'' என்றான் மெதுவாக.

''வேறெந்த உறுதி வேண்டுமானாலும் கேளுங்கள் தருகிறேன்'' என்றான் இதயசந்திரன் பணிவுடன்.

ஸாத் ஸித்தி இதயசந்திரனை ஏறெடுத்துப் பாராக்காமல் தரையில் கண்களை ஓட்டிச் சொன்னான்: ''வீரனே! உன்னை இப்போது நான் விட்டுவிட்டால் நீ கனோஜியை எச்சரிக்கலாம்!'' என்று.

''எச்சரிக்க மாட்டேன் என்ற உறுதியும் கொடுக்க முடியும்'' என்றான் இதயசந்திரன் உறுதியான குரலில்.

''பிரும்மேந்திர ஸ்வாமியின் யோசனையை கேட்க லாம்.''

''அவசியமில்லை.''

ஸாத் ஸித்தியின் முகத்தில் திருப்தி தெரிந்தது. இதயசந்திரனைச் சுற்றி நின்ற வீரர்களைப் போகும்படி சைகை செய்துவிட்டுக் கூறினான், ''வீரனே! சிந்தித்து விடை கூற உனக்கு நாளை மாலைவரை அவகாசம் கொடுக்கிறேன்'' என்று.

''நன்றி அஞ்சன்வேல் தலைவரே!'' என்றான் இதய சந்திரன் தலை தாழ்த்தி.



அதுவரை இறுமாந்து நின்ற இதயசந்திரன் தனக்குத் தலை தாழ்த்தியது மிகத் திருப்தியாயிருந்தது ஸாத் ஸித்திக்கு. அந்தத் திருப்தியுடன் கூறினான் ஸாத் ஸித்தி, ''ஆனால் இன்னோர் உறுதியும் வேண்டும்'' என்று.

''எது வேண்டுமானாலும் கேளுங்கள்.'' இதயசந்திரன் பதில் உறுதியுடன் வெளிவந்தது.

''என்னிடம் சேர இஷ்டமில்லையேல் நாளை இரவின் ஆரம்பத்தில் நீயாகவே என்னிடம் வந்து சிறைப்பட வேண்டும்'' என்றான் ஸாத் ஸித்தி.

''சம்மதிக்கிறேன் அதற்கும்.''

''அப்படியானால் இன்று போய் நாளை வா'' என்றான் ஸாத் ஸித்தி.

மீண்டும் ஸாத் ஸித்தியிடம் தலை தாழ்த்திவிட்டு வெளியே செல்லத் திரும்பினான் இதயசந்திரன். அதே சமயத்தில் மஞ்சத்திலிருந்து இறங்கி வந்து இதயசந்திரன் தோளில் கைபோட்டுக்கொண்ட ஸாத் ஸித்தி தன் வீரர்கள் தலைவனை அழைத்து, இதயசந்திரன் வாளையும் கைத்துப்பாக்கியையும் திருப்பிக் கொடுக்கக் கட்டளை யிட்டான்.

வாளைக் கச்சையில் கட்டி, கைத்துப்பாக்கியையும் செருகிக்கொண்டு புரவியேறச் சென்ற இதயசந்திரனைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்ற ஸாத் ஸித்தி ''அந்த ராஜாளி நிச்சயம் நாளை திரும்பும். அதைப் புறாவாக அடிக்க நீண்ட நேரம் பிடிக்காது'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். ஆனால் மறுநாள் இரவு நடந்தது? ஸாத் ஸித்தி முற்றும் எதிர்பாராதது நடந்தது. என்ன செய்வது ஏது செய்வதென்று அறியாமல் அவன் திக்கு முக்காடித் திகைத்துப் போகும்படியான நிகழ்ச்சி விளைந்தது.

## அத்தியாயம் 21

# கம்பன் வழி

மறுநாளிரவு தவறாமல் வருவதாக உறுதி கூறிவிட்டு லாத் ஸித்தியின் மாளிகையிலிருந்து புரவியேறிக் கிளம்பிய இதயசந்திரன் மனம் பெரிதும் குழம்பிக் கிடந்ததால், அவன் புரவிச் சேணத்தைப் பதுமைபோல் கையில் பிடித்திருந்தானே தவிர அதை இழுக்கவோ திருப்பவோ முயன்றானில்லை. மனக் குதிரை இஷ்டம்போல் ஓடியது போல் அந்த இனக் குதிரையும் இஷ்டம்போல் நடந்து சென்றாலும் இருந்த இடத்தைச் சேரும் விலங்குகளின் இயல்பு காரணமாக, அந்தப் புரவி நேராகப் பரசுராமன் கோயிலை நாடிச்சென்று அக்கோயிலை வலம் வந்த பின்புற வழியாக சுவாமிகளின் ஆசிரம விடுதிகளுக்கு வந்து தனது சகாக்கள் கட்டுண்டு நிற்கும் இடத்தில் நின்றது. நடந்து சென்று புரவி இடம் வந்து நின்ற பிறகும் அது நின்றதை அறியாத இதயசந்திரன் ஒரு விநாடிக்குப் பிறகே தான் தனது இருப்பிடத்தின் பின்புறத்தை அடைந்துவிட்டதை உணர்ந்து புரவியிலிருந்து குதித்துச் சேணத்தைத் தலையில் கட்டிவிட்டுத் தனது அறையை நாடிச் சென்றான் அவன் வந்தபோது மூன்றாம் ஜாமம் தனது முடிவை எதிர் பார்த்துக்கொண்டிருந்ததால் சுவாமியின் ஆசிரம விடுதியில் அனைவரும் உறங்கிக் கொண்டிருந்தார்கள். எங்கும் நிசப்தம் நிலவியிருந்தாலும் சுவாமியின் தனி விடுதியில் மட்டும் மினுக்கு மினுக்கென்று விளக்கெரிந்ததையும், உள்ளிருந்து ஓம் ஓம் என்ற பிரணவ சப்தம் வந்து கொண்டிருப்பதையும் கவனித்த இதய சந்திரன் அந்தப் பிரணவத்தின் விளைவாக இக உலகத்துக்கு வந்தான்.

அசை பொருள்கள் அனைத்தும் அசையாது கிடந்த அந்த இரவு நேரத்தில், ஒலி கொடுக்கும் அனைத்தும் ஒலியிழந்த அந்த வேளையில், சுவாமியின் விடுதியிலிருந்து



வெளிப் போந்த பிரணவ சப்தம், இருட்டைக் கிழித்த அவர் அறையின் சிறுவிளக்கைப் போலவே இதயசந்திரன் இதய அந்தகாரத்தையும் விலக்கவே, பேரமைதி பெற்றுப் பல விநாடிகள் அந்த இடத்தைக் கடந்து செல்லாது நின்றான் தமிழகத்தின் வாலிபன். அந்த 'ஓம் ஓம்' என்ற ஒலி ஒரே சீராகவும், ஓர் ஒலிக்கும் இன்னோர் ஒலிக்குமிருந்த இடைவெளி கூடவோ குறையவோ செய்யாமல் ஒரே காலப் பிரமாணத்துடன் வெளிவந்ததால் அதேபடி ஒலித்த அவன் இதய சப்தத்துடன் சேர்ந்து உறவாடத் துவங்கியது. பிரணவத்துக்கும் உயிருக்கும் எத்தனை ஒற்றுமையிருக்கிறதென்பதையும், அது எத்தனை சாந்தியை அளிக்கவல்லதென்பதையும் அந்தச் சில விநாடிகளில் உணர்ந்த இதயசந்திரன் குழப்பம் நீங்கிய இதயத்துடன் மெல்ல மெல்ல அடி எடுத்து வைத்துத் தனது அறையை நோக்கிச் சென்றான். அவன் அறை பானுதேவியின் அறையைத் தாண்டியே இருந்தாலும், பானுதேவி அறை முன்பு ஒரு விநாடிகூடத் தாமதிக்காமலும் அவளைப் பற்றிச் சிறிதளவும் நினைக்காமலும் தனது அறைக்குச் சென்று பஞ்சணையில் படுத்துக் கொண்டான்.

பிரணவ சப்தம் அப்பொழுதும் அவன் காதுகளில் கேட்டுக் கொண்டிருந்தது பெரு வியப்பைத் தந்தது அவனுக்கு. சுவாமியின் உச்சாடனம் மிக மெதுவாகவும் மிருதுவாகவும் இருந்தபடியால் அது தனது அறை வரை எப்படி எட்டியதென்பது அவனுக்குத் திண்ணமாகத் தெரிந்திருந்ததால், அந்த ஒலி தன்னைத் தொடர்ந்து வந்திருக்கிறதென்று நம்பினான். அது காதுடன் தொடர்ந்ததா அல்லது இதயத்துடிப்புடன் சேர்ந்துவிட்டதால், இதயம் உட்பக்கத்திலிருந்து அந்த ஒலியைக் கிளப்புகிறதா என்பதை இதயசந்திரனால் நிர்ணயிக்க முடியாவிட்டாலும், அதனுடைய இன்ப ஒலி மெள்ள மெள்ள அவனுக்கு அமைதியளித்தது. உறங்க வைக்கவே, மிக நிம்மதியுடன் உறங்கினான் அவன்.

எத்தனை நேரம் உறங்கினானோ அத்தனை நேரம், அலைபாயாத உள்ளத்துடன் கவலை சிதறாத சிந்தனை யுடன், அமைதியளித்த இன்பத்துடன் அவன் மிக நிம்மதி யாக உறங்கிவிட்டதால், காலையில் வெகு நேரங் கழித்தே எழுந்திருந்தான். சாளரத்தின்மூலம் அடித்த வெளிச்சத் தால் கண் கூச எழுந்திருந்த அவன் தனது ஆழ்ந்த நித்திரையை நினைத்துப் பெரிதும் வியந்தான். சிறிது காற்றசைந்தாலும் இரவில் சட்டென்று விழித்துக் கொள்ளும் சிறு தூக்கமுடைய தன்னை, அசையாத பொருளாக, உணராத பொருளாக அடித்துவிட்ட சுவாமி யின் பிரணவ சப்தத்தின் மகிமையை நினைத்து எல்லை யில்லா வியப்படைந்து கதவைத் திறந்துகொண்டு வெளி வந்தான். வெளியே ஒரு காவலனைத் தவிர யாருமில்லை. அந்தக் காவலனும் அவனைக் கண்டதும் எழுந்து வந்து, ''தங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன்'' என்று கூறினான்.

''மற்றவர்கள் எங்கே?'' என்று வினவினான் இதய சந்திரன்.

''கோயிலுக்குப் போய் விட்டார்கள்'' என்று பதிலிறுத்த காவலன், ''நீங்கள் நீராடி வந்தால் நாமும் போகலாம்'' என்று சற்று அலுப்புடன் தெரிவித்தான். அத்துடன் நீராட்டத்துக்குச் சகலமும் சித்தமாயிருக்கிற தென்று கூறவும் செய்தான். எல்லோரும் பூஜைக்குப் போய் கை கட்டி நிற்க, தான் மட்டும் ஒரு தூங்குமூஞ்சிக்காகக் காத்திருக்க வேண்டிய விதியை நொந்தே காவலன் அலுத்துக் கொள்கிறானென்பதைப் புரிந்துகொண்ட இதயசந்திரன், ''நீ போ, நான் வருகிறேன்'' என்று கூறிவிட்டு ஸ்நானத்தை முடித்துக் கொண்டு விரைந்தான்.

கோடாரியைத் தோளில் வைத்து வில்லும் தூணியும் தரித்து மிகக் கம்பீரமாகக் கடல் நோக்கி நின்ற பார்க்கவ ராமன் தரிசனமும் தீபாராதனையின் போது ஓதப்பட்ட வேத மந்திரங்களும் மங்கள சுலோகங்களும் உள்ளத்துக்கு சாந்தியளித்ததால் அந்தத் திவ்யமங்கள விக்ரகத்தைப்



பார்த்தபடி நின்றான் இதயசந்திரன். அந்த விக்ரகம் தன்னைப் பார்த்து நகைப்பது போல் ஒரு பிரமையும் ஏற்பட்டது தமிழன் இதயத்தில். கடலை ஒட்டி கொங்கணியைச் சிருஷ்டித்துச் சித்பவன் அந்தணருக்கு இடமும் வாழ்வுமளித்த பரசுராமன் தன்னைப் பார்த்து ஏன் நகைக்க வேண்டும் என்பது புரியாவிட்டாலும் நகைக்க ஏதோ விஷயமிருக்க வேண்டுமென்ற முடிவுக்கே அவன் வந்தான். அந்த நினைப்பில் வந்த காரியம் எழுந்தது, சுவாமியின் கட்டளை எழுந்தது, தேவியின் தூது எழுந்தது, ஸாத்ஸித்தியின் உதவிக் கரமும் எழுந்தது. ஆனால் அவையனைத்தையும் ஓங்கார ஒலி சாந்தப் படுத்தியதால் பார்க்கவன் கோவிலிலிருந்து மனச்சாந்தி யுடனேயே வெளி வந்தான் இதயசந்திரன். அடுத்தபடி சுவாமி பிரார்த்தனை மண்டபத்தில் நடத்திய ஹோமத்தி லும் கலந்து கொண்டான் சர்வ சாந்தியுடன்.

பார்க்கவன் சேவைக்கும், பிரும்மேந்திர ஸ்வாமியின் ஹோமத்துக்கும் மேலாக ஒலித்த பிரணவம் அவன் மனத் துக்குப் பெரும் தெளிவாக அளித்துவிட்டதால் பகல் உணவருந்து முன்பாக இரவு செய்ய வேண்டியதென்ன வென்பதற்கு ஒரு முடிவுக்கு வந்த இதயசந்திரன், மிகுந்த உற்சாகத்துடன் பகல் பூராவும் நடந்து கொண்டான். அவன் உற்சாகத்தை மற்றவர் கவனிக்காவிட்டாலும் பானுதேவி மட்டும் நன்றாகக் கவனித்தாள் ஸாத் ஸித்தியிடம் தான் அனுப்பிய தூது பலனளித்ததால் இதய சந்திரன் அத்தனை குதூகலத்திலிருக்கிறானோ அல்லது வேறு ஏதாவது விபரீத முடிவுக்கு வந்து உற்சாகத்தில் திளைத்துவிட்டானா என்று ஆராய்ந்தாள். அந்த ஆராய்ச்சியில் சுயவலிமை எழுந்தது. அவள் நினைப்பில் முந்திய இரவு தன் காலில் வைத்த அவன் கையும், கால் விரல்களும், விரல்களில் அகப்பட்டு நெறிந்த அவன் கை விரல்களும், தன் இடையில் அணைந்த அவனது மற்றொரு கையும், அவன் உடலையும் உள்ளத்தையும் தனக்கு அடிமையாக்கி

யிருக்க வேண்டுமெனத் தீர்மானத்துக்கு வர முயன்றாள் அவள். 'அப்படி அடிமையாக்கியிருக்கும் பட்சத்தில் இன்று பகலில் கோவிலிலும் சரி பிரார்த்தனை மண்டபத்திலும் சரி என் பக்கம் கண்களைத் திருப்பக்கூட இல்லையே? அது ஏன்?' என்று எண்ணியதால் நினைத்த முடிவுக்கு வர இயலவில்லை அவளால். பானுதேவிக்குத் தன் அழகின் வலிமை நன்றாகத் தெரிந்திருந்தது. முதலில் தெரியா விட்டாலும் ஸதாராவில் அவளிடம் பைத்தியங்கொண்டு திரிந்து சண்டையிட்டுப் பிராணனையும் விட முயன்ற பல மகாராஷ்டிர வாலிபர்கள் நன்றாகத் தெரிய வைத்திருந்தார்கள். ஆதலால், தன் கண்ணசைவு யாரையும் பைத்தியமாக அடிக்கும் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டிருந்த பானுதேவிக்குத் தன்பக்கம் தமிழன் கண்ணைகூடத் திருப்பாதது பெரும் விந்தையாகவும் வியப்பாகவும் இருந்தது. 'ஒருவேளை என்னைப் பார்க்கும் போது பிறர் பார்த்து விட்டால் என்ன செய்வதென்று யோசிக்கிறாரோ?' என்று எண்ணமிட்ட அவள், 'எப்படியும் அவரைத் தனிமையில் சந்தித்துவிடுகிறேன்' என்று தனக்குள் உறுதி செய்து கொண்டதோடு நில்லாமல் அதற்கு வழியும் வகுத்துக் கொண்டாள்.

உச்சி கால பூஜைக்கு அனைவரும் மீண்டும் கோவிலுக்குச் சென்றபோது தோழிகளிடம் தலைவலி என்ற சாக்கில் தனித்து அறையில் தங்கிவிட்ட பானுதேவி, சென்றவர்களுடன் இதயசந்திரன் செல்லாததைக் கவனித்து அவன் தன்னைப் பார்க்கத்தான் தங்கிவிட்டானென்று எண்ணினாள். ஆகவே ஆசிரமவாசிகள் சென்ற பிறகு அவளுக்குக் காவலும் ஏவலும் செய்யத் தங்கிய ஒரு வீரனையும், ''நீயும் போய்வா'' என்று ஆணையிட்டு அனுப்பிவிட்டாள். அவனும் சென்றதும் பெரும் நாணம் அவளைச் சூழ்ந்து கொண்டது. அந்த ஆசிரமப் பகுதி பெரிதாயிருந்தாலும், திறந்தவெளி அதிகமிருந்தாலும், வெளிச்சமும் எக்கச்சக்கமாயிருந்தாலும் தானும் அவனும் தனித்துத் தனி அறையில் தங்கிவிட்ட உணர்ச்சி அவளை



வாட்டி வதைத்தது. அந்த உணர்ச்சியை உதறி விட்டு அறையைவிட்டு வெளிவந்த பானுதேவி அறைக்கெதிரேயிருந்த தூணைக் கட்டிக்கொண்டு மெல்ல ஏதோ பாட்டை முணுமுணுத்தாள். அந்த இசை கேட்டு இதயசந்திரனும் அறையைவிட்டு வெளிவந்து அவளை நோக்கினான்.

தூணை ஒரு கையால் அணைத்து நின்ற அவள் திருக்கோலம் மோகனாகரமாயிருந்தது. ஒரு காலைத் தரையில் அதிகமாக ஊன்றியிருந்ததால் ஒரு பக்கத்துப் பாரம் அந்தக் காலின் மீதே சுமந்து இடையே ஒரு பக்கம் அதிகமாக வளையவிட்டிருந்தது அவன் வரும் வரையில் தலைக்கு மேல் தூக்கித் தூணைப் பிடித்திருந்த மற்றொரு கையைச் சட்டென்று கீழே போட்ட அவள் அவனைப் பார்த்துப் புன்னகை கோட்டி, ''பூஜைக்குப் போகவில்லையா?'' என்று வினவினாள் மிக இன்பமான குரலில்.

அவன் உடனடியாகப் பதில் சொல்லாமல் அவளை நோக்கி வந்து, ''நீங்கள்...?'' என்று வினவினான்.

''இங்கிருப்பதிலிருந்து புரியவில்லையா?'' என்று கேட்டாள் அவள் ஏளனக் குரலில்.

''அப்படியானால் என்னைக் கேள்வி கேட்டதற்கும் அர்த்தமில்லையே'' என்று கூறினான் தமிழன்.

''என்ன சொல்கிறீர்கள்?''

''நான் இங்கிருப்பதிலிருந்து நீங்களும் புரிந்து கொண்டிருக்கலாமே.''

''நான் தங்கிவிட்டதற்குக் காரணம் இருக்கிறது.''

''நான் மட்டும் காரணமில்லாமல் தங்கினேனென்று ஏன் நினைக்கிறீர்கள்?''

இதைக் கேட்ட அவள் தூணில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள் ''நன்றாக இருக்கிறது உங்கள் பேச்சு'' என்று மெல்ல நாணக்குரல் எழுப்பினாள்.

''ஏன், என்ன தவறிருக்கிறது என் பேச்சில்?'' என்று விஷமக் குரல் எழுப்பினான் வாலிபன்.

''பேச்சில் இல்லை தவறு. நடத்தையிலிருக்கிறது'' என்று சொற்களில் குத்திக் காட்டினாள் அந்த அழகி.

''நடத்தையில் பிசகு இருப்பதாக தெரியவில்லையே'' என்றான் இதயசந்திரன்.

''உள்ளத்தைக் கேளுங்கள்.''

''உள்ளந்தான் பதில் சொல்கிறது.''

''இல்லை, இல்லை. சொல்வது உதடு.''

''இரண்டுக்கும் வித்தியாசம் உண்டா?''

''ஆண்களுக்கு உண்டு.''

''பெண்களுக்கு?''

மெல்ல நகைத்தாள் பானுதேவி. ''வீரரே! நீர் சாமர்த்தியசாலி. பெண்களை உங்களிடம் தனித்து விடக் கூடாது'' என்றும் கூறினாள் நகைப்புக்கிடையே.

''ஆண்களையும் உன்னிடம் தனித்து விடக்கூடாது தேவி'' என்றான் இதயசந்திரன்.

''ஏன், என்ன செய்துவிடுவேனாம்'' என்று அவள் முகத்தைத் தூணிலிருந்து எடுத்து அவனை ஏறெடுத்து நோக்கினாள்.

இதயசந்திரன் கூர்விழிகள் அவளை நோக்கி நகைத்தன. ''பெரிய ஆபத்தில் மாட்டிவிடுவாய் தேவி. தூது அனுப்புவாய்'' என்ற சொற்களிலும் நகைப்பொலி இருந்தது.

அவன் சொற்களில் மரியாதை மறைந்து சொந்தம் ஒலித்தது அவளுக்கு மிக இன்பமாயிருந்தது. ஆனால் அவள் கண்களில் அதுவரையிருந்த நாணம் மறைந்தது. நகைப்பும் மறைந்தது. சீரிய பார்வை அவன்மீது நிலைத்தது. அவனை ஓரளவு நெருங்கிவந்து கேட்டாள் ஆவலுடன் ''ஸாத் ஸித்தியைப் பார்த்தீர்களா?'' என்று.



இதயசந்திரன் உதடுகளில் ஏளனப் புன்முறுவல் படர்ந்தது. 'நானாகப் பார்க்கவில்லை தேவி? அவனே பார்க்கும்படி செய்துவிட்டான்.''

''நீங்கள் சொல்வது புரியவில்லையே வீரரே!''

''தேவி சென்றபின் ஸித்தியின் வீரர்கள் என்னை வளைத்துக்கொண்டார்கள். சிறை செய்து அழைத்துச் சென்றார்கள்'' என்று குறிப்பிட்டான்.

தேவியின் கண்கள் சீற்றத்தால் சற்றே விரிந்தன. ''என்ன? என்ன! உங்களைச் சிறை செய்தானா? என்ன துணிவு அவனுக்கு?'' என்று உஷ்ணம் மிகுந்த குரலில் சீறவும் செய்தாள்.

''தேவி! கோபிக்க வேண்டிய அவசியமில்லை'' என்று ஆறுதல் சொன்னான் இதயசந்திரன்.

''ஏன் அவசியமில்லை? பரசுராமபுரத்தில்; அதுவும் எனக்கு...'' என்று துவங்கிய அவள் பட்டென்று சொற்றொடரை அறுத்துக்கொண்டாள்.

இதயசந்திரனே அதைப் பூர்த்தி செய்ய முற்பட்டு, ''வேண்டியவரைக் கைது செய்தது உண்மைதான். ஆனால் வேண்டியவரென்று தெரிந்ததும் விட்டுவிட்டான்'' என்று கூறினான்.

தேவி சற்று சீற்றத்தைத் தணித்துக் கொண்டாள். ''இருப்பினும் அவன் செய்கை தகாதது. சமயம் வரும் போது அதற்குப் பரிகாரம் தேடுவோம். அது கிடக்கட்டும். தூதுக்கு என்ன பதில் சொன்னான்?'' என்று கேட்டாள் அவள்.

''கரும்பு தின்னக் கூலி கேட்கவில்லை அவன்.''

''கனோஜி ஆங்கரேயைக் கரும்பு என்று நினைத்துக் கொண்டிருக்கிறானா ஸித்தி?''

''ஆம்.''

''நாம் அளித்தால்தான் அவர் கரும்பு, இல்லையேல் இரும்பு. அந்த இரும்பைக் கரும்பாக்கி அதை ஸாத் ஸித்தியிடம் கொடுப்பது நமது கடமை.''

''நமது கடமையா!'' என்ற இதயசந்திரன் பிரமித்து வாயைப் பிளந்தான்.

''அதற்கும் திட்டம் வைத்திருக்கிறேன் வீரரே. அந்தத் திட்டத்தை உங்களைத் தவிர வேறு யாரும் நிறைவேற்ற முடியாது.''

''இத்தனை நல்ல பணிக்கு எனக்குத் திறமையிருப்பது திருப்தியடையத்தக்கதுதான்'' என்று கூறிய இதயசந்திரன் ஏளனமாக அவளை நோக்கினான்.

தன் மாமனின் வைரியை அழிப்பதிலேயே புத்தியை நாடவிட்டிருந்த பானுதேவி அவனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. மேலே தனது திட்டத்தைக் கூறினாள். ''இன்றிரவு நீங்கள் சரியாக முதல் ஜாமம் துவங்கி நான்கு நாழிகைகள் கழித்து விடுதியிலிருந்து கிளம்பிவிடுங்கள். கிளம்பி ஸாத் ஸித்தியிடம் செல்லுங்கள். அவன் வீரர்களில் நால்வரை அழைத்துக்கொண்டு ஸாத் ஸித்தியின் வீட்டிற்குப் பின்னால் வாசிஷ்டி நதி படகுத் துறைக்குச் செல்லும் பாதையிருக்குமிடத்தில் பதுங்கியிருங்கள். அங்கு நடுச்சாமத்தில் கனோஜி தனித்து வருவார். சட்டென்று பாய்ந்து அவரைப் பிடித்துச் சிறை செய்யலாம்'' என்று கூறினாள் பானுதேவி.

''அவரைப் பிடிப்பது அத்தனை எளிதா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''எதிர்பாராத சமயத்தில் பாய்ந்து பிடிப்பது எளிது'' என்றாள் அவள்.

''நான் அப்படி நினைக்கவில்லை. உறக்கத்திலும் கண் விழிப்பவர் கனோஜி. நள்ளிரவில் அவர் சுட்டு ஸாத் ஸித்தியின் வீரனைக் காயப்படுத்தியது நினைவில்லையா உனக்கு?''



''நினைவிருக்கிறது. ஆனால் இப்பொழுது நிலைமை வேறு.''

''என்ன நிலை?''

''ஆயுதமெதையும் பரசுராமபுரத்தில் உபயோகப் படுத்தக் கூடாதென சுவாமி இன்று கனோஜிக்குக் கடுமையான உத்தரவிட்டதை நானே கேட்டேன்.''

''அதற்கு ஒப்புக் கொண்டாரா கனோஜி?''

''சுவாமி சொல்வது எதையும் மறுப்பதில்லை அவர். ஆகவே இன்றிரவு நடுச் சாமத்தில் படகு ஏறிப் போய் விடுவதாகக் கூறிய கனோஜி போகும் பாதையும் குறிப்பிட்டார். ஆகையால் உங்கள் வேலை சுலபம்'' என்றாள் பானுதேவி.

''ஆமாம்...'' என்று ஒப்புக் கொண்டான் இதயசந்திரன்.

''சரியாகக் காரியத்தை முடியுங்கள். இந்தாருங்கள் இந்த முத்துமாலை. இது என் பரிசு'' என்று கழுத்திலிருந்த மாலையையும் கழற்றி அவனிடம் கொடுத்தாள்.

இதயசந்திரன் இதழ்கள் விகசித்தன. ''நன்றி தேவி'' என்று கூறிவிட்டு மாலையைக் கச்சையில் செருகிக் கொண்டு கிளம்பினான். பிறகு அன்று பகல் பூராவும் அவன் அறையை விட்டு வெளியில் வரவில்லை. முதல் ஜாமம் துவங்கி நான்கு நாழிகைகள் கழித்து அவன் அவள் சொற்படி கிளம்பினான். கிளம்புமுன் தன் கைத் துப்பாக்கியை நன்றாகப் பரிசோதித்துக் கச்சையில் செருகிக் கொண்டான். வாளையும் கூர்ப்பார்த்து உறையிலிட்டுக் கச்சையில் கட்டிக் கொண்டும் கிளம்பினான். கிளம்பியவன் சுவாமியின் ஆசிரம வாயிலின் பின்புறம் சென்று முந்தியநாள் புரவி மீதே ஏறி ஸாத் ஸித்தியின் மாளிகை நோக்கிச் சென்றான்.

ஸாத் ஸித்தி மட்டிலடங்கா மகிழ்ச்சியுடன் வெளி வந்து அவனை உள்ளழைத்துச் சென்றான். இதயசந்திரன்

மஹாலின் கதவை மரியாதையுடன் சாத்திக்கொண்டு அவனைப் பின்பற்றினான். உள்ளே சென்றதும் ''சொன்ன படி வந்துவிட்டாய்'' என்று பாராட்டினான் ஸாத் ஸித்தி.

''ஆம். ஒரு சிறு மாறுதல்'' என்றான் இதயசந்திரன்.

''என்ன மாறுதல்?''

''நீங்கள் 'இன்று போய் நாளை வா' என்றீர்கள்.''

''ஆம்.''

''கம்பன் அப்படிச் சொல்லவில்லை.''

''யாரவன் கம்பன்?''

''எங்கள் ஊர் பெரும் கவி.''

''என்ன சொன்னான்?''

''இன்று போய்ப் போருக்கு நாளை வா'' என்ற இதயசந்திரன் இதழ்களில் இளநகை விரிந்தது.

''என்ன உளறுகிறாய்?'' இடியென அதிர்ந்தது சொற்கள் ஸாத் ஸித்தியிடமிருந்து.

''உளறுவது நானல்ல'' என்ற சொற்கள் இரும்போடு இரும்பு உராயும் சத்தத்தில் வெளிவந்தன தமிழன் உதடு களிலிருந்து. சீறி எழுந்திருக்க முயன்ற ஸித்தியை இதயசந்திரன் இடது இரும்புக்கரம் அழுத்தியது. அடுத்த விநாடி தமிழன் கைத்துப்பாக்கியின் பயங்கர வாயை நோக்கி விழித்துக் கொண்டிருந்தன ஸாத் ஸித்தியின் பெருவிழிகள்.

அத்தியாயம் 22

# இசைத்தது குரல்! அசைத்தது மலர்!

கண்கள் முன்பு காட்சியளித்த கைத்துப்பாக்கியின் குழல்வாயை வெறித்து அசைவற்றுப் பார்த்த ஸாத் ஸித்தி யின் பெரு விழிகளில் சீற்றம் மிதமிஞ்சித் தெரிந்தது. பெருத்துத் தடித்திருந்த பயங்கர உதடுகள் மீசையுடன் மிகப் பயங்கரமாக ஒருமுறை அசைந்தன. முகவாய்க் கட்டையில் கத்தரித்து விடப்பட்டிருந்த குச்சுத் தாடிகூட முகவாய் அசைவில் சற்று எழுந்து நிலைத்தது. உதடுகள் அகன்றதால் புடைத்த கன்னக் கதுப்புக்கள் கசாப்புக் கடை மாமிசத் துண்டங்களைப் போல ரத்தச் சிவப்புப் பெற்றன. அசையாத நிலையிலும் இறுகிவிட்ட அவன் உடல் எந்த விநாடியிலும் செயலுக்குத் தயாராயிருந்தது. அவன் அங்க லட்சணங்களை, இறுகிவிட்ட இரும்புக் கைகால்களை, நிமிர்ந்துவிட்ட உடற்கூற்றை இதயசந்திரனும் கண்டு விட்டானாகையால், அவன் எச்சரிக்கைக் குரல் மிகப் பயங் கரமாக ஒலித்தது ஸித்தியின் வலது காதுக்கருகில். ''இம்மி யளவும் அசைய வேண்டாம். அசைந்தால் அஞ்சன்வேல் கோட்டைக்கு வேறு தலைவனைத் தேடவேண்டியிருக்கும். நாலைந்து பேரைச் சுடுவதற்கு வேண்டிய சரக்கு துப்பாக் கிக்குள் இருக்கிறது. கிளம்பும்போதே துப்பாக்கிக் குதிரை யையும் இழுத்துத் தயார் செய்து கொண்டுதான் வந்தேன். என் கட்டைவிரல் அசைந்தால் உங்கள் உயிர் உடல் பந்தத்தை உடனடியாக அறுத்துக் கொள்ளும்'' என்று கூறினான்.

ஸாத் ஸித்தி பதிலேதும் கூறாமல் இதயசந்திரனின் கைத்துப்பாக்கிக் குழலிலிருந்து கண்களைச் சற்றுப் புரட்டி எதிரேயிருந்த மஹாலின் வாயிற்படியைக் கவனித்தான். இதய அறைக் கதவு நன்றாகச் சாத்தியிருந்தது. இதய சந்திரனைத் தான் அழைத்து வந்தபோது அவன் தனக்குப் பின்னால் மிக மரியாதையாகக் கதவைச் சாத்தியதன்

காரணம் நன்றாக ஸாத் ஸித்திக்குப் புரிந்ததால், ''மிகுந்த முன் யோசனையுடன் வேலை நடந்திருக்கிறது'' என்று சிலாகிக்கவே செய்தான்.

அத்தனை அபாயமான நிலையிலும் அச்சத்தை அணுவளவும் காட்டாமல் அஞ்சன்வேல் தலைவன் தன்னைப் பாராட்டுவதைப் பார்த்த இதயசந்திரன் உள்ளூர அவன் துணிவை வியந்து கொண்டான். ''சிங்கத்தின் குகைக்குள் முன்யோசனையில்லாமல் வருவது விவேகமாகுமா?'' என்று இதயசந்திரனும் வைரியைப் பாராட்டிவிட்டு மஞ்சத்தைவிட்டு எழுந்திருந்து கைத்துப்பாக்கியை ஸித்தியின் முகத்துக்குக் குறி வைத்த வண்ணம் மெல்லப் பின்னடைந்து சாத்தியிருந்த கதவைத் தாழிடவும் செய்தான். பிறகு கைத்துப்பாக்கியைக் கச்சையில் செருகிக்கொண்டு கதவில் சாய்ந்து எதிரே மஞ்சத்திலிருந்த ஸாத் ஸித்தியை நோக்கிய வண்ணம் கூறினான்: ''அஞ்சன்வேல் தலைவரே? என் வார்த்தையை நிலைநிறுத்துவதற்காக இவ்விடம் வந்தேன். உம்மிடம் சொன்னபடி நான் கனோஜி ஆங்கரேயைச் சந்திக்கவுமில்லை. எச்சரிக்கவுமில்லை. சுவாமியிடமும் பேசவில்லை. சந்தித்தது ஷாஹூவின் மருமகளை மட்டும்தான். அவளுக்கும் நான் இங்கு வரப்போவது தெரியுமேயொழிய, என் மனப்பாங்கு இன்னதென்று தெரியாது. உங்களிடம் கனோஜியைக் காட்டிக் கொடுக்கச் சொன்னாள். அதைச் செய்யும் உத்தேசம் எனக்கில்லை.'' இதைச் சொன்ன இதயசந்திரன் ஸாத் ஸித்தியை விட்டுக் கண்களை அகற்றாமலும் சொற்களில் அவசியமான அளவுக்கு மட்டும் ஒலியிருக்கும்படியாகவும் பேசினான்.

சொற்களில் ஒலி குறைந்து உறுதி மிகுந்திருந்ததை ஸாத் ஸித்தியும் கண்டான். ஆனால் ஸாத் ஸித்தி அதைப் பற்றிச் சிறிதும் பதட்டப்படவோ சினத்தால் சொற்களை உதிர்க்கவோ இல்லை. ''கனோஜிக்கு உதவ உத்தேசிக்கிறாயா?'' என்ற கேள்வியை வீசினான் ஸாத் ஸித்தி சர்வ சாதாரணமாக.

''உதவவும் போவதில்லை.'' திட்டமாக வந்தது இதயசந்திரன் பதில்.

''கனோஜியைக் காட்டிக் கொடுக்கவும் இஷ்டமில்லை. அவருக்கு உதவவும் இஷ்டமில்லை. வேறென்ன செய்ய உத்தேசம்?'' என்று மீண்டும் கேட்டான் ஸாத் ஸித்தி.

''இங்கிருந்து சென்றுவிட உத்தேசம்?''

''எந்த இடத்திற்கு?''

''குறிப்பாக எந்த இடமும் இல்லை. அரசியல் சூழ்ச்சிகளும் போர்களும் நிறைந்த இந்த இடத்திலிருந்து வெளியேறி, தனியே என் அலுவலைத் தொடர்ந்து கவனிக்கப் போகிறேன். கனோஜியிடமோ உங்களிடமோ பணிபுரிய இஷ்டமில்லை எனக்கு. எனக்கும் மகாராஷ்டிரப் போர்களுக்கும் ஒரே ஒரு தொடர்புதான். அந்தத் தொடர்பின் மூலகாரணம் தஞ்சையிலிருக்கும் ஓர் அனாதை ராணி. அந்தப் பெருமாட்டியின் துயர் துடைக்க வந்திருக்கிறேன். அவள் கொடுத்த புலிநகப் பதக்கமிருந்தால் மகாராஷ்டிரத்தில் உதவி கிடைக்கும். ஆனால் அதுவும் என் வசமில்லை இப்போது. இப்பொழுதிருப்பதெல்லாம் இந்த வாளும் கைத்துப்பாக்கியும்தான். இவை துணை போதும் எனக்கு. இவற்றின் துணை கொண்டு என் பணிமீது செல்கின்றேன்.''

ஸாத் ஸித்தி இதயசந்திரனைக் கூர்ந்து நோக்கினான் பல விநாடிகள். பிறகு இடியிடியெனப் பெரிதாக நகைத்துவிட்டுக் கூறினான்: ''தமிழா! உன்னைவிடப் பெரிய முட்டாளை நான் கண்டதில்லை. கொங்கணியின் கடற்பகுதியில் நீ நாடி வந்தவனைத் தேட முயல்கிறாய். அந்தப் பகுதியில் கனோஜியின் கண்களில் படாமல் எறும்புகூட அசைய முடியாது. பிரிட்டிஷ் போர்ச்சுக்கீசிய ஒற்றர்களே அவர் கண்களிலிருந்து தப்பமுடிவதில்லை. மொகலாய ஒற்றர்களுக்கு அவர் எப்பொழுது தரைக்கு வருகிறார்,

எப்பொழுது கடலுக்குச் செல்கிறார் என்பது புரியவில்லை. பாம்பின் கால் பாம்பறியும் என்ற பழமொழிகூட அவர் விஷயத்தில் பொய்த்துவிட்டது. அவரைப் பிடிக்க மகாராஷ்டிர மன்னன் ஷாஹு செய்து வரும் முயற்சிகள் எதுவும் இன்றுவரை கைகூடவில்லை. அப்பேர்ப்பட்டவரிடமிருந்தா நீ தப்பிவிடப் போகிறாய்!'' என்று மிக இகழ்ச்சியுடன் சொற்களைக் கொட்டினான் ஸாத் ஸித்தி.

ஸாத் ஸித்தியின் சொற்கள் இதயசந்திரன் இதயத்தைக்கூட ஓர் அசக்கு அசக்கியது. கனோஜி ஆங்கரேயிடம் அவன் வைத்திருந்த மதிப்பைக் கண்ட தமிழக வீரன் பெரிதும் பிரமித்துப் போனான். மேலும் ஸாத் ஸித்தியின் மனத்தை அறிய, ''கனோஜி ஆங்கரேயின் கண்கள் சர்வேசுவரன் கண்களா?'' என்று வினவினான்.

''அதில் சந்தேகம் வேண்டாம் தமிழா! ஆண்டவனை நான் கண்டதில்லை ஆனால் ஆங்கரேயைக் கண்டிருக்கிறேன். கொங்கணியின் கடற்கரை முக்கால்வாசி மலைக்கரை. நூற்றுக்கணக்கான நதிகளும் அருவிகளும் ஓடைகளும் மலைகளைக் குடைந்து கடலில் பிரவேசிப்பதால் நீரோடிக் குகைகளும் காடுகளும் புதர்களும் கொங்கணியில் உண்டு ஆனால் அத்தனை குகைகளும் புதர்களும் காடுகளும் ஆங்கரேயிடமிருந்து உனக்குப் பாதுகாப்பளிக்கா. ஆங்கரே உன்னைப் பிடிக்க இஷ்டப்பட்டால் அவர் கையிலிருந்து தப்பமுடியாது'' என்று திட்டவட்டமாக அறிவித்தான் ஸாத் ஸித்தி

கனோஜி ஆங்கரே திறமையான மாலுமி! பெருவீரர் என்பதையெல்லாம் இதயசந்திரன் கேள்விப்பட்டிருந்தாலும், நூற்றுக்கணக்கான குகைகளையும் நதிகளையும் அவர் சதா கவனித்துக் கொள்வாரென்பது வீண் பிரமை என்று எண்ணியதால், ''அஞ்சன்வேல் தலைவரே! அப்படி என்னைப் பிடிக்க முடிந்தால் கனோஜி பிடிக்கட்டும். ஆனால் நான் இந்த மகாராஷ்டிரப் போட்டியிலிருந்தும் உங்களுக்குள்ளிருக்கும் பூசலிலிருந்தும் விலகிச்செல்ல முடிவு செய்து விட்டேன்'' என்று கூறியதன்றிச் செயலிலும்



இறங்க முற்பட்டு, ''தலைவரே! இப்பொழுது இந்தக் கதவைத் திறந்துகொண்டு வெளியேறுகிறேன். நான் கதவைத் திறந்ததும் நீர் கூவ முற்பட்டாலும் சரி; அசைய முற்பட்டாலும் சரி, திரும்பிச் சுடத் தவற மாட்டேன். ஒரு சிறந்த வீரனை அழிக்க எனக்கு இஷ்டமில்லை. அழிக்கும் அவசியத்தை நீங்கள் ஏற்படுத்த மாட்டீர்களென்று நினைக்கிறேன்'' என்று கூறிவிட்டுக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து கதவை ஓசைப்படாமல் சாத்தினான். பிறகு கைத்துப்பாக்கியைக் கச்சையில் செருகிக்கொண்டு சற்று எட்ட நின்றிருந்த அபிஸீனியக் காவலரில் ஒருவனை விளித்து, ''அவசர வேலையாகத் தலைவர் அனுப்பியிருக்கிறார் என்னை. நான் திரும்பும் வரையில் யாரும் அவரைத் தொந்தரவு செய்யாதிருக்கக் கட்டளையிட்டிருக்கிறார்'' என்று எச்சரித்து விட்டு விடுவிடு என நடந்து வாயிலில் வந்து புரவியில் தாவியேறி அதை ஸாத் ஸித்தியின் மாளிகையின் பின்புற வாயிலாக வெகு வேகமாகச் செலுத்தினான்.

ஸாத் ஸித்தியின் காவலர் யாரும் அவனைத் தடை செய்யவோ தொடரவோ முடியவில்லை. ஸாத் ஸித்தியின் உத்தரவுப்படி அவன் வந்து சென்றதாலும் ஸாத் ஸித்தியின் கட்டளையை நிறைவேற்றச் செல்லுவதாக அவன் அறை முகப்புக் காவலனிடம் இரைந்து அறிவித்திருந்ததாலும், அவனைத் தடைசெய்யாதது மட்டுமின்றி அவன் புரவியின் சேணத்தை முகப்பு மண்டபத் தூணிலிருந்து அவிழ்த்துக் கொடுக்கவும் செய்தனர்.

ஆனால் அவன் புரவியேறிய மறுவினாடி ஸாத் ஸித்தியின் மாளிகை அமர்க்களப்பட்டது. ஸாத் ஸித்தி ஒரே பாய்ச்சலாக மஞ்சத்திலிருந்து பாய்ந்து, மஹாலின் கதவைத் தடதடவெனத் தட்டித் திறக்க வைத்து வெளியே ஓடி வருவதற்கும் மாளிகைப் பின்புறப் பாதையில் இதயசந்திரன் புரவி பாய்ந்து இறங்குவதற்கும் நேரம் சரியாயிருந்தது.

முதல் ஜாமம் அப்பொழுது முடியும் தருவாயிலிருந்தாலும் பரசுராமன் சன்னிதி வீதிக் கடைகளில் வாணிபக் கூச்சலும் மற்ற இடங்களில் வேறு பேச்சொலிகளும், மக்கள் நடமாடும் அரவமும் நிரம்பிக் கிடந்தன. ஆனால் படகுத் துறையை நோக்கி வளைந்து வளைந்து சென்ற அந்த மலைப் பாதையில் மட்டும் மனித நடமாட்டம் இல்லாமலிருந்தது. பாதையின் இருபுறங்களிலும் இடம் விட்டுவிட்டு வளர்ந்திருந்த பெரும் புதர்களிலிருந்த பட்சிகள், அணில்கள் இவற்றின் சத்தமும் வாசிஷ்டி நதியின் பிரவாக சப்தமும் அலையோசையும் தவிர, வேறெந்த சத்தமும் அங்கில்லை. வாசிஷ்டியின் பல இடங்களில் தீபங்கள் எரிந்து கொண்டிருந்ததால், கரையோரத்தில் மட்டும் வெளிச்சமிருந்தது. இடையே பேரிருட்டும் இருந்ததை நோக்கிய இதயசந்திரன், அந்த இருட்டை நோக்கி வெகு வேகமாகப் புரவியைச் செலுத்தினான். அவன் புரவி இருட்டடித்த இடத்தை எட்டுவதற்கு முன்பாகவே ஸாத் ஸித்தியின் அபிஸீனிய வீரர்கள் அவனைத் தொடர்ந்து வந்தனர். அவர்கள் புரவிகளின் காலடிகள் மலைச்சரிவில் தடதடவெனச் சப்தித்தன. காலடிகளில் இடறி உருண்ட கற்குழவிகள் சரிவில் தாண்டித் தாண்டி எழுந்து படீர் படீரெனத் தூரத்தில் ஓசையுடன் விழுந்தன. இதயசந்திரனுக்கு மலைச் சவாரி அத்தனை பழக்கமில்லாவிட்டாலும் அவன் கூடியவரை எச்சரிக்கையுடனும் வேகத்துடனும் புரவியைச் செலுத்தினான். ஓரிரு முறை திரும்பிப் பார்த்தபோது அபிஸீனிய வீரர்கள் இருட்டில் பெரும் பிசாசுகளைப் போல் வந்து கொண்டிருந்ததையும் அவர்கள் வேகம் கிட்டத்தட்ட தன் புரவியின் வேகத்தளவே இருந்ததையும் கவனித்தான். மகாராஷ்டிரர்களைத் தவிர மற்றவர்களுக்கு அதிக வேகமாக மலைச்சவாரி சாத்தியமில்லையென்பதைப் புரிந்துகொண்டதால் சிறிது மன நிம்மதியுடன் புரவியை நடத்தினான்.



அந்த மலைப்பாதை சில இடங்களில் மிகுந்த சரிவுடனும் பெரும் குத்துக் கற்களுடனுமிருந்தது. சில இடங்களில் புதர்கள் அதிகமாக வளர்ந்துவிட்டதால் பாதையை அணுகிக் கொண்டிருந்தன. ஒரோர் இடத்தில் மரக்கூட்டமொன்றும் பாதையை அணைத்து நின்றது. அந்தத் திக்கை நோக்கிப் புரவியைச் செலுத்திய இதயசந்திரன் மரக் கூட்டத்தில் புகுந்துவிடத் திருப்பினான் புரவியை. ஆனால் மரக்கூட்டத்தின் கிளைகள் மிகத் தாழ இருந்ததால் புரவியில் அமர்ந்தவண்ணம் உள்ளே நுழைய முடியவில்லை அவனால். உட்சென்ற புரவியைச் சட்டென்று பின்னுக்கிழுத்து மறுபடியும் பாதைக்குக் கொணர்ந்தான். இந்தச் சிறு அவகாசத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஸித்தியின் வீரர்கள் அவனை அணுகிவிட்டதால் இரு பெரும் வாள்கள் அவன் கழுத்தை நோக்கிப் பின்புறத்தில் நெருங்கின. சட்டென்று புரவியைத் திருப்பிய இதயசந்திரன் கையில் இடைக் கச்சையிலிருந்த அவன் வாள் பளிச்சிட்டது. மகாராஷ்டிரர் வாள்கள்போல வளைந்திருந்த அந்த வாள் கண்ணிமைக்கும் நேரத்தில் இரு வாள்களைத் தடுத்ததன்றி, மீண்டும் ஒரு முறை பின்னுக்குச் சென்று திரும்பி ஒரு காவலன் கையிலும் பாய்ந்து மீண்டது. சண்டை துவங்கி நாலைந்து வினாடிகளுக்குள் இரு அபிஸீனிய வீரர்களின் கைகளில் தமிழன் வாள் பாய்ந்துவிட்டதன்றி அவன் கையிலும் இரண்டு மூன்று கீறல்களால் ரத்தம் லேசாகத் துளிர்த்திருந்தது. ஆழ்ந்த காயத்தையும் லட்சியம் செய்யாமல் ஒழுகிய ரத்தத்துடன் அவர்கள் தன்னை மீண்டும் மீண்டும் சுற்றிக் கொண்டதைக் கண்ட இதயசந்திரன், அவர்களிடம் கைத்துப்பாக்கிகளிருந்தும் அவர்கள் அவற்றை உபயோகிக்காததைக் கவனித்தான். கைத்துப்பாக்கி சத்தத்தால் பரசுராம பட்டணவாசிகளையோ, ஆசிரமவாசிகளையோ எழுப்பக் கூடாதென்ற உத்தேசத்தில் அபிஸீனியர் போரிடுவதை உணர்ந்த இதயசந்திரன் அதுவரையில் தனக்குப் பாதுகாப்பு என்பதை அறிந்தான்.

அத்தகைய பாதுகாப்புஇருப்பினும் அதிக நேரம் போராட இஷ்டப்படாத அவன் தன் புரவியைக் காலால் விலாவில் ஓங்கி உதைத்துச் சரேலென்று முன்னுக்குச் செலுத்தி அபிஸீனியரை ஊடுருவிச் சென்று மீண்டும் திரும்பி மலைச்சரிவில் வெகு வேகமாக வந்தான். அவன் நோக்கத்தைப் புரிந்துகொண்ட புரவியும் காற்று வேகத்தில் சரிவிலிறங்கி அபிஸீனிய வீரர்களின் அணிக்குள் பாய்ந்தது. அது பாய்ந்த வேகத்தாலும் இதயசந்திரன் வாள்முனையிலிருந்து தப்பி, பக்கவாட்டில் தாக்க முனைந்த அபிஸீனியரின் புரவிகள் சற்று விலகியதாலும் அவர்களைத் தாண்டிச் சரிவில் பறந்து விட்ட இதயசந்திரனின் புரவி பாதையில் தடதடவென்ற ஒலி கிளப்பிக்கொண்டு வெகு வேகமாகச் சென்றது.

இதயசந்திரன் இஷ்டப்படி புரவியை ஓடவிட்டான் பாதையில். புதர்களையும் கற்களையும் தாண்டிப் பாய்ந்து சென்றது புரவி படகுத்துறை நோக்கி. இடையே மற்றொரு பகுதியில் குறுக்கிட்ட ஒரு மரக்கூட்டத்தில் திடீரெனத் திரும்பிக் குறுக்கு வழியில் ஓட ஆரம்பித்தது. குறுக்கு வழி புரவி பாதையல்ல. சாதாரணமாகக் கால் நடையாகச் செல்லும் வேடர்கள் செல்லும் ஒற்றையடிப் பாதை அந்த செப்பனிடாத வழியில் மரக்கூட்டங்களின் நடுவில் சென்றுவிட்ட புரவியிலிருந்து திடீரெனக் கீழே குதித்த இதயசந்திரன் புரவியை மட்டும் ஓடவிட்டான் அந்தப் பாதையில் பிறகு, பக்கத்திலிருந்த மரத்தின் மேலேறி அதன் பெருங்கிளையொன்றில் அடர்ந்த இலைகளுக்கு மத்தியில் பதுங்கிப் படுத்துக் கொண்டான்.

துரத்தி வந்த காவலர் மரக் கூட்டத்துக்குள் புகுந்து வெகு வேகமாகத் தாண்டிச் சென்றனர். மரக் கூட்டத்தின் மறைவைத் தாண்டியதும் புரவி வெகு தூரத்தில் தனித்து ஓடுவதைக் கண்டு மீண்டும் திருப்பி, தோப்புக்குள் வந்து தோப்புப் புறத்தையும் புதர்களையும் ஆராய்ந்தும் பலனில்லாததால் அந்த மரத்தின்கீழ் நின்ற ஓர் அபிஸீனியன் மற்றவர்களைப் பார்த்துச் சொன்னான்: ''எப்படியும்



அவன் படகுத் துறைக்கு வருவான். அங்கு வாருங்கள்,'' என்று. அடுத்த வினாடி காவலர் படகுத்துறை நோக்கிப் பறந்தனர்.

அபிஸீனியர் புரவிக் காலடிகள் சற்று மட்டுப் பட்டதும் மரத்திலிருந்து இறங்கிய இதயசந்திரன் மீண்டும் பாதைக்கு வந்து திரும்பி, புதர்ப் பகுதிகளில் மறைந்து மறைந்து ஸாத் ஸித்தியின் மாளிகைப் பக்கம் சென்றான். மாளிகையின் பின்புற வாயிலுக்குப் பல அடிகள் முன்பாகவே இருந்த புதரொன்றில் மறைந்து மண்டியிட்டு உட்கார்ந்து கனோஜி ஆங்கரேயின் வரவை எதிர்பார்த்திருந்தான். நடுநிசி ஆகியும் ஆங்கரே வரவில்லை. நடுநிசி துவங்கிச் சிறிது நேரத்திற்கெல்லாம் இதயசந்திரன் பாதையில் இறங்காமல் வேறு திசை வழியே காட்டுப் பகுதியில் நுழைந்து வாசிஷ்டி நதியை நோக்கி மெல்ல மெல்ல இறங்கிச் சென்றான். அரை காத தூரம் பதுங்கிப் பதுங்கி நடந்து நதி மலையில் மோதிய பாறையொன்றின் அருகில் வந்து பாறையளித்த மறைவில் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டான்.

''உட்கார்ந்த ஒரு நாழிகைக்குப் பிறகு அந்தப் பாறையை நோக்கி வந்தது ஓர் உருவம். இதயசந்திரன் உட்கார்ந்திருந்த பாறை இருட்டில் வந்து அதுவும் அவனுக்கருகில் பதுங்கிக் கொண்டது. ''இதுதான் சமயம். நிலவு வந்துவிட்டால் தப்புவது கஷ்டம்!'' என்று அவனைத் தொட்டுக் கூறவும் செய்தது அவன் முகத்தைத் தொங்கப் போட்டு உட்கார்ந்திருந்தான்.

''எழுந்திருங்கள்'' என்று தூண்டியது அந்தக் கரம்.

''எதற்கு!'' குரலை மாற்றிக்கொண்டு கேட்டான் தமிழன்.

''ஜலதீபம் தயார்'' என்றது குரல். அந்த உருவத்தின் கை அவன் கையின் மேல்பாகத்தை அழுத்திக் கொடுத்தது. இசைத்தது குரல். அவன் கையை அசைத்தது மலர்.

## அத்தியாயம் 23

# பேச்சில் வந்த ஆபத்து

பாறைக்கு அப்புறம் வாசிஷ்டியின் அலைகள் மோதிப் பளக் பளக்கென்று தாளம் போட, பாறைக்கு இப்புறம் படு இருட்டு பரந்து கவிழ்ந்திருந்த சூழ்நிலையில் இன்பக் குரலொன்று இசைக்க, நதியின் நீர்ப் பரப்புக்கு மேல் வீசிய காற்று 'அம்' என்று தொடர்ந்து சுருதி கூட்ட, தன் கையை ஒரு மலர்க்கரம் பிடித்து அழுத்தியபோது, செய்வதென்னவென்றறியாமல் ஒரு விநாடி திகைத்தான் இதயசந்திரன். தன் பக்கத்தில் இருட்டில் வந்தமர்ந்து கொண்டது ஒரு பெண்ணென்பது அவனுக்கு நன்றாகப் புரிந்திருந்தாலும் அவள் வேறு யாரையோ எதிர்பார்த்து அங்கு வந்திருக்கிறாளென்பதையும் பாறை மறைவிலிருந்து எழுந்துவிட்டால் தன் குட்டு அம்பலமாகி விடுமென்பதையும் உணர்ந்து கொண்ட இதயசந்திரன், ''நீ முன்னால் போ! நான் வருகிறேன்.'' என்று கூறினான் மிக மெதுவாகக் குரலை மாற்றி. என்னதான் குரலை மாற்றினாலும் வந்த பெண் எதிர்பார்த்த குரலாக அது இருக்க முடியாதாகையால் அந்தப் பெண் கண்டிப்பாகத் தன்னைச் சந்தேகிப்பாளென்பதும், எந்த விநாடியிலும் அவளுடைய அதிர்ச்சியையும் ஆவேசத்தையும்தான் அனுபவிக்க வேண்டியிருக்குமென்பதும் தெரிந்திருந்தாலும் வேறு வழியின்றிப் பதிலைச் சொன்னான் தமிழகத்தின் வாலிபன். ஆனால் அந்தப் பெண் அவன் குரலைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் சொற்படி பாறையின் மறைவிலிருந்து எழுந்து பாறையைச் சுற்றி வளைத்துச் சென்றாள். இதயசந்திரனும் எழுந்திருந்து அவளை மெல்லத் தொடர்ந்து சென்றான். அந்தப் பாறையிலிருந்த பகுதியில் பரசுராம பட்டணத்தின் தீப ஸ்தம்பத்தின் ஜோதிகூட விழாவிட்டாலும், பாறையின் சூழ்நிலைகூட இருண்டு கிடந்தாலும் பாறையின் மறைவிலிருந்த மையிருட்டு வெளியே இல்லாத



தால் எதிரே சென்ற பெண்ணைக் காண முடிந்தது அந்த வாலிப வீரனால்.

அந்தப் பெண் பானுதேவியைவிட வயதில் சிறியவளாயிருக்க வேண்டுமென்று அவள் தோற்றத்திலிருந்தே ஊகித்த இதயசந்திரன், கொங்கணிப் பெண்களுக்கு இயற்கையாக அமையும் அங்க லாவண்யங்கள் அந்தப் பெண்ணுக்கும் அமைந்திருந்ததைக் கவனித்தான். மெல்லிய அவள் தேகம் வளைய வேண்டிய இடங்களில் நன்றாக வளைந்திருந்ததால் எழுச்சியடைந்த இடங்களும் நன்றாக எழுச்சியடைந்ததைக் கண்ட இதயசந்திரன், அவள் திட்டமான நடையிலிருந்து அந்த மெல்லிய தேகத்தில் உறுதி அதிகமென்பதைப் புரிந்து கொண்டான். மலைப் பகுதியின் முரட்டுக் கற்கள்மீது பாதரட்சையற்ற அவள் பாதங்கள் அலட்சியமாக நடந்ததைப் பார்த்த இதயசந்திரன், அந்த மலைப் பகுதிக்கு அவள் புதிதல்லவென்பதையும் புரிந்து கொண்டான். முரட்டுக் கற்கள்மீது பாவிப் பாவி நடந்து சென்ற கால்கள் உடலின் மேல் பகுதிகளை அசைத்து அசைத்து, பல இடங்களை ஏற்றி இறக்கவே, அவள் ஏதோ நடனம் செய்து கொண்டு செல்வது போலிருந்ததேயொழிய ஆபத்துக் காலத்தில் தப்பும் வசதி நோக்கித் துரிதப்பட்டுச் செல்வதாகத் தோன்றாதிருக்கவே அவள் அழகோடு மிகுந்த நிதானமும், துணிவும் கலந்திருக்கிறதென்பதைப் புரிந்து கொள்வது ஒரு பிரமாதமாயில்லை இதயசந்திரனுக்கு. அவள் அழகிய கழுத்துக்கு மேலிருந்த தலையில் அவள் சின்னஞ்சிறு துணியைக் குறுக்கே சுற்றிக் குழல்கள் காற்றில் பறக்காமல் முடிந்திருந்தாள். அரபு மாலுமிகள் கட்டும் அந்தக் கட்டைக் கண்ட இதயசந்திரன் அவள் யாரோ மாலுமியின் பெண்ணாக இருக்க வேண்டுமென்று ஊகித்தான். அவன் ஊகம் சரியென்று நிரூபணமாவதற்கு வேண்டிய நிகழ்ச்சிகள் அடுத்த சில விநாடிகளுக்குள் ஏற்பட்டன.

பாறை மறைவிலிருந்து எழுந்த அந்தப் பாவை வாசிஷ்டி நதியின் கரையோரமாக இருந்த கரடு முரடான

பாதையில் இருபது முப்பது அடி தூரம் நடந்ததும் பாறைகளுக்கருகே நதி புகுந்ததால் பிளவு விட்டு மணல் அடித்திருந்த ஒரு பகுதிக்குள் இறங்கினாள். அங்கிருந்த தளையொன்றில் இரு பக்கமும் இருந்த பாறைகளின் நடுவில் கட்டப்பட்டிருந்த சிறு படகொன்றை அணுகியதும் திரும்பி இதயசந்திரனை நோக்கிப் படகில் ஏறிக்கொள்ளும்படி சைகை செய்தாள். அவள் திரும்பிப் பார்த்ததுமே தனது நிலை விபரீதமாகி விடுமென்று நினைத்த இதயசந்திரன் சட்டென்று நின்ற இடத்தில் நின்றான். கவலையும் குழப்பமும் நிரம்பிய கண்களால் அவளை நன்றாக நோக்கினான். அவளும் அவனை ஏறெடுத்து நோக்கினாளானாலும் அவள் முகத்தில் எந்தவித மாறுதலும் இல்லாதிருந்ததே வியப்பாயிருந்தது வாலிபனுக்கு. அவள் தன்னை நோக்கி, ''உம், நேரமாகிறது. இன்னும் சில விநாடிகளில் நிலவு புறப்பட்டுவிடும்,'' என்று சர்வ சாதாரணமாக எச்சரித்தது அவன் வியப்பை உச்சிக்குக் கொண்டு சென்றது.

அவன் நாலைந்து அடிகளில் வேகமாக அவள் நின்றிருந்த இடத்தை அணுகினான். ''நான் யாரென்பது தெரியுமா உனக்கு?'' என்று வினவவும் செய்தான்.

அவள் பதில் தயக்கமின்றி வந்தது. ''தெரிய வேண்டிய அவசியமில்லை'' என்றாள் அவள். இதைச் சொன்ன அவள் இதழ்களில் அலட்சிய சிரிப்பு தவழ்ந்து கிடந்தது. இதழ்களின் அழகை அந்தச் சிரிப்புப் பன்மடங்கு அதிகப்படுத்திக் காட்டியது. அப்படிச் சிரித்தபோது அவள் பெருங் கண்களும் நகைத்ததாகத் தோன்றியது இதயசந்திரனுக்கு. காட்டுப் புஷ்பம் போல் செழித்து ஒளிவிட்ட கன்னங்களுக்கு உவமை சொல்ல யாராலும் முடியாதென்று நினைத்தான் தமிழன். அவள் அரபு மாலுமிகள் உடையை அணிந்திருந்ததால் காலில் போட்டிருந்த சராய் முழங்காலை விட்டுச் சற்றே இறங்கிப் பிடித்திருந்ததன் விளைவாக அவள் கால்களின்



ஆடு சதையை ஆற்றின் அலைகள் அவ்வப்போது அடித்து நனைத்திருந்ததைக் கண்ட இதயசந்திரன் தன் புத்தி பெரிதும் சபலிப்பதை நினைத்து வியந்தான். முன் இரவில் பானுதேவியிடம் லயித்த தன் மனம் அந்த மாலுமிப் பெண்ணிடம் பாய்வதை நினைத்து, 'இது என் பலவீனமா அல்லது கொங்கணிப் பெண்களின் இணையிலா வசீகர சக்தியா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அவள் இருந்த தோரணையிலிருந்து, அவள் அணிந்திருந்த உடையிலிருந்து, அவள் எந்த இனத்தவள் என்பது விளங்காதிருக்கவே, ''பெண்ணே, நீ யார்? உன் பெயர் என்ன?'' என்று வினவினான்.

அவள் அவனை விநோதமாக உற்று நோக்கினாள். ''என் முகத்தை ரசிக்க, என் கால்களைக் கண்டு பல்லை யிளிக்க, உங்களை அழைத்து வரவில்லை நான். என் பெயரைப் பற்றி நீங்கள் அறிய வேண்டிய அவசியமில்லை'' என்று கூறினாள் அவள் திடமான, உஷ்ணமான குரலில்.

''பெயரைக் கேட்கக் கூடாதா?'' என்று வினவினான் இதயசந்திரனும் வியப்பு ஒலித்த குரலில்.

''உங்கள் பெயரை நான் கேட்டேனா?'' என்று வினவினாள் அவள்.

''இல்லை. கேட்கவில்லை.''

''நீங்கள் மட்டும் என் பெயரைக் கேட்பானேன்?''

''அதற்குக் காரணம் இருக்கிறது.''

''என்ன காரணம்?''

''நான் யாருடன் செல்கிறேன் என்பதை அறிய வேண்டும்.''

''இல்லாவிட்டால்?''

''உங்களுடன் வருவதோ வர மறுப்பதோ என் இஷ்டம்.''

அந்தப் பெண் முகத்திலிருந்த உஷ்ணம் மறைந்து மீண்டும் புன்முறுவல் விரிந்தது. ''உங்களிஷ்டம் இல்லையென்று நினைக்கிறேன்.''

''ஏன்?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''கச்சையைப் பாருங்கள்'' என்றாள் அந்தப் பெண்.

இதயசந்திரன் சட்டென்று தலைகுனிந்து தன் கச்சையை நோக்கினான். அதில் தனது கைத்துப்பாக்கி இல்லாதது அதிர்ச்சியைத் தந்தது அவனுக்கு. மறுவினாடி அவன் தலை நிமிர்ந்தபோது அவன் கைத்துப்பாக்கி அந்தப் பெண்ணின் கையிலிருந்தது. அதன் வாய் அவனைப் பயங்கரமாக நோக்கிக் கொண்டிருந்தது.

அவள் அந்தக் கைத்துப்பாக்கியைத் தனது இடது கையில்தான் ஏந்தியிருந்தாள். ஆனால் அந்த இடதுகையும் கைத்துப்பாக்கியை ஏந்த வேண்டிய முறையில் ஏந்தியிருந்தது. அவள் ஆள்காட்டி விரல் அந்தக் கைத்துப்பாக்கியின் குதிரையில் திட்டமாகப் பதிந்திருந்தது. அந்தத் தோரணையிலிருந்தே இதயசந்திரன் புரிந்துகொண்டான் அவளால் அந்தக் கைத்துப்பாக்கியைப் பிரயோகிக்க முடியுமென்று. ஆனால் அவள் ஏன் இடதுகையில் அதை ஏந்தியிருக்கிறாள் என்றும் எண்ணினான் அவன்.

அவன் எண்ணத்தை அவள் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ''பாறை மறைவில் உங்கள் கையை என் வலக் கையால் பிடித்திருந்ததால் கைத்துப்பாக்கியைக் கைப்பற்ற இடது கையை ஏவவேண்டியிருந்தது. ஏவிய கையே தொடர்ந்து செயல் புரியட்டும் என்று எண்ணினேன். இடது கை என்பதற்காக அலட்சியம் செய்ய வேண்டாம். இரண்டு கையாலும் நான் சுட முடியும்'' என்றாள் அவள் சர்வ சாதாரணமாக.

கைத்துப்பாக்கியை ஏந்தி நின்றதுமட்டும் ஓர் ஆண்மகனாயிருந்தால் இதயசந்திரன் நடந்து கொண்டிருக்கக் கூடிய முறையே வேறு. அவள் பெண் என்பதாலும் தானும், ஸாத் ஸித்தியிடமிருந்தும் பானுதேவியிடமிருந்தும் தப்ப வேண்டியிருந்ததாலும், மேற்கொண்டு ஏதும் பேசாமல் படகில் ஏறிக் கொண்டான். அவன் ஏறிக் கொண்டதும் அவன் மீது ஒரு கண்ணை வைத்தவண்ணமே தளையிலிருந்து அவிழ்த்துப் படகைச் சிறிது தள்ளி தண்ணீர் முழங்காலுக்கு வந்ததும் தாவி அவளும் படகில் குதித்தாள். படகின் ஒரு கோடியில் சுக்கானிருந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டு, ''இந்தாருங்கள்'' என்று கைத்துப்பாக்கியை அவன் மடியில் வீசினாள். ''அந்தத் துடுப்புகளை எடுத்து நதி ஓடும் திசையில் படகைத் திருப்பித் துழாவுங்கள்'' என்றும் உத்தரவிட்டாள்.

கைத்துப்பாக்கியை எடுத்து மீண்டும் கச்சையில் செருகிக்கொண்ட இதயசந்திரன் துடுப்புகளைத் துழாவினான். அவன் துழாவிய முறையிலிருந்தே அவன் படகு செலுத்தத் தெரியாதவனென்பதைப் புரிந்துகொண்ட அந்தப் பெண், ''அந்தத் துடுப்பை வளையத்துக்குள் சுழற்றுங்கள். அதோ அந்தப் பக்கத்துத் துடுப்பு செயலற்றிருக்கட்டும்'' என்று அவனுக்கு வழிகாட்டி, படகு கடல் நோக்கித் திரும்பியதும் சுக்கானால் அதை நட்டாற்றுக்குக் கொண்டு வந்தாள். பிறகு படகு ஆற்றுவேகத்தில் ஓடத் துவங்கியது. கடலின் எதிரலைகள் அன்று அதிகமாயிருந்ததால் நதிவேகம் கடலை நோக்கி அனுகூலமாக இருக்கவே படகு வெகு துரிதமாகச் சென்றது.

ஆற்றின் இருகரைகளிலுமிருந்த பரசுராமபுரமும் சிப்ளான் நகரமும் அந்த இரவில் இன்பக் காட்சியளித்தன. பரசுராமன் கோவில் கோபுரமும் அதனருகே எழுந்து நின்ற ஜோதி ஸ்தம்பமும் அந்த இரவில் வெகு ரமணியமாயிருந்தன. சில இடங்களில் காடுகளும் சில இடங்களில் புதர்களும் சில இடங்களில் பெரும் கறுப்புப் பாறைகளுமாகக் காட்சியளித்த பரசுராம மலையின் உக்ரத்தை சாந்தப்படுத்துவதுபோல் மலையின் அடிவாரத்தை நதியின் அலைகள் தொட்டுக் கொண்டிருந்தன. சிப்ளான் நகர

உப்பளத் தொழிற்சாலையின் காரியாலயம் கம்பீரமாக நதியின் தென் புறத்தில் எழுந்து நின்றது. அந்த நகர விளக்குகள் நன்றாக எரிந்துகொண்டிருந்த போதிலும் அவை நதிப்புறத்தை எட்டாததைக் கவனித்த இதய சந்திரன் யாரும் அந்த நதியில் ரகசியமாகச் சஞ்சரிக்க முடியும் என்பதை உணர்ந்து கொண்டான். யாருமறியா மல் அந்தப் பெண் தன்னைப் படகில் ஏற்றிச் செல்ல முடிந்ததன் காரணம் அவனுக்குத் தெரிந்தது.

ஆனால் 'இவள் யார்? யார் இவளை அனுப்பியது? நான் அந்தப் பாறையில்தான் மறைந்திருப்பேனென்பது இவளுக்கெப்படித் தெரியும்? என்னை எங்கு அழைத்துச் செல்கிறாள்?' என்ற கேள்விகளுக்கு விடை காணாததால் இதயசந்திரன் பல கேள்விகளைக் கேட்க இஷ்டப் பட்டான். ஆனால் கேள்விகளுக்கு நேரடியான பதில் ஏதும் வரவில்லை. கிடைத்த பதில்களும் ஊகத்துக்கு எந்த இடத்தையும் அளிக்கவில்லை.

''பெண்ணே!'' என்று துவங்கியதுமே அவள் வெட்டினாள் அவன் உரையாடலை, ''இனத்தைப் பற்றி என்ன இப்பொழுது?'' என்ற சொற்களால்.

''பெண்ணே என்றழைக்காமல் எப்படி அழைப்பது உன்னை?'' என்று வெறுப்புடன் கேட்டான் இதயசந்திரன்.

''அழைக்கவே அவசியமில்லை. ஆகையால் எப்படி அழைக்கவேண்டுமென்ற கேள்வியும் எழவில்லை'' என்று வந்தது பதில்.

''நான் அந்தப் பாறையில் மறைந்திருப்பேனென்பது உனக்கெப்படித் தெரியும்?'' என்று வினவினான் இதய சந்திரன்.

''எங்காவது ஓரிடத்தில் மறைந்துதானே ஆக வேண்டும்?'' என்றாள் அவள் நதிப்புறத்தை நோக்கி.

''உன்னை அனுப்பியது கனோஜி ஆங்கரேயா?''

''இருக்கலாம்.''



''சுவாமியா?''

''அப்படியுமிருக்கலாம்.''

இதைக் கேட்டதும் எரிச்சல் அதிகமாகவே, ''ஸாத் ஸித்தியாகக்கூட இருக்கலாமோ?'' என்று வினவினான் தமிழன்.

''ஏனிருக்கக்கூடாது?'' என்று பதில் கேள்வி கேட்டாள் அவள்.

''இவர்கள் யாருமில்லையென்று நினைக்கிறேன் நான்'' என்றான் அவன் குத்தலாக.

''நினைப்பதை யார் தடுத்தது?'' அவள் குரலில் ஏளனம் ஒலித்தது.

''உன்னை அனுப்பியது...'' என்று ஏதோ சொல்லப் போன இதயசந்திரனை, ''ஷாஹுவாயிருக்கலாம், தாராபாய் தேவியாயிருக்கலாம், பீஜப்பூர் நவாபாயிருக்க லாம்...'' என்று இடை புகுந்து நகைத்தாள் அவள்.

''இவர்கள் யாருமில்லை'' என்ற இதயசந்திரன் குரல் கடுகடுத்தது.

''நல்லது.'' அசட்டையுடன் வந்தது அவள் பதில்.

''உன்னை அனுப்பியது பானுதேவி'' என்று இதய சந்திரன் திட்டவட்டமாகக் கூறினான்.

இம்முறை அவள் பதில் சட்டென்று வரவில்லை. ஒரு விநாடி நிதானித்துவிட்டுக் கேட்டாள். ''யாரது! பானுதேவியா?'' என்று.

''ஆம்! பானுதேவி'' என்றான் இதயசந்திரன் பெண் மனத்தை இன்னொரு பெண்ணைப் பற்றிப் பேசித்தான் அசைக்க முடியுமென்ற காரணத்தால்.

''அவள் உங்கள் காதலி போலிருக்கிறது'' என்றான் அவள். அவள் குரலில் ஏற்கனவே ஒலித்த அசட்டை மறைந்திருந்தது.

''ஆம்'' என்றான் தமிழன்.

''அவள் அனுப்பவில்லை தூது. நான் எந்தப் பெண்ணின் தோழியுமல்ல'' என்றாள் அவள்.

''இருக்கமுடியாது'' என்றான் இதயசந்திரன் குரலில் சற்றே புகழ்ச்சியைக் காட்டி.

அவள் அவனை உற்று நோக்கினாள். ''என்ன அப்படித் திட்டமாகக் கூறுகிறீர்கள்?''

''உனக்குத்தான் தோழிகளிருப்பார்கள்.''

''நீங்கள் சொல்வது புரியவில்லை.''

''எனக்குப் புரிகிறது.''

''எது?''

''அழகு.''

''உம்.''

''கம்பீரம்.''

''உம்...''

''துணிவு.''

''அப்படியா?''

''இத்தனைக் குணங்களும் தலைவிக்குத்தான் பொருந்தும். பணிப் பெண்ணுக்குப் பொருந்தாது'' என்று பாராட்டினான் இதயசந்திரன்.

இதைக் கேட்ட அவள் சற்று லேசாகவே நகைத்தாள். ''வீரரே! நீர் கெட்டிக்காரர்'' என்றும் கூறினாள் நகைப்புக்கிடையே.

''எதில் கெட்டிக்காரன்? சிறைப்படுவதிலா?''

''இல்லை. சிறைப்படுத்துவதில்''

''யாரை?''

''பெண்களை. அந்த வித்தை உங்களுக்கு நன்றாகத் தெரிகிறது.''



''எப்படித் தெரிகிறது?''

''நீங்கள் வீசும் சொல் வலையிலிருந்து.''

''ஆனால் ஒரு விலக்கும் இருக்கிறது.''

''என்ன சொல்கிறீர்கள்?'' என்று அவள் நகைத்து விட்டு நதியைப் பின்னோக்கிப் பார்த்தாள். திரும்பி அவனை நோக்கிய அவள் முகத்தில் கவலை தெரிந்தது. ''என்ன முட்டாள்தனம்?'' என்ற சொற்கள் அவளிட மிருந்து கிளம்பின.

''என்ன சொல்கிறாய்?''

அவள் அப்பொழுது அவனை நோக்கி உட்கார்ந்திருந் தாள். அவள் கை சுக்கானைப் பிடித்துக் கொண்டிருந்தது. சீறும் சொற்கள் அவள் உதடுகளிலிருந்து வந்தன. ''எனக்குப் பின்னால் பாருங்கள்'' என்றாள் அவள் கோபம் துளிர்த்த குரலில்.

இதயசந்திரன் அவளுக்கு அப்பாலிருந்த நதிப்புறத்தை நோக்கினான். நான்கு படகுகள் அந்தப் படகை நோக்கி வெகு துரிதமாக வந்து கொண்டிருந்தன. அதைக் கண்ட அவன் ஏதோ கேட்க முற்பட்டான். ''அனாவசியமாகப் பேசாதீர்கள். உங்கள் நச்சுப் பேச்சினால்தான் நான் பரசுராமபுரத்தின் படகுத் துறையைக் கவனிக்காமலிருந்து விட்டேன். இப்படி வாருங்கள்'' என்று தானிருந்த இடத்துக்கு அவனை வரச் சொல்லி வெகு லாகவமாக அவனிருந்த இடத்துக்குத் தான் சென்று துடுப்புகளை எடுத்துக் கொண்டாள். ''சுக்கானை சிறிது இடதுபுறம் திருப்பிப் பிடியுங்கள்'' என்று உத்தரவிட்டு, படகின் போக்கை நதியின் பிரவாகம் அதிகமாயிருந்த இடத்துக்குத் திருப்பினாள். துடுப்புகளை வெகு வேகமாக, வெகு அனாயாசமாகத் துழாவினாள்.

படகின் திருப்பத்தைக் கண்ட மற்றப் படகுகளும் சற்றுத் திரும்பி நீரோட்டம் அதிகரித்திருந்த இடத்தை அடைந்தன. அந்தப் படகிலிருந்த வீரர்களில் இருவர்

எழுந்து இதயசந்திரனை நோக்கிக் கைத்துப்பாக்கியால் சுடவும் செய்தார்கள். அந்தப் பெண் படகைத் திரும்பத் திரும்பத் துடுப்புகளைத் துழாவி, திசை மாற்றி மாற்றி ஓடச் செய்ததால் கைத்துப்பாக்கிகளின் சூடு பயனற்றுப் போயிற்று. துரத்திய படகுகளிலிருந்து கிளம்பிய துப்பாக்கிச் சத்தம் நின்றது. படகுகள் வெகு வேகமாக இதயசந்திரனும் அப் பெண்ணுமிருந்த படகைத் துரத்தின.

ஆனால் என்ன செய்தும் அப் பெண்ணின் கைலாகவமும் வாசிஷ்டி நதியின் வேகமும் மற்றப் படகுகளை அணுகவொட்டாமல் அடித்தன.

இப்படி சுமார் இரண்டு நாழிகைகள் கூட ஓட்டமும் பிடியுமாகப் படகுப்போட்டி நடந்தும் துரத்தியவர்கள் எண்ணம் பயனற்றுப் போகவே இதயசந்திரன் மகிழ்ச்சியடைந்தான். ''உன்னால் நான் பிழைத்தேன்'' என்றான்.

''வாயை மூடுங்கள், பேசிப் பிராணனை வாங்காதீர்கள். அபாயம் அதிகமாகிறது'' என்றாள் அந்தப் பெண்.

அவள் வீணாகப் பயப்படுகிறாளென்று நினைத்தான் இதயசந்திரன். பயம் வீணல்லவென்பதை வெகு சீக்கிரம் புரிந்துகொண்டான். அந்தப் படகுக்கு நேர் எதிரில் ஒரு கப்பல் நின்றுகொண்டிருந்தது. அதனருகே நாலைந்து படகுகளும் இருந்தன.

அவற்றைத் தாண்டிச் செல்வது கஷ்டமென்பதை உணர்ந்து கொண்டான் இதயசந்திரன். ஆனால் அந்தக் கப்பல் சற்றுப் பெரும் படகைப் போலவே இருக்கவே, ''இதைத் தாண்டுவது கஷ்டமா?'' என்றான்.

''அது *மஞ்சூரா'' என்றாள் அந்தப் பெண்.

---

* மஞ்சூரா தோணியைப் போன்ற சிறு போர்க் கப்பல். அதில் பதினைந்து மாலுமிகள் செல்லலாம். —*Kanhoji Angrey. By Manohar Malgonkari—pp. 63—65.*



''பெயரைப் பார்த்தால் மகாராஷ்டிரப் பெயராகத் தெரிகிறது'' என்றான் இதயசந்திரன்.

''ஆம். ஆனால் அதை மகாராஷ்டிரர்தான் செலுத்த வேண்டுமென்ற அவசியமில்லை'' என்ற அந்தப் பெண், ''வாயை மூடுங்கள். தொணதொணவென்று பேசிப் பிராணனை வாங்காதீர்கள். உங்கள் பேச்சினால் வந்த ஆபத்துதான் இது'' என்று எரிந்து விழுந்து அந்த மரக்கலத்தை நோக்கிப் படகைச் செலுத்தினாள். மரக்கலம் அரைநாழிகைப் பயணம் இருக்கையில், ''படகில் தலை தெரியாமல் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று உத்தரவிட்டாள். அந்த மரக்கலம் கிட்டே வரவரக் கூறினாள்: ''அந்த மரக்கலத்தைத் தாண்ட முடியாவிட்டால் படகை நான் கவிழ்த்துவிடுவேன். நீங்கள் நீரில் மூழ்கி நீந்தி வடக்குக் கரையைச் சேருங்கள். நான் பிறகு தொடருகிறேன்'' என்று.

மரக்கலம் நெருங்கி வந்தது. திடீரென விளக்குகள் அதில் எழுந்து ஆடின. ''எதிரிகள்! ஜாக்கிரதை! சொன்னது நினைவிருக்கட்டும்'' என்று கூறித் திடீரெனப் படகின் ஒரு பக்கத்துக்கு வந்து அவனையும் வரச்சொல்லிச் சுக்கானைப் பலமாகத் திருகினாள். படகு புரண்டது. நீரின் வேகத்தில் இருவரும் மறைந்தனர்.

## அத்தியாயம் 24

# தமிழ்ப் புலி

கொங்கணிப் பகுதியில் இதயசந்திரனுக்கு நீந்தக் கிடைத்த இரண்டாவது வாய்ப்பு அது. கடலில் நீந்தக் கிடைத்தது முதல் வாய்ப்பு. கடலை நோக்கிக் கனவேகத்தில் விரைந்த வாசிஷ்டி நதியில் நீந்தக் கிடைத்தது இரண்டாவது வாய்ப்பு. இரண்டு வாய்ப்பும் ஆபத்தை முன்னிட்டே கிடைத்தன. ஆனால் இரண்டுக்கும் ஒரு வேறுபாடும் இருந்தது. முதல் வாய்ப்பில் காயம்பட்டுத் தன்னந்தனியே நீந்தினான். இரண்டாவது வாய்ப்பில் அவன் காயம் களிப்பில் ஆழ்ந்திருந்தது, காரிகையொருத்தியின் துணையும் இருந்தது.

அந்தத் துணையுடன் நீரில் விழுந்து மூழ்கிவிட்ட இதயசந்திரன், வாசிஷ்டி நதி மலையிலிருந்து இறங்குவதன் காரணமாக சமாளிக்க முடியாத வேகத்தைப் பெற்றிருந்ததையும் கடலிலிருந்து வந்த எதிர் அலைப் பிரவாகம்கூட அதன் வேகத்தை அதிகமாகக் குறைக்க முடியவில்லையென்பதையும் உணர்ந்ததால், வடகரைக்கு நேர் குறுக்கே நீந்த முடியாமல் பிரவாகத்தை அனுசரித்தும் குறுக்கே மெல்ல மெல்லச் செல்ல முயன்றுமே நீந்தினான். சோணாட்டைச் சேர்ந்தவனாதலால் நீச்சலில் வல்லமை பெற்றிருந்த அவன், திருச்சியின் பெருங் காவிரியிலும் தூத்துக்குடியின் முத்துக்குளிக்கும் கடல் பகுதியிலுங்கூட நீந்திப் பழக்கமுடையவனாதலால் நீருக்குள் கைகளை துடுப்புகளெனத் துழாவி வெகு லாகவமாக நீந்தினான். அவன் லாகவத்தை விட அவனுக்கு அருகில் நீந்திய பெண்ணின் நீச்சு மிக அற்புதமாயிருந்தது.

கைகளை நீருக்குள் துழாவியபோது ஓரிருமுறை அவள் மேல்பட்ட தனது இடது கையிலிருந்து அவள் உடல் மீன் போல் வளைந்து வேகத்துடன் செல்வதைப் புரிந்து



கொண்டான் தமிழன். சில சமயங்களில் அவள் சரீரமே அவன் சரீரத்துடன் உராய்ந்தது, உராய்ந்து விலகியும் சென்றது. உராய்ந்து அது விலகிய முறையிலிருந்து அந்தப் பெண்ணிடம் வாளைமீனின் வழவழப்பும் வளைவும் இருந்ததை அறிந்த இதயசந்திரன் நீருக்குள்ளும் ஒரு மோகனாஸ்திரம் தன்மீது பாய்ந்து விட்டதை உணர்ந்தான். அந்த மகிழ்ச்சியில் அவனும் வேகமாக நீந்தினான். இப்படிப் பல விநாடிகள் நீந்திச் செல்லுகையில் மூச்சுத் திணறவே, தலையை மேலே தூக்க முயன்ற இதயசந்திரனின் தலையை அவள் வேகமாகப் பிடித்து நீருக்குள் அழுத்தினாள். கொஞ்சமிருந்த மூச்சைத் தொடர்ந்து பிடித்து நாலைந்து கைமாறு போட்ட பிறகு அவன் கால்கள் கரையில் உதைத்தன. கைகளில் மணல் தட்டியது. கரையை அடைந்துவிட்ட உற்சாகத்தில் நீரில் புரண்டு, மணலில் புரண்டு கரையேறிய தமிழன் அவள் தனக்கு முன்பே கரையில் படுத்திருப்பதைக் கவனித்தான். நிலவு நன்றாக ஏறிவிட்டதையும் உணர்ந்தான்.

வாசிஷ்டியின் வடக்குக் கரையில், வளைவுகளெல்லாம் நிலவொளியில் தெரிந்து அவள் அழகுக்கு விளக்கம் தர, மல்லாந்து கிடந்த அந்தப் பட்டுப் பாவையை வைத்த கண் வாங்காமல் பார்த்து நின்றான் அந்த வாலிபன் பல விநாடிகள். அவனை நோக்கி முறுவல் கொண்ட அந்தப் பெண், ''நிற்க வேண்டாம். நீங்களும் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று தன் பக்கத்தில் இடத்தைக் காட்டினாள். இதயசந்திரன் மிகுந்த சங்கடத்துடன் ஆனால் மிகுந்த ஆவலுடன் அவள் பக்கத்தே படுத்தான். இரவு நான்காம் ஜாமத்தை எட்டிக் கொண்டிருந்த அந்த நேரத்தில், கொங்கணியின் அபரிமிதக் குளிரினாலும் வாசிஷ்டி நதியின் பனிக்கட்டி போன்ற சீதள நீராலும் விறைத்துக் கொண்டிருந்த இதயசந்திரன் உடல் நடுங்க மெள்ள அவள் பக்கத்தில் படுத்தான். அவளுக்கும் அவனுக்கும் நல்ல இடைவெளியிருந்தும் அவன் மனம் வேகமான உணர்ச்சிகளால் அலைக்கழிக்கப்பட்டு,

உடலைவிட உள்ளம் நடுக்கமுற்றிருந்தபடியால், அவள் அவனைத் திரும்பிப் பார்க்காமலே கூறினாள்: ''அப்படியே படுத்திருங்கள் நான் கூறும்வரை'' என்று.

அந்தக் குரலில் எச்சரிக்கையிருந்ததைக் கவனித்த இதயசந்திரன், ''இன்னும் ஆபத்திருக்கிறதா?'' என்று வினவினான் மெல்ல.

''ஆமாம்'' என்று பதில் கூறினாள் அந்தப் பெண்.

''அப்படியானால் இந்த ஈர ஆடையுடன் எத்தனை நேரம் படுத்திருக்கவேண்டும்?'' என்று வினவினான் இதய சந்திரன்.

''எத்தனை நேரம் படுத்திருந்தாலென்ன? உங்கள் ஆடை அலங்காரத்தைப் பார்த்து யார் மயங்கப் போகிறார்கள் இங்கே?'' என்று கூறி மல்லாந்து ஆகாயத்தைப் பார்த்தபடி நகைத்தாள் அவள்.

''ஆடை ஈரமாயிருப்பதால் குளிருகிறது'' என்றான் இதயசந்திரன்.

''சற்றுக் குளிரும். பிறகு சரியாகப் போய்விடும். ஆபத்தைப் போல்தான் குளிரும். முதலில் அச்சத்தைத் தரும், பழகினால் சகஜமாகிவிடும்'' என்றாள் அவள்.

இதயசந்திரன் தமிழகத்தின் நகைச்சுவையைக் காட்டத் தொடங்கி, ''உனக்குக் குளிர் விட்டுப் போயிற்றா?'' என்று வினவினான்.

''ஆம்.''

''நான் சொன்னதன் பொருள் தெரியுமா உனக்கு?''

தூக்கிவாரிப் போடும்படியாகப் பதில் கூறினாள் அவள் ''நன்றாகத் தெரியும்'' என்று.

''என்ன தெரியும்'' இதயசந்திரன் கேள்வி வியப்புடன் எழுந்தது.





''குளிர் விட்டதென்றால் பயம் போய்விட்டதென்று பொருள்'' என்றாள் அவள்.

''உனக்குத் தமிழ் தெரியுமா?''

''லேசாகத் தெரியும்''

''லேசாகத் தெரிந்தால் இந்த மாதிரி சொற்றொடரின் உட்பொருள் புரியாதே?''

''புரியாது. ஆனால் என் தந்தை இதை அடிக்கடி சொல்லுவார். சொல்லிச் சிரிப்பார்.''

''எதற்காகச் சிரிக்கவேண்டும்?''

''தமிழ் நாட்டின் அற்ப குளிருக்கே பயந்து தமிழர் ஒரு பழமொழியும் சிருஷ்டித்திருக்கிறார்களே, கொங்கணி குளிரைப் பார்த்தால் என்ன சொல்வார்கள் என்று கூறிச் சிரிப்பார்.''

''யார் உன் தந்தை?''

''எந்தத் தந்தை?''

இதயசந்திரன் சினத்துடன் ஒருக்களித்து ஒரு கையைத் தலைக்கு ஊன்றுகோலாகக் கொடுத்துக் கேட்டான், ''என்னோடு விளையாடுகிறாயா பெண்ணே?'' என்று.

''ஆம். உங்களோடு விளையாட ஆசையாயிருக்கிறது'' என்று சிரித்தாள் அவளும் அவனை நோக்கி ஒருக்களித்து.

''தந்தை சொன்னாரென்கிறாய், எந்தத் தந்தையென்கிறாய்?'' என்று சீறினான் இதயசந்திரன்.

''பெற்றெடுத்த தந்தையில்லை. எடுத்து வளர்த்த தந்தையிருக்கிறார்'' என்று கூறி மீண்டும் நகைத்தாள் அவள்.

''வளர்ப்புத் தந்தையின் பெயரைத்தான் சொல்லேன்'' என்று கேட்டான் இதயசந்திரன்.

அவளும் ஒரு கேள்வி கேட்டாள் பதிலுக்கு. அது அவனைத் திக்குமுக்காட வைத்தது. ''என்னைக்

கல்யாணம் செய்துகொள்ளப் போகிறீர்களா?'' என்று கேட்டு ஒருக்களித்த நிலையிலும் சற்று அதிகமாக நகைத் தாள் அவள்.

இதயசந்திரன் பெரிதும் குழப்பத்திலிருந்தான். அவன் முகம் குழப்பத்தாலும் வெட்கத்தாலும் பலப் பல மாற்றங் களை அடைந்தது. கண்கள்கூடச் சற்று அவள் கண்களை விட்டு அகன்றது. ''இதென்ன கேள்வி பெண்ணே'' என்று கேட்டான் குரலிலும் குழப்பம் தெரிய.

''என்னுடைய தந்தையின் பெயர், குலம், கோத்திரம் அனைத்தையும் விசாரிப்பதைப் பார்த்தால் அந்த எண்ணம் இருக்குமோ என்று நினைத்தேன்?'' என்றாள் அவள்.

இதயசந்திரன் அவள் கண்களை மீண்டும் நோக்கி னான். அந்தப் பெரும் கண்களில் ஒலி ஜொலித்துக் கொண்டிருந்தது. வெளேரென்ற அவள் கழுத்தை நோக்கினான். மடிந்திறங்கிய பக்குவ வயிற்றையும், வளைந்து இளைத்துக் கிடந்த இடையையும், பட்டுசுற்றிய வாழை மரத் தண்டுகளைப்போல் சராய் உள் பாய்ந்த கால்களையும் பார்த்தான். இத்தனையும் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

''என்ன, பெண் பிடித்துவிட்டதா?'' என்றாள் அவள்.

''உன்னைப் பிடிக்கப் பற்பல ஆண்டுகள் தவமிருக்க வேண்டும்'' என்று உள்ளுக்குள் சொல்லிக்கொண்டாலும் முந்திய இரவில் இன்னொருத்தியிடம் தன் மனம் பறிபோய்விட்டதை எண்ணிப் பார்த்தான். இருவரில் யார் அதிக அழகு என்று எடைபோடவும் செய்தான். எடை போட அவனால் முடியவில்லை. 'இருவரும் துணிவுள்ள வர்கள், கம்பீரமுள்ளவர்கள், இரு அழகிகளும் கம்பீரத்தை யும் திடீரெனத் துணிவையும் மறைத்து மென்மையை யும் மயக்கத்தையும் அளிக்கவல்லவர்கள்' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட இதயசந்திரன் பானுதேவியை நினைத்ததால் பக்கத்தில் ஒருக்களித்துத் தன்னை நோக்கி



நகைத்த பாவையைச் சிந்தையிலிருந்து அகற்றினான். ஆகவே அவனும் ஏளனமாகச் சொன்னான்: ''சம்பிரதாய மாகப் பெண் பார்க்கும்போது முடிவு சொல்கிறேன்'' என்று.

''உங்களுக்குச் சம்பிரதாயம் அதிகம் பிடிக்கும் போலிருக்கிறது'' என்று அவளும் ஏளனமாகக் கேட்டாள்.

''பிடிக்கும்.''

''ஆனால் கொங்கணியில் அது சாத்தியமில்லை.''

''ஏன்?''

''உங்களை ஸாத் ஸித்தி பிடித்துக் கொண்டால் சம்பிரதாயமாகக் கொல்லமாட்டான்.''

''கொலையில் சம்பிரதாயக் கொலை, அசம்பிரதாயக் கொலை என்று இரண்டா?''

''ஆம். சம்பிரதாயக் கொலை, விசாரணை நடத்திய பிறகு கைதியின் கடைசி வேண்டுகோளைக் கேட்டு, பிறகு கொல்வது, இது ஆங்கிலேயர் வழக்கம். ஸித்திகள் இத்தனைக் காலம் கடத்துவதில்லை.''

''சட்டென்று தீர்த்துவிடுவார்களோ?''

''அப்படியும் தீர்க்கலாம்.''

''வேறு வழியும் உண்டு போலிருக்கிறது?''

''உண்டு முதலில் தளைகளில் பூட்டி இரண்டு மூன்று நாள் வைத்திருக்கலாம். அதில் சாகாவிட்டால் வெட்டிப் போடலாம்.''

இந்த விஷயங்களைச் சர்வசாதாரணமாகச் சொன்னாள் அப்பெண். அச்சத்தை அறியாத இதய சந்திரன் மனம் ஸித்திகளின் குரூரத்தை நினைத்து வியந்ததே தவிர, இம்மியளவும் கலங்கவில்லை. அடுத்த கேள்வி அவனிடமிருந்து யோசனையுடன் வெளிவந்தது. 'இப்பொழுது நாம் எங்கிருக்கிறோம்?''

''பரசுராமபுரத்திலிருந்து காத தூரத்தில்.''

''அத்தனை தூரமா வந்துவிட்டோம்?''

''ஆம். ஆற்று வேகம் அதிகம். அரை ஜாமம் பயணம் செய்திருக்கிறோம்.''

''இன்னும் நாம் எத்தனை தூரம் போக வேண்டும்?''

''ஒன்றரைக் காத தூரம்''

''போனால்?''

''முகத்துவாரத்தை அடைவோம்.''

''ஜலதீபம் தயார் என்று சொன்னாயே என்னைச் சந்தித்தவுடன்?'' என்று வினவி அவளை உற்று நோக்கினான் இதயசந்திரன்.

''ஆம்.''

''அது கப்பல்தானே!''

''பெயரைப் பார்த்தால் அப்படித்தானிருக்கிறது.''

''நீ பார்த்ததில்லையா அதை?''

''இல்லை.''

''பிறகு எப்படிச் சொன்னாய்?''

''சொல்லச் சொன்னதைச் சொன்னேன்'' என்றாள் அவள். பிறகு ஏதும் சொல்ல மறுத்தாள். அவன் கடைசிக் கேள்வியைக் கேட்டுக் கொண்டிருந்தபோதே திடீரென அவள் எதையோ உற்றுக் கேட்பதாகத் தோன்றியது இதய சந்திரனுக்கு. அவள், ''உஷ்! சும்மாயிருங்கள்'' என்று அவன் கேள்விகளை அடக்கி, காதுகளை நன்றாகக் தீட்டிக் கொண்டு சில விநாடிகள் உற்றுக் கேட்டாள். பிறகு ''அப்படியே மல்லாந்து படுத்துவிடுங்கள்'' உத்தரவிட்டுத் தானும் பழையபடி படுத்தாள். மெல்ல மெல்லப் பாதக் குறடுகளின் ஒலிகள் அவள் காதிலும் விழலாயின. பின்னால் சற்றுத் தூரத்தில் வீரர் பலர் இரைந்து பேசும் சத்தமும் கேட்டது.



''அவள்தான், சந்தேகமில்லை,'' என்று ஒரு வீரன் இரைந்து கூறினான்.

''நமது பகுதியில் நுழைய அத்தனை துணிவா அவளுக்கு?'' என்று இன்னொருவன் கேட்டான்.

''அவள் துணிவுக்கு எல்லை உண்டா?'' என்று இன்னொருவன் கூறினான்.

''கிடையாது கிடையாது. அகப்படட்டும் அவள், என்ன நடக்கிறது பார்'' என்று கூறினான் இன்னொருவன்.

''என்ன நடக்குமோ?''

''ஸாத் ஸித்தியின் அந்தப்புரத்துக்குள் செல்வது நிச்சயம்.''

''அது பெரிய ஆபத்து?''

''மறுநாள் அஞ்சன்வேல் கோட்டையும் ஸாத் ஸித்தியும் மண்ணோடு மண்ணாகி விட நேரிடுமே.''

''இம்முறை ஸாத் ஸித்தி எதற்கும் தயாராயிருக்கிறார்.''

இப்படிக் காதில் விழுந்த பேச்சிலிருந்து தங்களைத் தேடுபவர்கள் ஸாத் ஸித்தியின் வீரர்களென்பதைப் புரிந்து கொண்ட இதயசந்திரன் அந்தப் பெண் விஷயமாகக் கவலை கொண்டதன்றி ஆத்திரமும் வரவே, ''பெண்ணே! என் கைத்துப்பாக்கி உன்னிடமிருக்கிறதா?'' என்று வினவினான்.

''இருக்கிறது'' என்றாள் அவள்.

''அதைக் கொடு என்னிடம்'' என்று கையைப் பக்கவாட்டில் நீட்டினான்.

''அது பயனில்லை இப்பொழுது'' என்றாள் அவள்.

''ஏன்?''

''எதிரி வீரர்கள் இப்பக்கம் வந்து கொண்டிருக்கிறார்கள். உற்றுக் கேளுங்கள்.''

இதயசந்திரன் உற்றுக் கேட்டான். வீரர்கள் பாதக் குறடுகளின் ஓசை நெருங்கி வந்தது. ''இப்பொழுது என்ன செய்யவேண்டும்?'' என்று வினவினான்.

பதிலுக்கு அவள் வானத்தை உற்று நோக்கினாள். ''வாசிஷ்டி நீர் கடலின் எதிரலைகளால் உயரும் நேரம் வந்து விட்டது. இன்னும் இரண்டு விநாடிகளில் அன்னை வாசிஷ்டி நம்மை மூடி மறைப்பாள். அந்த நீருக்குள் முதலில் நகர்ந்து ஆழத்தில் செல்வோம். பிறகு நீந்துவோம்'' என்று கூறினாள்.

அவள் கூறிக்கொண்டிருக்கும் போதே நீரின் ஒரு பகுதி அவன் காலை மறைத்தது. கண்ணிமைக்கும் நேரத்தில் மார்பளவு நீரில் உடல் அழுந்திவிட்டது. இன்னோர் எழுச்சி இருவரையும் மறைத்தது. அவள் சொன்னபடி மல்லாந்தபடியே நீருக்குள் நகர்ந்தான் இதயசந்திரன். பழக்கமில்லாத காரணத்தால் அவனால் நகர முடியாது போகவே எழுந்து நின்று குப்புற நீரில் விழ முயன்றான். எழுந்த அந்த ஒரு விநாடியில் பலமான கயிறு ஒன்று அவன் உடலுக்குக் குறுக்கே விழுந்து இறுக்கியது தரைக்குப் பலமாக இழுக்கவும் பட்டான் இதயசந்திரன். வீரர்கள் பலர் ஓடிவந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். கயிறு வீசி அவனைப் பிடித்த இரு வீரர்கள் கயிற்றைக் கெட்டியாகப் பற்றி சற்று எட்ட நின்றிருந்தனர்.

சுற்றுமுற்றும் நோக்கினான் இதயசந்திரன். அந்தப் பெண்ணை எங்கும் காணவில்லை. ''அவள் தப்பி விட்டாள்'' என்ற கோபக் கூச்சல் வீரர்களிடமிருந்து எழுந்தது. அந்தக் கோபத்துடன் கோபமாக, ''சரி, அந்தப் பெண் புலி கிடைக்காவிட்டாலும் இந்தத் தமிழ்ப் புலியாவது கிடைத்தது. இழுத்துச் செல்லுங்கள் இதை'' என்றான் வீரர்களின் தலைவன்.

கயிறு இழுக்கப்பட்டது பலமாக. கட்டுண்டபடியே தடுமாறித் தடுமாறி நடந்தான் இதயசந்திரன்.

அத்தியாயம் 25

# நீர் ஊற்றிய நிலவு

ஸாத் ஸித்தியின் வீரர் தன்னை அவ்விடத்தில் எதிர் பார்த்துப் பிடித்துவிட்டது பெருவியப்பைத் தரவே சுற்றும் முற்றும் நோக்கினான் இதயசந்திரன். தனது படகைக் குறுக்கே மறித்த அந்தச் சிறு கப்பல் அப்பொழுதும் இருந்த இடத்தை விட்டு நகராமல் நங்கூரம் பாய்ச்சி நின்றிருந்ததையும் அதன் மீது நின்றிருந்த வீரர்கள் மட்டும் விளக்குகளை உயரத் தூக்கி ஆட்டிக் கரைக்கு சைகை செய்து கொண்டிருந்ததையும், தன்னைத் துரத்தி வந்த படகுகள் அக்கப்பலுக்கு முன்னும் பின்னும் சஞ்சரித்துக் கொண்டிருந்ததையும் கண்ட இதயசந்திரன், இந்தக் கூட்டு முயற்சியால்தான் தரையிலிருந்த வீரர்கள் தன்னைப் பிடிக்க முடிந்ததென்பதைப் புரிந்து கொண்டான். அவனுக்குப் புரியாததும் ஒன்றிருந்தது. 'அந்தப் பெண் என்னைக் காக்க வருவாளென்பது ஸாத் ஸித்திக்கு எப்படித் தெரியும்? தவிர நான் ஸாத் ஸித்தியின் வீரர் களிடமிருந்து தப்பியதற்கும் இங்கு சிக்கியதற்கும் ஒரு ஜாமமே கடந்திருக்க, இந்தக் குறைந்த அவகாசத்தில் படகைத் துரத்த நாலைந்து படகுகள், வழி மறிக்க ஒரு மஞ்சூரா, கரையில் வந்தால் பிடிக்கச் சுழல் கயிறு தாங்கிய வீரர்கள், இத்தனை ஏற்பாடுகளை ஸாத் ஸித்தி எப்படிச் செய்ய முடிந்தது?' என்று எண்ணிப் பார்த்தான், விடை கிடைப்பது அவனுக்குப் பெரும் கஷ்டமாயில்லை. சதா போரிலிருக்கும் கொங்கணியின் ஸித்திகளின் தரைப் படைத் தலைவனான ஸாத் கரையோரத்திலும் நதியிலும் காவற்படைகளை எப்பொழுதும் நிறுத்தி வைப்பது அசாதாரணமல்லவென்று தீர்மானித்தான். படகைக் காவற்படகுகள் துரத்தும் போது நட்டாற்றில் நின்றிருந்த மஞ்சூரா தரைக்கும் விளக்கு எச்சரிக்கை செய்ததும் புதிராயில்லை அவனுக்கு. ஆனால் தமிழ்ப் புலி என்று

வீரனொருவன் தன்னை அழைத்தது தன்னை எப்படி அங்கு எதிர்பார்த்தார்கள்? எப்படி அத்தனை துரிதத்தில் ஸாத்ஸித்தி அவர்களுக்குத் தன்னைப் பற்றி எச்சரித்தான் என்ற விஷயங்கள் விளங்காததால், அவ்வீரர்கள் கயிற்றை இழுக்க எதிர்ப்பு ஏதும் காட்டாமலும் கயிற்றிலிருந்து விடுவித்துக் கொள்ள முயலாமலும் நடந்து சென்றான். வாசிஷ்டியின் வடக்குக் கரையிலிருந்த மலைப்பகுதியில் சிறிது தூரம் அழைத்துச் சென்ற பிறகு அவன் உடலை இறுக்கியிருந்த முறுக்குக் கயிற்றை அவிழ்த்துவிட்ட வீரர்கள் அவன் கைகளை மட்டும் முன்புறம் பிணைத்து ஒரு புரவியில் ஏற்றினார்கள். மற்றவர்களும் புரவிமீது ஏறிக்கொள்ள வீரர்கள் தலைவன் கையிலிருந்த ஒரு விளக்கைத் தூக்கி மஞ்சூராலை நோக்கி ஆட்டிவிட்டுப் புரவி மீது ஏறிக்கொண்டான். முன்புறமாகவே பிணைக்கப்பட்ட இதயசந்திரன் கைகளில் சேணத்தைக் கொடுக்கக் கட்டளையிட்ட வீரர்கள் தலைவன் தனது புரவியை நடத்த முற்பட்டான். தலைவன் முன்பு செல்ல வீரர்கள் பின்பு வர, பயணம் துவங்கியது மேற்கு நோக்கி.

நிலவு நன்றாக ஏறிவிட்ட சமயம் அது. எங்கும் மலைக் காட்சியும் நதிக் காட்சியும் ரமணியமாயிருந்தது. இரு கரையிலும் காட்டுப் பகுதியும் மலை மேட்டுப் பகுதியு மிருந்ததால் காற்றிலலைந்த மரக் கூட்டங்களால் ஏற்பட்ட சலசலப்புடன் தூரத்தே ஒன்றரைக் காதத் திலிருந்த கடலிரைச்சலும் சேர்ந்து கொள்ளவே இயற்கையின் பேராட்சி அந்த இரவில் பயங்கர ஆட்சி யாகவும் கண்கொள்ளாக் காட்சியாகவுமிருந்தது, பயணமும் அலுப்பில்லாமலிருந்தது. இதயசந்திரன் மனத்தில் அலுப்புமில்லை, சலிப்புமில்லை, சந்துஷ்டி நிரவிக் கிடந்தது. அந்தப் பெண் இவர்களிடமிருந்து தப்பிவிட்டாள் என்ற எண்ணம் அவனுக்குப் பெரும் பூரிப்பையும் இதயசாந்தியையும் அளித்ததால் பயணத் தைப் பற்றியோ பயணத்தின் முடிவில் காத்திருந்த



முடிவைப் பற்றியோ அவன் சிறிதும் எண்ணாமல் குதிரை மீது அமர்ந்து சென்றான். சுமார் அரை ஜாமம் இப்படிப் பயணம் நடந்ததும் தூரத்தே கடலும், கடலில் வாசிஷ்டி புகுவதும், அதன் தென்கரையில் ஒரு நகரமும் நகரத்துக்கு அப்பால் முப்புறம் கடல் சூழ்ந்த ஒரு கோட்டையும் அவன் கண்களுக்குப் புலனாகவே "அந்த நகரத்தின் பெயர் என்ன?" என்று வினவினான் இதயசந்திரன் முன் சென்ற தலைவனுக்குக் காதில் விழும்படியாக.

"அஞ்சன்வேல் நகரம்" என்று திரும்பியே பார்க்காமல் சொன்னான் காவலர் தலைவன்.

"அந்தக் கோட்டை?" என்று மீண்டும் கேட்டான் இதயசந்திரன்.

"உன் உயிரை வேட்டையாடக் காத்திருக்கும் இடம்!" ஏளனத்துடன் வந்தது அந்த அபிஸீனியன் பதில். இதைக் கேட்ட மற்ற அபிஸீனியக்காவலர் நகைத்தனர் இரைந்து, பயங்கரமாக.

"அந்தக் கோட்டையின் பெயர் புரிந்துவிட்டது" என்றான் இதயசந்திரனும்.

"என்ன பெயரோ" காவலர் தலைவன் கேள்வியில் நகைப்பு தெரிந்தது.

"உயிர் வாங்கி" என்றான் இதயசந்திரன்.

"தமிழா! உண்மை உண்மை!" என்ற தலைவன், "அதற்கு அஞ்சன்வேல் கோட்டை என்றும் பெயர் உண்டு" என்றும் குறிப்பிட்டான்.

"கோட்டை நகரத்தோடு ஒட்டவில்லையே!" என்று இதயசந்திரன் வியப்பைக் காட்டினான்.

"இரண்டுக்கும் அதிக தூரமில்லை. அரைமைல் தூரந்தான்" என்றான் தலைவன்.

இந்த மைல் கணக்கைக் கேட்டு இதயசந்திரன் அசந்து போவானென்று நினைத்த தலைவன் இவனைத் திரும்பிப்

பார்த்தான். ''பிரிட்டிஷ்காரர் கணக்கில் தூரத்தைச் சொல்கிறீர்கள்!'' என்று சர்வசாதாரணமாகப் பதில் கூறிய இதயசந்திரன், ''சென்னை வெள்ளைக்காரரிடம் இதை அடிக்கடி கேட்டிருக்கிறேன்'' என்று கூறிவிட்டு அஞ்சன்வேல் நகரத்தையும் கோட்டையையும் நோக்கி, கோட்டையின் பலத்தைப் பார்த்துத் திகைத்தான். அதற்குள் போனால் தான் வெளிவருவது சந்தேக மென்பதைப் புரிந்து கொண்டான். ஆனால் அதைப் பற்றிச் சிறிதளவும் கவலைப்படாமலும் மேற்கொண்டு கேள்வி ஏதும் கேட்காமலும் பயணம் செய்தான்.

அடுத்த அரை ஜாமத்திற்குப் பிறகு, சந்திரன் ஒளி யிழந்து வானத்தில் சஞ்சரிக்க, அருணன் தலையைக் காட்டலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண் டிருக்க, காட்டுப் பறவைகள் உதயகால ஒலிகளை முன் கூட்டியே கிளப்ப, காலைப்பொழுது கண் திறக்க முயன்ற சமயத்தில் வாசிஷ்டியின் வடகரைத் துறையொன்றுக்கு வீரர்கள் அவனை அழைத்து வந்து படகொன்றில் ஏற்றி அதிலிருந்த காவலரிடம் ஒப்படைத்தனர். பிறகு அபி ஸீனிய மொழியில் அவனை அழைத்து வந்தவர்களுக்கும் படகிலிருந்த மாலுமிகளுக்கும் ஏதோ உரையாடல் நிகழ்ந்தது. மாலுமிகள் பதில் கூறிப் படகை வாசிஷ்டியின் தென்கரைக்குச் செலுத்தி அங்கிருந்த வீரர்களிடம் அவனை ஒப்படைத்தனர். பிறகு அவன் அங்கிருந்து ஒரு வண்டியில் ஏற்றப்பட்டு அஞ்சன்வேல் நகரத் தெருக்கள் வழியாகக் கடற்கரைக்குக் கொண்டு செல்லப்பட்டான். கரை வந்ததும் ''கீழே இறங்கு'' என்று வீரனொருவன் அதட்ட வண்டியிலிருந்து இறங்கிய இதயசந்திரன் எதிரே வாசிஷ்டியின் தென்கரையிலிருந்த அஞ்சன்வேல் கோட்டையைக் கண்டு பிரமித்துப் போனான்.

கடலால் முப்புறமும் சூழப்பட்டுப் பெரும் மலைப் பகுதியின்மீது நிர்மாணிக்கப்பட்டிருந்த அஞ்சன்வேல் கோட்டை, வாசிஷ்டியை முகத்துவாரத்தில் தென்பகுதியில்



காத்து நின்றது. *''கோபால்காட்'' என்ற பெயரை உடையதும் 16-வது நூற்றாண்டில் பீஜ்பூர் சுல்தான் களால் கட்டப்பட்டதும், 1660-வது ஆண்டில் சிவாஜியால் பலப்படுத்தப்பட்டதும், 1681-89-ல் காம்பாஜியால் அபிவிருத்தி செய்யப்பட்டதும், 1699-ல் ஜன்ஜீராவின் கைரத்கான் ஹபீஷியால் கைப்பற்றப்பட்டு ஸித்திகளிடமே தங்கிவிட்டதும், அரபிக் கடலின் சிறந்த கோட்டைகளில் ஒன்றுமான அஞ்சன்வேல் கோட்டையைக் கண்டு வீரனான இதயசந்திரன் பெரிதும் மகிழ்ந்தான். முப்புறத்திலும் அதற்குக் கடலிருந்ததன்றி நான்காவது புறத்திலும் அதற்கு அகழி வெட்டிக் கடல் ஜலத்தை உட்புகவிட்டிருந்த தால், அக்கோட்டை நிலத்தால் எப்புறமும் அணுக முடியாதிருந்ததைக் கவனித்தான் தமிழக வீரன். அந்தக் கோட்டையின் சுவர்கள் இருபதடி உயரமும் சுமார் எட்டடி கனமுமிருக்கலாமென்பதைப் பொதுப் பார்வையி லேயே நிர்ணயித்தான் அவன். அதற்கு வாயில்கள் இரண்டிருந்தன. ஒன்று கிழக்கு நோக்கி நகரத்தைப் பார்த்தும் இன்னொன்று மேற்கு நோக்கிக் கடலைப் பார்த்தும் இருந்தன. கிழக்கு வாயில் மட்டும் எதிரே தெரிந்தாலும் நன்றாக அமைக்கப்பட்ட அந்தக் கோட்டைக்குக் கடலைப் பார்த்தும் கதவிருக்குமென்பதை ஊகிப்பது கஷ்டமாயில்லை அந்த வீரனுக்கு.

கோட்டையைப் பல விநாடி பார்த்துப் பார்த்து வியந்திருந்த இதயசந்திரனை, ''உம் நட! கோட்டையை உள்ளே பார்த்தே மலைக்கலாம்'' என்று ஒரு வீரன் எச்சரித்து அகழிக்காக அவனை அழைத்துச் சென்று அங்கொரு படகில் ஏற்றி, கோட்டை அடிவாரத்துக்குக் கொணர்ந்தான். பிறகு மலையேறிக் கோட்டை வாயிலுக்கு வந்து சேர்ந்த இதயசந்திரன் அதன் வழி நெடுக வீரர்கள் காவலிருந்ததையும் கோட்டைச் சுவர்கள் மீதும்

---

* அதிக விவரங்களுக்கு ''*Maharashtra Gazetteer-Ratnagiri Dt.*'' பகுதியைப் பார்க்கவும்.

கடல் நோக்கியும் நதி நோக்கியும் பீரங்கிகள் பொருத்தப் பட்டிருந்ததையும் கண்டு அதைத் தாக்குப் பிடிப்பது அத்தனை சுலபமல்லவென்பதைப் புரிந்து கொண்டான். பிறகு அவனை வீரர் கோட்டைக்குள் அழைத்துச் சென்ற போது அங்கிருந்த பயங்கரத்தைக் கண்டு எதற்கும் கலங்காத இதயசந்திரன் மனமும் சிறிது கலங்கிற்று. அங்கிருந்த இரண்டு மூன்று தெருக்கள் வட்டமாக அமைக்கப்பட்டு நடுவிலிருந்தது ஒரு பெரு மாளிகை. அதுதான் ஸாத் ஸித்தியின் மாளிகையாயிருக்க வேண்டு மென்பதை ஊகித்த இதயசந்திரன், அந்த வட்ட வீதிகளுக் கிடையில் ஒரு திறந்தவெளியும், அதில் பல மரத்தளை களும் இருந்ததையும் பலபேர் அத் தளைகளில் காலிலும் கையிலும் கிட்டி கட்டப்பட்டு, பனிக் குளிரில் சுருண்டு கிடந்ததையும் கண்டான். அவர்களில் சிலர் முதுகுகளில் சாட்டை வார்க் காயங்களுமிருந்ததையும் கண்டு, உபசாரங்கள் தனக்கும் நடக்குமென்பதைப் புரிந்து கொண்டானானாலும் அதைப்பற்றி லட்சியம் செய்யாமல் வீரர்களிடையே நடந்து சென்றான். வீரர்கள் கோட்டை யின் வடக்குப் புறத்திலிருந்த ஒரு சிறையில் அவனை அடைத்துச் சென்றனர்.

அன்று பகல் முழுவதும் அவன் அந்தச் சிறையிலேயே அடைந்து கிடந்தான். ஒரே ஒரு முறை அதாவது நடுப் பகலில் அவனுக்கு உணவு அளிக்கப்பட்டது. அந்த அறை யின் மூலையில் ஒரு பாத்திரத்தில் குடிநீர் மட்டும் வைக்கப் பட்டிருந்ததால் வேறு உணவைப்பற்றிக் கவலைப்படாமல் இதயசந்திரன் நீரைக் குடித்தே அன்றைய பொழுதைக் கழித்தான். சிறைக்காவலன் அவன் விஷயமாகக் காட்டிய அசிரத்தையிலிருந்து ஸாத் ஸித்தி வந்த பிறகே தனது தலைவிதி நிர்ணயமாகுமென்பதைப் புரிந்து கொண்ட இதயசந்திரன் எது வந்தாலும் வரட்டுமென்ற துணிவில் சிறையறையில் படுத்துக் கிடந்தான். ஸாத் ஸித்தியின் பேட்டி அன்றிரவில் அவனுக்குக் கிடைக்கவில்லை.



மறுநாள் பகலவன் உச்சிக்கு வந்து அரை ஜாமம் கழித்து இரு காவலர் வந்து அவனை ஸாத் ஸித்தியின் மாளிகைக்கு அழைத்துச் சென்று ஸாத் ஸித்தியின் முன்பு நிறுத்தினர். ஸாத் ஸித்தி அவனை ஒரு மஞ்சத்தில் உட்காரச் சொல்லி, ''நாம் மீண்டும் சந்திக்கிறோம்'' என்று அறிவித்தான் புன்முறுவலுடன்.

''ஆம்.'' தலைநிமிர்ந்தவண்ணம் கூறினான் இதய சந்திரன்.

''சிறையில் உன்னை அதிகமாகத் துன்புறுத்தியிருக்க மாட்டார்கள்'' என்றான் ஸாத் ஸித்தி.

''துன்புறுத்தவேயில்லை.''

''அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். தேவை யானால் உனக்கு வேண்டிய இம்சை கிடைக்கும்.''

''வேறு எதையும் நான் எதிர்பார்க்கவில்லை.''

''எதிர்பார்ப்பதில் தவறில்லை. சிறிது குணத்தை மாற்றிக் கொண்டால், சிறிது இயற்கையின் வழிக்கு இணங்கினால்.'' இதைச் சொன்ன ஸாத் ஸித்தியின் உதடுகளில் புன்முறுவல் மறைந்தது.

அவன் சொல்வது ஓரளவுதான் புரிந்தது இதயசந்திர னுக்கு. இயற்கையைப்பற்றி அவன் கூறியது விளங்காது போகவே விசாரித்தான் தமிழன், ''இயற்கையின் வழியா!'' என்று.

'ஆம். பெண்கள் பக்கம் சாய்வது ஆணின் இயற்கை. அவர்கள் இஷ்டத்திற்கு இணங்குவது ஆணின் கடமை. பானுதேவின் இஷ்ட விரோதமாக என்னை விரோதித்துக் கொண்டது முட்டாள்தனம், இப்பொழுதுகூடக் குடி முழுகிப் போய்விடவில்லை. நீ என் பக்கம் சேருகிறாயா?'' என்று வினவினான் ஸாத் ஸித்தி.

''என்னால் இனி கனோஜியைப் பிடித்துக் கொடுக்க முடியாது. உனக்கு என்னால் எந்தப் பயமுமில்லை'' என்றான் இதயசந்திரன்.

இதயசந்திரன் 'உனக்கு' என்று மரியாதையின்றிப் பேசியதை ஸாத் ஸித்தி கவனித்திருந்தாலும் அதை வெளிக்குக் காட்டாமலே சொன்னான், ''அது தெரியும் எனக்கு. கனோஜியைப் பிடித்திருந்தால் நான் கடந்த இரவில் பிடித்திருக்கவேண்டும். அது நடக்கவில்லை. அதனால் பரவாயில்லை. உன்னை எனக்குப் பிடிக்கிறது'' என்று.

''உன்னை எனக்குப் பிடிக்க வேண்டாமா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''உன் உயிரை உனக்குப் பிடித்தால் என்னையும் பிடிக்க வேண்டும்.''

''இல்லையேல் உயிரை வாங்கிவிடுவாய்?''

''என் கையால் வாங்க மாட்டேன்.''

''ஆம் ஆம். அதற்குத்தான் வேறு கொலைகாரர்கள் இருக்கிறார்களே?''

அவன் இகழ்வதைப் புரிந்துகொண்ட ஸாத் ஸித்தியின் கண்களில் வியப்பு படர்ந்தது. ''என்னைக் கொலைகாரன் என்று குறிப்பிடுவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் என்னை வசை பாடுவதால் உனக்கு எப் பயனுமில்லை. உன்னை வெட்டவோ தூக்கிலிடவோ உத்தரவிட மாட்டேன்...'' என்ற ஸாத் ஸித்தி வேண்டுமென்றே பேச்சை இடையில் அறுத்தான்.

''வேறு சிறந்த வழியும் அஞ்சன்வேல் அதிபருக்குத் தெரியும் போலிருக்கிறது'' என்றான் இதயசந்திரன் ஏளனத்துடன்.

''சிறந்த வழிகள் என்று பன்மையில் சொல்வது பொருந்தும்'' என்று ஒப்புக் கொண்டான் ஸாத் ஸித்தியும்.

''அந்த வழிகளில் ஒன்றை சீக்கிரம் சுட்டிக் காட்டினால் நல்லது'' என்று இதயசந்திரன் கோரிக்கை விடுத்தான்.



ஸித்தி சற்று யோசித்தான். பிறகு கூறினான். ''தமிழனே! நீ பெருவீரன். உன்னைப்போல் சிறந்த வீரர்களில் சிலரையே நான் பார்த்திருக்கிறேன். ஆகையால் உன்னை அழிக்க என் மனம் ஒப்பவில்லை. முடிந்தால் என் பக்கம் அதாவது பானுதேவியின் பக்கம் உன்னை இணைத்துக் கொள்ள விரும்புகிறேன். இல்லையேல் உன்னை என் கையால் தண்டிக்க மாட்டேன்.''

''வேறு.........?''

''இயற்கை தண்டிக்கும்.''

''இயற்கையா!''

''ஆம். கோட்டை மத்தியிலுள்ள தளைகளில் பூட்டப் படுவாய். இரவின் பனியிலும் பகலின் வெயிலிலும் நீ காய்ந்தும் குளிர்ந்தும் படிப்படியாகச் சாகவேண்டியிருக்கும். செத்த பிறகு கழுகுகளுக்கு இரையாகப் போடுவோம்.''

ஸாத் ஸித்தி முந்திய வாசகத்தை மிகத் திட்டமாகக் கூறினான். ''உன் பதில்?'' என்று கடைசியாகக் கேட்கவும் செய்தான்.

''ஏற்கெனவே சொன்ன பதில். இந்த மகாராஷ்டிரத் தொல்லையில் நான் சேர இஷ்டப்படவில்லை. எனக்கு ஒரு கடமை இருக்கிறது. கடமையை நாடிச் செல்ல வேண்டும். நான் தேடி வந்தவனைத் தேட வேண்டும்'' என்றான் இதயசந்திரன்.

''அப்படியானால் அவனை நகரத்தில் தேடு. இல்லையானால் அங்கு காத்திரு, அவன் வரும்வரை'' என்று சீறிய ஸாத் ஸித்தி காவலரை அழைத்து, ''இவனைத் தளையில் பூட்டுங்கள்'' என்று உத்தரவிட்டான்.

காவலர் அவனை அழைத்துச் சென்று கோட்டை மத்தியிலிருந்த தளைகளிலொன்றில் பூட்டினார்கள், கைக்கும் காலுக்கும் தளை மாட்டி, குறுக்கே புள்ளடித்து நகர முடியாமல் இறுக்கினார்கள். கைகால் நரம்புகள்

புடைத்து வெடித்து விடும் போலிருந்தது இதயசந்திரனுக்கு. அங்கு அவன் மட்டுமில்லை. பலர் தளைகளில் அடிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களில் ஆண்களுமிருந்தனர், பெண்களுமிருந்தார்கள். சிலர் துவண்டு கிடந்தார்கள். சிலர் ஆகாயத்தை நோக்கி விழித்துக் கிடந்தார்கள். சிலர் முனகினார்கள். சிலர் அழுதார்கள். சிலர் விக்கலெடுத்துத் திணறிக் கொண்டிருந்தார்கள்.

யாருக்கும் அங்கு உணவு கிடையாதென்றாலும், தண்ணீர் மட்டும் உண்டென்பதைப் புரிந்து கொண்டான் இதயசந்திரன். தூரத்தில் மரப் பீப்பாய்களில் குடிநீர் வைக்கப்பட்டிருந்தது. அதை ஊற்ற இரண்டு அரபுப் பெண்கள் முக்காடிட்டு நின்றிருந்தார்கள். விக்கல் எடுப்பவர்களுக்கு மட்டும் குவளைகளில் நீர் கொணர்ந்து அப்பெண்கள் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

நேரம் ஓடியது. பகல் ஓடி இரவு ஏறியதால் பந்தங்களும் விளக்குகளும் பளிச்சிட்டன. கடற்காற்று மிகக் குளிர்ச்சியுடன் உடல் விறைத்து விடும்படி அடிக்க ஆரம்பித்தது. ஒரு ஜாமம் முடிவதற்குள்ளாகவே இதயசந்திரன் உடல் நடுங்க ஆரம்பித்தது. இருப்பினும் பல்லை இறுக்கிக் கடித்துக் கொண்டிருந்தான். இரண்டாவது ஜாமத்தில் தண்ணீர் கொடுக்கும் பெண்கள் மாறி, வேறு பெண்கள் பணியேற்றார்கள். இதயசந்திரன் நாக்கு வறளத் துவங்கியது. நீர் நீர் என்று கூவினான் அவன். பெண்கள் நீர் கொணரவில்லை. அப்பொழுதுதான் புரிந்தது அவனுக்கு விக்கல் எடுக்காவிட்டால் நீர் கொடுக்க மாட்டார்கள் என்பது. உடனே செயற்கையாகப் பெரு விக்கல் விக்கினான். பெண்ணொருத்தி நீர் கொணர்ந்தாள். இரண்டாம் ஜாமம் முடியும் தருவாயில் தொண்டையும் அவன் நாக்கும் அடியோடு வறண்டன. குளிர் உடலை வாட்டியது. கண்கள் எரிந்தன. தளைகளிலிருந்த கைகால் எலும்புகள் முறிந்து விட்டதாகத் தோன்றின. இந்த அனுபவம் அவனுக்குப் புதுமை. நாக்கு இத்தனை



வறண்டு அவன் பார்த்ததில்லை. கொங்கணியின் சீதோஷ்ண ஸ்திதி அவனுக்குப் பெரும் துன்பத்தை விளைவித்தது. மூன்றாவது ஜாமம் முடிந்ததும் அவன் கண்கள் பஞ்சடையும் தருவாயிலிருந்தன. விக்கினான் மீண்டும். பெண்ணொருத்தி அவனுக்கு நீர் கொணர்ந்து வாயிலூற்றக் குனிந்தாள். குனிந்த சமயத்தில் அவனுக்கு மட்டும் முகம் தெரியும்படிச் சிறிது முக்காட்டைத் தூக்கவும் செய்தாள். நீர் ஊற்றிய அந்த நிலவு முகத்தைக் கண்டு அதிர்ச்சியுற்ற இதயசந்திரன், ''நீயா!'' என்றான். அவள் பதில் கூறவில்லை. நீரை ஊற்றிவிட்டுச் சென்றாள். கோட்டையின் வேறு புறத்திலிருந்து வந்த ஒரு பெரிய வீரன், ''அவனுக்கு இனி நீர் கொடுக்காதே'' என்று உத்தரவிட்டான் அந்தப் பெண்ணை நோக்கி.

இதயசந்திரன் அவனை ஏறெடுத்து நோக்கினான். அந்த வீரன் முகத்தில் தீப்பந்த வெளிச்சம் நன்றாக விழுந்திருந்தது. அவன் முகத்தின் குறுக்கே ஒரு பெரிய வெட்டுக் காயம் தீப்பந்த ஒளியில் பளபளத்தது.

அத்தியாயம் 26

# உதய காலக் கழுகுகள்

கொங்கணிக் குளிரால் உடல் விறைக்க, நா வறண்டு போக, கண்கள் பஞ்சடைய, மேலுலகத்தையே உயிர் எட்டிப் பார்க்கும் நிலையை எய்திவிட்ட இதயசந்திரனுக்கு, நீர் ஊற்றிய அந்த நிலவு முகம் பெரும் சக்தியை உடலில் ஊறவிட்டதென்றால், பந்தத்தின் வெளிச்சத்தில் பளிச்சிட்ட வெட்டுக் காய முகம் அவன் சக்தி பூராவையும் உணர்ச்சி அத்தனையையும் திரும்ப அளித்துவிடவே, மிகுந்த பிரமையுடனும் இணையிலாக் கோபத்துடனும் அவன் அந்த வீரன் முகத்தைப் பார்த்தது பார்த்தபடியே இருந்தான் பல விநாடிகள். தஞ்சை அரண்மனையில் ராஜாராமின் ராணி சொன்ன அடையாளங்கள் அப்படியே அந்த வீரனுக்கு இருந்ததைப் பார்த்த இதய சந்திரன் 'காரணமாகத்தான் விதி நான் வந்த கப்பலை உடைத்து என்னைக் கொங்கணியின் கரையில் வீசியிருக்கிறது' என்று உள்ளூரச் சொல்லிக் கொண்டான். முகத்தின் குறுக்கே வாள் காயத்தின் வடு நன்றாக விழுந்திருந்தால் அந்த வீரன் முகம் மிகப் பயங்கரமாகக் காட்சியளித்தது மட்டுமல்லாமல், அவன் நீண்ட கைகளும், கூர்வேல்கள் போல் பளிச்சிட்ட கண்களும் அவன் சிறந்த வீரன் என்பதைப் பறைசாற்றின. அவன் அபிஸீனியரைப்போல் உடையணிந்திருந்தாலும் அவன் கழுத்தில் கறுப்பு முடிக் கயிற்றின் முனையில் ஊசலாடிய பவானிப் பதக்கமொன்று அவன் மகாராஷ்டிரனென்பதைச் சந்தேகமற நிரூபித்தது.

அவன் எப்படி எதற்காக ஸாத் ஸித்தியின் கோட்டைக்கு வந்து தங்கியிருக்கிறான்? அங்கு அதிகாரம் செய்ய அவனுக்கு என்ன பதவி இருக்கிறது? அவன் அங்கிருந்ததால் அவன் தூக்கி வந்த அரசகுமாரனும் அதே கோட்டையில் தானிருக்கிறானா? என்ற பல கேள்விகள்



இதயசந்திரன் இதயத்தே எழுந்ததானாலும் அது ஒன்றுக்குக்கூட விடை கிடைக்கவில்லை தமிழகத்தின் வாலிபனுக்கு. இப்படிப் பல கேள்விகள் சித்தத்தில் எழுந்து சுழன்றதால் பிரமித்து அந்த வீரனை நோக்கிக் கொண்டேயிருந்தான். அவன் அப்படி உற்றுப் பார்த்ததை அந்த வீரனும் பார்த்திருக்க வேண்டும். ஆகவே, அவன் தன் காலைக் கம்பீரமாக வீசிப் போட்டு நடந்து இதயசந்திரனுக்கு முன்னால் வந்துநின்று, ''தமிழா எதற்கு நீ நாடு விட்டு நாடு வந்தாய்?'' என்று வினவினான்.

எழுந்து அவன் கழுத்தை இறுகப் பிடித்து நொறுக்கி, 'எங்கே நீ தூக்கிவந்த அரசமகன்?' என்று கேட்க வேண்டும்போல் இதயசந்திரன் இதயம் துடித்ததானாலும் அப்பொழுதிருந்த நிர்க்கதியான நிலையில் ஏதும் செய்ய முடியாததால், ''எந்த நாட்டை விட்டும் எந்த நாட்டுக்கும் வரவில்லை'' என்று பதில் கூறினான் நா வறண்ட நிலையிலும்.

துணிவு மிகுந்த குரலில் வெளிவந்த அந்தப் பதிலைக் கேட்டு அசந்துபோன அந்த வீரன், ''நீ தமிழ் நாட்டவன் தானே?'' என்று வினவினான்.

''ஆம்.'' இதயசந்திரன் பதில் பெருமிதத்துடன் வெளி வந்தது.

''இது மகாராஷ்டிரர் நாடு.''

''ஆம்.''

''அங்கு விட்டு இங்கு வந்தால் நாட்டைவிட்டு நாடு வந்ததுதானே?''

இதயசந்திரன் இதழ்கள் புன்முறுவல் கொண்டன. ''இன்னொரு நாடும் உண்டு'' என்று உதிர்ந்தன சொற்கள் உதடுகளிலிருந்து.

''இன்னொரு நாடா?''

''ஆம்.''

''எதுவோ?''

''பாரதநாடு என்று ஒன்று உண்டு. அதிலுள்ள மக்கள் ஒரே மக்கள். அந்த நாட்டுக்குள் உலாவுபவர்கள் நாடு விட்டு நாடு செல்வதாக அர்த்தமில்லை.''

இதயசந்திரன் சொற்களை அழுத்திச் சொன்னான். இதைக் கேட்ட அந்த வீரன் முகத்தில் சற்றே சந்தேகம் படர்ந்தது. ''அப்படி இது ஒரே நாடானால் நடை உடை பாவனைகள் பல இடங்களில் ஏன் வித்தியாசமாயிருக்கின்றன?'' என்று வினவினான் அந்த வீரன்.

''நடை உடை பாவனைகள் நாட்டையோ, மனிதர்களையோ நிர்ணயிப்பதில்லை.''

''அப்படியா?''

''ஆம். உதாரணம்கூடக் காட்ட முடியும்.''

''காட்டு பார்க்கலாம்.''

''நீ போட்டிருப்பது அபிஸீனிய உடை. ஆனால் உன் முகம் கூறுகிறது நீ மகாராஷ்டிரன் என்று'' என உதாரணம் காட்டிய இதயசந்திரனைச் சந்தேகம் பூர்ணமாகிவிட்ட கண்களுடன் நோக்கிய அந்த வீரன், ''தமிழா! உன்னைப் பற்றி எனக்கு அதிக சிரத்தை உண்டாகிறது; சந்தேகமும் உண்டாகிறது'' என்று கூறினான் கவலை பாய்ந்த குரலில்.

''உன்னிடம் எனக்குச் சிரத்தையிருக்கிறது'' என்று சுட்டிக்காட்டினான் இதயசந்திரன்.

''நாம் தனிமையில் பேசவேண்டும்'' என்றான் அந்த வீரன்.

''இன்னும் ஒரு வார்த்தை பேச வேண்டுமானாலும் தண்ணீர் வேண்டும்'' என்று தட்டுத்தடுமாறிச் சொன்னான் தமிழன்—அதுவரையில் தாக்குப் பிடித்த சக்தி சற்றுத் தளர்ந்து விடவே.



அந்த வீரன் கருணையுடன் தலையசைத்து, சற்று முன்பு நீருற்றிய அந்தப் பெண்ணைப் பார்த்து குவளையில் நீர்கொண்டு வரும்படி சைகை செய்தான். மீண்டும் நீரை மொண்டு வந்த அவள் அவனிடம் அபிஸீனிய மொழியில் ஏதோ கூறினாள். அவன் இரைந்து ஏதோ மறுமொழி கூறினான். இருவருக்கும் சற்றுத் தடிப்பாகவே சில விநாடிகள் தர்க்கம் நடந்ததும் வேண்டா வெறுப்பாக அவள் இதயசந்திரன் வாயில் நீரை ஊற்றிவிட்டுச் சென்றாள்.

இதயசந்திரன் நீரை மடக்கு மடக்கு என்று அருந்தி, சற்றுச் சுரணையை வரவழைத்துக் கொண்டதும் அந்த வீரன் கூறினான். ''தமிழா! அந்தப் பெண் இல்லாத ஆட்சேபணையெல்லாம் செய்கிறாள். முதலில் நீர் ஊற்ற வேண்டாமென்ற நீ இப்பொழுது ஏன் ஊற்றச் செய்கிறாய் என்று வினவுகிறாள். விக்கல் எடுக்காதபோது நீர் ஊற்ற உத்தரவில்லையென்கிறாள். இனி நான் இங்கிருந்தால் உனக்குப் பக்கத்துத் தளையில் நானும் இருக்க நேரிடும். ஆகையால் நான் போகிறேன். உன்னிடம் முக்கியமாகப் பேசவேண்டியிருக்கிறது'' என்று கூறி, பிறகு அங்கிருந்த காவலருக்கு ஏதேதோ கூறிவிட்டு நடந்து சென்று விட்டான்.

அவன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அந்தப் பெண் மீண்டும் குவளையில் நீர் கொணர்ந்து அவனை நோக்கிக் குனிந்து, ''நான் நன்றாகக் குனிகிறேன். இந்த அபிஸீனிய ஆடை உங்கள் கைகளை மூடும். ஆடையின் உட்புறத்தில் ஒரு பையில் கத்தி இருக்கிறது. எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

தளையில் கைகள் இறுகி நரம்புகள் வெடித்துவிடும் நிலையிலிருந்த சமயத்திலும் இதயசந்திரன் உணர்ச்சிகள் பெரிதும் கலங்கின. அவள் அதிக ஆடையின்றித் தன் பக்கத்தில் ஆற்றோரத்தில் மல்லாந்து கிடந்த சமயத்தில் கூடக் கிளறாத பல உணர்ச்சிகள் அபிஸீனிய ஆடை

முழுக்க முழுக்க அவளை மூடியிருந்த நிலையில் கிளம்பி அவனை நிலைகுலையச் செய்தன. எப்படித் தைரியமாக ஆடைக்குள் கை விடுவது, கத்தியை எடுப்பது என்று எண்ணித் திகைத்தான். பிறகு பல்லைக் கடித்துக்கொண்டு தைரியமாக அவன் கை அவள் ஆடைக்குள் புகுந்து உட்பை ஒன்றிலிருந்த கத்தியை எடுத்துக் கொண்டது. நீரை ஊற்றிக்கொண்டே சொன்னாள் அவள், ''அந்தக் கத்தியை உங்கள் தொடைக்குக் கீழே மறைத்துவிடுங்கள்'' என்று. அப்படிக் கூறிக்கொண்டே குனிந்து இறுகிய தளையொன்றைத் தளரவிட்டு அவன் கையொன்றை விடுவித்தாள். அவள் சொன்னபடி அவன் கத்தியை மறைத்த பின்பு, ''மீண்டும் கைகளை முன்போல் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி, தளையை மெல்லச் செருகினாள். மேலும் துரிதமாகக் கூறினாள்: ''நான் அடுத்த முறை வரும்போது உங்களை விடுவிப்பேன். நீங்கள் எழுந்து ஓடக்கூடாது. ஏதும் பேசாமல் சாதாரணமாகத் தள்ளாடி நடந்து கோட்டைச் சுவரை நோக்கிச் செல்லுங்கள். ஆனால் கத்தி உங்களிடம் இடை மறைவில் இருக்கட்டும்'' என்று. அத்துடன் அவள் சென்று மீண்டும் பீப்பாயிருக்குமிடத்தில் நின்று கொண்டாள் குவளையுடன்.

அந்த ஜாமம் முடிந்ததும் நீர் கொடுக்கும் மங்கையர் மாறினர். அவனைக் காத்த அந்த நிலவு முகத்தாளும் சென்றாள். மீண்டும் குளிரில் விறைத்த இதயசந்திரனுக்குக் குளிரைத் தாங்குவது அவ்வளவு கஷ்டமாயில்லை. சில நிமிஷங்களில் நடந்துவிட்ட உரையாடல்கள் அவனுக்குப் பெருந் தெம்பையும் நம்பிக்கையையும் அளித்திருந்தன. ஆகவே அடுத்து நடக்கவிருந்த நிகழ்ச்சிகளை எதிர்பார்த்திருந்தான் அந்த தமிழன். மூன்றாவது ஜாமம் ஓடிய இரண்டு நாழிகைக் கழித்து முக்காடிட்ட அந்தப் பெண் வந்து அங்கிருந்த காவலரிடம் ஏதோ சொன்னாள். அதைக் கேட்ட காவலர் இருவர் வந்து அவனைத் தளைகளிலிருந்து விடுவிக்க, தன்னைத் தொடர்ந்து வரும்படி செய்தாள்



அந்தப் பெண். இதயசந்திரன் மெள்ள எழுந்த பிறகுதான் அஞ்சன்வேல் கோட்டைத் தளைகளின் மகாத்மியம் அவனுக்குத் தெரிந்தது. கால்கள் நிற்கவும் மறுத்தன. கணுக் கால்கள் தளைகள் இறுக்கத்தால் கன்றிக் கிடந்தன. இரத்த ஓட்டம் நீண்ட நேரம் அரைகுறையாயிருந்ததால் பாதங்கள் சிறிது வீங்கியும் இருந்தன. நிற்க முயன்ற இதயசந்திரன் தொப்பென்று நிலத்தில் மீண்டும் விழுந்தான்.

அதைக் கண்ட அந்தப் பெண் அபிஸீனிய மொழியில் காவலரிடம் ஏதோ சொன்னாள். உடனே காவலரிருவரும் உட்கார்ந்து அவன் கால்களைச் சூடு பிடிக்கத் தேய்த்தனர். ''உம்...எழுந்திரு இப்பொழுது!'' என்று அதட்டினாள் அப்பெண். மெள்ள மெள்ள எழுந்து நின்று அவள்முன் செல்லத் தள்ளாடித் தள்ளாடி அவளைப் பின் தொடர்ந்தான் இதயசந்திரன். கீழ்ப்புறக் கோட்டைச் சுவரை நெருங்கியதும் அங்கிருந்த காவலரிடம் அவள் மீண்டும் ஏதோ கூறினாள். அவர்கள் ஆமோதிப்பதற்கறிகுறியாக தலையசைத்தார்கள். பிறகு அவனை மதில் சுவரை அடுத்திருந்த மூன்று வரிசைப்படிகளில் ஏறிச் செல்லுமாறு உத்தரவிட்டனர்.

சுற்றிலும் மூன்று வரிசை அரண் மேடைகளிலிருந்த அந்தக் கோட்டைப் படிகளில் மெள்ள மெள்ள ஏறிச் சென்று அப்புறம் நோக்கிய இதயசந்திரன் கண் முன்னே எழுந்திருந்தது பயங்கரக் காட்சி. கீழே அதளபாதாளத்தில் கடலலைகள் அக்கோட்டையிருந்த மலையடிவாரத்தின் மீது மிகப் பயங்கரமாக மோதிக் கொண்டிருந்தன. குளிர் காற்றுப் பெருவேகத்தில் வீசி மலைப்பாறைகளில் மோதிச் சீறி விர்ரென்று ஊதிச் சென்றுகொண்டிருந்தது. கடல் கொந்தளிப்பு மிக அதிகமாயிருந்தது.

அவள் ஏறி வந்தாள் சற்று நேரத்திற்கெல்லாம் அதே இடத்துக்கு.

வந்ததும் மடியிலிருந்த கட்டளைக் கடிதமொன்றை அக்காவலரிடம் கொடுத்துவிட்டு இதயசந்திரனை நோக்கிச்

கூறினாள் தமிழில், ''வீரரே! உம்மிடம் கருணை காட்ட ஸாத்ஸித்தி இணங்கிவிட்டார்'' என்று.

இதயசந்திரன் வியப்பினால் வாயைப் பிளந்தான். ''நீ சொல்வது விளங்கவில்லை எனக்கு.''

''கவலை வேண்டாம். விளங்க வைக்கிறேன்'' என்ற அவள் ''உங்களைப் போன்ற வீரரைத் தலையில் சாக விடுவது ஸாத்ஸித்தியின் கௌரவத்துக்குக் குறைவு என்று கூறினேன். அவர் முதலில் ஒப்புக் கொள்ளவில்லை. பிறகு உம்முடன் பேசிய காவலர் தலைவரும் என்னை ஆதரித்தார். பிறகுதான் ஒப்புக்கொண்டார் கோட்டைத் தலைவர்'' என்றும் கூறினாள்.

''எதற்கு ஒப்புக்கொண்டார்? விடுதலை செய்யவா?''

''இல்லை. உமக்கு நல்ல மரணத்தை அளிக்க.''

''நல்ல மரணம் என்றால்?''

''வீரர்களுக்கான மரணம்.''

''எந்த விதமோ?''

''உமது தலையில் நான் கைத்துப்பாக்கியால் அடிப்பேன்.''

''உம்.''

''உங்கள் பிரக்ஞை தவறிவிடும்.''

''பிறகு?''

''கயிற்றில் உங்கள் உடலைக் கட்டி இங்கிருந்தே மலைச்சரிவில் கடலில் விடுவோம்.''

''நல்லது.''

''சில வேளைகளில் கயிறு அறுந்துவிட்டால் கஷ்டம்.''

''என்ன கஷ்டமோ?''

''பாறையில் உடல் தங்கிவிடும். அப்பொழுது கழுகுகளுக்கு உடல் இரையாகும்.''



''அவ்வளவுதானா?'' என்று விஷமமாகக் கேட்டான் இதயசந்திரன்.

''ஆம்'' என்ற அவள், அவன் துணிவைக் கண்டு அவனை வியப்புடன் நோக்கினாள். பிறகு ஏதும் பேசாமல் வீரர்களை நோக்கி அவன் இடுப்பில் கயிற்றைக் கட்டச் சொன்னாள். வீரர்கள் கயிற்றைக் கட்டியதும் தன் இடையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து அவன் தலையில் ஓங்கி அடித்தாள். இதயசந்திரன் சுரணை பாதி பறந்தது. எங்கெங்கோ அவன் மனம் சஞ்சரித்தது. இடையிலிருந்த கத்தியை எடுத்து எதன் மீதோ வீசினான். பிறகு என்ன நடந்ததென்று அவனுக்குத் தெரியாது. கண் விழித்தபோது அவன் நிலை அவனுக்கே பரிதாபத்தை அளித்தது. மலைப்பாறையொன்றில் அவன் மல்லாந்து கிடந்தான். உதயகாலம் நெருங்கிக் கொண்டிருந்ததை வானம் நிரூபித்தது. சற்று எட்டக் கேட்ட பயங்கரக் கூச்சல் எது என்று பார்க்கத் தலையைத் திருப்பினான் சற்றுத் தூரத்தில் கழுகுகள் இரண்டு அவனை உற்றுப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தன. தன் உடலுக்கு விருந்தாளிகள் வந்துவிட்டதை உணர்ந்துகொண்ட இதய சந்திரன் பெருமூச்சு விட்டான். அதே சமயத்தில் பெரு சிறகடித்து மேலே வட்டமிட்டுக்கொண்டிருந்த கழுகு ஒன்று அவனை நோக்கி ஜிவ்வென்று இறங்கி வந்தது.

## அத்தியாயம் 27

# நீங்களிருப்பது ஜலதீபம்

உதயகாலம் நெருங்கிக் கொண்டிருந்ததால் வானத்துச் சந்திரன் அடியோடு ஒளியிழந்து வெற்றுக் காகிதம்போல் ஆகாச யாத்திரை செய்து கொண்டிருந்தான். காலை நேரக் கடல் பறவைகளின் கிரீச் கிரீச்சென்ற சத்தமும் படபடவென்று சிறகடிக்கும் ஒலியும் இதயசந்திரன் காதுகளில் விழுந்து கொண்டிருந்தன. அவன் கிடந்த பாறை இரவுப் பனியில் நனைந்திருந்ததால் அக் கருங்கல் பனிக் கல்லாக மாறி முதுகைச் சுரணையற்று மரக்க அடித்திருந்தது. அவன் கைகள்கூட உறைந்து போய்ச் சஞ்சரிக்கும் சக்தியை இழந்து கிடந்தனவென்றால் கால்களின் நிலையை என் சொல்ல? இத்தனைக்கும் மரத்துப் போகாத பாகமும் ஒன்றிருந்தது. நிலவு முகத்தாளின் கைத்துப்பாக்கியால் நன்றாக அடிபட்ட மண்டை விண்விண்ணென்று தெரித்துக் கொண்டு உதையும் அடியும் உடலுக்கு எத்தனை சுரணையைக் கொடுக்க முடியும் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தது. அந்தக் கைத்துப்பாக்கியின் பயங்கர அடிகூட அவன் கண்களை அன்று காலை மங்கச் செய்யாததால் தன்னை விண்ணிலிருந்து உண்ணவந்த கழுகை அவன் மிக நன்றாகப் பார்த்தான். மேலிருந்து இறங்கிய பருந்து எந்த நேரத்திலும் தன் கண்களைக் கொத்திவிடலாமென்பதையும், பிறகு தான் என்ன நடக்கிறது என்பதைப் பார்க்காமலே இறந்துவிட முடியுமென்பதையும் புரிந்து கொண்ட தமிழகத்தின் அந்த வாலிபன் மிக ஆபத்தான அந்த நிலையிலும் தன் கதியை நினைத்து மெள்ளச் சிரித்துக் கொண்டான்.. மேலிருந்து இறங்கிய கழுகு தன் கண்களைக் கொத்திவிட்ட பிறகு என்ன செய்யும் என்பதையும் ஆரயா முற்பட்டான். அந்த நிலையில் அந்தக் கழுகும்



ஜிவ்வென்று பாய்ந்து அவன் பாறையின் பக்கத்திலிருந்த மற்றொரு பாறையில் உட்கார்ந்து கொண்டது.

ஏற்கெனவே உட்கார்ந்து அவனைக் கவனித்துக் கொண்டிருந்த கழுகுகள் அவனை விட்டு வானத்திலிருந்து வந்த சகாவைக் கவனிக்கத் தொடங்கின, அந்த வானக் கழுகும் அவற்றைப் பார்த்தது. அவை மூன்றுக்கும் ஏதோ நயன சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது போலிருந்தது இதயசந்திரனுக்கு. அந்தச் சம்பாஷணை முடிவதற்குள் தான் ஏதாவது நடவடிக்கை எடுக்காவிட்டால் தன் கதி அதோகதிதானென்பதைப் புரிந்து கொண்ட தமிழன் மெல்ல மெல்லத் தன் கையை அசைத்தான். கால்களையும் அசைக்க முயன்றான். கைகளும் கால்களும் எத்தனைக் கனமாயிருந்தன. இரத்த ஓட்டம் இல்லாவிட்டால் ஏன் மனித அவயங்கள் கனத்து விடுகின்றன! இதனால்தான் பிணங்கள் அதிகமாகக் கனக்கின்றனவா? கை கால்கள் அந்தச் சமயத்தில் பிணந் தானே! இல்லாவிட்டால் ஏன் அத்தனை கனம்!

இப்படியெல்லாம் யோசித்து, புத்தியின் சக்தி கொண்டு மெள்ள மெள்ளக் கை கால்களை அசைத்த இதயசந்திரன் தனது இடுப்பில் கட்டியிருந்த கயிற்றை மெள்ள மெள்ள இழுத்துச் சுருட்டிக் கொண்டான். அதில் மார்பளவு தூரம் கையில் பிடித்துப் படுத்தபடியே பக்கப் பாறையில் உட்கார்ந்திருந்த கழுகை நோக்கி வீசினான். கயிறு கழுகு இருந்த இடத்திற்கு வெகு அருகில் சென்று விழுந்தும் கழுகு அசையவில்லை. பதிலுக்குக் 'க்ராச்' சென்று பயங்கரமாக அலகு திறந்து கத்தியது அப்பருந்து. தூரத்தேயிருந்த இரு கழுகுகளும் பதிலுக்குக் கத்தின. பிறகு அந்தப் பயங்கரக் கூச்சலை மாறி மாறிப் போட்டன. கழுகுகளின் ஒலி காதைப் பிளந்தது. அவை தனக்குப் பாடும் மரண கீதமா அது என்று நினைத்துப் பார்த்த இதயசந்திரன் மீண்டும் ஒருமுறை கயிற்றை இழுத்து வீசினான். இம்முறை அக்கழுகு கத்தலுடன் சிறகையும் இரு முறை ஏற்றி இறக்கிப் பட்பட்டென்று

அடித்தது. மற்ற கழுகுகளும் சிறகடித்தன. கத்தின. ஆனால் எக்கழுகும் பறக்கவில்லை. பதிலுக்கு அவற்றின் கூச்சல் கேட்டு வேறு கழுகுகள் வந்து சேர்ந்தன. வேறு சில பட்சிகளும் பறந்து ஆகாயத்திலிருந்தே கீழே நடப்ப வற்றை வேடிக்கை பார்த்தன. எல்லாவற்றுக்கும் மேலாக அவன் சடலத்தை விழுங்க ஆசைப்படுவது போல் கடல் அலைகள் பேரிரைச்சல் போட்டன.

உதயகாலத்திலும் ஓரளவு எங்கும் பனி சூழ்ந்திருந்த தால் அவன் கண்ணும் கழுகுகளை விட்டு அதிக தூரம் பார்க்க முடியவில்லை. மல்லாந்து கிடந்ததாலும் தலையை ஓரளவே அசைக்க முடிந்ததாலும் அப்புறமும் இப்புறமும் வானத்தையும் பார்க்க முடிந்ததே தவிர, அவனால் வேறெதையும் பார்க்க முடியவில்லை. சுரணை மெல்ல வந்துவிட்ட கை கால்கள் கூட அதிக செயலுக்குப் பயனற்றவையாயிருந்ததால் எப்படியும் தன் உயிர் அதிக நேரம் கழுகுகளிடமிருந்து தப்பாது என்ற முடிவுக்கு வந்தான் இதயசந்திரன். அந்த நேரத்தில் கூட அவன் இதயக்கண் முன்பு அவன் கடமை எழுந்து நின்றது. மகாராஷ்டிர வாரிசைக் களவாடி வந்தவனை நேருக்கு நேர் சந்தித்தும் தனது கடமையை நிறைவேற்ற முடியாத நிர்ப்பந்த நிலையில் தானிருந்ததை உணர்ந்தான் அவ்வீரன். விதி தன்னிடம் எதற்காக அப்படி விளையாட வேண்டும் என்பதும் புரியவில்லை அவனுக்கு. 'என் கைகால்கள் சுதந்திரமாயிருந்து அவனை நான் சந்தித் திருந்தால் நிலைமை எத்தனை மாறுபட்டிருக்கும்? வந்த வேலை முடிந்து இத்தனை நேரம் நான் தமிழகத்தை நோக்கிச் சென்றிருப்பேனே' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட இதயசந்திரன் மெள்ள மெள்ள உடலையும் அசைக்கத் தொடங்கினான். தன் உடல் அத்தனை பளுவாயிருக்க முடியும் என்று அன்றுதான் தெரிந்தது அவனுக்கு. மெல்ல மெல்ல உடலை அசைத்து எழுந்து உட்கார முயன்று முடியாமல் பாறை மேல் மீண்டும் மல்லாந்து விழுந்தான். முந்தி தலையில் துப்பாக்கிக்



காயமிருந்த இடத்தில் மீண்டும் பாறை தாக்கவே மறுபடி யும் மூர்ச்சையானான்.

முழு மூர்ச்சையாயிருந்தாலும் ஒரு நிம்மதியாயிருந் திருக்கும். ஆனால் மூர்ச்சை அரை மூர்ச்சையாயிருக்கவே அவன் காதுகளில் ஏதேதோ ஒலிகள் கேட்டன. பஞ்சடைந்த கண்களில் ஏதேதோ காட்சிகள் தெரிந்தன. தெரிந்ததெல்லாம் பிரமையா உண்மையா என்று நிர்ணயிக்க முடியாத அரைகுறை நிலை அது. கழுகுகளில் ஒன்று அவன் மார்பில் உட்கார்ந்தது போல் தோன்றியது பிறகு ஏதோ கலவரம் கேட்டது. தனக்கு இருபுறத்திலும் யாரோ இருவர் உஷ்ணமாகத் தர்க்கம் செய்யும் சொற்கள் காதில் விழுந்தன. தர்க்கம் வர வரப் பலமாகியது. பிறகு ஒருவர் தன்னைத் தூக்குவது போன்ற ஒரு பிரமை திடீரென ஒரு துப்பாக்கி வெடித்த சத்தம்! சரசரவென தன் உடல் எங்கோ உருண்டு செல்வதுபோன்ற நினைப்பு எங்கு உருண்டு போகிறேன்! எங்கு? எங்கு? மனம் துடிக்கு நிலை! பிறகு அலைகளின் பேரிரைச்சல்! திடீரென சகல ஒலிகளும் அடங்கி விடுகின்றன உடலுக்கு ஏதோ இதமான இடம்! காதுக்கு இதமான சொற்கள்! பிறகு மறதி மயக்கம்! மயக்கத்தைத் தொடர்ந்து படகுக் கல்ல யின் மதிமுகம். அவள் கை ஓங்கித் துப்பாக்கி கொண்டு தாக்கிய போதிருந்த சுந்தரத் தோற்றம்! தன் பக்கத்தில் வாசிஷ்டி கரையில் மல்லாந்து கிடந்த மோகன காட்சி! இப்படி எத்தனையோ கற்பனைகள் கற்பனைகளா கனவுகளா!

அது தெளிய அரை நாளாகியது தமிழனுக்கு. அவன் மெல்லக் கண் விழித்தபோது ஒரே ஒரு கழுகு மட்டு அசைவற்று உட்கார்ந்திருந்தது. அதைச் சுடக் கை துப்பாக்கியைத் தேடினான் இடையில். கிடைக்கவில்லை தனது ஆயுதங்களை வீரர்கள் பறித்துக் கொண்ட அப்பொழுதுதான் புரிந்தது அவனுக்கு. அவன் இடையில் அப்பொழுதும் ஒரு கத்தி கட்டியிருந்தது. அந்தக் கத்தியை அந்தப் பெண்ணுடையிலிருந்து ரகசியமாகத் தால்

எடுத்துக் கொண்டது நினைப்பு வந்தது அவனுக்கு. அந்தக் கத்தியைத் தான் வீசியும் தனக்குப் பயனில்லாது போய் விட்டதும் நினைப்புக்கு வரவே பெருமூச்செறிந்தான். அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து பக்கத்தில் யாரோ நகைத்தார்கள். அந்த நகைப்பு வந்த திசையில் கண்களைத் திருப்பினான் வாலிபன். பக்கத்தில் நின்றிருந்தாள் முதலில் பாறையில் அவனுடன் பதுங்கிப் படகிலழைத்து வந்த அந்தப் பைங்கிளி. அன்றும் அவள் சராயும் மேலங்கியும் அணிந்திருந்தாள். தலையில் சிறு துணி அவள் குழலைத் தடுத்து ஒதுக்கி நின்றது. அவள் இதழ்கள் மட்டுமின்றி அவள் பெருங்கண்களும் அவனை நோக்கி நகைத்தன. அவள் இடைக்கச்சையிலிருந்த கைத்துப்பாக்கியும் அவனைப் பார்த்து நகைத்திருக்க வேண்டும். இல்லா விட்டால் அத்தனை வெறுப்புடன் கேட்டிருப்பானா அவன் அவளை நோக்கி, ''அந்தத் துப்பாக்கிதானே அது?'' என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தாள் அவள். அந்தத் தலையசைப்பிலும் அவனைப் பார்த்த பெரும் விழிகளிலும்கூட பேரழகு இருந்தது. ஆனால் தன் அழகை அவள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இடைவெளி கொடுத்த மேலங்கி விரிந்து மார்புகளின் விளிம்புகளைக் காட்டியதைக்கூட அவள் மறைக்க முயலவில்லை. ஏதோ கடமையைச் செய்யும் போர்வீரன் மற்றதை அசட்டை செய்வதைப் போல நடந்து கொண்டாள் அவள். ''இப்பொழுது உடல்நிலை எப்படி யிருக்கிறது'' என்று கேட்டு அவன் தலைமீது கை வைத்தாள்.

''பரவாயில்லை.'' உஷ்ணத்துடன் வெளியிட்டான் ஒற்றைச் சொல்லை அந்த வாலிபன். சொல்லிச் சற்று அசைந்ததும் தான் படுத்திருந்தது ஒரு பஞ்சணை யென்பதை உணர்ந்தான்.

''ஆகாரம் ஏதாவது தேவையா?'' என்று வினவிய அவள் இரண்டடி நடந்து பஞ்சணையை இடித்துக் கொண்டு நின்றாள்.



பஞ்சணைமீது அவள் திண்ணிய கால் அழுந்தியது தன் மீதே அழுந்தியது போலிருந்ததால் பெரும் சங்கடத்துக் குள்ளான இதயசந்திரன் ''தேவையில்லை'' என்றான்.

''அதுவும் நல்லதுதான்'' என்று அவள் சிரித்தாள்.

''ஏன் நல்லது?'' உஷ்ணம் இம்மியளவும் குறையாத நிலையில் வந்தது அவன் கேள்வி.

அவள் தன் பகுதியைச் சற்று ஏற்றிப் பஞ்சணை முகப்பில் நன்றாக உட்கார்ந்துகொண்டு அவன் கையை எடுத்து நாடியைப் பரிசோதித்தாள். பிறகு சொன்னாள்: ''நல்லதுதான்'' என்று.

''சாப்பிடாததா?''

''ஆம்.''

''ஏன்?''

''இன்னும் நாடித் துடிப்பு அதிகமாயிருக்கிறது. பட்டினி கிடந்தால் இறங்கும்.''

''நீ என்ன மருத்துவச்சியா?''

''இல்லை.''

''இதெல்லாம் எப்படிப் பழக்கம் உனக்கு?''

''உங்கள் மாதிரி ஆட்களை அடிக்கடி பார்த்துப் பழக்கம்.''

''பல பேரிடம் பழக்கமோ?'' பண்பாடற்ற இந்தச் சொற்களைக் கடுப்புடன் உச்சரித்தான் தமிழன்.

அவள் அந்தக் கடுப்பைச் சிறிதும் கவனிக்க வில்லையோ, அல்லது கவனித்துத்தான் லட்சியம் செய்ய வில்லையோ, ''ஆம்'' என்று சர்வ சாதாரணமாகப் பதில் சொன்னாள்.

இதயசந்திரன் கோபம் எல்லை கடந்தது. ''எல்லோர் பக்கத்திலும் இப்படித்தான் உட்காருவாயோ?'' என்று சீறினான் அவன்.

''ஆம். இதைவிட நெருங்கிக்கூட உட்காருவேன்.''

''தொடுவாயா?''

''நன்றாகத் தொடுவேன்.''

''இதை ஒப்புக்கொள்ள வெட்கமாயில்லை உனக்கு?''

''சிறிதும் இல்லை.''

''ஏன்?''

''நான் வெட்கப்பட வேண்டியது ஒரே ஒருவரிடம்.''

''யாரவர்?''

''என் கணவர்?''

தூக்கிவாரிப் போட்டது இதயசந்திரனுக்கு. ''உன் கணவரா! விவாகமாகி விட்டதா உனக்கு?'' என்றான் மனக் கஷ்டத்துடன்.

''இல்லை'' என்று அவள் கூறி நகைத்தாள். ஏதோ பெரும் சுமை இறங்கியது போலிருந்தது இதயசந்திரனுக்கு.

''நல்ல வேளை'' என்று தன்னையும் மீறிச் சொல்லி விட்டான் அவன்.

அவள் அவனைக் குழப்பத்துடன் நோக்கினாள். ''ஏன் நல்ல வேளை?'' என்றும் கேட்டாள்.

அவன் பதில் சொல்லவில்லை. பெருமூச்செறிந்தான். உள்ளம் அவளிடம் மெள்ள மெள்ள பறிபோவதை உணர்ந்ததால் திகிலும் அடைந்தான். ஏற்கனவே பானு தேவியிடம் அடைக்கலமான உள்ளத்தில் இன்னொருத்திக்கு இடம் ஏது என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டும் விடை கிடைக்கவில்லை அவனுக்கு மனம் பெரும் போராட்டத்தில் ஈடுபட்டதால் மெள்ளக் கண்ணை மூடிக் கொண்டான். அவன் கை அவள் மடிமேல் விழுந்தது. அவள் அவனைப் பிடித்து உலுக்கினாள். ''வீரரே! வீரரே!'' என்று அசைக்கவும் செய்தாள்.

அவன் கண் விழித்து அவளை நோக்கி, ''ஏன்?'' என்று கோபத்துடன் கேட்டான்.

''கையை எடுங்கள்'' என்றாள் அவளும் கோபத்துடன் முறுவல் செய்து.



''ஏன் எடுக்க வேண்டும்?''

''இது அபிஸீனியப் பெண்கள் உடையல்ல. இதில் தேட வேண்டிய கத்தி உங்கள் கச்சையிலேயே இருக்கிறது.''

இதைக் கேட்ட அவன் கையை எடுத்துக்கொண்டான். முதல் நாளிரவு அவள் ஆடைக்குள் அவன் கத்தியை எடுத்தது அவனுக்கு நினைப்புக்கு வந்ததால் அவன் உள்ளம் உணர்ச்சி வசப்பட்டது. 'என்ன! நான் வரவரத் தமிழர் பண்பாட்டையே இழந்துவிட்டேனா' என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்ளவும் செய்தான்!

கை அகன்றதும் அவள் புன்முறுவல் செய்து கூறினாள், ''வீரரே! கத்தியை நான் எதிர்பார்த்தபடி உபயோகப் படுத்தினீர்கள். இல்லையேல் நான் உங்களை இங்கு கொணர்ந்திருக்க முடியாது'' என்று.

இதயசந்திரன் வியப்பு விழிகள் கூர்ந்து நோக்கின. ''நான் கத்தியை உபயோகப்படுத்தினனோ!'' என்று வினவவும் செய்தான் அவன் வியப்பு குரலிலும் ஒலிக்க.

அவள் வினவினாள், ''நான் உங்களை வேண்டு மென்றே தலையில் லேசாக அடித்தேன். இல்லையேல் உங்கள் முழு சுரணையும் தப்பியிருக்கும். தப்பியிருந்தால் வீரர்கள் உங்களை கயிறுகட்டிக் கடலுக்குள் இறக்கி யிருப்பார்கள். கயிறு அறுந்தால் என்ன ஆகும் என்பதை முன்பாகவே விளக்கினேன் உங்களுக்கு. அதற்காகவே ரகசியமாகக் கத்தியைக் கொடுத்தேன். உங்களை வீரர்கள் கயிறுகட்டி இறக்கியபோது கயிறு திடீரென அறுக்கப் பட்டது. நீங்கள் பாறை நோக்கிச் சென்றீர்கள். புரிகிறதா இப்பொழுது?''

''இருக்கும். அப்படித்தானிருக்கும்'' என்று பதில் கூறினான்.

அவள் தொடர்ந்தாள். ''உங்களைத் தேட நான் வாசல் வழியாக வந்து மலைப் பாதையில் நடந்தேன். எனக்கு நேர்ப்புறத்தில் உங்களுக்கு நீர் கொடுக்கக் கூடாதென்று கூறிய காவலர் தலைவனும் வந்தான்.

உங்களை யார் அழைத்துச் செல்வது என்று சண்டை வந்தது. கடைசியில் பிடிவாதத்துடன் நானே உங்களை அழைத்து வந்தேன்.''

''எப்படி?''

''அரைச் சுரணையுடனிருந்த உங்களை என் மாலுமிகளை விட்டுத் தூக்கச் செய்தேன்.''

''யாரந்த மாலுமிகள்?''

''இந்தக் கப்பலின் மாலுமிகள்.''

''இந்தக் கப்பல் யாருடையது?''

''என்னுடையது.''

''உன்னுடையதா!'' என்று வியப்பால் வாயைப் பிளந்தான் இதயசந்திரன்.

''ஏன் எனக்குக் கப்பல் இருக்கக்கூடாதா?'' என்று வினவினாள் மந்தகாசம் முகத்தில் விரிய.

''நீ பெண்...'' என்று ஏதோ சொல்லத் துவங்கினான் அவன்.

''பெண் படகோட்டலாம். கப்பலோட்டக் கூடாதா?'' என்று வினவினாள் அவள்.

''வீட்டை நிர்வகிக்கலாம், விளக்கேற்றலாம்...'' என்று சொல்லிக் கொண்டு போன அவனைத் தடுத்து அவள் கூறினாள்: ''அந்தப் பணிகளிலொன்றுக்கும் இந்தப் பணிக்கும் சம்பந்தமுண்டு'' என்று.

''என்ன சம்பந்தம்?''

''விளக்குக்கும் பெண்ணுக்கும் சம்பந்தமுண்டல்லவா? அந்த சம்பந்தம். நீங்கள் அப்பொழுதிருப்பது எனது சொந்தக் கப்பல் ஜலதீபம்'' என்று கூறிய அவள் பஞ்சணையிலிருந்து எழுந்திருந்தாள். அவள் கையைப் பிடித்து நிறுத்தினான் இதயசந்திரன். அதைக் கண்டு வாயிற்படியில் நின்ற கனோஜி ஆங்கரே கடகடவென நகைத்தார்.

அத்தியாயம் 28

# இந்திர போகம்

கடகடவென நகைத்த கனோஜி ஆங்கரேயைக் கண்ட இதயசந்திரன் அதுவரை பிடித்திருந்த அழகுக் கையை விட்டு வியப்பு நிரம்பிய கண்களை அவர்மீது திருப்பி, ''நீங்களா!'' என்று வினவினான்.

கனோஜி ஆங்கரேயின் பெரு விழிகளில் விஷமம் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. ''நானேதான். மீண்டும் உனக்குத் தடையாக வந்து சேர்ந்துவிட்டேன்'' என்று அவர் சொன்ன பதிலிலும் விஷமம் தோய்ந்து கிடந்தது.

படுத்த நிலையிலும் பதைபதைத்த உள்ளத்துடன் ஆங்கரேயை நோக்கிய இதயசந்திரன், ''உங்களுக்கு இந்த மாதிரி பேச்சுதான் பழக்கம் போலிருக்கிறது?'' என்று சற்றுச் சினத்துடன் வினவினான்.

''என் பழக்கம் மாற்றவர் பழக்கத்தைப் பொறுத்தது'' என்று சுட்டிக் காட்டிப் புன்முறுவல் கோட்டினார் மகாராஷ்டிர ஸார்கேல்.

அவர் எதைச் சுட்டிக்காட்டுகிறார் என்பது புரிந்தும் புரியாததைப்போல் நடித்த இதயசந்திரன், ''மற்றவர் பழக்கமா?'' என்று வினவினான்.

''ஆம்.''

''மற்றவர் என்பது என்னைச் சுட்டும் போலிருக்கிறது.''

''யார் மனச்சாட்சி குத்துகிறதோ அவரைச் சுட்டும்.''

''என் மனச்சாட்சி...'' என்று ஏதோ சொல்லப்போன இதயசந்திரனைப் பட்டென்று மடக்கிய கனோஜி, ''கை சாட்சியைவிட உயர்ந்ததா? தாழ்ந்ததா?'' என்று கேட்டு நகைத்தார் பெரிதாக.

''கைசாட்சியா!'' என்று கோபத்துடன் கேட்டான் தமிழன்.

''ஆம் தமிழா! என் கண்முன்னாலேயே என் பெண்ணின் கையைப் பிடித்து இழுக்கிறாயே, ஆகையால் உன் கைசாட்சி எப்பேர்ப்பட்டது? அப்பேர்ப்பட்ட கையைத் தூண்டும் மனச்சாட்சி எப்பேர்ப்பட்டது?'' என்று விளக்கிய ஸார்கேல் தமது நகைச்சுவையைத் தாமே ரசித்துப் பயங்கரமாக அந்த அறையே அதிரும்படியாக நகைத்தார்.

அதுவரை வாளாவிருந்த அப்பெண், ''அப்பா! என்ன தாறுமாறாகப் பேசுகிறீர்கள்?'' என்று ஆங்கரேயைக் கடிந்துகொண்டாள். அவரைப் பார்த்த அந்த அழகிய விழிகளில் கோபம் மண்டி நின்றது. அத்துடன் சிறிது வெட்கமும் கலந்திருந்தது.

ஆங்கரே அவள் கோபத்தையும் கவனிக்கவில்லை. அவள் வெட்கத்தையும் சட்டை செய்யவில்லை. ''மஞ்சு! இந்தத் தமிழன் தாறுமாறாக நடப்பதைப்பற்றி நீ கோபிக்கவில்லை. நான் பேசுவதை மட்டும் ஆட்சேபிக்கிறாய்!'' என்று கேட்டார் தமது பேச்சின் தோரணையைச் சிறிதும் மாற்றாமல்.

அந்த அழகியின் பெயரை முதன்முதலாகக் காதில் வாங்கிய இதயசந்திரன், 'மஞ்சு! மஞ்சு! என்ன அழகான மிருதுவான பெயர்' என்று எண்ணியதன்றி உதட்டில் மஞ்சு மஞ்சு என்று முணுமுணுக்கவும் செய்தான்.

அதைக் கவனித்த ஆங்கரே, ''பார்த்தாயா பெண்ணே! உன் பெயரைத் தமிழன் ஜபம் செய்கிறான், உனக்குப் பக்தனாகி விட்டான். இருந்தாலும் இவனை நம்பாதே. பெண்களை மயக்குவதில் இவன் இணையற்றவன்'' என்று கூறியதன்றி, பொய்க் கவலையை முகத்திலும் படரவிட்டுக் கொண்டார்.

''அப்பா! நீங்கள் தளத்துக்குச் செல்லுங்கள். நான் வருகிறேன்'' என்று உத்தரவிட்டாள் மஞ்சு.



''இவனுடன் உன்னைத் தனியாக விட்டா?'' என்று வினவினார் கனோஜி.

''ஆம். என்னைக் கடித்துத் தின்றுவிட மாட்டார் போங்கள்'' என்று அதட்டினாள் மஞ்சு.

''அப்படி நிச்சயமாகச் சொல்ல முடியாது'' என்று கூறிவிட்டு வாயிற்படியைவிட்டு அகன்று அப்பாலிருந்த படிகளில் ஏறிச் சென்றார் கனோஜி ஆங்கரே. அவர் காலடிகள் மரப் பலகையில் திம்திம்மென்று சப்திக்கவே தானிருக்குமிடம் அந்த மரக்கலத்தின் அடிப்பகுதியென்பதைப் புரிந்துகொண்டான் இதயசந்திரன். அடிப்பகுதியில் அறையிருக்கும்படியான இடமிருக்குமானால் கப்பல் பெருங்கப்பலாக இருக்க வேண்டுமென்ற முடிவுக்கும் வந்தான். அத்தகைய பெரிய கப்பலைத் தன் கப்பல் என்று அப்பெண் கூறியதால் ஒருவேளை ஆங்கரேயின் மகளென்ற முறையில் அவள் அந்த உரிமை கொண்டாடுகிறாளோ என்றும் எண்ணினான் இதயசந்திரன். உண்மையில் அக்கப்பல் மஞ்சுவுக்குச் சொந்தமென்பதும் அதற்கு அவளே தலைவியென்பதும் அன்று மாலையில் புரிந்துகொண்டான் தமிழக வீரன். ஆனால் பகலுணவு அருந்த வேண்டிய அந்தச் சமயத்தில் மஞ்சுவுக்கும் கப்பலுக்கும் கனோஜி ஆங்கரேயுக்குமிருந்த சம்பந்தம் சரியாக விளங்காது போகவே அவன் கேட்டான், ''பெண்ணே, உனக்குத் தந்தை இல்லையென்றாயே?'' என்று.

''ஆம், சொன்னேன்'' என்ற அவள் படுக்கையில் பக்கத்தில் நின்ற வண்ணம் கேட்டாள். ''ஏன் பெண்ணே யென்று அழைக்கிறீர்கள்? இப்பொழுது என் பெயர் தெரிந்து விட்டதல்லவா?''

''ஒரு பகுதி தெரிந்தது'' என்றான் அவன்.

''ஒரு பகுதியென்றால்?'' என்று அவள் வினவினாள் தன் அழகிய பெருவிழிகளை அவன் முகத்தில் நிறைக்க விட்டு.

"மஞ்சு என்று அவர் அழைத்தார்" என்றான் அவன்.

"ஆம். மஞ்சுளா என்பதன் சுருக்கம் அது."

"அதைத்தான் சொன்னேன்."

"எதை?"

"மஞ்சு என்ற சொல்லில் பெயர் பூர்த்தியாக வில்லையே என்று."

"இப்பொழுது பூர்த்தியாகிவிட்டதல்லவா?"

"பெயர் சம்பந்தப்பட்டவரையில் பூர்த்தியாகி விட்டது."

"வேறு எது பூர்த்தியாகவில்லை?"

"பல சந்தேகங்களுக்கு விடைகள்?"

"அதற்குக் காத்திருக்கலாம்."

"என்னால் முடியாது."

"நீங்கள் ரொம்ப அவசரக்காரர்."

"நானா!"

"ஆமாம். பெண்ணைக் கண்டதும் கையைப் பிடிக்கிறீர்கள். பிறகு விளக்கம் கேட்கிறீர்கள். கொஞ்சம் அவசரத்தை எதிலும் குறைத்துக் கொள்ளவேண்டும். எது பலிக்கும் எது பலிக்காது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்" என்று உபதேசம் செய்துவிட்டு, குழந்தையைத் தட்டுவது போல் அவன் முதுகில் ஒரு தட்டும் தட்டிவிட்டு அறையை விட்டு வெளியேறினாள் மஞ்சு.

அவள் திரும்பிச் சென்றபோது உறுதி கலந்த அவள் நடையழகைக் கண்டான் அவன். பக்கவாட்டிலும் மேலும் கீழும் நடைக்குத் தக்கபடி அசைந்த பெரும் அழகு உயர்வுகள் அவனைஉன்மத்தம் செய்துகொள்ளச் செய்தன. அவள் சராய் அணிந்திருந்ததால் அளவுக்கு மீறித் தெரிந்த கால் கட்டும் மற்றக் கட்டுகளும் அவனை வெறி கொள்ளச் செய்தன. அந்த நிலையில் இருமுறை படுக்கையிலேயே, அசைந்த இதயசந்திரன் தனது மனம் பேதலிப்பதை



நினைத்துத் தன்னைப் பெரிதும் நொந்துகொண்டான். 'பானுதேவியிடம் உறவாடினேன் அன்றிரவு! இன்று காலை இவளிடம் உன்மத்தம் கொள்கிறேன். இதென்ன, பண்பாட்டை அடியோடு இழந்து விட்டேனா' என்று தன்னைத்தானே கண்டித்துக்கொண்டான்.

அத்தனைக் கண்டனத்தையும் மனம் லட்சியம் செய்யாமல் அவனையும் மீறி அவள் அழகுகளையும், அழகின் முக்கிய இடங்களையும் நினைத்து நினைத்துத் திண்டாடிக் கொண்டிருந்தது. அலற்றின் ஊடே தான் பாறையருகில் பதுங்கியிருந்தபோது அவள் பக்கத்தில் உட்கார்ந்து ஜலதீபத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்த கூட்டத்திலிருந்து அந்த வேளையில் ஜலதீபத்தில் பயணம் செய்யும் வரை நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் திரும்பத் திரும்ப அவன் மனத்தில் வலம் வந்தன. போதாக்குறைக்கு அவன் மனம் திரும்பத் திரும்பக் கேள்வி மீது கேள்வியாகத் தொடுத்துக் கொண்டிருந்தது உள்ளூர. 'பாறையில் நான் மறைந்திருந்தது இவளுக்கு எப்படித் தெரியும்? என்னுடன் ஆற்றங்கரையில் படுத்திருந்தவள் வாசிஷ்டிப் பிரவாகத்தில் அவ்வளவு லாவகமாக எப்படித் தப்பிச் செல்ல முடிந்தது? சென்றவள் அஞ்சன்வேல் கோட்டைக்குள் எப்படி நுழைந்தாள்? எப்படி நீர் கொடுக்க வந்தாள்? நான் தேடி வந்த அந்தப் பாதகனுடன் பேசியதை அவன் எப்படி ஒப்புக்கொண்டான்? என்னைத் தலையிலடித்துக் கயிற்றில் கட்டிக் கீழே விட்டபிறகு பாறையிலிருந்தும் கழுகுகளிடமிருந்தும் இவள் என்னைக் காப்பாற்ற அவன் ஏன் ஒப்புக்கொண்டான்?' என்று இப்படிச் சரமாரியாக அவன் தன்னைக் கேள்விகள் கேட்டுக்கொண்டான். இத்தனைக்கும் அடிப்படையில், 'மஞ்சு எப்பொழுது வருவாள்?' என்ற திருட்டுக் கேள்வியும் இருந்தது.

இத்தனைக் கேள்விகளுக்கும் அன்று பகல் பூராவும் அவனுக்கு விடை கிடைக்கவில்லை. மஞ்சுவை அவன் திரும்பப் பார்க்கவுமில்லை. உணவைக்கூட ஒரு மராட்டிய

மாலுமி கொண்டுவந்து கொடுத்தான். அவனைக் கேட்ட கேள்விக்குப் பதிலேதும் கிடைக்கவில்லை மாலுமி ஏதும் பேச மறுத்தான். உஷ்ணத்துடன் ''பதில் சொல்கிறாயா இல்லையா?'' என்று இதயசந்திரன் சீறியபோது, ''உங்களுக்குக் கப்பல் பழக்கம் இல்லை. போகப் போகப் புரிந்து கொள்வீர்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

இதயசந்திரன் அரைகுறையாக உணவருந்தினான். உணவருந்திய பின்பு ஒரு மாலுமி தட்டை எடுத்துச் சென்றான். மற்றொரு மாலுமி வந்து அவன் தலைக் காயத்தைப் பரிசோதித்து அதற்கு ஒரு திராவகத்தை ஊற்றிப் பஞ்சுவைத்து அழுத்திவிட்டுப் போனான். மாலை ஏதோ ஒரு கஷாயம் அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அந்தக் காரக் கஷாயம் அவன் தெம்பைத் திரும்பக் கொணரவே படுக்கையில் எழுந்து உட்கார்ந்துகொண்ட இதயசந்திரன் சராயைத் தவிர தனது உடம்பில் உடை ஏதுமில்லையென்பதைப் புரிந்துகொண்டு தனது மேலங்கியைத் தேடினான். அது எங்கும் கிடையாது போகவே சராயுடன் படிகளில் ஏறித் தளத்துக்கு வந்து சேர்ந்தான்.

அவன் வந்தபோது கப்பலின் நடுப் பாய்மரத்தின் அடியில் மஞ்சு நின்றுகொண்டு சுற்றிலுமிருந்த மாலுமி களுக்கு ஏதேதோ பணிகளை இட்டுக்கொண்டிருந்தாள் அங்கிருந்த பீரங்கியொன்றின் வாயைத் துண்டால் துடைத்துவிட்டு கீழே சராயைத் தவிர வேறெந்த உடையும் தரிக்காமலும் முகத்திலும் கையிலும் கரியைத் தீற்றிக் கொண்டும், அடர்த்தியான மார்பு மயிருடனும், பெரும் காது வளையங்களுடனும் முகத்தில் தொங்கிய முரட்டு மயிர்களுடனும் ராட்சதனைப் போல் வந்து கொண்டிருந்த கனோஜி ஆங்கரே, ''மஞ்சு! இதோ வந்து விட்டார் தமிழக மன்மதன்!'' என்று இரைந்து கூவினார். அவர் அப்படிக் கூவியதும் தளத்தில் பல அலுவல்களி லிருந்த மாலுமிகள் அவனைத் திரும்பி நோக்கினர்.



அந்தச் சூழ்நிலை, வீரனான இதயசந்திரனுக்குப் பெரும் திருப்தியாயிருந்தது. தளங்களைச் சில மாலுமிகள் சுத்தம் செய்ய, சிலர் பாய்க் கயிறுகளைப் பரிசோதிக்க இன்னும் சிலர் வில்லும் அம்பும் வேலும் தாங்கி நிற்க, மற்றும் சிலர் துப்பாக்கிகளைத் துடைத்து மருந்தும் இரும்புக் குண்டுகளும் திணிக்க, மனத்துக்கு மிகத் திருப்தியாயிருந்த சூழ்நிலையைக் கவனித்த இதயசந்திரன், கனோஜி ஆங்கரேயிடமும் அந்த மகாராஷ்டிர மாலுமி களிடமும் பெரும் மதிப்புக் கொண்டான். எல்லோரையும் விட ஆங்கரேயிடம் அவன் மதிப்பு ஆயிரம் மடங்கு உயர்ந்தது.

அவரை அணுகி, ''இக் கப்பல் மிக அழகாயிருக்கிறது கடற்படைத் தலைவரே!'' என்று பாராட்டினான்.

பதிலுக்குக் கனோஜி ஆங்கரே மஞ்சுவை அழைத்தார். ''மஞ்சு! மஞ்சு! இங்கே வா! மன்மதன் வேறொன்றைக் காதலிக்க ஆரம்பித்துவிட்டார்!''

அவர் அழைத்தவுடன் பாய்மரத்து அடியிலிருந்து கப்பலின் ஆட்டத்திலும் மிகத் திடமாக அவர் இருப்பிடத் திற்கு வந்த மஞ்சு, ''வேறொன்றையுமா, வேறொருத்தியை யுமா?'' என்று வினவிவிட்டு நகைத்தாள்.

''மஞ்சு! முதலில் இவன் பானுதேவியைக் காதலித் தான்...'' என்று துவங்கியதும் அதை ஆட்சேபிக்கப் போன இதயசந்திரனை, ''உஸ்! சும்மாயிரு!'' என்று அடக்கி விட்டு, ''அடுத்தபடி உன்னைக் கைதொட்டு இழுத்தான். அதை நானே பார்த்தேன். நீங்களிருவருமே மகாராஷ் டிரத்தின் வீரப் பெண்மணிகள். இப்பொழுது மூன்றாவது பெண்மணி அழகாயிருக்கிறாள் என்று ஆரம்பிக்கிறான்'' என்று கூறி நகைத்தார் கப்பலும் கடலும் அதிரும்படி.

அவருடைய கொக்கரிப்பில் மஞ்சுவும் கலந்து கொண்டாள். ''மூன்றாவது யாரப்பா? அவள் பெயர்?'' என்று கேட்கவும் செய்தாள்.

''மகாலஷ்மி'' என்ற கனோஜி ஆங்கரே மேலே எதுவும் சொல்லு முன்பு, ''பொய் பொய்!'' என்று கூவினான் இதயசந்திரன்.

''பொய்யல்ல மஞ்சு, கடலைக் கடைந்தபோது கடலில் தோன்றிய ஜோதி யார்?'' என்று வினவினார் கனோஜி.

''மகாலஷ்மி.''

''அவள் ஜலதீபம்தானே?''

''ஆம் ஆம்.''

''அவளை அழகு என்று என்னிடமே— உன் தந்தையிடமே— கூறுகிறான் இந்தத் தமிழன்.''

''ஐயோ! நான் இக் கப்பலைச் சொன்னேன்'' என்றான் இதயசந்திரன்.

''அப்படியானால் கப்பலை இவன் கழுத்தில் கட்டு'' என்று கூறிய கனோஜி ஆங்கரே சரேலென்று திரும்பி வேறொரு பீரங்கியைச் சுத்தம் செய்யச் சென்றார்.

மஞ்சு அவனை நோக்கித் திரும்பினாள். ''தமிழரே'' என்று அழைத்தாள் கடுமையுடன்.

''மஞ்சு...'' என்று அழைத்தான் பணிவுடன் தமிழன்.

''பெயர் சொல்லி அழைக்கிறீர்களா? சொந்தம் கொண்டாட ஆரம்பித்து விட்டீர்களா? இதோ அழைக்கிறேன் தந்தையை'' என்ற மஞ்சு, ''அப்பா! அப்பா!'' என்று கூவினாள்.

மஞ்சுவின் கொஞ்சுங் குரல் இனிய சங்கீதம் போல் கடல் காற்றில் கலந்தது. அது கலந்த காற்று இதயசந்திரன் உடலைத் தடவிச் சென்றது. இந்திரபோகத்திலிருந்தான் இதயசந்திரன்.

அத்தியாயம் 29

# உறுதி

மாலை முற்றிய நேரம் அது. மரக்கலத்தின் தளத்தில் பந்தங்களும் விளக்குகளும் சுடர்விடத் தொடங்கிய வேளை அது. பந்தங்களும் விளக்குகளும் மட்டுமல்ல; இதயசந்திரன் இதயத்தில் ஆசைச் சுடர் கிளம்பிய சமயமும் அதுதான். மஞ்சுவென்று அழைத்ததும் இவள் சிறு குழந்தைபோல் அப்பாவை அழைத்ததால் காற்றிலாடிய தளவிளக்குகளைப் போலவே அவன் இதய ஆசைச் சுடரும் படபடத்ததென்றாலும், அவள் அழைத்த முறையிலும் முகத்தில் படரவிட்ட விஷம ரேகையாலும் அவன் ஆசை தீபம் அதிகப்படவே செய்தது. அவள் கனோஜியை அழைத்த முறையிலிருந்தே முன்னமே அவள் குறிப்பிட்ட வளர்ப்புத் தந்தை அவராகத்தானிருக்க வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்ட இதயசந்திரன் இவ்விருவர் பேச்சையும் கேலியையும் நினைத்து நினைத்துப் பெருவியப்புக் கொண்டான். கனோஜி ஆங்கரே பெண்ணையும் தன்னையும் இணைத்துப் பேசிக் கேலி செய்வதும் அதற்கு அவள் மறுமொழி கூறுவதும் அவனுக்குப் பெரு விசித்திரமாயிருந்தது. 'காதல் விஷயத்தைத் தந்தை மகளிடம் விவாதிப்பதே விபரீதம். அப்படி விவாதித்தாலும் பெண் பதில் சொல்லாமல் வெட்கப்பட்டு ஓட வேண்டியது அவசியம். அப்படி ஏதும் செய்யாமல் அவருக்குச் சரியாகப் பெண்ணும் பேசி என்னை எள்ளி நகையாடுவது நன்றாயிருக்கிறதா?' என்று தன்னைத் தானே கேட்டுக கொண்டான். விடை அன்று கிடைக்கா விட்டாலும் மறுநாள் புரிந்து கொண்டான். சில வேளைகளில் வீரனென்றார்கள். சில வேளைகளில் காதலனென்றார்கள். சில வேளைகளில் தமிழகத்திலிருந்து ஆள்பிடிக்க வந்தவனென்றார்கள். இத்தனையும் சொல்லிச் சிரித்தும் விளையாடினார்கள். அவர்கள் தன்னை

அனுபவம் ஏதுமற்ற குழந்தைபோல் நடத்துவதைப் புரிந்து கொண்டான் தமிழன். இப்படி அவர்களிருவரும் சிரித்து விளையாடியும் மற்ற மாலுமிகள் மட்டும் தன்னை மிகுந்த மரியாதையுடன் நடத்துவதைக் கண்டு 'இதுவும் அவர்கள் ஏற்பாடாகத்தான் இருக்க வேண்டும்' என்று தீர்மானித் தான். அதனால் பிரமிப்பும் கொண்டான். ஜலதீபத்தின் அதிபதிகள் நடப்பதைக் கண்டு 'இதுவும் அவர்கள் ஏற்பாடாகத்தான் இருக்க வேண்டும்' என்று தீர்மானித் தான். அதனால் பிரமிப்பும் கொண்டான். ஜலதீபத்தின் அதிபதிகள் நடப்பதைக் கனோஜி கொண்டு மற்ற மாலுமிகள் முறை தவறாத கெடுபிடி ஆங்கரேயிடமும் மஞ்சுளாவிடமும் இருப்பதை உணர்ந்தான்.

அன்றிரவு அவனுக்குத் தளத்திலேயே உணவு பரிமாறப் பட்டது. கனோஜியும் மஞ்சுவுங்கூட அவனுடன் தளத்தி லேயே உணவருந்தினார்கள். கடற்காற்று பலமாக இருந்த தாலும் அது தெற்கு நோக்கி அடித்ததாலும் பாய்மரங்கள் அவிழ்த்து விடப்பட்டிருந்தன. அதிலிருந்து கப்பல் போக வேண்டிய இடம் வடக்கிலிருக்கிறது என்று புரிந்து கொண்ட இதயசந்திரன் உண்வருந்திக் கொண்டே கேட்டான்: ''நாம் எதற்காக வடக்கு நோக்கிப் போகிறோம்?''

ஒரு சப்பாத்தியை முழுவதும் எடுத்து, பிட்டு மாதிரிச் சமைக்கப்பட்டிருந்த பயத்தம் பருப்பில் நன்றாக அமுத்தி பிடி பருப்பு அதில் அடையும்படியாகச் சுருட்டி வாயில் அடைத்துக் கொண்ட கனோஜி ஆங்கரே அத்துடன் புஸ் புஸ்ஸென்று வாய் மூலம் காற்றை விட்டு, ''வடக்கில் தான் இருக்கிறது இக்கப்பல் தலைவியின் கோட்டை'' என்று கூறினார். சப்பாத்தியையும் பருப்பையும் குதப்பிக் கொண்டு பேசியதால் இரண்டு மூன்று பருப்புகள் இதயசந்திரன் மீது தெரிக்கவே அவன் அவற்றைத் தட்டிவிட்டு ''சாப்பிட்டுவிட்டுப் பதில் கூறுங்கள்'' என்றான் அலுப்புடன்.



''சாப்பிட்ட பிறகு கேள்விகளை வீசு'' என்று அவர் கூறினார்.

இதிலிருந்தே கனோஜி ஆங்கரே அதிக நாகரிகமற்ற வர், மூர்க்க சுபாவமுள்ளவர் என்று தீர்மானித்துக் கொண்டான் இதயசந்திரன். அதுமட்டுமல்ல, இரவு முடிவதற்குள், உலகத்தில் எதையும் மதியாதவர், எதையும் எதிர்நோக்கும் வல்லமையுள்ளவர் என்பதையும் புரிந்து கொண்டான். உணவு அருந்தி மீசையிலிருந்த உணவுகளை ஜலம் விட்டு நன்றாகக் கழுவி உணவருந்திய இடத்தைச் சுத்தி செய்யும் படி மாலுமியொருவனுக்குக் கட்டளையிட்டுவிட்டுச் சற்று அப்பால் சென்று மல்லாந்து படுத்துக் கொண்டார் ஸார்கேல்.

பாய் பஞ்சணையின்றி வெறும் மரத்தரையில் மல்லாந்து விட்ட அவரைக் கண்ட இதயசந்திரன், ''கீழே ஏதும் போட்டுக் கொள்ளவில்லையா?'' என்று வினவினான் அவருடைய அசுர சரீரத்துக்கருகில் சென்று நின்றுகொண்டு

''தந்தைக்கு மரந்தான் பிடிக்கும்'' என்று கூறினாள் அவன் பக்கத்தில் லந்து நின்றுகொண்ட மஞ்சு.

''விசித்திரமாயிருக்கிறது! கீழே அறையில்லையா, பஞ்சணையில்லையா?'' என்று வினவினான் இதய சந்திரன்.

''இரண்டுமிருக்கின்றன. ஆனால் நான் பச்சைக் குழந்தையுமல்ல: பகுத்தறிவைப் பறக்கவிட்ட காதலனு மல்ல'' என்று மல்லாந்திருந்த முறையில் ஆகாயத்தைப் பார்த்தபடியே கூறினார் மகாராஷ்டிரக் கடற்படைத் தலைவர். மேலும் சொன்னார்: ''தமிழா! இந்தக் கப்பலை நானே நிர்மாணித்தேன் டச்சுக்காரர்களைக் கொண்டு. இதன் மரத்தைவிடப் பஞ்சணை எனக்கு அதிக சுகத்தை அளிக்காது. இதோ என் உடலை வருடிச் செல் லும் உப்புக் கடற்காற்றைவிடப் பன்னீர் தெளித்த அரண் மனை விசிறுக் காற்று எனக்கு இன்பத்தை அளிக்காது.

இந்த உப்புக் காற்று எனது மூச்சு, உப்புநீர் எனது உடலுக்குத் தெவிட்டாத இன்பம். முடியுமானால் கடல் அலைகளிலேயே படுப்பேன். முடியாததால் அதன்மீது படுத்திருக்கும் மரக்கலத்தின் தளத்தில் படுத்திருக்கிறேன். நீயும் மாலுமியாகப் போவதால் இதன் சுகத்தைச் சீக்கிரம் உணருவாய்!'' இதைச் சொன்ன ஆங்கரே புஸ்ஸென்று பாம்பு சீறுவது போல் பெருமூச்சொன்றைத் தனது நாசித் துவாரங்களிலிருந்து வெளியிட்டார்.

அந்தச் சொற்களைச் சொன்னபோது அவருக்கிருந்த உணர்ச்சியையும் உணர்ச்சி கிளப்பிய ஆவேசத்தையும் கவனித்த இதயசந்திரன் இந்திய சரித்திரத்தின் பெரும் பாத்திரமொன்றின் முன்னிலையில் தான் நிற்பதைப் புரிந்து கொண்டான். அதனால் பெருமிதமும் கொண்டான். ஆனால் தான் மாலுமியாகப் போவதாக அவர் சொன்னது அவனுக்குப் பெருவியப்பை அளிக்கவே அவன் கேட்டான். ''நான் மாலுமியாகப் போவதாக யார் சொன்னது?'' என்று.

''நான்தான் சொல்லுகிறேன்'' என்றார் கனோஜி.

''அதற்கு நான் ஒப்புக்கொள்ள வேண்டாமா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''ஒப்புக் கொள்ளாமல் வேறு வழியில்லை'' என்று சுட்டிக் காட்டிப் புன்முறுவல் கொண்டார் கனோஜி.

அதை ஆமோதிப்பவள் போல் அவன் பக்கத்தில் நின்ற மஞ்சுவும் தலையை ஆட்டினாள்.

''என்ன நீயும் தலையாட்டுகிறாய்?'' என்று சீறினான் அவளை நோக்கி இதயசந்திரன்.

''தந்தை சொன்னது உண்மை'' என்றாள் மஞ்சு.

''நான் மாலுமியாகாதிருக்க முடியாதா?''

''முடியாது.''

''என்னிஷ்டமென்று எதுவும் கிடையாதா?''

''உண்டு.''



''அப்படியானால்...'' என்று ஏதோ சொல்லப் போனவனைக் கனோஜி இடைமறித்து, ''உனக்கு உணவு வேண்டாமா?'' என்று வினவினார்.

''வேண்டும். அதற்காக...'' என்று கேட்டான் இதயசந்திரன்.

''தமிழா! கப்பலில் யாருக்கும் வேலை செய்யாமல் உணவு கிடையாது. இங்கு வேலை செய்தால்தான் சாப்பாடு. தலைக்கு இவ்வளவு சாப்பாடு என்று கணக்கும் உண்டு. இங்கு சாதாரண மாலுமியும் இந்தக் கப்பல் தலைவியும் நானும் எல்லோருமே ஒன்றுதான். நிலத்தின் விதிகள் வேறு, நீரின் விதிகள் வேறு. தரையில் தண்டச் சோறு உண்டு. இங்கு கிடையாது'' என்று திட்டவட்டமாக அறிவித்த கனோஜி மேலும் கூறினார். ''தமிழா! நீ சுவர்ண துர்க்கம் வந்ததும் ஏதாவது ஒரு கப்பலில் மாலுமியாக அமர்த்தப்படுவாய். உனக்குக் கப்பல் செலுத்தும் பயிற்சியும் கப்பல் போர்ப் பயிற்சியும் அளிக்கப்படும். உன் திறமை உனக்கு உயர் பதவிகளை அளிக்கும். இதை நான் உனக்கு ஏன் செய்கிறேன் தெரியுமா? பிரும்மேந்திர ஸ்வாமிக்காகச் செய்கிறேன். அவர் உன்னை அழைத்துச் செல்ல எனக்குக் கட்டளையிட்டார். அக் கட்டளையை நிறைவேற்றவே உன்னை இங்கு அழைத்து வந்தேன்'' என்று.

இதயசந்திரன் இதயத்தில் கோபம், வியப்பு இரண்டும் கலந்து தாண்டவமாடின. தனது இஷ்ட விரோதமாகக் கனோஜி தன்னை மாலுமியாக்க முயன்றது அவன் கோபத்தைக் கிளறியது. அவர் தன்னை அக் கப்பலுக்கு அழைத்து வந்ததாகக் கூறியது வியப்பை அளித்தது. 'அகஸ்மாத்தாக மஞ்சு என்னை விடுவித்திருக்க இவர் அதற்கு எப்படிப் பொறுப்பாயிருக்க முடியும்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான் அவன்.

அவன் மனத்திலோடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட ஆங்கரே கேட்டார், ''மஞ்சு தப்ப வைத்தா

ளென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா தமிழா?'' என்று.

இதயசந்திரனுக்கு அவர் கேள்வி தூக்கிவாரிப் போட்டது. ''ஆம்'' என்றான் அவன் பதிலுக்கு.

''மஞ்சுவை அனுப்பியது நான்'' என்று சர்வசாதாரண மாகச் சொன்னார் தளபதி.

''நீங்களா! உங்கள் பாடே திண்டாட்டமா யிருந்ததே!'' என்று சுட்டிக்காட்டினான் இதயசந்திரன்.

''தவறு தமிழா! தவறு. பானுதேவியின் சூழ்ச்சியிலோ அவள் ஆயுதமான உன் ஏற்பாட்டிலோ என்னைச் சிக்க வைக்க முடியுமென்று நினைப்பது பைத்தியக்காரத்தனம். தாராபாயின் கட்சியைச் சேர்ந்த என்னைத் தீர்த்துக் கட்ட பானுதேவி எந்த ஏற்பாட்டுக்கும் துணிவாளென்பதை என்னால் எதிர்பார்க்க முடியாதென்றால் நான் வேறு எதைச் சாதிக்க முடியும்? எதைத்தான் எதிர்பார்க்க முடியும்? ஸித்திகளின் நடவடிக்கைகளை முன்கூட்டி ஊகிக்க முடியுமா? ஷாஹுவின் ஏற்பாடுகளைத்தான் ஊகிக்க முடியுமா? இரண்டும் முடியாவிட்டால் நான் கொங்கணிப் பகுதியில் நடமாட முடியுமா? பானுதேவி யைப் பற்றி நான் நிரம்பக் கேட்டிருக்கிறேன். அவள் துணிவைப் பற்றி எனக்குச் சந்தேகமில்லை. அவள் அறிவு, செயல்முறை இரண்டும் எத்தனை தூரம் எட்டுமென்பதும் எனக்குத் தெரியும். என்ன இருந்தாலும் பெண் புத்தி தமிழா...!'' என்று மேலும் ஏதோ சொல்லப்போன கனோஜியை, ''அப்பா!'' என்ற கடுமையான சொல் தடுத்தது.

அந்தச் சொல்லை விடுத்த மஞ்சுவை நோக்கிய கனோஜி, ''நீ வேறு மஞ்சு. நீ பெண்ணே அல்ல...'' என்று கூறிப் பெரிதாக நகைத்தார்.

''அப்பா!'' இம்முறை சொல் மிகக் கடுமையாக வெளி வந்தது.



''தளபதி! பண்பாடு தவறிப் பேசுகிறீர்கள்'' என்று இதயசந்திரனும் ஆட்சேபித்தான்.

கனோஜியின் கண்களில் விஷமம் பெரிதும் துளிர்த்தது. ''அவளுக்கு நீ பரிய ஆரம்பித்துவிட்டாயோ?'' என்று கூறி விஷமப் புன்முறுவல் கூட்டினார்.

''அதில் தவறில்லை.'' இதயசந்திரனின் குரலில் கண்டிப்பு இருந்தது.

''பார்த்தாயா மஞ்சு! காதலன் சீறுகிறான்'' என்ற கனோஜி ஆங்கரேயின் கண்களை உஷ்ணம் கக்கும் மஞ்சுவின் கண்கள் சந்தித்தன.

கனோஜி பட்டென்று அடங்கிவிட்டுச் சர்வசாதாரண மாகப் பேசத் தொடங்கி, ''தமிழா! பானுதேவி என்னைப் பிடித்துக் கொடுக்க நடவடிக்கை எடுப்பாளென்று எனக்குத் தெரியும். அதற்கு உன்னை உபயோகப்படுத்துவா ளென்பதும் எனக்குத் தெரியும். பல்லிளிக்கும் ஆண்மகனை எந்தப் பாவையும் வளைக்க முடியுமென்பதும் நான் அறியாததல்ல. ஆகவே எல்லோர் முன்னிலையிலும் நான் ஸாத் ஸித்தி மாளிகையின் பின்புறப் பாதை வழியாக அன்று நள்ளிரவில் செல்லப் போவதாகக் கூறினேன். அங்கு நீயும் ஸாத் ஸித்தியின் வீரர்களும் காத்திருப்பீர்க ளென்பது எனக்குத் தெரியும். ஆகவே வேறு மார்க்கத்தில் கரடு முரடான வழியில் என் வெண் புரவியுடன் வந்து படகேறி அக்கரை சென்றேன் ஆனால் நான் செல்லு முன்பு உன் புரவி தனியாக ஓடிக் கொண்டிருந்ததையும், நீ தனியாக மீண்டும் ஸாத் ஸித்தி மாளிகைப் பக்கம் சென்றதையும் கண்டேன். ஆகவே நீ என்னைக் காட்டிக் கொடுக்க மறுத்து விட்டதைப் புரிந்து கொண்டேன். எப்படியும் நீயும் கரடு முரடான வழியில் நதிக்கரைக்கு வருவாயென்று தெரியும் உன்னைக் காத்து ஜலதீபத்துக்கு அழைத்துவர மஞ்சுவுக்குக் கட்டளையிட்டேன். உனக்கு 'ஜலதீபத்'தைப் பற்றித் தெரியாதென்பது அவளுக்குத் தெரியாது. ஆகவே உன்னுடன் பாறை மறைவுக்கு

வந்ததும் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள். பிறகு நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும்'' என்று விளக்கினார்.

''ஸாத் ஸித்தி கோட்டைக்கு எப்படி வந்தாய் மஞ்சு?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''முக்காடிட்டு உடல் பூராவும் மறைத்து அராபியப் பெண்கள் உடையில் வந்தாள், அதில் ஆபத்தும் இருந்தது. இந்தப் பகுதியில் மஞ்சுவின் பெயர் பிரசித்தம். அவளைப் பிடிக்க ஸாத் நீண்ட நாட்களாக முயன்று வருகிறான். ஆனால் மஞ்சுவின் தந்திரம் ஆயிரம் ஸித்திகளையும் ஏமாற்றும். இந்தக் கடல் வழிகளில் அவள் அறியாத வழி கிடையாது. அலை நுட்பங்களில் அவள் அறியாத நுட்பம் கிடையாது. அவளைப் போல் பீரங்கிகளை இயக்கவோ, வாளை வீசவோ, கைத்துப்பாக்கியால் சுடவோ திறமையுள்ளவர் மிகச் சிலர். அரபிக் கடலின் மிகச் சிறந்த மாலுமிகளில் அவள் ஒருத்தி. அவள் உன்னைத் தப்புவிக்க ஒப்புக் கொண்டது உன் பாக்கியம்'' என்றார் கனோஜி.

இதயசந்திரன் அந்தப் பெண்ணின் திறமையைக் கனோஜி சொல்லக் கேட்டுப் பிரமித்து நின்றான். இப்படியொரு பெண் இருக்க முடியும் என்று சொப்பனத்தில்கூட அவன் நினைக்கவில்லை எத்தனைத் துணிவிருந்தால் அவள் அஞ்சன்வேல் கோட்டைக்குள் வந்திருப்பாள். எத்தனை திறமையிருந்தால் தன்னைக் காப்பாற்றியிருப்பாள் என்று எண்ணிப் பிரமையின் எல்லையை அடைந்தான். அரபு உடையில் மறைந்து அவள் அஞ்சன்வேல் கோட்டையில் நுழைந்து, நீர் கொடுக்கும் முகத்தான் தன்னை அணுகி முகமலர் காட்டியது, ஸாத் ஸித்தி உத்தரவு பெற்றுத் தன்னைக் கைத்துப்பாக்கியாலடித்து மலைப்பாறையில் தள்ளியது, பிறகு அங்கிருந்து காப்பாற்றியது எல்லாமே அவனுக்கு எல்லையில்லாப் பிரமையளித்தாலும் அவனுக்கு இரண்டு சந்தேகங்கள் இருந்தன. அவற்றை வாய்விட்டுக் கேட்க முற்பட்டு, ''தளபதி! ஸாத் ஸித்தியின் உத்தரவை இவள் எப்படிப்



பெற முடிந்தது? அந்த முகவெட்டுக் காவலன் யார்?'' என்று வினவினான்.

இரண்டுக்கும் பதில் கூறினார் கனோஜி. ''மஞ்சுவுக்கு யார் கையெழுத்தும் போடத் தெரியும். நீ கூறும் காவலர் தலைவன் அஞ்சன்வேல் கோட்டையில் என் உளவாளி. பெரும் வீரன். தாராபாயின் வலது கரம் போன்றவன்.''

அத்துடன் வேறொரு விளக்கமும் தந்தார், ''அவன் உதவியில்லாவிட்டால் நீ அஞ்சன்வேல் கோட்டையிலிருந்து தப்பியிருக்க முடியாது'' என்று கூறினார் கனோஜி. அதைக் கேட்டதும் அதிக அதிர்ச்சியடைந்த இதயசந்திரன், 'அட விதியே! எப்படியெல்லாம் என்னை ஆட்டிப்படைக்கிறாய்?' என்று தன்னைத் தானே நொந்து கொண்டான். எவனைக் கொல்லவும், எவனிடமிருந்து அரசு வாரிசை மீட்க அல்லது அழிக்கத் தஞ்சையில் உத்தரவு பெற்று வந்தானோ, அவனுக்குத் தான் கடமைப்படும் நிலை ஏற்பட்டு விட்டதை நினைத்ததால் சொல்லவொண்ணாத துக்கம் அவன் இதயத்தை அடைத்துக் கொண்டது. அந்தத் துக்கம் அடுத்த நாள் பறந்தது. தன் வாழ்க்கை முறை, தனது பிற்கால நடவடிக்கை எப்படியிருக்க வேண்டுமென்பதைத் தீர்மானித்து விட்டான் தமிழகத்தின் வீரன். அந்த உறுதி அவனுக்குப் புது பலத்தை புது எண்ணங்களைத் தந்தது.

## அத்தியாயம் 30

# கீதமா, தீபமா?

மகாராஷ்டிரக் கடற்படைத் தலைவர் மரக்கலத்தில் மல்லாந்து படுத்த நிலையில் தந்த விளக்கத்தால் மதிமயக்கம் கொண்டு விதியை நொந்துகொண்ட இதயசந்திரன், மறுநாள் தனது பிற்கால வாழ்க்கை பற்றி ஒரு முடிவுக்கு வந்துவிட்டானென்றால் அதற்கு நடந்து விட்ட நிகழ்ச்சிகள் மட்டுமல்ல, நிகழ்காலச் சூழ்நிலையும் காரணமாயிருந்தது. எந்த முகவெட்டு வீரனைத் தேடித் தான் வந்தானோ அவன் கனோஜியின் ஒற்றன் என்பதாலும் அவன் இருந்த இடம் ஸாத் ஸித்தியின் கோட்டையாதலாலும், கனோஜியின் உதவியின்றி அவனை அணுகுவதும் முடியாத காரியமென்று தமிழக வீரனுக்குச் சந்தேகமின்றிப் புரிந்தது. கனோஜியின் நேரடியான உதவியில்லாவிட்டாலும் அவருடைய கப்பல்களின் உதவியின்றி அந்தப் பகுதியில் சஞ்சரிப்பதோ, அவனைச் சந்திப்பதோ நடவாத வேலையென்பதை, எதையும் நிதானித்து முடிவுக்கு வரக்கூடிய அந்த வீரன் புரிந்துகொண்டான். இந்த எண்ணங்களோடு, ஜலதீபத்தைப் பற்றி அன்றிரவு அவன் புரிந்துகொண்ட பல விஷயங்களும் அந்த விஷயங்களின் காரணமாக ஏற்பட்ட புது எண்ணங்களும் மறுநாள் அவன் எடுத்துக் கொண்ட முடிவுக்குக் காரணமாயிருந்ததன்றி மறுநாள் சூழ்நிலையும் அதற்குப் பெரிதும் உதவியது.

அன்றிரவு மரக்கலத்தில் படுத்தவண்ணம் கனோஜி ஆங்கரே கூறிய செய்திகளைக் கேட்டு அடித்தளத்துக்குச் சென்றுவிட்ட இதயசந்திரன் பஞ்சணையில் படுத்த பின்பும் உறக்கம் வராமல் ஏதேதோ யோசித்தவண்ணமிருந்தான். காற்றின் விளைவாக எழுந்த அலைகளால் மரக்கலம் சிறிது ஆட்டங்கொடுத்தால் விளைந்த தாலாட்டுக்கூட அவனுக்குத் தூக்கத்தை அளிக்க மறுத்தது.



பஞ்சணையில் கிடந்த அந்தச் சமயத்தில் அவன் பானுதேவியைப் பற்றியும் பரசுராமன் மலை மரக்கூட்டத்தைப் பற்றியும் அங்கு ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றியும் நினைத்தான். பிறகு மஞ்சு தன்னுடன் நீரில் மூழ்கி நீந்தியதைப் பற்றியும், கரையிலே நனைந்த உடையுடன் அவள் தன் பக்கத்தில் மல்லாந்து கிடந்ததையும் நினைத்தான். நாலைந்து நாட்களுக்குள் இரு அழகிகள் தன் இதயத்தில் புகுந்து தன்னை வேதனைப்படுத்துவதையும் நினைத்தான். நினைத்து இருவரில் யார் சிறந்த அழகி, யாரிடம் தன் மனம் பிடிபட்டிருக்கிறது என்று நிர்ணயிக்கப் பார்த்தான். நிர்ணயம் ஏற்படாததாலும், மனம் பல எண்ணங்களில், சிக்கி அலைக்கழிக்கப்பட்டதாலும் படுக்கையிலிருந்து எழுந்திருந்து தலையணைக்கருகிலிருந்த ஒரு படுக்கைச் சீலையை எடுத்துத் தன் உடலைப் போர்த்திக் கொண்டு மீண்டும் தளத்துக்கு வந்து பலகையொன்றில் சாய்ந்துகொண்டு நின்றான்.

சுற்றிலும் அரபிக் கருங்கடல் இருளில் அதிகமாகக் கருத்திருந்ததால் வான நட்சத்திரங்கள்கூட அதில் பிரதிபலிக்க முடியவில்லை. மேலே இருந்த கரிய வானம் கீழிருந்த கருங்கடலுக்கு நிறத்தில் தான் சளைக்கவில்லையென்பதை நிரூபித்ததால், விண்மீன்கள் சிறிதும் பெரிதுமாகப் பலதரப்பட்ட வைரங்களைப்போல பிரகாசித்துக் கொண்டிருந்தன. பந்தங்கள் அணைக்கப்பட்டு விட்டதாலும் கப்பலின் முகப்பில் கட்டப்பட்டிருந்த கண்ணாடி விளக்கு மட்டும் புகையை விட்டுக் கொண்டு மங்கலாகப் பிரகாசித்துக் கொண்டிருந்ததாலும் ஓரளவு மங்கலான ஆனால் பயங்கரமான சூழ்நிலை கப்பல் தளத்திலும் இருந்தது. கடல் வெட்டிவிட்ட உலகத்திலிருந்து பிரிந்து விட்ட நகரும் தீவைபோலத் துடுப்புக்களின் துழாவலால் முன்னேறிக் கொண்டிருந்த ஜலதீபம் எதையும் விழுங்கும் துணிவுள்ள சுறாவைப்போல நகர்ந்து கொண்டிருந்தது. அந்தச் சூழ்நிலையின் பயங்கரத்தை வரவேற்றான் இதயசந்திரன். வீரன் இதயத்துக்குப் பயங்கரமளிக்கும்

இன்பத்தை வேறு எதுவும் அளிக்க முடியாது அல்லவா? ஆகவே அக்கப்பலில் சாய்ந்து நின்ற இதயசந்திரன் மெள்ளத் தளத்தைச் சுற்றி நடக்கவும் முற்பட்டான்.

கப்பல் பயணம் அவனுக்கு அடியோடு புதிதுமல்ல. சென்னையை அடிக்கடி அணுகும் பிரிட்டிஷ் கப்பல்களில் அவன் ஏறியிருக்கிறான், ஒவ்வொரு சமயம் புதுவையின் பிரெஞ்சுக் கப்பல்களிலும் சிறிது தூரம் பயணம் செய்திருக்கிறான். டச்சுக் கப்பல், போர்த்துகீசியக் கப்பல், பிரிட்டிஷ் கப்பல், பிரெஞ்சுக் கப்பல் இவற்றில் பெரிதும் சிறிதுமாகப் பல கப்பல்களைப் பார்த்திருக்கிறானென்றாலும் இப்படியொரு போர்க்கப்பலில் அவன் இராக் காலப் பயணம் செய்ததில்லையாகையால் அது புது அனுபவமாகவே இருந்தது அவனுக்கு. தவிர அக்கப்பலும் வெளிநாட்டார் கப்பலைப் போல் பார்வைக்கிருந்தாலும் வேறுபாடுகளும் பல இருப்பதைக் கவனித்தான். ஜலதீபம் வெளிநாட்டு கப்பல்களிலும் பாரதக் கப்பல்களிலும் உள்ள குணங்களின் ஓர் இணைப்பு என்று ஊகித்தான். அவன் ஊகம் சரியென்பதை மஞ்சுவே உணர்த்தினாள்.

தளத்தில் அவன் நடந்து சென்று கொண்டிருந்தபோது பின்னால் யாரோ நடக்கும் ஒலி கேட்கவே சட்டென்று திரும்பிய இதயசந்திரன் பின்னால் நாலடி தள்ளி வந்து கொண்டிருந்த மஞ்சுவைப் பார்த்து, ''எதற்காக என்னை தொடருகிறாய்?'' என்று வினவினான் சீற்றத்துடன்.

மஞ்சு சிரித்துக்கொண்டு சொன்னாள், ''என் காதலர் தனித்துத் திரிய நான் விடமுடியுமா?'' என்று.

இதயசந்திரன் அசந்துபோய் நின்றான். 'இவளுக்கு வெட்கம் சிறிதுமில்லையா?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். பிறகு வெளிப்படையாகக் கோபத்துடன் அவளை நோக்கி, ''என்னை கேலி செய்கிறாயா? அல்லது என்னுடன் விளையாட நினைக்கிறாயா?'' என்று வினவினான்.



''காதலரைக் கேலி செய்யாமல் யாரைக் கேலி செய்ய முடியும்? அவருடன் விளையாடாமல் யாருடன் விளையாட முடியும்?'' என்று வினவிய மஞ்சு அவனைத் தைரியத்துடன் ஏறெடுத்து நோக்கி நகைத்தாள்.

''பெண்ணே...'' என்று சங்கடத்துடன் துவங்கினான் இதயசந்திரன்.

''சொல்லுங்கள்.'' குழைந்தது அவள் குரல். குழைவில் கேலியுமிருந்தது.

''நான் ஆண்மகன்...'' என்று இழுத்தான்.

''ஓ!'' இதைச் சொன்ன அவள் ஒலியிலிருந்தது ஏளனமா கோபமா என்பது புரியவில்லை அவனுக்கு.

''நீயோ ஒரு பெண்...''

''அப்படியா!''

''நானிருக்குமிடத்திற்கு நீ தனித்து வருவது, அதுவும் இரவில் வருவது சரியாகாது.''

''அது இப்பொழுதுதான் புரிந்தது போலிருக்கிறது உங்களுக்கு?''

''இல்லை. ஆதியிலிருந்தே புரிந்திருந்தது.''

இதைக் கேட்ட அவள் சிறிதும் அச்சமின்றி அவனை நோக்கினாள். கப்பல் முகப்பு விளக்கு அவள் முகத்தில் நன்றாக விழுந்திருந்ததால் அவள் கடல் மோகினிபோல் விளங்கினாள். இந்த இரவில் அவள் அழகிய இதழ்கள் அசைந்தன. அசைந்து கேட்டன, ''உங்களைப் பாறைக் கருகில் சந்தித்தேனல்லவா?'' என்று.

''ஆம்'' என்றான் இதயசந்திரன்.

''நீங்கள் இருக்குமிடத்துக்குத் தனித்துத்தானே வந்தேன்?'' என்று கேட்டாள் அவள்.

''ஆம்.''

''பிறகு உங்களைப் படகில் அழைத்துக் கொண்டு தனித்துத்தானே வந்தேன்?''

"ஆம்."

"பிறகு தரையில் உங்களுடன் தனித்துத்தானே படுத்துக் கிடந்தேன்?"

"ஆம்."

"அப்பொழுதெல்லாம் நீங்கள் ஏன் ஆட்சேபிக்கவில்லை?" என்று மஞ்சு வினவினாள்.

இதயசந்திரனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால் விழித்தான். கடைசியில், "மஞ்சு! அந்த நிலை வேறு. நான் ஸாத் ஸித்தியிடமிருந்து தப்ப நினைத்த நிலை அது. இந்த நிலை வேறு" என்று விளக்கினான்.

"தனிமையில் விபரீதங்களை விளைவிப்பது அவ்வப்பொழுதுள்ள நிலை அல்ல வீரரே!" என்று சுட்டிக் காட்டினாள் மஞ்சு.

"வேறு எது மஞ்சு?" என்று வினவினான் இதயசந்திரன்.

"உறுதியற்ற மனம்; அடிப்படைக் குணம்" என்று கூறிய மஞ்சு, "சரி சரி! அது கிடக்கட்டும்! எதற்காக நள்ளிரவில் இங்கு வந்து நிற்கிறீர்கள்?" என்று வினவினாள்.

"கப்பலைப் பார்க்க வந்தேன்!" என்றான் இதயசந்திரன் ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக.

"பார்த்து என்ன தெரிந்து கொண்டீர்கள்?"

"இது வெள்ளைக்காரக் கப்பல் மாதிரி இருக்கிறது, ஆனால் வேறுபாடும் இருக்கிறது"

இதைக் கேட்ட மஞ்சுவின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. "நல்லது நல்லது" என்று கூறவும் செய்தாள். …த்துடன் மேலும் சொன்னாள். "இந்தக் கப்பல் டச்சுக்காரர்களால் கட்டப்பட்டதென்பதை தந்தை கூறக் கேட்டீர்களல்லவா? டச்சுக்காரர் அவர்கள் கப்பல்களைப் போல் இதைக் கட்டவில்லை. டச்சு, பிரிட்டிஷ்,



போர்ச்சுக்கல் கப்பல்களின் கதம்பமாக இதை நிர்மாணித்தார் தந்தை. இது குராப்புமல்ல, காலிவாத்துமல்ல, ஷிபார் வகையைச் சேர்ந்தது" என்று விளக்கினாள்.

இதயசந்திரன் விழித்தான், "குராப் என்றால் பெரிய கப்பலா?"

மஞ்சுவின் முகம் பெரிதும் மலர்ந்தது. கப்பல்களைப் பற்றி விவரிக்கும்போது பெரு ஒளி விரிந்தது. "அடடே, உங்களுக்குக் கப்பல்களைப்பற்றி அதிகம் தெரியாதென்பதை மறந்துவிட்டேன். கேளுங்கள் வீரரே! இன்று மகாராஷ்டிரத்தின் கடற்படை ஈடு இணையற்றது அவற்றில் நான்கு வகைப் போர்க் கப்பல்கள் முக்கியமானவை. குராப், காலிவாத், ஷிபார், பால் என்ற கப்பல்களைக் கொண்டுதான் தந்தை அரபிக் கடலை ஆண்டு வருகிறார். இவற்றில் குராப் பெரிய போர்க் கப்பல். ஆங்கிலேயர் கணக்குப்படி இருநூறு டன்னி விருந்து நானூறு டன்வரை எடையுள்ளது. மூன்று பாய்மரங்கள் உடையது. நூற்று ஐம்பதிலிருந்து இருநூறு துடுப்புக்களை உடையது. குராப் மிகுந்த அகலமுடையது. பார்ப்பதற்குப் பட்டையாயிருக்கும், இருபுற மூக்குகள் வாளைப் போல் கூர்மையாயிருக்கும். தளத்தில் பக்கத் துளைகள் மூலம் குண்டுகளை வீசக்கூடிய இருபெரும் பீரங்கிகளையும், ஒன்பதிலிருந்து பன்னிரண்டு நடுத்தரப் பீரங்கிகளையும் உடையது. இவை தவிர கீழ்த்தளத்தின் இருபுறத்திலும் துளைகள் மூலம் எட்டு எட்டாகப் பதினாறு பீரங்கிகள் வரிசையாயிருக்கும். குராப்பில் சாதாரண துடுப்புத் துழாவுவோரைத் தவிர இருநூறு மாலுமிகள் இருப்பார்கள்" என்றாள்.

அவள் கப்பல்களைப் பற்றியே மேலும் பேசினாள். "குராப்புகள் மிகப் பெரிய போர்க்கப்பல்கள். காலிவாத் சிறிய போர்கப்பல். சுமார் எழுபது டன் எடையுள்ளது. மூங்கில்களாலான இரண்டே பாய்மரங்களை உடையது. பெரிய பாய்மரம் முக்கோண வடிவத்திலிருக்கும். ஆறு

அல்லது எட்டு நடுத்தரப் பீரங்கிகளையும், இரண்டு சிறிய பீரங்கிகளையும் உடையது. ஆனால் எல்லாக் கப்பல் களையும்விட காலிவாத் மிக வேகமுள்ளது. போருக்கு மிக முக்கியமானது. ஷிபாரும், பாலும், குராப்பைப்போல் அத்தனை பெரியவையுமல்ல. காலிவாத்தைப் போல் சிறியவையுமல்ல, நடுத்தரம். போரில் காலிவாத்தின் வேகத்தில் பாதியையும், குராப்பின் சக்தியில் பாதியையும் பெற்றது. இந்த ஜலதீபம் ஷிபார் வகையைச் சேர்ந்தது. சுமார் நூற்று ஐம்பது டன் உள்ளது. நூறு துடுப்புக் களையும் இரு பெரும் பீரங்கிகளையும், ஆறு சிறு பீரங்கி களையும் உடையது. தவிர டச்சுக் கப்பல்களைப் போல் சுமாரான அகலமும் உடையது. போருக்கு மிக தகுதியானது. துங்கபத்ரையில் கார்த்திகையில் விடப்படும் தீபங்களைப் போல் தவழ்ந்தோடும் தன்மை பெற்றது. அதனால் தந்தை இதை ஜலதீபம் என்று அழைத்தார். எனக்குத் தந்தார்.''

இந்தக் கடைசிச் சொற்களை உச்சரித்தபோது அவள் முகத்தில் பெருமிதம் தெரிந்தது.

''உனக்கு எதற்காகக் கப்பல் மஞ்சு!'' என்றான் இதய சந்திரன்.

''மாலுமிக்குக் கப்பலைத் தவிர வேறு எதில் ஆசை யிருக்க முடியும்?'' என்று அவள் பதில் கூறினாள்.

அப்பொழுதும் அவள் சராயும் சட்டையும் போட் டிருந்தாள். மேலே ஒரு பட்டுச் சவுக்கம் அவள் மார்பை மூட முயன்று தோற்றுக் கொண்டிருந்தது. தலைக்குழல் கட்டப்படாததால் மயிர் காற்றில் அலைந்துகொண் டிருந்தது.

அவன் கண்கள் அவள் உடலை ஆசையுடன் ஊடுருவ முயன்றன. அதைக் கண்டதாலோ என்னவோ அவள் சிரித்துவிட்டு, ''என்னைப் பார்ப்பதிருக்கட்டும், என் கப்பலைப் பாருங்கள்'' என்று கூறி முன் நடந்தாள்.



இதயசந்திரன் அவளைப் பின்பற்றிச் சென்றான். தளத்தின் அரைவாசியிருட்டு, சுற்றிலுமிருந்த அலை ஓசை, காற்றின் விர்ரென்ற நாதம், அவளும் தானும் தனித் திருந்த நிலை எல்லாம் அவன் மனத்தில் விபரீத உணர்ச்சி களைக் கிளறிக் கொண்டிருந்தன. இருப்பினும் மெள்ள மனத்தை அடக்கிக் கொண்டு அவளுடன் சென்றான். அவள் தளத்திலிருந்த இருபெரும் பீரங்கிகளைக் காட்டினாள். பிறகு கீழே மரப்படிகளில் இறங்கிச் சென்று கப்பல் அடித்தளத்தில் பக்கத் துளைகள் மூலம் வெளி உலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த ஆறு சிறு பீரங்கி களைக் காட்டினாள். பிறகு நூறு துடுப்புக்கள் துழாவப் படுவதையும் காட்டினாள். அவள் அடித்தளத்தை அணுகியதும் அங்கிருந்த நூறு மாலுமிகளும் துடுப்புக் களைத் துழாவிக்கொண்டே, ''மஞ்சு மஞ்சு! உட்கார்'' என்று பெயர் சொல்லி அழைத்தார்கள். சிலரை அவள் தலையில் தட்டினாள், சிலரை முதுகில் தட்டினாள்.

அவர்களிலொருவன், ''மஞ்சு! பாட்டுப் பாடு!'' என்றான்.

''இப்பொழுது முடியாது'' என்றாள் மஞ்சு.

''முடியும் முடியும்'' என்று குரல்கள் எழுந்தன மாலுமி களிடமிருந்து.

''சரி, சரி கூச்சலை அடக்குங்கள்'' என்ற மஞ்சு அங்கு இருந்த படியில் உட்கார்ந்துகொண்டாள்.

அடுத்த விநாடி அவள் குரல் வீணையின் நாதம் போல் எழுந்தது. மெல்ல மெல்ல அறையைச் சூழ்ந்தது சாம்பிராணிப் புகைபோல். அதில் சுகந்தமுமிருந்தது, சுகமும் இருந்தது. எங்கும் சூழ்ந்த அந்த இன்பகீதம் துடுப் புக்கள் வெளி நீட்டிய துளைகள் மூலம் உள் நுழைந்த கடற் காற்றுடன் இழைந்தது, இரைந்தது, தணிந்தது, குறைந்தது, விர்ரென்று சுற்றியது. பாடப் பாட அவள் குரல் அதிக இனிமை பெற்றது. அவள் முகம் அதிக

சோபைபெற்றது. அவள் உடல் கீதத்தில் அசைந்தது. மாலுமிகளும் அசைந்தனர். இதயசந்திரனும் அசைந்தான். அவன் உடல் அசைந்தது. இதயமும் அசைந்தது. அந்த இன்பகீதத்தில் கீதம் முடிந்தது, அவள் சட்டென்று எழுந்திருந்து படிகளில் வெகுவேகமாகச் சென்று விட்டாள். இதயசந்திரனால் வேகமாகப் போக முடிய வில்லை. இன்பகீதம் அவனைப் பெரிதும் ஆட்டி விட்டிருந்தது. மெல்லவே படிகளில் ஏறித் தளத்துக்கு வந்த அவன் அவளைத் தேடினான். அவள் எங்கும் காணவில்லை. இருள் சூழ்ந்த தளத்தில் நடந்து சென்றான். கால் ஓரிடத்தில் இடறவே குனிந்து நோக்கினான். அவள் மரப்பலகையில் மல்லாந்து படுத்து வானத்தை நோக்கிக் கொண்டிருந்தாள். இதயசந்திரன் ஒரு விநாடி அவளை நோக்கினான். பிறகு அவள் பக்கத்தில் உட்கார்ந்தான்.

படுத்த நிலையில் சற்று முன்பு கீழ்த்தளத்தில் இசைத்த இன்பகீதத்தைப் போலவே அவள் இருந்தாள். அவளைத் தாங்கிய ஜலதீபத்தைப் போலும் இருந்தாள் எந்தத் துணிவினாலோ அல்லது பெரும் மயக்கத்தாலோ முதன் முறையாக இதயசந்திரன் நிதானத்தை இழந்தான். அவன் வலது கை அவள் உடலுக்குக் குறுக்கே விழுந்தது. அவள் இன்பகீதமா ஜலதீபமா என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான், அவன் உடலும் தாழ்ந்தது.

அத்தியாயம் 31

# மனம் தீட்டிய மடல்

"ஆசை எனும் அளவிட முடியாத ஜலம், மன்மதன் எனும் காற்றில் ஏவப்பட்ட மோகமாகிற அலைகள், இவற்றை உடையதால் மனித வாழ்வும் பெரும் கடலுக்கு ஒப்பாகிறது" என்பது தமிழக அரச கவியொருவரின் மணி வாக்கு. அந்த மணிவாக்கின் உண்மையை அந்த இரவில் அரபிக் கடலில் ஊர்ந்து சென்ற ஜலதீபத்தின் தளத்தில் முழுக்க முழுக்க உணர்ந்தான் தமிழகத்தின் வாலிபன். அந்த மணிவாக்கும் தமிழக மன்னர் ஒருவரின் பக்தி வாக்கு தான். மனித வாழ்வுக்காகத் தமிழக மேதைகள் உதிர்த்து விட்டுப் போயிருக்கும் பல மணிமொழிகளில் அம்மொழி யும் ஒன்று. அதன் பொருள், அதன் வேகம், அதன் சத்தியம் எத்தன்மையது என்பதை அவன் அன்று பரிபூர்ணமாக உணர்ந்து கொண்டான்.

அரபிக் கடலின் அகண்டமான ஜலம் அவனையும் அவளையும் சுற்றிக் கிடந்தது. அந்த ஜலத்தை விர்விர் என்று காற்று பெரும் அலைகளாகக் கிளப்பியதால் கப்பல் பெரிதும் ஆடிக்கொண்டிருந்தது, கலவியில் ஆடும் கட்டிலைப் போல. வானம் நட்சத்திரப் பட்டாடை யணிந்து மரக்கலத்திலிருந்த மோகினியைப் போலவே மேலே மல்லாந்து கிடந்தது. இதயசந்திரன் கையைப் போலவே கடலின் கோடிக் கரங்கள் அதைத் தொட்டுக் கொண்டிருந்தது. தமிழன் கைக்கடியிலிருந்த அந்தக் கடல் மோகினியின் உடலைப் போலவே தொடுவானம் தொடுவது போலும் தொடாதது போலுமிருந்தது. முழுவதும் தொடுவதிலுள்ள பயம் எத்தனை ஆசையை உந்துகிறது! மனம் எத்தனை திண்டாடுகிறது! ஆசையும் வேதனையும் திண்டாட்டமும் கலந்த இந்த நிலைக்குப் பெயர்தான் காதலா?

இப்படித் தன்னைத்தானே கேட்டுக்கொண்ட இதயசந்திரன் மஞ்சுவின் உடலுக்குக் குறுக்கே தனது கையைப் போட்டுக் கொண்டே பல விநாடிகள் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் தன் பக்கத்தில் உட்கார்ந்ததையோ தன் உடலுக்குக் குறுக்கே கையைப் போட்டதையோ லட்சியம் செய்யாமலே அவள் படுத்துக் கிடந்தாள். மல்லாந்து கிடந்த நிலையில் தனது உடலுக்குக் குறுக்கே பாய்ந்த அவன் கரம் அப்பாலிருந்த மரத்தரையில் ஊன்றியிருந்தாலும் முழங்கைக்கும் கணுக்கைக்கும் இடையிலிருந்த பகுதி தனது பக்கவாட்டில் அழுந்துவதை அவள் உணர்ந்தாள். அதுவரை இரும்பாயிருந்த அவள் உள்ளமும் மெல்ல நெகிழ ஆரம்பித்தது.

இதயசந்திரன் நிலை சொல்லத் தரமற்றதாயிருந்தது. தூரத்தே கப்பல் முகத்தில் கட்டப்பட்டிருந்த விளக்கின் மங்கலான வெளிச்சம் அதிலிருந்து இரண்டடி தூரம் மட்டும் விழுந்து கிடந்ததால், வெளிச்சம் என்பது பூரணமாயில்லாமலும் இருட்டு என்பது பூர்ணமாயில்லாமலும் இரண்டுங்கெட்டானான சோபையொன்று அவள் உடலைத் தெரிந்தும் தெரியாமலும் அடித்திருந்ததாலும், மெள்ளத் தாழ்ந்த அவன் உடலில் அவள் உடல் கூர்ப்புகள் பட்டதாலும் அவன் ஏதோ பிரமை பிடித்தவன் போலிருந்தான். துணிவுடன் உடலை நன்றாகத் தணித்துவிடத் திராணியில்லாத மனம், வேண்டாமென்று அறவே அகற்றி விடவும் சக்தியில்லாத சிந்தை, இவையிரண்டும் அவனை ஆட்டிய விந்தை அவனையே குழப்பித் திண்டாட வைத்தது. அவள் உடலுக்குக் குறுக்கே பாய்ந்து நதியின் மேல் பாலம் போல் அப்புறப் பலகையைத் தொட்டுக் கொண்டிருந்த கை விலாவிலும் பிறகு அவள் இடைக்குக் கீழே எழுந்திருந்த உடற்பகுதியிலும் வேண்டுமென்றே பட்டுவிட்டதா அல்லது அது தற்செயலாக நேர்ந்துவிட்ட ஒரு நிகழ்ச்சியா என்பதுகூட அவனுக்குப் புரியவில்லை. இத்தனைக்கும் அவன் இதயம் ஏன் அப்படிப் பயத்தால் அடித்துக் கொள்கின்றது?



வீரனுக்குப் பயம் உதவுமா? இப்படியும் அவன் தன்னைக் கேட்டுக் கொண்டான். இன்னும் ஓரிழை மட்டும் அவன் உடல் தாழ்ந்தால் அவன் மார்பும் அவள் மார்பும் இணைந்துவிடும். அந்த ஓரிழை இடைவெளி மட்டும் குறையவில்லை. ஆகையால் ஆசை நிறைவு பெறவில்லை. ஆசை நிறைவு பெறாததால் மன ஓசை அதிகமாயிருந்தது.

இப்படி அவன் திண்டாடிக் கொண்டிருந்தபோது அவள் ஏதும் பேசாமல் படுத்துக் கிடந்தாள். தன் உடலை லேசாகத் தடவுவது போலும் தடவாதது போலும் அவன் உடலிருந்த நிலையில் அவள் கலங்கிக் கிடந்தாள். தான் அசைந்தாலும், அல்லது ஆடும் ஜலதீபத்தின் ஆட்டம் சற்று அதிகப்பட்டுத் தன்னை அசைத்தாலும் அவன் உடலுடன் தனது உடல் மோதிவிடுமென்பதைப் புரிந்து கொண்டதால் அவள் வெறும் மரக்கட்டை போல் கிடந்தாள். பார்வைக்கு மரக்கட்டை போலிருந்த அவள் உடலில் உள்ளூர உணர்ச்சிகள் ஊடுருவிச் சென்று கொண்டிருந்தன. நீரின் மேல் மிதக்கும் ஜலதீபம் எண்ணெயைப் போல் ஒளி விடும் தனது உணர்ச்சிகளை எந்த விநாடியிலும் பற்ற வைத்துப் பெரும் பிரளய ஜ்வாலையாக அடித்துவிட முடியும் என்பதை அவள் உணர்ந்தேயிருந்தாள். ஓரிரவு ஒரு பகலுக்குள் இந்த ஆடவனிடம் தனது மனம் ஏன் இத்தனை பணிந்துவிட்டது என்பதை அலசிப் பார்க்க முயன்று தோல்வியே அடைந்தாள். காரண காரியங்களை எண்ணிப் பார்க்க முடியாத வேளை அது. காற்றில் உராயும் மாவிலைத் தோரணங்களைப் போல் உணர்ச்சிகள் சலசலப்பு எழுப்பும் நிதானமற்ற நிலை அது. அந்த நிலையில் காரணத்துக்கு அப்பாற்பட்ட சிந்தனைகளே எழுந்தன அவள் சித்தத்தில். அவற்றால் திண்டாடிய நிலையில் அவள் திடீரென அவன் மார்பைத் தனது கையொன்றால் சற்றுத் தடுத்து மேலே நிமிர்த்தினாள் அவன் உடலை.

ஆனால் அந்த இரும்பு உடல் அதிகமாக அகல மறுத்தது. அவள் கை அவன் உடலுக்கும் தன் உடலுக்கும்

குறுக்கே அகப்பட்டுக் கொண்டதால் மிக வேதனையாயிருந்தது அவளுக்கு. ''உம்...'' என்ற எச்சரிக்கை ஓசை அவளிடமிருந்து எழுந்தது.

''மஞ்...'' மிருதுவாக அவன் அழைத்தான்.

''கை...'' என்றாள் அவள். ஆனால் கையை விடுவித்துக் கொள்ளவில்லை.

''ஆம்'' என்றான் அவன், அவள் எதைக் குறிப்பிடுகிறாள் என்பதை அறியாமலே.

''அகப்பட்டுக் கொண்டிருக்கிறது...''

''நீயுந்தான்.''

''நானா?''

''ஆம்.''

''நான்...''

''உம்?''

''யாரிடமும் அகப்பட்டதில்லை.''

''மஞ்சு.''

''உம்.''

''என்றாவது ஒரு நாள்...''

''ஊம்.''

''நீயும் ஒருவனிடம் அகப்பட்டுத்தான் ஆகவேண்டும்.''

இதைக் கேட்ட அவள் மெல்ல நகைத்தாள். நகைத்தபோது லேசாகச் சிலிர்த்த உடலால் குறுக்கே அகப்பட்டுக் கொண்டிருந்த அவள் கை விடுபடச் சுழன்றது. இந்த முயற்சியை அவன் கண்டான். ''மஞ்சு'' என்று மீண்டும் அழைத்தான்.

''ஏன்?'' என்றாள் அவள்.

''கையை எடுத்துக் கொள்ள வேண்டுமா?'' என்று வினவினான் அவன்.

''ஆம்.''



''எடுத்துக் கொள்ளேன்.''

''இடமில்லையே!''

''அப்படியே எடுத்துக் கொள்ளேன்?''

''ஊஹூம்?''

''ஏன் மஞ்சு?''

''அது ஆபத்து.''

''என்ன ஆபத்து?''

''இடையிலிருப்பது அந்தத் தடைதான்.''

இதயசந்திரன் அவள் காதுக்கருகில் குனிந்து கேட்டான்: ''அது ஒன்றுதானா மஞ்சு?'' என்று.

அவள் உணர்ச்சிகள் கொந்தளித்தன. ''எது?'' என்ற கேள்வி குழைந்து உறுதி குலைந்து வந்தது.

''தடை.''

''ஆம்.''

''நான் நீக்கி விடட்டுமா அந்தத் தடையை?''

அவள் இதற்கு மறுமொழி சொல்லவில்லை. மெல்ல புன்னகை புரிந்தாள். என்ன ஆத்திரம் இந்த ஆடவனுக்கு என நினைத்தாள். அந்த நினைப்பினால் மௌனமே சாதித்தாள் ''ஏன் மௌனம் மஞ்சு?'' என்றான் அவன். வினவியபோது அவன் இதழ்கள்— காதைத் தடவியது போலிருந்தது அவளுக்கு. அதனால் உடல் சிலிர்த்தது அவளுக்கு. பெரும் வியப்பும் ஏற்பட்டது அவள் உள்ளத்தில் இந்த அனுபவம் அவளுக்கு மிகப் புதிதாயிருந்தது. எத்தனையோ கடற்போர்களில் அவள் ஈடுபட்டிருக்கிறாள். அவளைப் பிடித்துக் கீழே தள்ளிய ஆடவர்களும் பலர் உண்டு அப்பொழுதெல்லாம் துளிர்த்தது பெரும் சினம். எழுந்த உணர்ச்சிகளில் வேகமிருந்தாலும் அவை கோபமளித்த வேகம் அவற்றுக்கு முற்றும் மாறான உணர்ச்சிகள் காதில் மெல்ல அசைப்பில் பட்ட அவன் இதழ்கள் தனது உடலில் அலை பாய்ச்சியதை உணர்ந்த அவள் பிரமித்தாள். கோபத்தால் எழுந்த

வேகமல்ல அது. கொந்தளிப்பு இருந்தது. கடல் கொந்தளிப்பு இதயத்துக்கு விடுத்த மடலில் வரையப் பட்டிருந்த சொல்லோவியம் மாறுபட்டதாயிருந்தது. மயக்கம் தருவதாயுமிருந்தது.

அதுவரை என்றும் யாரிடமும் மயங்காத மங்கை அவள். எவர் கை பட்டாலும் அசட்டையாகச் செல்லும் ஆணவம் படைத்தவள் அவள். எவரையும் தூக்கி எறியும் சொற்களை வீசவல்ல துணிவுள்ள இதயம் படைத்தவள். அலட்சியப் பார்வையுள்ளவள். அந்த இரவில் அந்த நேரத்தில் அவள் ஆணவம், துணிவு, அலட்சியம் மூன்றையும் இழந்து கிடந்தாள். காரணமில்லாத அடக்கம், பயம், மயக்கம் மூன்றும் அவளைப் பிடித்துக் கொண்டிருந்தன. ஏதோ பேரதிர்ச்சி ஆட்கொண்டது போல் தோன்றியது அவளுக்கு. அந்த அதிர்ச்சியில், "வீரரே!" என்று அழைத்தாள் குழைந்த நிலையில்.

"ஏன் மஞ்சு?" என்று அவள் காதுக்குள் கேள்வி விடுத்தான்.

"எழுந்திருங்கள்."

"ஏன் மஞ்சு?"

"இது சரியல்ல."

"எது?"

"இப்படியிருப்பது?"

"எப்படியிருப்பது?"

"கேள்வி கேட்காதீர்கள். என்னால் முடியவில்லை."

"என்ன நடந்துவிட்டது? முன்பு நாமிருவரும் வாசிஷ்டி கரையில் படுத்துக் கிடக்கவில்லையா?"

"அது வேறு."

"எப்படி வேறு?"

"அங்கு நாம் மூன்றாவது மனிதர்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தோம்."



"இப்பொழுது?"

"நம்மைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம்."

"அது தவறா?"

"தவறோ சரியோ தெரியாது. குழப்பமாயிருக்கிறது எனக்கு."

அவன் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து அவள் கையொன்றை எடுத்துத் தன் கையில் வைத்துக்கொண்டு, "மஞ்சு! எனக்கும் குழப்பமாகத்தானிருக்கிறது" என்று கூறினான்.

அவள் கையை விடுவித்துக் கொள்ளவில்லை. அவன் உடல் தன் உடலின் அருகிலிருந்து எழுந்துவிட்டதால் ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள். "உங்களுக்குமா?" என்று கேட்கவும் செய்தாள்.

"ஆம் மஞ்சு" என்றான் அவன்.

"வீரரே! இத்தகைய குழப்பம் எனக்கு முதல் தடவை" என்றாள் அவள்.

"எனக்கும்தான் மஞ்சு" என்று கூறினான் அவன்.

"பொய் வீரரே! பொய்!" அவள் சொல் முன்னைய சக்தியைப் பெற்றுத் திடமாக வந்தது.

"பொய்யா!"

"தந்தை சொல்வது உண்மையாயிருந்தால் பானுதேவியிடமும் இந்தக் குழப்பம் உங்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். அதற்கு முன்பு எத்தனை தடவையோ யார் கண்டது?"

அவன் கோபத்தில் விவரம் தெரியாமல் கேட்டான், "பானுதேவிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?" என்று.

"அதைத்தான் தந்தை சொன்னாரே?" என்றாள் அவள்.

''அவர் ஒரு முரடர், நாகரிகமற்றவர்'' என்று கூறினான், இதயசந்திரன்.

அவள் மெல்ல நகைத்தாள்.

''மஞ்சு! நான் பானுதேவியைச் சந்தித்து இப்பொழுது நான்கு இரவுகளே ஆகின்றன'' என்றான் இதயசந்திரன்.

''ஆகையால்?'' அவள் கேள்வி எழுப்பினாள்.

''அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தமிருக்க முடியும்?'' என்று பதில் கேள்வி கேட்டான் அவன்.

அவள் புன்முறுவல் கொண்டாள். ''வீரரே?'' என்று அழைத்தாள் மெல்ல.

''என்ன மஞ்சு?''

''என்னைச் சந்தித்து எத்தனை இரவுகளாகின்றன?''

''இது இரண்டாவது இரவு.''

''ஆகையால் உங்களுக்கும் எனக்கும் என்ன சம்பந்தமிருக்க முடியும்?'' என்று கேட்டு நகைத்த அவள் திடீரென எழுந்து உட்கார்ந்தாள். ''வீரரே! மகாராஷ்டிர மாலுமிகளுக்கு ஒரு பாடம் உண்டு'' என்று கூறவும் செய்தாள்.

''என்ன பாடம் அது?'' என்று கேட்டான் இதயசந்திரன் ஏதும் அறியாமல்.

''சுவர்ண துர்க்கத்தின் தேவதை எங்களுக்கு கற்பித்த பாடம்'' என்றாள், அவள்.

''எது அந்தத் தேவதை?'' என்று கேட்டான் தமிழன்.

''கடல் ஆமை'' என்று பதில் கூறினாள் அவள்.

வியப்பு மண்டியது வீரன் இதயத்தில். ''ஆமையா'' என்று இகழ்ச்சியுடன் வினவினான்.

அந்த இகழ்ச்சியை அவள் லட்சியம் செய்யவில்லை. ''ஆமைதான் வீரரே! அது கற்றுக் கொடுத்த பாடத்தால் தான் இன்று தந்தை மகாராஷ்டிர கடற்படையின் தலைவர், உலகத்தின் சிறந்த மாலுமி, யாரும் கண்டு அஞ்சும் கடற் போர் வீரர்'' என்று அவள் சொற்கள்



வந்தன. கண்களின் பிரகாசம் நட்சத்திரங்களின் பிரகாசங்களைத் தோற்கடித்தது. இதைச் சொன்ன அவள் திடீரென அவனை நோக்கி, ''வீரரே! ஒன்று செய்வீர்களா?'' என்று வினவினாள்.

''சொல் மஞ்சு!'' என்றான். அவள் சொன்ன பதில் அவனைத் தூக்கிவாரிப் போட்டது. ''என் கன்னத்தில் முத்தமிடுங்கள்'' என்றாள் அவள்.

மலைத்துப் போனான் இதயசந்திரன்; அவன் உணர்ச்சிகள் வறண்டுவிட்டன. ''மஞ்சு! மஞ்சு!'' என்று உளறினான். ''இது...'' என்று துவங்கினான்.

''சோதனை'' என்றாள் அவள் கடுப்புடன்.

''என்ன சோதனை?''

''நான் ஒரு முடிவுக்கு வர சோதனை'' என்றாள் அவள்.

''என்ன முடிவுக்கு வர நினைக்கிறாய்?'' என்று அதிர்ச்சியுடன் வினவினான் அவன்.

''உங்களைக் காக்க வேண்டுமா, கொல்ல வேண்டுமா என்ற முடிவுக்கு வர'' இதைச் சர்வசாதாரணமாகச் சொன்ன அவள் திடீரென எழுந்து சென்றுவிட்டாள் தளத்தின் மற்றொரு புறத்தை நோக்கி.

அவள் சொன்னதற்கு விளக்கம் கொடுத்தார் அவன் பின்னால் மெதுவாக வந்த கனோஜி ஆங்கரே. ''வாலிபனே! இதுவரை அவளை மூவர் முத்தமிட்டிருக்கிறார்கள். இருவரை அவள் கொன்றுவிட்டாள். கொல்லப்படாமல் ஒருவன் இருக்கிறான்'' என்ற கனோஜி ஆங்கரே அவனை முதுகில் தட்டினார்.

அது தட்டலா, அறையா என்பது புரியவில்லை இதயசந்திரனுக்கு. அவளை முத்தமிட்ட இன்னொருவன் உயிருடன் இருக்கிறான் என்ற செய்தி அவனைத் திக்குமுக்காட வைத்தது. அவன் யார் என்ற கேள்வி இதயத்தில் அரபிக்கடல் அலை உயரத்துக்கு எழுந்தது.

## அத்தியாயம் 32

# பெண் எனும் கோட்டை

அவன் மனம் தீட்டிய மடலில் கேள்விகள் இருந்தன. சந்தேகங்கள் இருந்தன. சாந்தி அம்சங்களும் சிற்சில இருந்தன. அத்தனையிலும் ஒருவித மகிழ்ச்சி மட்டும் பூச்சரத்தின் நார்போல ஊடுருவி நின்றது. உணர்ச்சி ஆணி எழுதியது: 'மஞ்சு! நான் உன்னிடம் அடிமையாகி விட்டது புரிகிறதல்லவா உனக்கு? மகாராஷ்டிர மன்னன் மருமகளிடம் ஏற்பட்ட பிணைப்பை விட நூறு மடங்கு அதிகப் பிணைப்பு உன்னிடம் ஏற்பட்டு விட்டது என்று நான் சொல்வதை நீ நம்புகிறாயா இல்லையா? உனக்கும் என்மேல் அத்தகைய பிணைப்பு இருக்கிறதா இல்லையா? இல்லாவிட்டால் அத்தனை நேரம் மல்லாந்து கிடந்த உன் உடல் மேல் சாய அனுமதித்தாயே அது ஏன்? சுவர்ண துர்க்கத்தின் காவல் தேவதை ஆமையென்றாயே, ஆமை எங்காவது தேவதையாக முடியுமா? அப்படித் தேவதை யென்றே வைத்துக் கொண்டாலும், அது என்ன பாடம் கற்றுக் கொடுக்க முடியும்? நீ இருவரைக் கொன்றுவிட்டா யாமே, அப்படியானால் நீ கொலைகாரியா? ஒருவரை விட்டுவிட்டாயாமே? அவன் என்ன, உன் காதலனா? யாரவன்? எங்கேயிருக்கிறான்? சொல். அவனை நான் கொன்றுவிடுகிறேன். அனாவசியமாகக் கேட்டுவிட்டேன் மஞ்சு. மன்னித்துவிடு. நம் இருவரையும் பிறவிப் பெருங் கடல் பிணைத்துவிட்டது. உன்னைத் தொட்டுக் கிடந்த தால் உன் உடல் வேதனைப்படுகிறது மஞ்சு. அந்த வேதனையிலும் என் மகிழ்ச்சியிருக்கிறது. நீ என்னைக் காப்பாற்றியதற்குக் காரணம் உன் வளர்ப்புத் தந்தையின் கட்டளையாயிருக்கலாம். ஆனால் இன்றிரவின் நிகழ்ச்சி களுக்கு ஒருகாலும் அது காரணமாயிருக்காது. மஞ்சு! நீ என்ன நன்றாகப் பாடுகிறாய். பாட்டு மகாராஷ்டிரத்தி லிருந்தாலும் தமிழனான என்னைக்கூட ஊஞ்சலாட்டி



விட்டதே. மஞ்சு மஞ்சு...? உன்னைச் சாதாரண மாலுமிகள் என்ன அன்பாகப் பெயர் சொல்லி அழைக் கிறார்கள். உனக்காக உயிரை விட்டு விடுவார்கள் போலிருக்கிறது. என்ன அற்புத மங்கை நீ! எப்படி இத்தனைப் பேரையும் மயக்கி வைத்திருக்கிறாய்? சொல் மஞ்சு. அத்தனைக்கும் விளக்கம் சொல். எனக்கிருப்பது ஓர் உயிர்தான். ஆயிரம் உயிர்களிருந்தாலும் உன் காலடியில் கொட்டுவேன். இது உனக்குத் தெரியுமா தெரியாதா? உன் அடிமை இதயசந்திரன்.' இங்கும் ஆணி நின்றிருக்காது, பின்னாலிருந்த கனோஜி ஆங்கரே பயங்கரமாக நகைத்திராவிட்டால்.

இதயசந்திரன் அவரை நோக்கித் திரும்பி, "என்ன நகைக்கிறீர்கள்?" என்று சீறினான்.

மீண்டும் அந்தப் பயங்கரச் சிரிப்பை உதிரவிட்டார் ஆங்கரே. சிரித்தபோது உரமான பற்களும் நட்சத்திரங் களைப்போல மின்னியதைப் பார்த்தான் இதயசந்திரன். அவர் மீசையும் சிரிப்பில் துள்ளிக் குதித்தது, கண்கள் விஷமச் சிரிப்பை உதிர்த்தன.

இந்த இரண்டாம் முறைச் சிரிப்பு இதயசந்திரன் கோபத்தை அதிகமாகக் கிளறவே அவன் சொன்னான், "நான் கேட்டேன் ஒரு கேள்வி?" என்று.

"ஆம், கேட்டாய் ஓர் அசட்டுக் கேள்வி வாய் திறந்து" என்ற ஆங்கரே, அவனை ஏதோ வேடிக்கைப் பொருளைப் பார்ப்பதுபோல் பார்த்தார்.

"வாயால் கேட்டேனா?" சீறினான் தமிழன்.

"ஆம் தமிழா!" சிறிதும் லட்சியமின்றி வந்தது ஆங்கரேயின் பதில்.

"வேறு எப்படிக் கேட்பார்கள்?"

"நீ இப்பொழுது கேட்பதுபோல் கேட்கலாம்."

"எப்படிக் கேட்டேன்?"

''மனத்தால் கேட்கலாம்.''

''யாரைக் கேட்டேன்? என்ன கேட்டேன் மனத்தால்?''

தூக்கி வாரிப் போடுவதுபோல் பதில் கூறினார் மகாராஷ்டிரக் கடற்படைத் தலைவர்: ''மஞ்சுவைத்தான். வேறு யாரை கேட்பாய்? என்ன கேட்டு விடுவாய் பைத்தியக்காரக் கேள்விகளைத் தவிர? காதல் என்ற பெயரால் ஏதாவது உளறல் கேள்விகளாயிருக்கும்'' என்று. இதைச் சொன்ன அவர் அவனைக் கூர்ந்து நோக்கினார். ''தமிழா! உனக்கு இன்னும் அனுபவம் போதாது'' என்று கூறினார் புன்னகையுடன்.

அவர் போக்குப் பெரும் வியப்பாயிருந்தது தமிழனுக்கு. தன் மனத்தை அக்கு அக்காக அவர் அலசி விட்டது மித மிஞ்சிய ஆச்சரியத்தை அளித்தது அவனுக்கு. அதெல்லாம் அர்த்தமற்ற பைத்தியக்காரக் கேள்வி களென்று கூறியதன் காரணம் புரியவில்லை அந்த வீரனுக்கு. மஞ்சுவிடம் தான் நெருங்கியிருந்ததை வேறு எந்தத் தகப்பன் பார்த்திருந்தாலும் தன்னை வெட்டிக் கடலில் போட்டிருப்பான் என்பதை அவன் உணர்ந் திருந்தான். அப்படியிருக்க மஞ்சுவைப் பற்றியும் காதலைப் பற்றியும் அவர் சர்வ சாதாரணமாகப் பேசியது அவனுக்கு எரிச்சலையும் வியப்பையும் கலந்தே அளித்தது. இப்படி உணர்ச்சிகள் குழம்பிய நிலையில் கேட்டான், ''காதல் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ள வில்லையா?'' என்று.

''காமத்திற்கு அதுவும் ஒரு பெயர்'' என்றார் ஆங்கரே.

''உள்ளங்கள் மட்டும் ஒன்றுபட முடியாதா?'' என்று கூறினான் இதயசந்திரன்.

''முடியுமா?'' என்று பதிலுக்கு வினவினார் ஆங்கரே.

''முடியும்.''

''அப்படியானால் ஒன்று சொல்கிறேன், செய் கிறாயா?''



''செய்கிறேன்.''

''கண்டிப்பாய்?''

''கண்டிப்பாய்.''

''அப்படியானால் ஒரு கிழவியைக் காட்டுகிறேன். அவளைக் காதலித்துப்பார்'' என்ற ஆங்கரே கடகடவென சிரித்தார். ''கேட்கும்போதே முகத்தைச் சுளிக்கிறாயே, கசக்கிறதா தமிழா? கிழவிக்கு உள்ளமில்லையா? உங்களிருவர் உள்ளமும் ஒன்றுபடட்டுமே! இதெல்லாம் பிதற்றல் தமிழா. காதல் வெறும் பிரமை. வாலிபனுக்கு வேண்டியது நல்ல உடற்கட்டுள்ள பருவப்பெண். நல்ல சக்தி உள்ளவரை அனுபவிக்க வேண்டியது, பிறகு மறக்க வேண்டியது. மனிதனுக்கு வேண்டிய பல தேவைகளில் பெண்ணும் ஒன்று. துணிவுள்ளவன் அனுபவிக்கிறான். இல்லாதவன் கேள்வி கேட்கிறான், துன்பப்படுகிறான், சில வேளைகளில் பிராணனையும் விடுகிறான்'' என்று கூறினார்.

இதயசந்திரன் திக்பிரமை பிடித்து நின்றான். அவர் வேதாந்தம் அவன் ஒப்புக்கொள்ள முடியாததாயிருந்தது. பதில் சொல்ல முடியாததாயும் இருந்தது. ''உங்கள் அனுபவம் அப்படித்தான் போலிருக்கிறது'' என்றான் கடைசியில் வெறுப்புடன்.

''ஆம் தமிழா! மூன்று மனைவிகளை அடைந்திருக் கிறேன். பல பெண்களை அநுபவித்திருக்கிறேன். மனித வாழ்வில் ஆனந்தம் கடல் அலை போன்றது. கடலில் நீந்துவது எப்படித் தெரியுமா தமிழா! அலை எழும்போது அதில் நாம் மூழ்கி முன்னேறிவிட வேண்டும். மூழ்கத் தவறுபவன் அலையை வெற்றி கொள்வதில்லை. அலை அவனை இழுத்துச் சென்றுவிடும். கிடைக்கும்போது ஆனந்தத்தை அனுபவிக்காதவன் சந்தர்ப்பத்தை இழக் கிறான்'' என்றார் கனோஜி.

''நீங்களும் உங்கள் மகளும் இருவருமே உவமை காட்டுவதில் கெட்டிக்காரர்கள்'' என்றான் இதயசந்திரன்.

''மஞ்சு என்ன உவமை சொன்னாள்?'

''கோட்டையைப் பற்றிச் சொன்னாள்.''

''என்ன சொன்னாள்?''

''சுவர்ண துர்க்கத் தேவதை கடல் ஆமையாம்.''

''ஆம்.''

''அதிலிருந்து மாலுமிகள் பாடம் கற்றுக் கொள்கிறார்களாம்.''

''பலே! பலே! மகளே! பலே பலே!'' என்று கூறிய கனோஜி ஆங்கரேயின் கண்கள் பெருமிதத்தால் பளபளத்தன. ''எனக்கு உன்னால் பதில் கூற முடியவில்லை. அவள் கூறிவிட்டாள்.''

''என்ன கூறிவிட்டாள்.''

கனோஜியின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. பெருமிதமும் அதில் கலந்து கிடந்தது. ''இங்கிருக்கிற ஆண் மாலுமிகளைவிட மஞ்சுவைப் போன்ற பெண் மாலுமிகள் கிடைத்தால் இந்த அரபிக் கடலில் யாரையும் நுழைய விடமாட்டேன். என்ன சூடிகை! என்ன சூடிகை! அச்சா! அச்சா!'' என்று மகாராஷ்டிரமும் இந்துஸ்தானியும் கலந்த குரலில் கூவினார். பிறகு இதயசந்திரனைப் பார்த்துச் சொன்னார்.

''தமிழா! இளமையில் நான் பெரு முரடன், பதினாறு வயதிலேயே மாலுமியானேன். வாலிபம் எட்டிய சில வருஷங்களுக்குள் சுவர்ண துர்க்கத்தின் தலைவனானேன். அப்பொழுதிருந்த ஜன்ஜீரா ஸித்தி காஸம் யாகூத்கானை இரு முறையும் முன்னேறித் தாக்கினேன். அவர்களிடம் சிறைப்பட்டேன். சாமர்த்தியத்தால் தப்பி சுவர்ண துர்க்கத் தீவுக்கும் தாய் நிலத்துக்கும் இடையிலிருந்த கடற்கால்வாயில் ஒரு மைல் நீளம் நீந்திக் கோட்டைக்குத் திரும்பினேன். அப்பொழுதுதான் பிரும்மேந்திர ஸ்வாமி வழி காட்டினார். சுவர்ண துர்க்கத்தின் கோட்டை மதிள் மேலிருக்கும் கடல் ஆமையைப் பார் என்று கூறினார்.



காரணத்தை உணர்ந்தேன். அடுத்தமுறை படையெடுப்பு வந்தபோது நான் முன்னேறித் தாக்கவில்லை. கடலாமை போல் தலையை இழுத்துக் கொண்டேன். சுவர்ண துர்க்கமெனும் ஓட்டுக்குள் பத்திரமாயிருந்தேன். காஸம்கான் முற்றுகையை நீக்கி ஓடிவிட்டார். நான் பாடம் கற்றேன். நான் மட்டும் கற்கவில்லை. என் பெண் மஞ்சுவும் கற்றிருக்கிறாள். அவள் உனக்குச் சொன்னதென்ன தெரியுமா தமிழா? பெண்கள் அந்த ஆமைபோல், இஷ்டமில்லாதவன் வந்தால் உள்ளுக்குள் உணர்ச்சிகளை இழுத்துக்கொண்டு தங்களைக் காத்துக்கொள்ளும் திறன் அவர்களுக்கு உண்டு என்று சொல்லியிருக்கிறாள். அத்துடன் உன் வீரத்தையும் தன் மனத்தையும் சோதிக்க முயன்றிருக்கிறாள்.''

இந்த இடத்தில் சற்று நிறுத்திய கனோஜி ஆங்கரேயைச் சங்கடம் ததும்பிய விழிகளுடன் ஏறெடுத்து நோக்கிய இதயசந்திரன், ''இரண்டு பேரை அவள் கொன்று விட்டதாகக் கூறினீர்களே, எங்கே? எப்பொழுது?'' என்று வினவினான்.

''ஒரு மாலுமி அவளைப் பிடித்து சுவர்ண துர்க்கத்தில் முத்தமிட்டான். இடையிலிருந்த குத்துவாளை எடுத்து நடுத் தெருவில் அவனைக் குத்திவிட்டுச் சென்றாள். இரண்டாவது மாலுமி குத்தப்பட்ட இடம் உன் காலடியில். அங்குதான் அவன் இதய ரத்தம் பீறிட விழுந்தான்'' என்றார் ஆங்கரே.

''இன்னொருவனைக் கொல்லவில்லையென்றீர்களே, அவன் யார்?'' என்று கேட்டான் இதயசந்திரன், குரலில் கோபம் தொனிக்க.

''இவன்தான்'' என்று தம்மை மார்பில் தட்டிக் காட்டிய கனோஜி, ''தகப்பன் ஒருவனைத்தான் அவள் அதற்கு அனுமதித்து உயிருடன் விட்டு வைத்திருக்கிறாள்'' என்று கூறினார்.

இதயசந்திரன் ஆசுவாசப் பெருமூச்சு விட்டான். ''அது சரி; என்னை முத்தமிடச் சொன்னாளே அது ஏன்?'' என்றும் கேட்டான்.

கனோஜி தயக்கமின்றிப் பதில் கூறினார். ''அந்தக் குழந்தையின் மனத்தில் கலக்கம் நுழைந்துவிட்டது தமிழா! உன்னை விரும்புகிறாளா அல்லவா என்பது அவளுக்குப் புரியவில்லை. அவள் சொன்னபடி நீ செய்திருந்தால் ஒன்று அவள் வாழ்க்கைத் துணைவனாக மாறியிருப்பாய் அல்லது நீ நின்றிருக்கும் இதே இடத்தில் பிணமாகக் கிடந்திருப்பாய்'' என்று கூறினார் கனோஜி.

''அப்படியானால்...?''

''அவள் சுவர்ண துர்க்கம் போன்றவள்.''

''உம்?''

''இஷ்டமிருந்தால் அவள் உயிர் உணர்ச்சிகள் உன்னிடம் தலை நீட்டும். இல்லையேல், கடல் ஆமையின் முதுகு ஓட்டைவிடக் கடுமையான உறைக்குள் உணர்ச்சிகளை உள்ளிழுத்து மூடிவிடுவாள். அந்த ஆமை ஓட்டை உடைக்க முயன்றால் உயிர்தான் போகும். ஓடு உடையாது.''

இதயசந்திரன் பிரமித்து நின்றான். ''அப்படியானால் அவள் மனம்...'' என்ற இதயசந்திரன் பேச்சை இடைமறித்த ஆங்கரே, ''எப்படி என்பது சுவர்ண துர்க்கத்தில் தெரியும். அந்தப் பெண்ணும் சுவர்ண துர்க்கம் போன்றவள் அத்துமீறி நுழைய முயலாதே. ஆபத்திருக்கிறது,'' என்று எச்சரித்துவிட்டு ஆங்கரே தளத்தில் தடதடவென நடந்து சென்றார்.

அத்தியாயம் 33

# மீனும் முதலையும்

மஞ்சுவைப் பற்றி மகாராஷ்டிரக் கடற்படைத் தலைவர் கனோஜி ஆங்கரே விடுத்த எச்சரிக்கையால் மனம் பலவித போராட்டங்களுக்குள்ளாகவே அப்போராட்டங்களுக்கு அமைதி காணக் கீழேயிருந்த அறைக்கு சென்று பஞ்சணையில் விழுந்த இதயசந்திரன் அங்கும் அமைதியைக் கண்டானில்லை. அந்த இலவம் பஞ்சணை அவனுக்கு அமைதியை அளிப்பதற்குப் பதிலாக, 'எனக்கும் உனக்கும் சம்பந்தம் உண்டு. நீ இலவு காத்த கிளிதானே' என்று நகைப்பது போன்ற பிரமை ஏற்படவே இதயசந்திரன் தலையணையைத் தலையால் நன்றாக முட்டிக் கொண்டு பஞ்சணையில் குப்புறத் திரும்பிக் கண்களை மூடிக்கொண்டான். பூனை கண்களை மூடிக் கொண்டால் உலகம் அஸ்தமித்துவிடுமோ என்பது பழமொழியேயானாலும், எப்பொழுதோ சூரியன் அஸ்தமித்து நடுநிசி தாண்டிவிட்ட இந்த இரவின் கருமையையும் கிழித்துக் கொண்டு அவன் புத்தியில் பலவித மின்னல்கள் பளிச் பளிச்சென்று பாயவே, கண்ணை மூடியும் உணர்ச்சி வெளிச்சம் தன்னைத் தாக்கத் தவறவில்லையென்பதையும், தனது சிந்தனை அஸ்தமிக்க மறுக்கிறதென்பதையும், புரிந்து கொண்ட தமிழன் தலையணையில் தலையைப் புரட்டி முகத்தை அழுத்தி உறங்க முயன்றான்.

முகம் அழுந்தினாலும் மனம் அழுந்தாததாலும், உணர்ச்சிகள் பேரலைகளாக எழுந்து தாக்கியபடியாலும் உறக்கம் அவன் பக்கம் வர மறுத்தது. பதிலுக்கு அவன் இரு பக்கத்திலும் கனோஜி ஆங்கரேயும் மஞ்சுவும் நின்றிருந்தார்கள்.

''என் கன்னத்தில் முத்தமிடுங்கள்'' என்றாள் ம...

''தமிழா! மூவர் அவளை முத்தமிட்டிருக்கிறார்கள். இருவரை அவள் குத்தி கொன்றுவிட்டாள்'' என்றார் கனோஜி ஆங்கரே.

''வீரரே! முத்தமிடுங்கள்! அது ஒரு சோதனை. உங்களைக் காக்கவா கொல்லவா என்பதை நான் முடிவு செய்யவேண்டும்'' என்றாள் மஞ்சு.

''தமிழா! அவள் சுவர்ண துர்க்கம் மாதிரி. அத்துமீறி நுழையாதே. அதில் ஆபத்திருக்கிறது'' என்றார் கனோஜி ஆங்கரே. இப்படித் தந்தையும் மகளும் மாறி மாறிக் கூறிய மொழிகளால் அதிர்ச்சியடைந்து பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்தான் இதயசந்திரன் திடீரென்று. பஞ்சணையின் இரு பக்கம் வெறிச்சென்றிருந்ததால் தன் பிரமைக்குத் தன்னை நொந்து கொண்ட தமிழக வீரன் மீண்டும் பஞ்சணையில் தொப்பென்று விழுந்தான். அவன் கண்கள் கூரையை நாடின. மனம் கூரையையும் பிய்த்துக்கொண்டு ஜலதீபத்தின் மரத்தளத்தைத் தகர்த்துக்கொண்டு வானை நோக்கிச் சென்றது. இதயசந்திரன் இதயவானில் ஏதேதோ மின்னல், இடிகள், உரையாடல்கள். இவற்றுக் கிடையே மேகக்கூட்டம் ஒன்றும் வந்தது. மேகம் மெள்ள மின்னலை மறைக்க எங்கும் கருமை தட்டியது. இந்தக் கருமை அவன் மனத்துக்கும் மனத்தின் மூலம் கண் களுக்கும் திரையிட்டது.

திரை மூடிய நேரம் தெரியாது தமிழகத்தின் அந்த வாலிப வீரனுக்கு. ஆனால் அது கிழிந்த நேரம் தெரிந்தது. திடீரென எங்கும் பெருங் கூச்சலும் தளத்தின்மீது பலர் ஓடும் சத்தமும் கேட்கவே கண் விழித்த இதயசந்திரன், தனது அறைப் பக்கத்திலிருந்த ஒரு துவாரத்தின் மூலம் அடித்த வெளிச்சத்திலிருந்து பொழுது விடிந்து பல நாழிகை நேரம் ஓடியிருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்டான். அந்த ஊகத்தின் விளைவாகச் சட்டென்று பஞ்சணையிலிருந்து எழுந்து குதித்து அந்தத் துவாரத்தின் மூலம் கடலை நோக்கினான். பக்கவாட்டில் நீர் விலகும்



ஓசையிலிருந்து ஜலதீபம் அதிக வேகத்தில் செல்லுவதை உணர்ந்தான். மேலேயும் அக்கம்பக்கத்திலும் வந்த கூச்சலிலிருந்து ஜலதீபத்தைத் தவிர வேறு மரக்கலங்களும் அக்கம்பக்கத்தில் வந்துகொண்டிருக்க வேண்டுமென்றும் தீர்மானித்தான். இந்த நிலையில் எங்கிருந்தோ கிளம்பிய பீரங்கி வெடிச் சத்தமும், அதைத் தொடர்ந்து கடற் பறவைகள் சிறகடித்துக் கூச்சல் இட்டு எழுந்த ஒலிகளும், கப்பல் கரை அருகில் வந்து விட்டதை அறிவுறுத்தவே அறைக் கதவை திறந்து கொண்டு வெளியே செல்ல முற்பட்டான். கதவு திறந்ததும் அதைக் காத்து நின்ற மாலுமி, ''தாங்கள் பல் துலக்கி முகம் கழுவ நீர் கொணர்ந்திருக்கிறேன்'' என்று கூறிக் கீழே இருந்த பெரும் பாத்திரத்தையும் ஒரு குவளையையும் காட்டிய தன்றிப் பல் சூரணக் குப்பியொன்றையும் நீட்டினான். இதயசந்திரன் பல் துலக்கி முகம் கழுவி உடைகளை நன்றாகச் சீர் செய்துகொண்டு இடைக்கச்சையில் வாள் கட்டி, கைத்துப்பாக்கியைச் சொருகிக்கொண்டு தளத்துக்கு வந்தான். வந்தவன் வாயடைத்து நின்றான்.

எதிரே மேற்குக் கடற்கரை தெரிந்தது. ஸஹ்யாத்ரி தெரிந்தது. அந்த ஸஹ்யாத்ரியிலிருந்து கடல் என்றோ பிரித்துவிட்ட, ஒரு பெரும் தீவும் கோட்டையும் தெரிந்தன. அந்தக் கோட்டையை நோக்கித் திருப்பப்பட்டிருந்த ஜலதீபம் கரை அருகாமைக்கு வந்துவிட்டதால் அதிகமாகச் சீறிய அலைகளில் எழுந்து எழுந்து தாழ்ந்து அந்தத் தீவுக் கோட்டையை முகப்பால் பார்த்துக்கொண்டு அணுகத் தொடங்கியது. பாய்கள் அனைத்தும் அவிழ்த்து விடப் பட்டிருந்தமையாலும் துடுப்புகளும் சீராகத் துழாவப் பட்டதாலும் ஜலதீபம் வேகத்திலும் ஓர் ஒழுங்கைக் காட்டி ஓடிக் கொண்டிருந்தது. ஜலதீபம் வருவதைப் பார்த்துவிட்டதாலோ என்னவோ கடலை நோக்கிக் கொண்டிருந்த கோட்டையின் பின் வாயிற் கதவுகள் திறந் திருந்தன. அந்தக் கதவுகளுக்கு இருபுறத்திலுமிருந்த வாயில் தூண்களுக்கு மேலும் கோட்டையின் பல பகுதி

களிலும் பெரும் பீரங்கிகள் வாயை நீட்டிக் கொண்டிருந்த தைக் கவனித்த இதயசந்திரன் அக்கோட்டையைப் பிடிப்பது எளிதில் முடியாதென்பதை உணர்ந்து கொண் டான். அவன் ஊகத்தை ஆமோதிப்பது போல் ஜலதீபத் தைச் சுற்றிலும் எட்ட ஆங்காங்கிருந்த மீன்பிடி நாவாய்கள் அலையில் தலைகளை ஆட்டின.

அந்த நாவாய்களில் மீன் பிடிப்பவர்கள்கூட ஜலதீபத் தைக் கண்டதும் கைகளை உயரத் தூக்கிப் பெருங்கூச்சல் போட்டார்கள். இன்னும் சில நாவாய்களிலிருந்தவர்கள் கைத்துப்பாக்கிகளால் ஆகாயத்தில் சுட்டார்கள். அருகாமை வந்துகொண்டிருந்த கோட்டைச் சுவர்களில் மாலுமிகள் பலர் ஏறி ஜலதீபம் வருவதைப் பார்த்துக் கொடிகளை வீசினார்கள். மக்கள் வேறு மாலுமிகளுடன் கலந்துகொண்டு கைகளை வீசினார்கள். கூச்சலிட்டார்கள். அந்தக் கோட்டைச் சுவரின் பின் வாயில் பகுதி ஆண் பெண் குழந்தைகள் பலரால் நிரப்பப்பட்டிருந்தது. ஏதோ பெரும் மகாராஜாவை வரவேற்பது போல ஜலதீபத்தை வரவேற்ற மக்கள் கூட்டத்தையும் நாவாய்க் கூட்டத்தை யும் கண்டு வியப்படைந்து நின்ற இதயசந்திரனின் பக்கத்தில் வந்து நின்றுகொண்ட கனோஜி, ''இதய சந்திரா! நீ பார்ப்பது சுவர்ண துர்க்கம்'' என்று பெரு மகிழ்ச்சி ஒலித்த தமது கரகரத்த குரலில் கூறினார்.

இதயசந்திரன் அவரை நோக்கித் திரும்பினான். அவர் தோற்றம் அவனுக்குப் பிரமிப்பை அளித்தது. அவரது பெரும் உடல் மகாராஷ்டிர மாலுமி உடையால் மூடப் பட்டு இருந்தாலும், அவர் கச்சையில் பதிந்து கிடந்தன இரு பிரிட்டிஷ் கைத்துப்பாக்கிகள். இடையில் தொங்கிய மகாராஷ்டிர வளைவு வாள் அந்தக் கைத்துப்பாக்கி களுடன் அவ்வளவு பொருந்தவில்லையானாலும் ஆங்கரே யின் இடையில் அதுவும் பயங்கரமாகவே காட்சி யளித்தது. அவரது தலையில் மகாராஷ்டிரத் தலைப்பாகை



யில்லை. அதற்குப் பதிலாக வெள்ளைக்காரக் கப்பல் தலைவர்கள் அணியும் குறுக்குக் குல்லாயொன்றை அணிந் திருந்தாலும், அவருடைய வீர முகத்துக்கு மேலிருந்ததால் அதிலும் ஒரு பெரும் கம்பீரம் இருக்கத்தான் செய்தது. அவர் போருக்குப் போகும் முழு ஆடையும் கழுத்தில் ஒரு பெரும் தங்கச் சங்கிலியும் காதில் குண்டலங்களும் அணிந் திருந்தார். ஏதோ பெரும் கடலரசன் கோட்டைப் பிரவேசம் செய்யும் தோரணை தோற்றம் எல்லாமிருந்தது அவரிடத்தில்.

அவன் தன்னைப் பிரமித்துப் பார்ப்பதைக் கண்ட ஆங்கரே மெல்லப் புன்முறுவல் கொண்டு, ''இதயசந்திரா! என்னைப் பார்ப்பதைவிட சுவர்ண துர்க்கத்தைப் பார்'' என்று கூறினார். அவர் குரலில் பெருமை ஒலிப்பதைக் கண்ட இதயசந்திரன் அந்தப் பெருமை காரணமற்றதல்ல என்று புரிந்து கொண்டதால், ''பார்த்துக் கொண்டு தானிருந்தேன் நீங்கள் வரும்வரையில்'' என்று கூறிவிட்டு மீண்டும் கோட்டையை நோக்கிக் கண்களைத் திருப்பி னான்.

''நன்றாகப் பார்த்தாயா?'' என்று மீண்டும் வினவினார் கனோஜி.

''இங்கிருந்து கண்ணுக்கு எட்டியவரை பார்த்தேன்'' என்றான் இதயசந்திரன்.

''பார்த்து என்ன புரிந்து கொண்டாய்?'' என்று வினவினார் கனோஜி.

''சுவர்ண துர்க்கம் ஒரு தீவு. அதுவும் நிலப்பரப்பு ஒழுங்கற்றுச் சில இடங்களில் நீண்டும் சில இடங்களில் குறுகியும் தாறுமாறாக வளைந்து கிடக்கிறது'' என்று கூறினான் இதயசந்திரன்.

''வேறு என்ன புரிந்துகொண்டாய்?'' என்று வினவினார் ஆங்கரே.

''நான் பார்ப்பதை அப்படியே சொல்கிறேன் கேளுங்கள். சுவர்ண துர்க்கம் பிரிட்டிஷ் கணக்குப்படி

சுமார் எட்டு ஏக்கர் விஸ்தீரணமிருக்கும். அதோ அந்தக் கோட்டைச் சுவர் ஐம்பது அடி உயரமிருப்பதால் தாக்கும் படை எதுவும் எளிதில் அதில் ஏற முடியாது. வாயிற் கதவைப் பீரங்கி கொண்டு பிளந்தால் உள்ளே நுழையலாம். கோட்டைச் சுவரின் சில பகுதிகள் தீவின் பாறையிலேயே குடையப்பட்டிருந்தாலும் சில இடங்களில் கருங்கற்கள் கொண்டு செயற்கையாகக் கட்டப்பட்டவை. கோட்டை மதில்களில் இருக்கும் இடைவெளியைக் கொண்டு ஊகித்தால் சுமார் நாற்பது ஐம்பது பீரங்கிகளாவது கோட்டைச்சுவர் தள வரிசையிலிருக்கும். இப்பொழுது எனக்கு அதோ நீங்கள் சொன்ன அந்தக் கடலாமையும் தெரிகிறது. அதன் இடப்புறத்திலுள்ள வாயிலின் உயரே மாருதியின் உருவமுள்ள கற்சிலையும் தெரிகிறது...'' இப்படிச் சொல்லிக்கொண்டே போன இதயசந்திரன் ஆங்கரே பதிலேதும் பேசாததைக் கண்டு சரேலென அவரை நோக்கித் திரும்பினான்.

ஆங்கரேயின் முகம் பிரமிப்பிலாழ்ந்திருந்தது. ''நல்லது தமிழா! நல்லது!'' என்று ஆமோதித்த அவர் குரலில் பழைய கேலியில்லை, கரகரப்பில்லை, அலட்சியமில்லை. ''தமிழா! உன்னை எதிரியிடம் சிக்கவிடாதிருப்பது என் கடமை'' என்று கூறினார் ஆங்கரே முதல் பாராட்டுதலைத் தொடர்ந்து.

''ஏன்?'' என்று ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காகக் கேட்டான் இதயசந்திரன்.

பல வேவுகாரர்கள் கோட்டைக்குள் உறைந்துதான் விவரமறிய முடியும். வெளியில் தூரத்திலிருந்து ஒரு முறை பார்க்கும்போதே ஒரு கப்பல் தளத்தை இத்தனை எடை போடக் கூடியவர்கள் யாருமில்லை'' என்ற கனோஜி, ''உனக்கு ஏற்கனவே கப்பல் தளங்களில் வேலை செய்து பழக்கமுண்டா?'' என்று வினவவும் செய்தார்.

''இல்லை'' என்றான் இதயசந்திரன்.



''அப்படியானால் இந்தத் தளத்தை எப்படி அத்தனை சரியாக எடை போட்டாய்?'' என்று வினவினார்.

''கோட்டை நிர்மாண இயல் படித்திருக்கிறேன். புதுச்சேரி பிரெஞ்சுக்காரர்களிடம் இரண்டு வருஷம் இருந்திருக்கிறேன். தவிர அந்த அனுபவம் அவசியமில்லை. கோட்டையைப் பார்க்கும்போதே அதன் பலாபலத்தை எடைபோட முடியாதவன் அதைத் தாக்க முடியாதல்லவா? தவிர சாதாரணக் கோட்டைக்கும் தீவிலுள்ள கோட்டைக்கும் அதிக வித்தியாசமிருக்க முடியாதல்லவா!'' என்று கேள்விகளைத் தொடுப்பான் முகத்து பதிலையும் அளித்தான் தமிழன்.

கனோஜி ஆங்கரேயின் கை அவன் முதுகில் பலமாக அறைந்தது, முதுகெலும்பை முறித்துவிடும் வேகத்தில்.

''பலே இதயசந்திரா! உன்னை மாலுமியாகப் பழக்கிவிட்டால் கனோஜியின் திறமை வாய்ந்த உபதளபதிகளில் நீயும் ஒருவனாகிவிடுவாய்'' என்று பாராட்டிவிட்டு அவன் பிற்காலத்தையும் நிர்ணயித்துவிட்டு அவ்விடத்திலிருந்து அகன்றார். ஜலதீபமும் அடுத்த இரண்டு நாழிகைக்குள் சுவர்ண துர்க்கத்தின் துறைமுக எல்லையில் நுழைந்துவிட்டதால் கோட்டைப் பகுதியிலிருந்து ஒரு படகு பல வீரர்களுடன் வேகமாக வந்தது அக்கப்பலை நோக்கி. மீண்டும் இரண்டு துப்பாக்கிகள் ஆகாயத்தில் சுடப்பட்டதும் ஜலதீபத்தின் நங்கூரம் திடீரென வெளியே வீசப்பட்டுக் கயிறு உருளைகள் உருட்டப்பட்டன. நங்கூரம் அடியில் சென்று உறுதிப்படவே இரண்டு மூன்று முறை அப்படியும் இப்படியும் ஆடி ஜலதீபம் நின்றது. கோட்டையிலிருந்து வந்த படகும் அதன் அருகினில் நிற்க, அதிலிருந்த ஒரு வீரன் நூலேணியில் ஏறி தளத்துக்கு வந்து கனோஜி ஆங்கரேயை வணங்கினான். தனது தலையசைப்பினாலேயே அவன் வணக்கத்தை ஆமோதித்த ஆங்கரே இதயசந்திரனை அந்த வீரனிடம் காட்டி ஏதோ இரண்டு வார்த்தைகள் கூறிவிட்டு நூலேணியில் இறங்கி அந்தப் படகில் ஏறிச் சென்று விட்டார்.

அந்தப் படகு செல்வதை இதயசந்திரன் பார்த்துக் கொண்டே நின்றான் இதயத்தில் கோபம் கொந்தளிக்க, சுவர்ண துர்க்க வீரன் வந்ததும் அவர் தன்னிடம் காட்டிய அலட்சியம் அவன் கோபத்தை அளவுக்கு மீறிக் கிளறி விட்டதால் மஞ்சு எங்கே என்று தேடத் திரும்பினான் தளத்தில். சுவர்ண துர்க்க வீரன் கேட்டான் அவனை, 'என்ன பார்க்கிறீர்கள்?'' என்று.

''இக் கப்பலின் தலைவியைப் பார்க்கிறேன்'' என்று கூறினான் இதயசந்திரன் குரலில் உஷ்ணம் தொனிக்க.

''இந்தப் பக்கம் பாருங்கள்'' என்று வீரன் ஜலதீபத்தின் பின்னாலிருந்த ஒரு படகைக் காட்டினான். அப்பொழுது தான் மஞ்சு நனைந்த உடையுடன் அதில் ஏறிக் கொண் டிருந்தாள்.

இதயசந்திரன் அதிக உஷ்ணத்தைக் காட்டினான் வீரனிடம். ''எதற்காகக் கப்பல் தலைவி கடலில் குதித்து அப்படகில் போய் ஏற வேண்டும்?'' என்று வினவினான் அதே உஷ்ணத்துடன்.

வீரன் சொன்ன பதில் இதயசந்திரனைத் தூக்கிவாரிப் போட்டது. ''மஞ்சுவை உங்களுக்குத் தெரியாது'' என்றான் அந்த வீரன்.

அவளைப் பெயர் சொல்லி வீரன் அழைத்ததே அதிர்ச்சி யைத் தந்தது இதயசந்திரனுக்கு. அவளைத் தனக்குத் தெரியாதென்று கூறியதால் பெரும் சினத்தை அடைந்த தமிழக வீரன், ''உனக்கு நன்றாகத் தெரியுமாக்கும்?'' என்று சீறினான்.

''எனக்கென்ன, மகாராஷ்டிரக் கடற்படை மாலுமிகள் எல்லோருக்கும் தெரியும்'' என்றான் வீரன்.

இதனால் சிறிது சாந்தியடைந்த இதயசந்திரன் கேட்டான்: ''இக்கப்பலில் படகுகள் இருக்கும்போது எதற்காகக் கடலில் குதித்து அப்படகுக்குப் போகிறாள் கப்பல் தலைவி'' என்று.



''கடல் நீச்சலில் அவ்வளவு பைத்தியம். அவளைக் கடல்மீன் என்று சுவர்ண துர்க்கத்தில் அழைக்கிறார்கள் என்று கூறிய அந்த வீரன் மேற்கொண்டு தர்க்கத்தை வளர்த்த இஷ்டப்படாமல், ''உங்களைக் கோட்டைக்கு அழைத்துவர உத்தரவாயிருக்கிறது வருகிறீர்களா?'' என்று வினவினான்.

இதயசந்திரன் இரண்டு விநாடிகள் ஏதோ யோசித் தான். பிறகு கூறினான்: ''நீ கோட்டைக்குப் போ'' என்று.

''நீங்கள்?'' வியப்புடன் எழுந்தது வீரன் கேள்வி.

''உங்கள் தலைவி யார்? கடல் மீனா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''ஆம்.''

''கடலில் முதலை உண்டல்லவா?''

''உண்டு''

''அது நீந்துமா?''

''வேகமாக நீந்தும்.''

''அப்படியானால் நான் கடல் முதலை.''

''என்ன சொல்கிறீர்கள்?'' என்று அச்சத்துடன் எழுந்தன வீரன் வினா.

''முதலை மீனை நாடிச் செல்கிறது'' என்று கூறிய இதயசந்திரன் ஒரே பாய்ச்சலாகக் கப்பலின் பக்கப் பலகை மீது தாவிய வெகு வேகத்தில் கடலில் குதித்து நீரில் மறைந்து விட்டான்.

## அத்தியாயம் 34

# மானுவல் டி காஸ்ட்ரோ

சக்தியும் சாமர்த்தியமும் தங்களைவிடப் பெண் களுக்குக் குறைந்துதானிருக்க வேண்டும் என்ற சித்தப் பிரமை ஆண்களுக்கு உண்டு. இந்தப் பிரமையால் ஆண் மகன் காரணமில்லாத கலக்கத்துக்கு உள்ளாகிறான். அவசியமற்ற அலுவல்களிலும் ஈடுபடுகிறான். இதய சந்திரன் கடலில் குதித்து கனோஜியின் மகளிருந்த படகு நோக்கி வேகமாக நீந்திச் சென்றதற்கும் இந்தப் பிரமை தான் காரணம்.

''கன்னத்தில் முத்தமிடுங்கள்'' எனக் கேட்ட பிறகு அந்தக் கன்னியைக் காணாததே அவனுக்கு ஏமாற்றமா யிருந்தது. உறங்கி விழித்துத் தளத்துக்கு வந்த பின்னும் அவள் தன்னைச் சந்திக்காததைப் பெரும் குற்றமென நினைத்தான் அந்த வாலிபன். கனோஜிதான் தன்னை அலட்சியம் செய்து படகிலேறிக் கரைக்குச் சென்று விட்டாரென்றால் அவர் மகளும் தன்னைப் புறக்கணித்துக் கடலில் குதித்தது ஏதோ செய்யத் தகாத செய்கை என அவன் நினைத்தான். 'இவளுக்குத்தான் கடலில் குதிக்கத் தெரியும்! நீந்தத் தெரியும்! உம்?' என்று மனம் கறுவியதால் தானும் குதித்தான் கடலுக்குள்.

புரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களை அவன் புரிந்து கொள்ளவில்லை. புரிந்து கொள்ள அவசிய மில்லாத விஷயங்களைப் புரிந்து கொண்டு வீணாக இம்சைப்பட்டான். மஞ்சுவின்மீது தனக்கு எந்த உரிமை யும் கிடையாது என்பதை அவன் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவள் தன்னிடம் எதற்கும் அனுமதி கேட்கத் தேவையில்லையென்பதையும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவள் தன்மீது கருணை வைத்திராவிட்டால் தன்னை மாலுமிகள் பந்தாடிவிடுவார்கள் என்பதையும்



புரிந்து கொண்டிருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக எந்த மனிதனைத் தான் தேடித் தஞ்சையிலிருந்து வந்தானோ அந்த மனிதனை மீண்டும் சந்திக்க மஞ்சுவின் தயவு கண்டிப்பாய் வேண்டுமென்பதைப் புரிந்துகொண் டிருக்க வேண்டும். இதையெல்லாம் அவன் புரிந்து கொள்ளவில்லை.

புரிந்து கொண்டவைதானென்ன? என்ன இருந்தாலும் மஞ்சு ஒரு பெண். முந்திய இரவில் தன் முன் படுத்துக் கிடந்தவள் என்பதைப் புரிந்து கொண்டான். இருவரும் சேர்ந்து உடலோடு உடல் உராய வாசிஷ்டி நதியில் நீந்திக் கரையில் மல்லாந்து கிடந்ததால் தனக்கு அவளிடம் ஓரளவு உரிமை உண்டென்று நினைத்துக் கொண்டான். எப்பொழுது அத்தனை தூரம் தனக்கு இடங்கொடுத் தாளோ அவளுக்குத் தன்மீது கண்டிப்பாய் அன்பு இருக்க வேண்டுமென்பதைப் புரிந்து கொண்டான். அப்படி அன்பு ஏற்பட்ட பிறகு தன்னிடம் ஒரு வார்த்தை சொல்லாமல் அவள் கடலில் குதித்துச் சென்றுவிட்டது மிகத் தவறு என்று உள்ளூர உறுமிக்கொண்டான். இவையெல்லாம் தன் ஊகம் என்பதையும் அவன் புரிந்து கொண்டிருந்தால் அவன் வேகம் வேறு வழியில் சென்றிருக்கும்.

மஞ்சுவின் நினைப்பில் அவன் உள்ளம் பிரமை தட்டிக் கிடந்ததால் நினைப்பெல்லாம் தவறாக, உரிமையெல்லாம் வெறும் ஊகமாக, கோபமெல்லாம் வீண் பதட்டமாகத் திரும்பவே கடலில் அவன் குதித்தான். அவளுக்குத் தான் சளைத்தவனல்லவென்பதைக் காட்டக் கடுவேகமாக நீந்தி யும் சென்றான். மஞ்சு அவன் குதித்ததையும் பார்த்தாள். நீருக்குள் மூழ்கியதையும் பார்த்தாள். அதைக் கண்டு நகைத்து வேகமாகப் படகைச் செலுத்தும்படி மாலுமி களுக்குக் கட்டளையும் இட்டாள். மாலுமிகள் அவள் உத்தரவுக்குப் பணிந்து துடுப்புகளை வேகமாகத் துழாவிய தாலும் கரை கிட்டக் கிட்ட அலைகளும் வேகமாக உருண்டதாலும் படகு அம்பு போல் சென்றது. நீரில்

மூழ்கிய இதயசந்திரன் தலையைத் தூக்கியபோது படகு வெகு வேகமாகச் செல்வதையும், மாலுமி கொடுத்த கம்பளி ஒன்றைப் போர்த்திப் பிடித்துக்கொண்டு மஞ்சு தன்னை நோக்கி நகைப்பதையும் பார்த்தான். அவன் மனம் அரபிக் கருங்கடலின் நீரைவிட அதிகமாகக் கறுத்தது. அலைகளைவிட அதிகமாகக் கொந்தளித்தது. போதாக் குறைக்கு அவனை நோக்கிப் படகைச் செலுத்திக் கொண்டு வந்த சுவர்ண துர்க்க வீரன், ''ஏறிக் கொள்கிறீர்களா?'' என்று வினவினான். அரபிக்கடல் நீர் மட்டும் எண்ணெயாயிருந்தால் இதயசந்திரன் மனத் தீயில் அக்கடலே குபீரென்று எரிந்திருக்கும்.

இதயசந்திரன் அவனைப் போகச் சொல்லிக் கை காட்டி விட்டு மீண்டும் நீரில் மூழ்கி நீந்தினான். முதன் முதலாகக் கடலில் நீந்திக் கொங்கணியின் கரைக்கு வந்த பழைய சம்பவமும் அந்தச் சமயத்தில் அவன் நினைப்புக்கு வரவே 'அந்தக் கடல், அதே கொங்கணி. அன்றும் நீந்தினேன் இன்றும் நீந்துகிறேன். ஆனால் எத்தனை மாற்றம்!' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். 'அன்று உடற்காயம் அதிகம். இன்று மனக்காயம் அதிகம். கரையை அணுகும்போது சுரணை தப்பினேன், இன்று சுரணை அளவுக்கு அதிகமாக இருக்கிறது. அன்றொரு துறவியும், அழகியும் என்னை நோக்கி ஓடி வந்தார்கள். இன்று ஒரு ராட்சசனும் ஊர் பேர் தெரியாத அவன் மகளும் என்னை விட்டு ஓடுகிறார்கள். என்ன கால வித்தியாசம்! இடத்துக்கு இடம் இந்தக் கொங்கணியில் எத்தனை மாறுபாடு!' என்று இப்படி எண்ணி நீந்தி சுவர்ண துர்க்கத்தின் கரையை அடைந்து வாயிலை நோக்கி எழுந்து நின்று பார்த்தான்.

அவன் கரையை அடைவதற்குச் சற்று முன்பே கரையை அடைந்த மஞ்சுவை மாலுமிகள் பலரும், மகளிர் பலரும் சூழ்ந்துகொண்டு, ''மஞ்சு மஞ்சு!'' என்று காணாத யாரையோ கண்டுவிட்டதுபோல் கூச்சலிட்டார்கள். சிலர் அவள் தலைமீது மலர் தூவினார்கள். மஞ்சு தனது



இடையிலிருந்த கைத்துப்பாக்கியை உயரத் தூக்கி ஆகாயத்தை நோக்கி இருமுறை சுட்டாள். இன்னும் கூட்டம் அக்கம்பக்கத்திலிருந்து ஓடிவந்தது. இரண்டு சக்கரப் புரவி ரதமொன்றும் வந்தது. அதில் ஏறி அவள் பெரும் ராணியைப் போல் சென்றாள். நனைந்த உடை தெரியாமல் கம்பளியைக் கழுத்து முதல் கால் வரையில் போர்த்தி மறைத்துக் கொண்டு, மறைக்கப்படாத முகமும் நனைந்த குழலும் சூரிய வெளிச்சத்தில் பளபளக்க, வசீகரத் தோற்றத்துடன் சென்றுவிட்ட அவளைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்ற இதயசந்திரன் பெருமூச்சு விட்டான். பிறகு கோட்டைக் குள் நுழையாமல் மதிலைச் சுற்றிச் சென்று அங்கிருந்த பாறையொன்றில் தனது மேலுடையைப் பிழிந்து உலர்த்தி னான்.

அவன் கரையில் இறங்கியபோது எங்கும் பெருங் கூட்டமிருந்ததால் அவனையே பார்த்துக் கொண்டிருந்த சுவர்ண துர்க்க வீரனால்கூட அவனைக் கண்டுபிடிக்க முடியாததால் அந்த வீரன் பெரும் கிலி கொண்டான். தமிழனை அழைத்துவரச் சொல்லித் தனக்குக் கடற் படைத் தலைவன் அளித்த உத்தரவை நிறைவேற்றாத தற்குத் தன் மீது கனோஜி பெரிதும் சீறுவார் என்று நினைத்ததால் அவன் பெரிதும் சங்கடப்பட்டுத் தமிழனைத் தேடியும் காணாததால், 'அவனும் மஞ்சுவைப் பின்பற்றிச் சென்ற கூட்டத்தில் சென்றிருப்பான்' என்று தீர்மானித்துக் கொண்டு கோட்டைக்குள் நுழைந்து விட்டானாகையால் இதயசந்திரனை யாரும் தேடவில்லை. ஆகவே இதயசந்திரன் ஒவ்வோர் உடையாக உலர்த்திக் கட்டிக் கொண்டு மிக நிதானமாகவே எழுந்து கோட்டைக் குள் நுழைந்தான். கோட்டைக் காவலர் அவனைக் கவனித்தும் தடுக்கவில்லை. அவனுக்கிருந்த மனோ நிலையில் எதையும் கவனிக்காமல் சுவர்ண துர்க்கத்துக்குள் நுழைந்த இதயசந்திரன் உள்ளேயிருந்த பெரும் அரண்மனைகளைக் கண்டு பிரமித்தான். கடைவீதி

அத்தனை பெரியதல்லாவிட்டாலும் இருந்த ஏழெட்டுக் கடைகளில் பல நாட்டுப் பொருள்களும் காணப்பட்டன. அவையனைத்தும் வர்த்தகத்தால் வந்திருக்க முடியா தென்பதை ஊகித்துக் கொண்ட இதயசந்திரன் கனோஜியைக் கொள்ளைக்காரன் என்று மாற்றார் அழைத்ததில் சிறிது பொருளும் இருப்பதைப் புரிந்து கொண்டான்.

அரண்மனைகளும், கடைகளும், ஆங்காங்கு வீடுகள் சிலவும் இருந்தபோதிலும் *சுவர்ண துர்க்கம் பெரும்பாலும் ஒரு போர்க் கோட்டையாகவே விளங்கியது. சுவர்ண துர்க்கத்தைச் சுற்றி ஐம்பது அடி உயரத்துக்கும் எட்டடி அகலத்துக்கும் திண்மையாக காட்சியளித்த சுவர்களும், ஆங்காங்கு இடைவெளியில் வெளியே எட்டிப் பார்த்த ஐம்பதுக்கு மேற்பட்ட பீரங்கிகளும், அதன் பலத்துக்கு அத்தாட்சி கூறின. அந்தச் சுவரின் கீழே அதிக உயரமில்லாமலிருந்த குடியிருப்புகள் பீரங்கி இயக்குவோரின் விடுதிகளாயிருக்க வேண்டுமென்று உணர்ந்துகொண்ட இதயசந்திரன், 'ஏழெட்டு விடுதிகளுக்கு இடையே சுவரின் தளத்தை நோக்கி ஓடும் படிகள் பீரங்கி வீரர்களைக் கண் திறப்பதற்குள் தளத்துக்குக் கொண்டு போய்விட வாய்ப்பளிக்கும்' என்று நினைத்தான்.

இப்படி அந்தப் பலமான கோட்டையைப் பார்வையிட்டுக்கொண்டு வந்த இதயசந்திரனைப் பின்னால் யாரோ தட்டினார்கள் மெல்ல. திரும்பிப் பார்த்த இதயசந்திரன் கண்களில் வியப்பு மண்டிக் கிடந்தது. அப்படித் தட்டியவன் ஒரு வெள்ளைக்காரன். எந்த நாட்டானென்று திட்டவட்டமாகச் சொல்ல முடியாவிட்டாலும் மேல்நாட்டானென்பது மட்டும் தெரிந்ததால், "யார் நீ?

---

* சுவர்ண துர்க்கத்தில் இன்னும் பல பெரும் அஸ்திவாரங்கள் காணப்படுகின்றன. இவை பழைய அரண்மனைகள் இருந்த இடத்தைக் குறிக்கின்றன. *Maharashtra State Gazetter PP. 758—759.*



உனக்கென்ன வேண்டும்?" என்று மகாராஷ்டிரத்தில் வினவினான் இதயசந்திரன் சற்று உஷ்ணத்துடன்.

வெள்ளைக்காரன் தனது பழுப்பு நிறக் கண்மணிகளைத் தமிழன்மீது நிலைக்கவிட்டுச் சிரித்துக்கொண்டு, "நீ வேண்டும்" என்றான் நல்ல மகாராஷ்டிரத்தில்.

அவன் தன்னைவிட நன்றாக மகாராஷ்டிரம் பேசுவதைக் கண்ட இதயசந்திரன் மேலும் பிரமை தட்டிய பார்வையை அவன்மீது திருப்பி, "நானா! எதற்கு வேண்டும் உனக்கு?" என்று வினவினான்.

"எனக்கு வேண்டாம். அவளுக்கு வேண்டும்" என்று மீண்டும் நகைத்தான் அவன் பதிலுக்கு.

மேல்நாட்டு மாலுமிகள் உடையில் நின்றிருந்த வெள்ளைக்காரனை நோக்கி, "அவள் என்றால் யார்?" என்று வினவினான் கோபத்துடன்.

"மஞ்சு!" சர்வ சாதாரணமாகப் பெயரை உச்சரித்தான் வெள்ளைக்காரன்.

"நீ மஞ்சுவின் காவலனா?" என்று கேட்டான் இதயசந்திரன்.

"இங்கு எல்லோரும் மஞ்சுவின் காவலர்தான். அவளை மக்கள் அழைத்துச் சென்ற கோலாகலத்தை நீ பார்க்கவில்லையா?" என்று வினவினான் மேல்நாட்டான்.

"பார்த்தேன்."

"பார்த்தால் புரிந்துகொண்டிருக்க வேண்டுமே."

"உம், உம். புரிந்து கொண்டேன்!" என்று உறுமினான் இதயசந்திரன்.

"சரி வா, போகலாம்" என்றான் வெள்ளைக்காரன்.

"எங்கு?" உஷ்ணத்துடன் கேட்டான் இதயசந்திரன்.

"தலைவர் மாளிகைக்கு."

''எதற்கு?''

''நீ எங்காவது சாப்பிட வேண்டுமல்லவா?''

''ஆம்.''

''அதற்கு மற்ற இடங்களைவிடத் தலைவர் மாளிகை சிறந்த இடமல்லவா?'' என்ற வெள்ளைக்காரன், ''தமிழா! அதிர்ஷ்டம் உன்னைத் தேடி வருகிறது. ஆங்கரே ஒருவனைத் தேடுவதானால், மஞ்சு யாரைப் பற்றியாவது விசாரிப்பதானால், ஒன்று அவனைக் கொல்ல இருக்கும். அல்லது உயர்த்த இருக்கும். மஞ்சுவும் ஆங்கரேயும் உன்னை அழைத்து வருமாறு வீரர்களுக்குக் கட்டளை யிட்டபோது அவர்கள் குரலைக் கவனித்தேன். உன்னைக் கொல்ல அவர்கள் தேடவில்லையென்பதைப் புரிந்து கொண்டேன்'' என்றும் கூறினான்.

''ஆகவே என்னைத் தேடி வந்தாய்?'' என்றான் இதய சந்திரன்.

''ஆம் தமிழா! உயர்வு கிடைக்க இருப்பவனைத் தேடுவதில்தான் லாபமிருக்கிறது. சாகப் போகிறவனைத் தேடுவதால் என்ன பலன்?'' என்று வினவினான் வெள்ளைக்காரன்

''அவனுடன் சேர்ந்து சாகலாம்'' என்று கூறிய இதய சந்திரன் புன்முறுவல் கொண்டான்.

இதைக் கேட்ட வெள்ளைக்காரன் பலமாக நகைத் தான் ''தமிழா! நான் சாக இன்னும் அநேக வருஷங்கள் இருக்கின்றன. உனக்குப் பிறகுதான் நான் சாவேன்'' என்று நகைப்புக்கிடையே கூறினான்.

இதயசந்திரன் அவனை விநோதமாக நோக்கினான். அந்த விசித்திர வெள்ளைக்காரனின் போக்கு அவனுக்கு வேடிக்கையாயிருந்தது. பிரும்மேந்திர ஸ்வாமி போன்ற ஓர் அரசியல் துறவி, பானுதேவி போன்ற ஓர் அரசியல் அழகி, கனோஜி போன்ற ஒரு கொள்ளைக்காரர் கடற்



படைத் தலைவர், இரவிலும் எதிரிகள் பகுதிகளில் உலாவும் மஞ்சு போன்ற ஒரு கடல் மலர், கொலையைப் பெரிதாக மதிக்காத ஸாத் ஸித்தி, கடைசியாகத் தன் வாழ்க்கைக் காலத்தைத் தானே நிர்ணயித்துக் கொள்ளும் ஒரு வெள்ளைக்கார மாலுமி, இப்படிப் பலவகை மனிதர் களைச் சந்தித்த இதயசந்திரன், 'இன்னும் எத்தனை விசித்திர மனிதர்களைத் தமிழகம் திரும்பு முன்பு சந்திக்கப் போகிறேனோ' என உள்ளூர நினைத்தான். அவன் நினைப்பு வெள்ளைக்காரனுக்கும் புரிந்திருக்க வேண்டும். ''கவலைப்படாதே தமிழா! கனோஜியுடன் சில வருஷங்கள் இருந்தால் இன்னும் பல விநோத மனிதர்களைச் சந்திப் பாய். ஆனால் ஒன்று நினைவில் வைத்துக்கொள். நான் உனக்கு எப்பொழுதும் தேவைப்படுவேன். என்னிடம் நட்புக் கொள்வது உனக்கு நல்லது'' என்று கூறினான் வெள்ளையன்.

ஆனால் மஞ்சுவின் கருத்து வேறுவிதமாயிருந்ததை அன்றிரவு அறிந்தான் இதயசந்திரன். வெள்ளைக் காரனைத் தொடர்ந்து சென்று கனோஜி மாளிகையில் புகுந்த அவனை இரு வீரர்கள் வரவேற்று மாளிகையின் மூலையிலிருந்த ஓர் அறையில் தங்கவைத்தார்கள். பிற்பகல் உணவு அவனுக்கு அந்த அறையிலேயே பரிமாறப்பட்ட தன்றி, கனோஜி அவனை மறுநாள் சந்திப்பார் என்ற செய்தியும் தெரிவிக்கப்பட்டது. அவன் உடுத்துவதற்கு வேண்டிய நானாவித உடைகள் அவனுக்கு அளிக்கப் பட்டன. கைத்துப்பாக்கியில் கெட்டிக்க மருந்தும் குண்டு களும் தேவையா என்றும் பணிமக்கள் விசாரித்தார்கள். அன்று முழுவதும் அவன் மஞ்சுவையும் பார்க்காததால் மனம் நொந்து உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில் மஞ்சு அவனை அழைப்பதாகச் செய்தி வரவே துள்ளி எழுந்த தமிழன் உடனே கிளம்பினான்.

கனோஜியின் மாளிகைத் தளத்தில் நின்றிருந்த மஞ்சு அவனை, ''வாருங்கள்'' என்று வரவேற்றாள். அவள்

குரலில் அப்பொழுது மகிழ்ச்சியில்லை. முகத்திலும் கவலை அதிகமாக மண்டிக் கிடந்தது; எத்தனையோ ஆபத்துக் காலங்களில் கவலைப்படாத அவள் பங்கய முகம் அன்று ஏன் கூம்பிக் கிடக்கிறது என்பதை அறியாததால் திகைத்த இதயசந்திரன் ''மஞ்சு!'' என்று அழைத்துக்கொண்டு அவளை நெருங்கினான்.

அவள் அவனைத் தடுக்கவுமில்லை, வரவேற்கவுமில்லை. ''இப்படி அமருங்கள்'' என்ற மஞ்சு ஓர் ஆசனத்தைச் சுட்டிக் காட்டித் தானும் எதிரேயிருந்த ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டாள். பிறகு மெல்லக் கேட்டாள், ''பணிமக்கள் உங்களைச் சரியாக உபசரித்தார்களா?'' என்று.

அந்தக் கேள்வியல்ல அவள் கேட்க முற்பட்டதென்பதை அவன் அறிந்தேயிருந்தான். வேறு கேள்விக்கு அது ஒரு முகப்பு என்பதும் அவனுக்குப் புரிந்ததால் அவன் நேரிடையாகக் கேள்வியை வீசினான், ''என்னை எதற்காக அழைத்தாய் மஞ்சு?'' என்று.

மஞ்சுவின் பதில் திட்டமாக வந்தது, ''உங்களை எச்சரிக்க'' என்று.

''எதைப் பற்றி?''

''நீங்கள் இன்று ஒரு வெள்ளைக்காரனைச் சந்தித்தீர்கள்...''

''ஆம்.''

''அவனிடமிருந்து விலகி நில்லுங்கள்.''

''ஏன்?''

''அவனைவிட அபாயமான மனிதன் கொங்கணியில் இடையாது.''

''அப்படியா?''



''அவன் பெயர் மானுவல் டி காஸ்ட்ரோ'' என்ற மஞ்சு இதயசந்திரனை நோக்கி மேலும் சொன்னாள்: ''கடல் பிராந்தியத்தில் தந்தைக்கும், ஸித்தி ரஸூல் யாகூத் கானுக்கும் அடுத்தபடியாகச் சிறந்த மாலுமி அவன்தான். தந்தைகூட அவனிடம் ''எச்சரிக்கையுடனிருக்கிறார்'' என்று. அத்துடன் சொந்த லாபத்துக்கு அவன் எதையும் செய்வான்; யாரையும் விற்றுவிடுவான். கொலை, களவு, சதி எதற்கும் துணிந்தவன். ஜாக்கிரதை'' என்றும் கூறினாள். அவன் நெஞ்சு திடுக்கிடக்கூடிய வேறொரு ரகசியத்தையும் அவிழ்த்தாள் மஞ்சு. திகிலை அறவே அறியாத இதயசந்திரன் மனத்திலும் திகில் மூண்டது.

## அத்தியாயம் 35

# உலகத்தின் நாக்கு

கிங்கெய்ட், பராஸ்னிஸ் என்ற இரு பெரும் சரித்திர ஆசிரியர்கள் 'மகாராஷ்டிர மக்கள் வரலாறு' என்ற தங்கள் நூலில் மானுவல் டி காஸ்ட்ரோ என்ற போர்ச்சுக்கிஸியன் ஆதியில் கிறிஸ்தவனாகவும், இடையில் முஸல்மானாகவு மிருந்து கடைசியில் கிறிஸ்தவ மதத்துக்குத் திரும்பியதாகக் கூறுகிறார்கள். மற்றும் பல சரித்திர ஆசிரியர்கள் அவன் போர்ச்சுக்கீஸியரிடமிருந்து ஆங்கரேயிடமும் ஆங்கரே யிடமிருந்து பிரிட்டிஷ்காரர்களிடமும் இப்படிப் பல இடங் களுக்குத் தாவியிருக்கிறானென்றும், அவனைவிடத் தந்திரசாலி வேறு யாருமே கிடையாதென்றும் எழுது கிறார்கள். இப்படிச் சரித்திரப் பிரசித்தி பெற்றுவிட்ட மானுவல் டி காஸ்ட்ரோவைப் பற்றி ஏதுமே அறியாத இதயசந்திரன் மஞ்சுவின் எச்சரிக்கையைக் கேட்டதும் முதலில் வியப்பை அடைந்தான். ஆனால் அவள் முகத்தி லும் குரலிலும் விரிந்த கவலையையும், கொலை, களவு, சதி எதற்கும் மானுவல் டி காஸ்ட்ரோ துணிந்தவனென்று அவள் தெரியப்படுத்தியதையும் கண்டும் கேட்டும் பிரமை தட்டிய இதயசந்திரன், அவள் கடைசியாகச் சொன்ன ரகசியத்தைக் கேட்டதும் உண்மையாகவே திகிலடைந் தான். 'மானுவல் டி காஸ்ட்ரோ பல பெண்களைக் கொன்றிருப்பதாகவும் பல பெண்களைச் சீரழித்திருப்ப தாகவும் பெரும் வதந்தி இருக்கிறது' என்று அவள் சுட்டிக்காட்டியபோது, ''அப்படியா!'' என்று அதிர்ச்சி யுடன் கேட்டான் இதயசந்திரன்.

''ஆம்'' என்றாள் மஞ்சு.

''அப்பேர்ப்பட்டவனை எதற்காகக் கனோஜி இங்கு வைத்துக் கொண்டிருக்கிறார்?'' என்று வினவினான் இதய சந்திரன் கோபத்துடன்.



அவள் அக் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்ல வில்லை. மற்றொரு கேள்வி மூலம் இதயசந்திரனைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கிவிட்ட அந்த ரகசியத்தைச் சொன்னாள்: ''இப்பேர்ப்பட்டவனைத் தந்தை எதற்காக இங்கு வைத்துக் கொண்டிருக்கிறார் என்று கேட்கிறீர் களல்லவா?'' என்று ஆரம்பித்தாள் அவள்.

''ஆம்''

''அதைவிட அவனை என்னுடன் அழைத்துச் செல்ல ஏன் உத்தரவிட்டார் என்பதைக் கேட்பது உத்தம மல்லவா?'' இந்தக் கேள்வியை விடுத்த மஞ்சு குழப்பமும், கவலையும் நிறைந்த விழிகளை இதயசந்திரன் மீது திருப்பினாள்.

இதயசந்திரன் கல்லெனச் சமைந்து கிடந்தான். அந்தக் கேள்வி அவனுடைய இதயத்தை அம்பெனப் பிளந்து சென்றதால் வேதனை உடல் பூராவும் பரவியது. புத்தி மட்டும் உணர்ச்சியின்றி ஸ்தம்பித்துக் கிடந்தது. நீண்ட நேரம் அப்படியே உட்கார்ந்திருந்த இதயசந்திரன் மெல்லக் கேட்டான், ''உன் தந்தைக்குப் புத்திமாறாட்டம் எதுவு மில்லையே'' என்று.

மஞ்சுவின் பதில் சந்தேகமின்றி வந்தது. ''தந்தையை விட புத்தித் தெளிவுள்ளவர்கள் மகாராஷ்டிரத்தில் யாரும் கிடையாது'' என்று.

''அப்படியானால் இத்தகைய அயோக்கியனை எதற்காக இங்கிருக்க அனுமதிக்கிறார்?'' என்று வினவி னான் இதயசந்திரன்.

''எந்தச் சிறையும் அவனை வைத்திருக்க முடியாது. பல சிறைகளிலிருந்து அவன் ஏற்கனவே தப்பியிருக்கிறான் என்று என் தந்தை கூறுகிறார்'' என்றாள் அவள்

''அவன் பெண்களைக் கொன்றதாகவும் சீரழித்த தாகவும் சொன்னாயே. அதைப்பற்றித் தந்தை என்ன சொல்கிறாரோ?'' மிகுந்த ஏளனம் ஒலித்த குரலில் இதய சந்திரன் இக் கேள்வியைக் கேட்டான்.

''அதெல்லாம் வதந்தியே தவிர ருசு ஏதுமில்லையென்று சொல்கிறார். வதந்தியைக்கொண்டு யாரையும் கண்டிக்கவோ விலக்கவோ முடியாதென்று கூறுகிறார்'' என்றாள் மஞ்சு, அவன் குரலிலிருந்த ஏளனத்தைக் கவனிக்காமலோ அல்லது மதிக்காமலோ.

இதயசந்திரன் ஒரு வினாடி சிந்தித்துவிட்டுக் கேட்டான், ''காஸ்ட்ரோவுக்கு இங்கு என்ன வேலை?'' என்று.

மஞ்சுவின் பதில் அவனை மேலும் திகைக்க வைத்தது. ''தண்டேல்'' என்றாள் மஞ்சு.

''அப்படியென்றால்?''

''கப்பலின் உபதளபதி?''

''கப்பல் தலைவனை எப்படி அழைக்கிறீர்கள்?''

''நகோடா.''

''நகோடாவுக்கு அடுத்தபடி தண்டேல்தானோ?''

''ஆம்''

''அப்படியானால் இவன் செல்லும் கப்பலின் நகோடா யார்?''

''இதுவரை தந்தை. இனிமேல் நான்.''

இதயசந்திரன் ஆசனத்தைவிட்டு எழுந்திருந்தான். நீண்ட நேரம் அகண்டமாகக் கிடந்த அரபிக் கடலை நோக்கினான். பிறகு அவளை நோக்கித் திரும்பி, ''மஞ்சு, இவன் ஜலதீபத்தில் உபதளபதியாக வரப்போகிறானா?'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் கேட்டான்.

''ஆம்'' என்றாள் மஞ்சு.

''உனக்கு அது அபாயம் என்று உன் தந்தை நினைக்கவில்லையா?''

''இல்லை. என் சக்தியில் அளவுக்கு மீறிய நம்பிக்கை வைத்திருக்கிறார். என்னை யாரும் இஷ்ட விரோதமாக அணுக முடியாதென்று கூறுகிறார்.''



அவர் நம்பிக்கை தவறல்லவென்பதை இதயசந்திரனே சென்ற இரண்டு தினங்களில் உணர்ந்து கொண்டிருந்தானாதலால் அவனுக்கு அதை மறுத்து ஏதும் சொல்ல இயலவில்லை. ஆகவே, வேறு விதத்தில் பிரச்சினையை எழுப்பி, ''ஆனால் இவன் மற்றவர்களைப் போலல்லவே? எந்த அநீதிக்கும் துணிந்தவனாயிற்றே? இதைப் புரிந்துகொள்ளவில்லையா உன் தந்தை?'' என்று வினவினான்.

''புரிந்து கொள்ளாமல் தந்தை எதையும் செய்வதில்லை. கப்பல் போர்களில் தனக்கும் ஜன்ஜீரா ஸித்தி ரஸூல் யாகூத்கானுக்கும் அடுத்தபடி மானுவல் டி காஸ்ட்ரோ ஈடு இணையற்றவன் என்று கருதுகிறார். இன்னும் பெரும் போர்களில் நான் ஈடுபடாததாலும் அரபிக் கடலில் போர்ச்சுக்கீஸ், டச்சு, பிரிட்டிஷ், மொகலாயக் கப்பல்களின் கெடுபிடி அதிகமாயிருப்பதாலும் எனக்கு மானுவல் டி காஸ்ட்ரோவைப் போன்று ஓர் உபதளபதி அவசியமென்று நினைக்கிறார் தந்தை'' என்று விளக்கினாள் மஞ்சு.

''அப்படியானால் நீ மீண்டும் பயணமாகப் போகிறாயா?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''ஆம்.''

''எப்பொழுது?''

''தெரியாது. தந்தை எந்த வினாடியில் உத்தரவிட்டாலும் ஜலதீபம் நங்கூரம் எடுத்துப் பாய் விரித்து விடும்.''

இதைச் சொன்ன மஞ்சு மெல்லப் பெருமூச்சுவிட்டாள். இதயசந்திரன் தனது ஆசனத்திலிருந்து எழுந்து அவளை நோக்கி இரண்டடி எடுத்து வைத்து அவளைத் தன் இருகைகளாலும் தூக்கி நிறுத்தி மாளிகைத் தளத்தின் கைப்பிடிச் சுவருக்காக நடத்தி அழைத்து வந்து நிறுத்தினான். அவள் இடையில் தனது வலது கையைச் சுழலவிட்டு இறுக்கிய வண்ணம் தூரத்தே முதுகு காட்டிக்

கொண்டிருந்த கடலாமையையும், அப்பால் அலையில் ஆடிக்கொண்டு நின்ற ஜலதீபத்தையும் கவனித்தான். பிறகு அவள் காதுக்கருகில் குனிந்து, ''மஞ்சு! கவலைப் படாதே! உன்னைக் காக்க நானிருக்கிறேன்'' என்று கூறினான்.

''நீங்கள் எப்படி என்னைக் காக்க முடியும்?'' என்று வினவினாள் அவள்.

''அந்த விஷயத்தை எனக்கு விட்டுவிடு. என் உயிர் இருக்கும் வரையில் ஆயிரம் டி காஸ்ட்ரோக்கள் இருந்தாலும் உன்னைத் தொட முடியாது'' என்று உறுதி மிகுந்த குரலில் அறிவித்தான்.

அந்த உறுதி, அவன் குரலிலிருந்த தெளிவு இத்தனை யும் அவளுக்குச் சாந்தியளிக்கவில்லை. கவலையை போக்கிக் கொள்ளவோ, வேறு ஆதரவு தேடவோ அவள் தலையை அவன் மார்புமீது மெல்லச் சாய்த்தாள். அவன் உணர்ச்சிகள் மெல்லப் புரண்டன. இடையை வளைத்த கை கீழ்ப்புறம் இறங்கியது. இன்னொரு கை அவளைத் தன்னை நோக்கித் திருப்பியது. ''என்னைப் பார் மஞ்சு'' என்று அழைத்தான் இதயசந்திரன் மெல்ல.

அவள் தலை நிமிர்ந்து அவனை நோக்கினாள். கண்கள் கண்களைச் சந்தித்த அந்த நிலையில், உணர்ச்சிகள் உந்திய அந்தச் சமயத்தில் வெகு சிரமப் பட்டுத் தனது கொந்தளிபபை அடக்கிக் கொண்ட இதயசந்திரன், ''மஞ்சு...'' என்று மிக இன்பமாகஃ அழைத்தான்.

''உம்.''

''என்னை நம்புகிறாயல்லவா.''

''நம்புகிறேன்''

''முழுதும்.''

''ஆம். முழுதும்.''



''முன்பு நீ கேட்டதை இப்பொழுது நான் செய்தால் கொன்றுவிடுவாயா?''

''என்ன கேட்டேன்?''

''உன் கன்னத்தில் முத்தமிடச் சொன்னாயே ஜலதீபத் தின் தளத்தில்.''

''சொன்னேன்.''

''எதற்காக?''

''சோதிக்க என்று அப்பொழுதே சொன்னேனே.''

''இன்னும் அதே சோதனை அவசியமா மஞ்சு?''

மஞ்சுவின் கண்கள் அவனை நோக்கி நகைத்தன. ''நீங்கள் கேட்பது விசித்திரமாயிருக்கிறது'' என்று உதடுகள் முணுமுணுத்தன.

''என்ன விசித்திரம் இதில்? கன்னத்தில் என் இதழ் களைப் பதிக்காமல் உன் உணர்ச்சிகள் இயங்காவா?'' என்று கேட்டான் அவனும் மிக மெல்ல.

''இயங்கத்தான் வைத்திருக்கிறீர்களே!'' என்று துணிவுடன் சொன்ன மஞ்சு தன் மலருடலை அவன்மீது சற்று அதிகமாகவே பதியவிட்டாள்.

''இந்த நிலையில் உன் மனம் ஏதும் சொல்ல வில்லையா?'' என்று வினவினான் அவன்.

''சொல்கிறது.''

''என்ன சொல்கிறது மஞ்சு?''

''ஏதேதோ சொல்கிறது.''

''என்னைப்பற்றி எச்சரிக்கிறதா?''

''ஆம்.''

''கொடியவன் அணுகாதே என்றா?''

''ஆம்.''

''அப்படியானால் நான் கொடியவனா?''

''மிகக் கொடியவர்.''

''காஸ்ட்ரோவை விடவா?''

''அவன் ஒரு விதம். நீங்கள் ஒரு விதம்.''

''அவன் என்ன விதமோ?''

அவள் மனோகரமாக முறுவல் கொண்டாள். அவனை நிமிர்ந்து நோக்கிக் கொண்டிருந்த கண்களும் நகைத்தன. ''அவன் சூறாவளி. இத்தனை நேரம் ஒரு பெண்ணைப் பயந்து தொட்டுத் திணறிக் கொண்டு நிற்க மாட்டான்'' என்று கனோஜியின் மகளின் பேச்சைக் கேட்ட இதய சந்திரன், ''மஞ்சு, மஞ்சு'' என்று அதட்டினான்.

மஞ்சு மீண்டும் மிக மெதுவாகச் சொன்னாள்: ''நீங்கள் மந்தமாருதம்; அவன் சூறாவளி'' என்று.

''இல்லை, நானும் சூறாவளிதான் மஞ்சு'' என்று கூறி அவளைத் தன் இரு கைகளாலும் இறுக்கப்போன சமயத்தில் பின்னால் யாரோ கனைக்கவே இதயசந்திரன் மஞ்சுவை விட்டு விலகித் திரும்பி நோக்கினான்.

மானுவல் டி காஸ்ட்ரோ தனது பழுப்பு நிறக் கண்களிலும் சிவந்த உதடுகளிலும் சிரிப்பை உதிர்த்துக் கொண்டு நின்றான். ''இடைபுகுந்ததற்கு மன்னிக்க வேண்டும்'' என்றும் கூறித் தலை வணங்கினான் மஞ்சுவை நோக்கி.

''இங்கு எதற்கு வந்தாய்?'' என்று சீறினாள் மஞ்சு அவனைப் பார்த்து.

''இனிமேல் தாங்கள்தான் நகோடா என்று தளபதி சொன்னார்...'' என்று இழுத்தான்.

''அதற்கென்ன?'' என்ற மஞ்சுவின் கேள்வியிலும் அபரிமித சீற்றமிருந்தது.

''தளபதி உத்தரவைத் தெரியப்படுத்த வந்தேன். தளம் இப்படி இருப்பது தெரியாது'' என்றான் காஸ்ட்ரோ. அவன் குரல் சர்வ சாதாரணமாக இருந்தாலும் அவன்



தங்களைப் பார்த்து நகைக்கிறானென்பதை மஞ்சு புரிந்து கொண்டாள்.

''உத்தரவைத் தெரிவித்தாகிவிட்டதல்லவா?'' என்றும் கேட்டாள் வறண்ட குரலில்.

''ஓர் உத்தரவைத் தெரிவித்து விட்டேன்'' என்றான் போர்ச்சுக்கீஸியன்.

''இன்னோர் உத்தரவும் இருக்கிறதா?'' என்று மஞ்சு கேட்டாள்.

''இருக்கிறது.''

''என்ன அது?''

''இந்தத் தமிழனை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார் தளபதி.''

''உன்னிடமா?''

''ஆம்.''

''எதற்கு?''

''மாலுமிப் பயிற்சி அளிக்க.''

இதைக் கேட்ட மஞ்சு இதயசந்திரனையும் நோக்கி போர்ச்சுகீஸியனையும் நோக்கினாள். ''அப்படியானால் இவர் நம்முடன் வருகிறாரா?'' என்றும் வினவினாள்.

அவள் குரலில் ஆறுதலிருந்ததைக் கவனித்தான் காஸ்ட்ரோ. ஆகவே மேலும் சொன்னான்: ''ஆம், மஞ்சு! இவரும் நம்முடன் வருகிறார் ஜலதீபத்தில். அதில்தான் இவருக்குப் பயிற்சியளிக்கப் போகிறேன் கப்பலோட்டுவதில்'' என்று.

மஞ்சு அவனை நோக்கினாள். ''பயிற்சி பெற இவருக்கு இஷ்டமா இல்லையா என்பதைத் தந்தை அறிந்து கொண்டாரா?'' என்று கேட்டாள் கனோஜியின் மகள்.

''அவர் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை'' என்றான் போர்ச்சுக்கீஸியன். ''இருந்தாலும் நானே கூறி விட்டேன்.''

''என்ன கூறிவிட்டாய்?'' என்று வினவினாள் மஞ்சு.

''ஜலதீபத்தில் அலுவல் புரிய இவருக்கு இஷ்டமிருக்கும் என்று'' எனத் தெரிவித்து காஸ்ட்ரோ இதயசந்திரனை ஏறிட்டு நோக்கி ஏதோ கேள்வி கேட்க முற்பட்டான்.

அவன் வாயிலிருந்து கேள்வி பிறக்கு முன்பே மஞ்சு முந்திக்கொண்டு, ''இவரிஷ்டத்தை எப்படி அறிந்தாய்?'' என்று வினவினாள் கோபத்துடன்.

''கோபிக்காதிருந்தால் சொல்கிறேன்'' என்று தாழ்மையுடன் விண்ணப்பித்துக் கொண்ட காஸ்ட்ரோ, அவள் பதிலுக்குக் காத்திராமலே, ''கப்பலிலிருந்து இவர் படகில் வரவில்லை. நீங்கள் நீரில் குதித்ததும் இவரும் குதித்து நீந்தி வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டேன். உங்களை எந்த நிலையிலும் தொடர, உங்களுடன் எந்த ஆபத்து சம்பத்துக்கும் உட்பட இவருக்கு இஷ்டமிருக்கும் என்று நினைத்தேன்'' என்று கூறினான்.

''இவர் கடலில் குதித்து வந்ததை யார் சொன்னார்கள் உனக்கு?'' என்று கேட்டாள் மஞ்சு கோபம் குரலில் குறையாமலே.

''இக் கோட்டையிலுள்ள மாலுமிகள் எல்லாருமே பேசிக்கொள்கிறார்கள்'' என்று தெரிவித்தான் காஸ்ட்ரோ.

''வேறென்ன பேசிக் கொள்கிறார்கள்'' என்ற மஞ்சுவின் கேள்வியில் சற்றே கவலையிருந்தது.

''பலர் பலவிதமாகப் பேசுவார்கள். அதைப்பற்றி நாம் கவலைப்பட முடியுமா? உலகத்தின் நாக்கு நீண்டது. பொல்லாதது'' என்றான் காஸ்ட்ரோ.

''எதுவாயிருந்தாலும் சொல் காஸ்ட்ரோ.''

''இவர் நீரில் குதித்ததால் உங்களிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டாராம்...''

''அப்புறம்...''



''உங்களுக்கும் சிறிது இவர்மீது அன்பிருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். அது புரட்டென்று நமக்குத் தெரியாதா?'' என்ற காஸ்ட்ரோ, ''இதைப்பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? இவரிடம் பேசியதும் என்னிடம் அனுப்பி வையுங்கள்'' என்று கூறிவிட்டுத் திரும்பி வெகு வேகமாகச் சென்று விட்டான்.

அவன் சென்றதும் மஞ்சு, ''பார்த்தீர்களா இவனை'' என்று கேட்டாள்.

''வடிகட்டின அயோக்கியன்'' என்றான் தமிழன்.

''உலகத்தின் நாக்கு நீண்டது என்கிறான். இவன் நாக்கு?''

''அதைவிட நீண்டது; கொடியது.''

''ஆம் வீரரே! மிக எச்சரிக்கையாயிருங்கள் அவனிடம்'' என்றாள் மஞ்சு. ''அவன் எத்தனை கிருத்திரமமாக நம்மைப்பற்றிப் பேசினான்!''

''ஆம், பேசினான். அடுத்த முறை பேசட்டும் அவனைக் கொன்று விடுகிறேன்'' என்று சீறினான் தமிழன்.

மஞ்சு சற்று இரைத்து நகைத்தாள். ''உண்மை சொல்பவனைக் கொன்றதால் உண்மை மடிந்துவிடுமா வீரரே?'' என்று கூறிவிட்டு அவனை நோக்கி மீண்டும் நெருங்கினாள்.

''இதென்ன மஞ்சு'' என்ற இதயசந்திரன் கைகள் அவளைச் சுற்றின.

''அவன் சொன்னதற்கு நிரூபணம்'' என்றாள் மஞ்சு, தன் உடலைச் சுற்றியோடி இழுத்து இறுக்கிய கைகளுக்கு எத்தடையும் விதிக்காமலே.

# அத்தியாயம் 36

# புது வாழ்வு

மனிதர்களோ மற்ற உயிரினங்களோ வெளியே தலை காட்ட முடியாத கொங்கணியின் மழைக்காலத்தைத் தவிர மற்றக் காலங்களிலெல்லாம் மாலுமியாகவே காலங்கழித்து வந்ததன் விளைவாகத் திண்மை பெற்றிருந்த மஞ்சுவின் உடல் அந்த நேரத்தில் பஞ்சைவிட மென்மையாயிருந்தது. நடக்கும்போதும் திரும்பும்போதும் ஓர் ஆணவத்தையும் வேகத்தையும் காட்டும் அவள் வசீகர உடல் அந்த வேகத்தையெல்லாம் இழந்து தன் உடலில் இழைந்து கிடந்ததைக் கண்ட இதயசந்திரனின் பலம், வீரம் அனைத்துமே காற்றில் பறந்து மனம் குழைந்து கிடந்தது. அவள் உடலின் குழைவைப் போலவே, முள் உள்ள கொழு கொம்பைத் தொக்கி நிற்கும் கொடிபோல அவள் அவன் மீது தொற்றி நின்றாள். கொடியின் மெல்லிய சுருள் வங்கிகள் கொழுகொம்பின் முட்களைத் தாவிப் பிடித்து அவற்றிலேயே சுருண்டுகொள்வது போல மென்மையான அவள் உடல்கூறுகள் அவன் கடிய தேகத்தில் ஆங்காங்கு ஆர்வத்துடன் இழைந்து இழைந்து தங்கிக் கொண் டிருந்தன. அப்படி இழைய இழைய அவன் பலவீனம் அதிகரிக்கவே செய்தது. காமம் மனிதனுடைய பலவீனங் களில் ஒன்று எனத் தத்துவம் கூறுவதில் தவறில்லை யென்பதை நன்றாக உணர்ந்துகொண்டான் இதய சந்திரன்.

அவன் கைகள் ஓரிடத்தில் நிற்கும் சக்தியை இழந் திருந்தமையால் அவை அங்குமிங்குமாக அலைந்தன. அவன் கண்கள் மட்டும் அவளையும் தாண்டித் தூரத்தேயிருந்த துறைமுகத்தையும் துறைமுகத்தில் ஆடிநின்ற ஜலதீபத்தை யும், படகுகளையும், மற்றும் பல கப்பல்களையும் பார்த்துக் கொண்டிருந்தன. பார்த்துப் பயனென்ன? அவை ஏதும் தெரியவில்லையே! அந்த ஜலதீபத்தின் தளத்தில்தான் மஞ்சு



மல்லாந்து கிடந்தாளே? ஜலதீபமா அது? அல்ல அல்ல. வாசிஷ்டியின் கரையல்லவா அது? அதை எப்படித் தளமென்று நினைத்தேன். வாசிஷ்டியில் நீந்தி இவள் உடையெல்லாம் நனைந்து உடலில் ஒட்டிக் கிடக்கிறதே. சே மஞ்சு! ஆடையைப் பிழிந்து கொள். இந்தா, இப்படிச் சரிப்படுத்திக்கொள் மஞ்சு. எதற்காகப் பதுங்குகிறாய் அப்பாறையில்? இரு இரு நீயா? இது அஞ்சன்வேல் கோட்டையாயிற்றே. இங்கு எப்படி வந்தாய்? எங்கே, முகத்திரையை விலக்கு!

எண்ணங்கள் இப்படி ஓட, நீண்ட நேரம் அப்படியே இருவரும் பரஸ்பரப் பிணைப்பில் இருந்தார்கள். காலம் துரிதப்படும் சந்தர்ப்பம் அது. கால் ஜாமமும் கணமாகத் தெரியும் விந்தை அது. மாலுமிகள் போஜன வேளை மணி யொன்று அடித்த பிறகுதான் இருவரும் சுரணை அடைந் தார்கள். சுரணை வந்ததும் மஞ்சுவிடமிருந்து பெரு மூச்சும் வந்தது. ''இத்தனை நேரமா ஆகிவிட்டது?'' என்று கேட்கவும் செய்தாள் அந்தப் பெருமூச்சுக்கிடையே.

மணி ஏன் அடிக்கிறதென்பதைப்பற்றி ஏதும் அறியாத தாலும், மணி சத்தம்கூட உடைக்க முடியாத உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருந்தபடியாலும், ''எத்தனை நேரம் மஞ்சு?'' என்று மெல்லக் கேட்டான் இதயசந்திரன், கைகளின் பிணைப்பிலிருந்து அவளை விடுவிக்காமலே.

''மாலுமிகள் உணவருந்தும் நேரம்'' என்றாள் மஞ்சு அவனிடமிருந்து விடுவித்துக் கொள்ள எந்த முயற்சியும் செய்யாமலே.

''மாலுமிகள் உணவருந்தும் நேரமா?''

''ஆம்.''

''அதெப்படி உனக்குத் தெரியும்?''

''மணியடித்ததே.''

''எப்பொழுது?''

மஞ்சு தலை நிமிர்ந்து அவன் முகத்தை நோக்கினாள். அவள் கண்கள் அவன் கண்களை நோக்கி நகைத்தன. செவ்விய உதடுகள் புன்முறுவலால் சற்றே விகசித்து இரண்டு முன் முத்துக்களை மட்டும் காட்டின. ''அதுகூடக் காதில் விழவில்லையா?'' என்று அவள் கேட்டாள். அக் கேள்வியால் திறந்து மூடிய இதழ்கள் புஷ்பமொன்று திறந்து மூடியது போலிருந்தது.

''கேட்கவில்லையே மஞ்சு!'' என்றான் இதயசந்திரன்.

மஞ்சுவின் இதழ்கள் மீண்டும் அசைந்தன. ''பலமான யோசனை போலிருக்கிறது? மணிச்சத்தம்கூடக் காதில் விழவில்லை?'' என்று இதழ்கள் அசைந்து சொற்களை உதிர்த்தன மெல்ல.

அப்பொழுதும் பலமான யோசனைதான் அந்த வாலிபனுக்கு. தன் கண்களுக்கு நேர் கீழே செவ்விய மலர் இதழ்கள் விரிந்து விரிந்து கூடுவது உலகத்தை மறக்கச் செய்தது. இதழ்கள் பேசுகின்றனவா, அழைக்கின்றனவா என்பது புரியாமல் திகைத்தான் அவன்.

''ஏன் பதிலில்லை?'' என்றாள் அவள் மீண்டும்.

''பதிலா!'' பிரமை பிடித்தவன்போல் கேட்டான் அவன்.

''ஆம் பதில்தான்.''

''என்ன பதில்?''

''எங்குதான் யோசிக்கிறீர்கள்! என்னதான் யோசிக்கிறீர்கள்.''

''எனக்கே தெரியவில்லை.''

''எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போகிறீர்கள்?''

''இந்தக் கேள்வி அவனுக்கு மீண்டும் முழுச் சுரணையை அளித்து அவனைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்து விட்டது. கோட்டையைப் பிடிப்பதைப் பற்றி கனோஜி சொன்னது அவன் நினைப்புக்கு வந்தது.



''இதயசந்திரா! பெண், கோட்டைக்குச் சமானம். வேகமாகத் தாக்கி முன்னேறுபவன் கோட்டையைப் பிடிக்கிறான்'' என்று சொன்னதை நினைத்தான். ''ஆனால் சுவர்ண துர்க்கத்தின் கதை வேறு. அந்தப் பெண் சுவர்ண துர்க்கம். அத்துமீறி நுழைய முயலாதே, ஆபத்திருக்கிறது'' என்று சொன்னதையும் நினைத்துப் பார்த்தான். ''கடற்படைத் தலைவரே! எந்த சுவர்ணமும் பொற்கொல்லனிடம் உறுதி குறைந்து இளகும்'' என்று அவற்றுக்கு உள்ளுக்குள் பதிலும் கூறிக் கொண்டான்.

அதே சமயத்தில் எதையோ நினைத்துக்கொண்டு சரேலென்று அவன் பிடியிலிருந்து விலகிய மஞ்சு, ''வீரரே! மாலுமிகள் உணவு நேரந்தான் நமக்கு உணவு நேரம். வாருங்கள் போவோம்'' என்று அழைத்து அவன் வருவதற்குக் காத்திராமல் விடுவிடுவென்று தளத்திற்குக் குறுக்கே நடந்து கீழே செல்லும் படிகளில் இறங்கிச் சென்றாள். இதயசந்திரன் மட்டும் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. அவள் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றான். போன பின்பும் அவன் மட்டும் தளத்தில் நின்று சுவர்ண துர்க்கத்தையும், கடலையும், கப்பல்களையும் பார்த்தான் மீண்டும் மீண்டும். மஞ்சுவின் குணத்தைப்பற்றி ஒரு முடிவுக்கு வர அவனால் இயலவில்லை. திடீர் திடீரென அவள் உணர்ச்சிகள் மாறுவதும், சில சமயம் அதிகப் பெண்மையும், சில சமயம் அதிக ஆண்மைக் குணமும் தோன்றுவதையும், அந்த மாற்றங்கள் கனவேகத்திலிருப்பதையும் கண்டு, ''என்ன பெண்ணிவள்?'' என்று தனக்குள் கேட்டுக் கொள்ளவும் செய்தான்.

அத்துடன் மானுவல் டி காஸ்ட்ரோ தனக்கு மாலுமித் தொழில் பழக்கி வைக்கப் போவதாகக் கூறிச் சென்றது வேறு அவன் மனத்தில் சிறிது கசப்பை அளித்துக் கொண்டிருந்தது. ஆனால் அந்தப் பயிற்சி தனக்கு ஜலதீபத்தில் கிடைக்கப் போகிறதென்பதால் சிறிது

இனிப்பும் இருந்தாலும், ''ஜலதீபத்தில் மஞ்சு என்னை எப்படி நடத்துவாள்? சாதாரண மாலுமியைப்போல நடத்துவாளா அல்லது எனக்கும் அவளுக்குமுள்ள உறவு காரணமாகச் சிறிது உயர்வாக நடத்துவாளா? எப்படி அழைப்பாள்? 'மாலுமி! இங்கே வா' என்று கெடுபிடி யுடன் கூப்பிடுவாளா? அல்லது 'வீரரே! இப்படி வாருங்கள்' என்று விளிப்பாளா?'' என்று பல கேள்வி களைக் கேட்டுக் கொண்டான். இந்தக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டும் பலபடி சிந்தனையை அலையவிட்டுக் கொண்டும் நின்ற இதயசந்திரனை சுமார் அரை ஜாமத் திற்குப் பிறகு தளத்தில் சந்தித்த மானுவல் டி காஸ்ட்ரோ, ''தமிழா! இன்றைக்கு என்ன உபவாசமா உனக்கு?'' என்று விசாரித்தான்.

''இல்லை'' என்றான் இதயசந்திரன் கடலைப் பார்த்துக்கொண்டு.

''பின் ஏன் உணவருந்த வரவில்லை?'' என்று கேட்டு நகைத்தான் காஸ்ட்ரோ.

''சிறிது நேரமாகட்டும் என்றிருந்தேன்'' என்றான் இதயசந்திரன் காஸ்ட்ரோவின் நகைப்பை ரசிக்காத குரலில்.

''சிறிது நேரமாகட்டுமா?'' காஸ்ட்ரோவின் குரலில் ஏளனமிருந்தது.

''ஆனால் என்ன?'' வெறுப்புடன் கேட்டான் இதய சந்திரன்.

''ஆனால் என்னவா? உனக்கு யார் உணவளிப்பார்கள் இனிமேல்?''

''ஏன் அளிக்கமாட்டார்கள்? உணவுக்கென்ன பஞ்சமா இங்கு?''

இந்தப் பதிலைக் கேட்ட காஸ்ட்ரோ அவனைப் பரிதாபத்துடன் பார்த்தான். ''தமிழா! இங்கு பஞ்சம் ஏது



மில்லை. ஆனால் இது தீவு. தவிர முக்கிய கடற்படைத் தளங்களில் ஒன்று. திடீரென எதிரிக் கப்பல்கள் இதை முற்றுகையிட்டால் வெளியிலிருந்து உணவு வர முடியாது. ஆகையால் இங்கு தேவையான உணவே ஒவ்வொரு வருக்கும் அளிக்கப்படும். மற்ற உணவுத் தானியங்கள் முதலியன காப்பாற்றப்படும். இங்கு திடீர் முற்றுகையை எப்பொழுதும் எதிர்பார்க்கலாம். ஆகவே மாலுமிகளின் போஜன சாலைக்கும் மற்ற இடங்களுக்கும் உணவு அளவிட்டுத்தான் கொடுக்கப்படும்'' என்று விளக்கினான் காஸ்ட்ரோ.

''அப்படியானால் உணவு கிடைக்காதா?'' என்று வினவினான்.

''சாதாரணமாகக் கிடைக்காது?'' என்றான் காஸ்ட்ரோ.

''அசாதாரணம் வேறு இருக்கிறதா இதில்?''

''இருக்கிறது.''

''எங்கே இருக்கிறது?''

''இதோ, இங்கேயிருக்கிறது'' என்று காஸ்ட்ரோ தன் மார்பில் தட்டிக் காட்டி மேலும் கூறினான், ''தமிழா! தனிப்பட எப்பொழுதும் நான் உணவு வைத்திருப்பேன். உனக்கு அதில் கொஞ்சம் தருவதில் ஆட்சேபணையில்லை'' என்று.

இதயசந்திரன் அவனை ஒரு விநாடி கூர்ந்து நோக்கி, ''இது திருட்டுத்தனமல்லவா?'' என்று வினவினான்.

பதிலுக்கு காஸ்ட்ரோவின் பழுப்பு நிறக் கண்கள் தமிழனை நோக்கி நகைத்தன. ''இங்கு எது திருட்டுத் தனம் இல்லை?'' என்று விசாரித்தான் அவன்.

''நீ சொல்வது விளங்கவில்லை.''

"ஜலதீபத்தில் என்னிடம் வேலை செய்யும்போது புரிந்து கொள்வாய். நம்மை ஏதும் செய்யாமல் விலகிச் செல்லும் கப்பல்களை மடக்குவோம். அவற்றிலுள்ள பொருள்களைச் சூறையாடுவோம். எதிர்ப்பவர்களை ஒன்று சுட்டுத் தள்ளுவோம்; அல்லது வெட்டித் தள்ளுவோம்."

"போரைச் சொல்கிறாயா?"

"போர்க் கப்பலுடன் நடப்பது போர். வர்த்தகக் கப்பலுடன் நடப்பதைப் போர் என்று சொல்வதில்லை. அவற்றை மடக்குபவனை பைரேட் என்று சொல்கிறார்கள்."

"பைரேட்டா!"

"ஆம். கொள்ளைக்காரன் என்பதற்கு ஆங்கிலப் பெயர். இந்தப் பட்டத்தை நமது தளபதிக்கு மேல் நாட்டார் எல்லோரும் சூட்டியிருக்கிறார்கள்" என்ற காஸ்ட்ரோ பெரிதும் நகைத்து, "தமிழா! இதில் தவறேதுமில்லை நீ ஆங்கிலேயரை கொள்ளையிடாவிட்டால் அவர்கள் உன்னைக் கொள்ளையிடுவார்கள். கொள்ளைக்குப் பல நாகரிகப் பெயர்களைச் சூட்டுவார்கள். ஆகவே எல்லாமே கொள்ளைக் கும்பல் அதிலிருந்து விலகி நிற்பவன் முட்டாள். அகப்பட்டதை அவ்வப்பொழுது சுருட்டுவது நல்லது! வீண் தர்க்கம் எதற்கு? வா என்னுடன்" என்று கூறிப் படிகளை நோக்கி நடந்தான்.

காஸ்ட்ரோ அந்த மதில் சுவருக்கு அடியிலிருந்த பல அறைகளில் ஓர் அறைக்கு அழைத்து வந்தான். அந்த அறை சிறிதாயிருந்தாலும் அவற்றில் நானாவிதப் பொருள்களும் இருந்தன. பலவித விளக்குகள், பிரதிமைகள், கண்ணாடி பீங்கான் சாமான்கள், பற்பலவித கம்பளிகள் இவையனைத்துமிருந்தன. அங்கு வந்ததும் கம்பளம் ஒன்றை விரித்து அதில் இதயசந்திரனை உட்காரச்



சொன்ன காஸ்ட்ரோ அங்கிருந்த ஒரு பெட்டியிலிருந்து பாதி ரொட்டியொன்றை எடுத்துக் கொடுத்து, "தமிழா! இதைச் சாப்பிடு" என்றான்.

ரொட்டியைக் கையால் வாங்கக்கூட மறுத்த இதயசந்திரன், "எனக்குப் பசியில்லை" என்று கூறினான்.

"எப்படிப் பசிக்கும்? விருந்து முடிந்துவிட்டது" என்று காஸ்ட்ரோ கூறிப் பலமாக நகைத்தான். அத்துடன் ஒரு கண்ணைச் சிமிட்டியும் காட்டினான்.

இதயசந்திரனுக்கு போர்ச்சுக்கீஸியன் பேச்சு, கண்ணடிப்பு எதுவுமே பிடிக்கவில்லையாதலால், "விருந்தா! என்ன விருந்து!" என்று வினவினான் கோபத்துடன்.

"பார்ப்பதும் விருந்து."

"எதைப் பார்த்தேன்?"

"அழகை."

"எந்த அழகை? உன் அழகையா?"

மானுவல் டி காஸ்ட்ரோ மீண்டும் ஏளனச் சிரிப்புச் சிரித்துவிட்டு, ரொட்டியை எடுத்துப் பெட்டியில் வைத்துப் பூட்டினான். பிறகு அறை மூலையிலிருந்து ஒரு புட்டியையும் இரு கண்ணாடிக் குவளைகளையும் எடுத்து வந்து, "இதுவாவது வேண்டுமா வேண்டாமா?" என்று வினவிப் புட்டியைத் தூக்கிக் காட்டினான்.

"என்ன அது?"

"விஸ்கி."

"குடியா!"

ஆம்.''

''எனக்கு வேண்டாம்.''

''வேண்டாமா?''

''வேண்டாம்.''

''ஏன்?''

''நான் குடிப்பதில்லை.''

காஸ்ட்ரோ வியப்புடன் அவனை நோக்கினான். ''பின் எப்படி மாலுமியாக முடியும்?'' என்று வினவினான்.

''குடித்தால்தான் மாலுமியாக முடியுமா?'' என்று வெறுப்புடன் கேட்டான் இதயசந்திரன்.

''ஆம்.''

''சிறந்த மாலுமியாக வேண்டுமென்றால் அதிகம் குடிக்க வேண்டுமா?''

''சரியாகக் குடிக்கப் பழகிவிட்டால் எத்தனை குடித்தாலும் நிதானம் தவறாது. நான் இந்தப் பாட்டிலை அப்படியே குடிப்பேன். ஆனால் நான் குடித்ததாகத் தெரியாது. இதைப் போட்ட பின்பு எனக்கு ஏற்படும் சக்தி அபரிமிதம். எல்லாம் பழக்கத்தைப் பொறுத்தது, தமிழா'' என்று காஸ்ட்ரோ இதயசந்திரன் எதிரிலேயே பாதிக் குப்பியைக் காலி செய்துவிட்டு அதை மீண்டும் அறை மூலையில் வைத்துவிட்டு வந்து கம்பளியில் காலை நீட்டிக் கொண்டு படுத்தான். படுத்துக் கூரையைப் பார்த்துக் கொண்டு பேசினான்: ''தமிழா! மாலுமியின் வாழ்க்கை உலகத்துக்கு ஒவ்வாத வாழ்க்கை. தரையில் வசிப்பவன் சட்டதிட்டங்களுக்கும் ஜலத்தில் வசிப்பவன் சட்டதிட்டங்களுக்கும் ஒரு வித்தியாசமுண்டு. மாலுமியை எந்நேரமும் மரணம் நோக்கிக் கொண்டிருக்கிறது. அவன் கப்பலைப் புயல் கவிழ்க்கலாம். எதிரியின் கப்பல்கள் அழிக்கலாம், அவன் கடலில் விழலாம், அவனை சுறாக்கள் விழுங்கினாலும் விழுங்கலாம். என்ன ஏது என்று சொல்ல முடியாத வாழ்க்கை. ஆகவே கிடைத்தபோது சுகத்தை அனுபவிக்கிறான். சமய சந்தர்ப்பங்களை நிலத்தின் விதிகளை எண்ணக்கூட அவனுக்கு வாய்ப்புக் கிடையாது. அத்தகைய வாழ்க்கையில் நீ புக முற்படுகிறாய். ஆகவே நிலத்தில் பேசப்படும் சத்தியம், தர்மம் இப் பாசாங்குகளை மறந்துவிடு. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள். கிடைக்கும்போது சுகத்தை அனுபவி. இரக்கத்தை மனத்திலிருந்து எறிந்துவிடு. உனக்கு யாரும் இரக்கம் காட்ட மாட்டார்கள். நீயும் யாருக்கும் காட்டாதே'' என்று.



இந்தப் பிரசங்கத்தைக் கேட்டு மலைத்தான் இதயசந்திரன். இத்தகைய விபரீத எண்ணங்களுள்ளவனிடம் தான் எப்படி சேவை புரிய முடியும் என்று எண்ணித் திகைத்தான் தமிழக வீரன்.

அவன் யோசனையைக் கண்டு நகைத்த காஸ்ட்ரோ, ''படு தமிழா! நேரம் அதிகமில்லை'' என்றான்.

''எதற்கு?'' என்று வினவினான் இதயசந்திரன்.

அவன் பதில் அதிர்ச்சியை அளித்தது இதயசந்திரனுக்கு. ''பயணத்துக்கு, ஜலதீபம் அதிகாலையில் புறப்படுகிறது'' என்ற காஸ்ட்ரோவின் சொற்கள் அவனுக்குப் பெரும் வேதனையை அளித்தன.

''இன்றைய காலையில்தானே வந்தோம்'' என்றான் இதயசந்திரன்.

''எப்பொழுது வருவது எப்பொழுது புறப்படுவது என்பதை நிர்ணயிப்பது ஆங்கரே ஒருவர்தான். அவர் சொல்வது கட்டளை. வைப்பது சட்டம். வேறு சட்டம் அரபுக் கடல் பகுதியில் செயல்படுவதில்லை. படு படு. அவர் உடனடியாகக் கிளம்பச் சொல்லக் காரணமிருக்கும்'' என்றான் காஸ்ட்ரோ. காரணம் இருக்கத்தான் செய்தது. அந்தக் காரணம் மகாராஷ்டிர சரித்திரத்தின் அடுத்த கட்டத்திற்கு அவனை அழைத்துச் சென்றது. அதுவரை யிலிருந்த அவன் வாழ்வுக்கு முற்றும் புறம்பான வாழ்வுக்குள் அவன் புகுந்தான்.

அத்தியாயம் 37

# காவலன்

நிமிட நேரத்தில் மாறிவிடக் கூடிய நிலையற்ற ஆனந்தத்தையும் நிகரற்ற அபாயத்தையும் அளிக்கும் ஆழ்கடல் பயணமென்னும் புது வாழ்வுக்குள் இதயசந்திரன் புகு முன்பு, கனோஜி ஆங்கரே அவனைச் சந்திக்கவே செய்தார். ஒரு குப்பி மதுவைக் குடித்துவிட்டு மல்லாந்து விட்ட மானுவல் டி காஸ்ட்ரோ சொன்ன சேதிகளைக் கேட்டதாலும் விடியற்காலையில் ஜலதீபம் கிளம்பிவிடப் போவதாலும் தான் கனோஜியைச் சந்திக்க முடியுமோ முடியாதோ என்ற யோசனையுடன் காஸ்ட்ரோவின் அறையில் படுத்துக் கிடந்த அந்தத் தமிழக வாலிபனுக்குத் திடீரென மகாராஷ்டிர ஸார்கேலிடமிருந்து கிடைத்த அழைப்பு மிதமிஞ்சிய மகிழ்ச்சியைத் தந்தது. காஸ்ட்ரோவைப்பற்றி அந்த இரவின் முன் பகுதியில் மஞ்சு கூறிய விஷயங்களிலிருந்து பலத்த கவலையையும் கனோஜியிடம் ஓரளவு சீற்றமும் கொண்டிருந்த இதயசந்திரன் பொழுது புலருவதற்கு அரை ஜாமத்திற்கு முன்பு கடற்படைத் தலைவரிடமிருந்து அழைப்பு வந்ததும் தனது ஆத்திரத்தை ஓரளவு தீர்த்துக் கொள்ளலாமென முடிவு கட்டினான். காஸ்ட்ரோவின் அறை தடதடவெனத் தட்டப்பட்டதும் அறைக் கதவைத் திறந்த தமிழக வாலிபனை நோக்கிய மாலுமியொருவன், ''உங்களை அழைத்து வர உத்தரவு. உடனடியாகக் கிளம்புங்கள்'' என்று கூறினான்.

''யார் உத்தரவு? அதுவும் இந்த வேளையில் என்னை எழுப்ப? என்று சீறினான் தமிழன் முதலில்.

''எந்த வேளையிலும் யாரையும் எழுப்பவோ தண்டிக்கவோ உரிமையுள்ளவர் உத்தரவு'' என்றான் மாலுமி.

மாலுமியின் தோரணையிலிருந்தே அவனை அனுப்பியது யாரென்பதை உணர்ந்ததால் உள்ளே சென்று பல் துலக்கி முகம் கழுவி மாலுமி உடையணிந்து அந்த மாலுமியுடன் கிளம்பிய இதயசந்திரன் கனோஜியின் மாளிகைக்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்த சூழ்நிலை அவனுக்குப் பெரு வியப்பை அளித்ததால் சற்று சுற்றுமுற்றும் பார்த்தான். முகத்திலும் வியப்புச் சுடர்விட விடியற்காலைகூட நெருங்காத அந்த நேரத்தில் மாளிகையின் விளக்குகள் பளிச்சென்று எரிந்து கொண்டிருந்தன. டச்சுக்கார, மகாராஷ்டிர, இஸ்லாமிய மாலுமிகள் பலரும் உள்ளே போய் வந்து கொண்டிருந்தார்கள். உறங்கிக் கிடந்த அந்த நகரத்துக்கு நேர் விரோதமாக அந்த மாளிகை மட்டும் பெரும் சுறுசுறுப்பைக் காண்பித்தது. இத்தனை துரிதத்துக்குக் காரணம் என்னவென்பதை அறியாமல் மாளிகைக்குள் நுழைந்த இதயசந்திரனைக் கடற்படைத் தலைவரின் அறைக்கு வெளியே தங்கச் சொல்லிவிட்டு, அவனை அழைத்து வந்த மாலுமி மட்டும் உள்ளே சென்றான். இரண்டு விநாடிகளில் வெளிவந்த அவன் இதயசந்திரனை நோக்கி, ''இங்கேயே இருங்கள். ஸார்கேல் அழைப்பார்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

நீண்ட நேரம் காத்திருந்த அவன் மனம் எரிமலையாகிக் கொண்டிருந்தது. கனோஜியின் அறைக்குள் யார் யாரோ போய் வந்து கொண்டிருந்தார்கள். தன்னை மட்டும் அவர் அழைக்காதிருந்ததைக் கண்ட தமிழன், ஆங்கரே தன்னை அத்தனை நேரம் காக்க வைக்க வேண்டிய அவசியம் என்ன என்று எண்ணி எண்ணிச் சீற்றத்தின் வசப்பட்டு, ஆனால் ஏதும் செய்ய முடியாது தவித்துக் கொண்டிருந்தான். ஆங்கரேயிடமிருந்து உள்ளே வர அனுமதி வந்ததும் சீற்றத்தால் வெதும்பிக் கிடந்த சினத்துடன் உள்ளே நுழைந்தான். உட்புறத்தைக் கண்டதும் பிரமித்து நின்றான். கடற்படைத் தலைவரின் அறை என்றால் எப்படி இருக்கும் என்பதை முதன் முதலாகப் பார்த்தான்.



சுவர்களில் பல இடங்களில் கடல் வழியைக் குறிக்கும் சீலைப்படங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. சில சீலைகளில் முக்கிய துறைமுகங்கள், கோட்டைகள், அவற்றின் இருப்பிடம், பலாபலம், அமைப்பு முதலியவற்றை விளக்கும் சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன. சில இடங்களில் சுவர்களில் நானாவித பெரும் துப்பாக்கிகளும் கைத் துப்பாக்கிகளும் ஆணிகளில் பல கோணங்களில் மாட்டப்பட்டிருந்தன. பல நாட்டுத் துப்பாக்கிகள், மரப்பிடி உள்ளவை, தந்தப்பிடி உள்ளவை, தங்கப்பிடி உள்ளவை, வெள்ளிப்பட்டை உள்ளவை, நீள இரும்பு வாய்களும் குட்டை குட்டையான வாய்களும் உள்ளவை. இப்படிப் பலதரப்பட்ட துப்பாக்கிகள் இருந்தன. வாட்கள் மட்டும் இரண்டே இரண்டு இருந்தன. அவை இரண்டும் மகாராஷ்டிரர் வளைவு வாட்கள்.

இவையனைத்தும் பார்த்து கனோஜியையும் பார்த்த இதயசந்திரனை நோக்கி கனோஜி ''வாட்கள் இரண்டு போதுமா என்று பார்க்கிறாயா?'' என்று வினவிப் புன்முறுவல் கொண்டார்.

தன் மனத்திலுள்ளதை அப்படியே கேட்டுவிட்ட கனோஜியை வியப்படையும் விழிகளுடன் நோக்கிய இதயசந்திரன், ''ஆம்'' என்ற ஒரு சொல்லை மட்டும் சொன்னான்.

''அவை இரண்டும் மகாராஷ்டிரர் வாட்கள்'' என்று சுட்டிக் காட்டினார் கனோஜி.

''அது தெரிகிறது'' என்றான் தமிழன்.

''துப்பாக்கிகளைப் போல் பலரக வாட்களை வைக்கவில்லையே என்று யோசிக்கிறாயா?'' என்று மீண்டும் கேட்டார் ஆங்கரே.

''ஆம்.''

''காரணம் சொல்ல முடியுமா உன்னால்!''

''முடியாது. உங்கள் காரணம் உங்களுக்குத்தான் தெரியவேண்டும்.''

''காரணத்தை உன்னால் ஊகிக்க முடியாதா?''

''முடியவில்லையே.''

கனோஜி ஆங்கரேயின் பெருவிழிகளில் திடீரெனப் பெருமிதம் படர்ந்தது. அதில் ஓர் ஆனந்தம் கலந்திருந்தது. ''தமிழா! அவை மகாராஷ்டிரர் வாட்கள். வளைந்த உடலுள்ளவை'' என்று சுட்டிக் காட்டினார்.

''அது தெரிகிறது பார்க்கும்போதே'' என்றான் தமிழன்.

''தமிழா! சில ஆயுதங்களில்தான் அபிவிருத்தி உண்டு. கப்பல்களின் அமைப்பு நாளுக்கு நாள் மாறிக் கொண்டும் அபிவிருத்தியடைந்து கொண்டும் வருகிறது. துப்பாக்கிகளின் அமைப்பும் அப்படித்தான். இங்கிருக்கும் ஒவ்வொரு துப்பாக்கிக்கும் ஒவ்வொரு கைத்துப்பாக்கிக்கும் வித்தியாசமிருக்கிறது. வெள்ளைக்கார நாடுகள் ஒவ்வோர் ஆண்டும் புதுப் புது ரக விதவிதமான துப்பாக்கிகளைத் தயாரிக்கிறார்கள். அந்தப் புது ரகம் எது கிடைத்தாலும் நான் சேர்க்கிறேன். அவற்றில் சுட்டுப் பயிலுகிறேன். ஆனால் வாட்களில் மகாராஷ்டிரர் வாளைவிடச் சிறந்த வாளை நான் பார்த்ததில்லை. ஆங்கிலேயர் வாட்கள் நீண்டவை. கனமானவை. கரம் வலுவாயிருந்தால் தூக்கி வீசலாம். ஆனால் அதில் அதிக துரிதத்தைத் காட்ட முடியாது... அதன் வலு அதன் எடையிலிருக்கிறது, மகாராஷ்டிரர் வாளின் வலு, அதன் வளைவில், சுலப வீச்சில், அதன் கூர்மையிலிருக்கிறது. இளநீரைச் சீவுவதுபோல் தலையை வெகு லாகவமாகச் சீவலாம்'' என்று விளக்கிய ஆங்கரே அந்த வாட்களில் ஒன்றைச் சுவரிலிருந்து எடுத்துத் தடவினார்.

இதயசந்திரனுக்கு அவருக்கு ஆயுதங்களிடத்திலிருந்த ஆராய்ச்சி, மகாராஷ்டிர வாளிடத்திலிருந்த ஒரு நேசம்



இவை மதிப்பைத் தந்தாலும், இளநீர் சீவுவது போல் மனிதர்கள் தலைகளைச் சீவலாம் என்று கூறியது பிடிக்காததால் வெறுப்புடன் கேட்டான், ''மனிதன் தலையும் இளநீரும் ஒன்றுதானா?'' என்று.

கனோஜி அவன் சொற்களிலிருந்த வெறுப்பைக் கண்டு புன்முறுவல் கொண்டார். ''இல்லை'' என்று கூறிக் கடகடவென நகைக்கவும் செய்தார்.

''எதற்கு நகைக்கிறீர்கள்?'' என்று சீறினான் தமிழன்.

''நீ சுட்டிக் காட்டியதற்கு''

''என்ன சுட்டிக் காட்டினேன்?''

''என் தவறை.''

''என்ன தவறு?''

''மனிதன் தலையை இளநீர் என்று சொன்னதை ஆட்சேபித்தாயல்லவா?''

''ஆம்.''

''அது சரிதான். அதிலுள்ள இன்ப இளநீர் மனிதன் தலையில் ஏது? இல்லை. கிண்டித் தின்றால் தித்திக்கும் வழுக்கைதான் மனிதன் மண்டையில் உண்டா? கிடையாது தமிழா, கிடையாது. பாதி மண்டைகளில் இருப்பது களிமண்'' என்ற ஆங்கரே பெரிதாக நகைத்தார்.

அவர் நகைத்ததை அவன் ரசிக்க முடியவில்லை யாகையால், ''சரி எதற்கு என்னைக் கூப்பிட்டு அனுப்பினீர்கள்?'' என்று விசாரித்தான் எரிச்சலுடன்.

ஆங்கரேயின் அலட்சியப் பெருவிழிகள் அவனை விநோதமாகப் பார்த்தன. தடித்த அவர் பெரு உதடுகளும் மேலிருந்த மீசையும் அகன்று விஷமப் புன்முறுவல் கொண்டன. மயிர் அடர்ந்த காட்டுப் புருவங்கள் ஏறி இறங்கின. ''உனக்கு விடை கொடுத்து அனுப்ப அழைத்

தேன்'' என்று மெல்லக் கூறிய ஆங்கரே கையிலிருந்த வாளை மீண்டும் சுவரில் மாட்டினார்.

''கடற்படைத் தளபதி சாதாரண மாலுமிகளுக்கு விடை கொடுத்தனுப்பும் வழக்கமுண்டா?'' என்று வினவினான் தமிழன் கோபம் சிறிதும் தணியாமல்.

''இல்லை''

''பின் ஏன் எனக்கு விடை கொடுத்தனுப்புகிறீர்கள்?''

''நீ இன்னும் மாலுமியாகாததால்'' என்ற ஆங்கரே மேலும் கூறினார். ''இதயசந்திரா! மாலுமியெனும் புது வாழ்வில்— கடல் பயணப் புது வாழ்வில், இனிமேல்தான் நீ புகப்போகிறாய். நீ சிறந்த மாலுமியாக வந்தாலும் வரலாம். அல்லது அதற்கு லாயக்கில்லையென்று உன்னை காஸ்ட்ரோ தள்ளிவிட்டாலும் தள்ளிவிடலாம். விளைவு எனக்குத் தெரியாது. அது உன்னைப் பொறுத்தது. உன் உழைப்பைப் பொறுத்தது. உன் புத்தி கூர்மையைப் பொறுத்தது. எல்லாவற்றுக்கும் மேலாக உனக்குக் கிடைக்கும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது. திடீரென உன் கப்பல் தாக்கப்படலாம். அப்பொழுது நீ காட்டும் திறமையில் மற்ற மாலுமிகள் மயங்கலாம். அப்படி மயங்கினால் யார் தயவும் இல்லாமல் நீ தலைவனாகிறாய்... உன் தவறால் கப்பல் எதிரிகள் சிறையில் வாடலாம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். நல்ல புத்திக்கூர்மையும் தைரியமும் உள்ளவனுக்குக் கடல் அளிக்கும் வாய்ப்புகள் அனந்தம். உன் தைரியத்தில், உனது உறுதியில், திறமையில் எனக்கு நம்பிக்கையிருக்கிறது. தவிர வாழ்க்கையில் உனக்குக் குறிக்கோள் இருக்கிறது. ஒரு பெண்ணுக்குச் சேவை செய்ய, ஒரு தாய்க்கு உதவ நீ தமிழகத்திலிருந்து புறப்பட்டுப் பல ஆபத்துக்களில் சிக்கி மகாராஷ்டிரம் வந்திருக்கிறாய். இன்னும் அந்த முகவெட்டுக் காயக்காரனைப் பிடிப்பதில் கருத்துடனிருக்கிறாய். வாழ்வில் குறிக்கோள் உள்ளவன் சாவதில்லை. தோல்வியடைவதில்லை.''



''தங்கள் பாராட்டுதலுக்கு நன்றி'' என்று கூறித் தலை தாழ்த்திய இதயசந்திரன், ''எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது'' என்றான்.

கனோஜியின் பெருவிழிகள் அவனை நோக்கின. அங்கிருந்த ஆசனத்தின் கைப்பிடியில் அவர் ஏறி உட்கார்ந்து கொண்டார். ''கேள்'' என்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்தார்.

''காஸ்ட்ரோ பெண்களைக் கற்பழிப்பவன், கொலைகாரன் என்று கேள்விப்பட்டேன்...'' என்றான் இதயசந்திரன்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலை அசைத்தார் ஆங்கரே.

''இன்று அறையில் அவன் பெரும் குடிகாரன் என்பதையும் உணர்ந்தேன்.''

அதையும் ஆமோதித்துத் தலையசைத்தார் ஆங்கரே.

''அப்படியிருக்க, அவனை மஞ்சுவின் கப்பலில் எதற்காக அனுப்புகிறீர்கள்? அதுவும் உபதலைவனாக'' என்று வினவினான் இதயசந்திரன்.

அப்பொழுதுதான் வாயைத் திறந்தார் கனோஜி. ''அவன் கப்பலை நடத்துவதிலும் கடற்போரிலும் இணையற்றவன். மஞ்சுவின் கப்பல் தாக்கப்பட்டால் அதைக் காக்கத் திறமையுள்ளவன் டி காஸ்ட்ரோ ஒருவன்தான்'' என்று மெல்லக் கூறினார் கனோஜி.

''மஞ்சு பெண்ணல்லவா? இவன் ஒழுக்கம் கெட்டவனல்லவா?'' என்றான் தமிழக வாலிபன்.

''இரண்டும் உண்மை'' என்று ஒப்புக் கொண்டார் ஆங்கரே சர்வ சகஜமாக.

''அப்படியானால் இந்தப் புலியின் கையில் பெண்ணை ஒப்புவிக்கலாமா?'' என்று வினவினான் தமிழன்.

''இதயசந்திரா!'' என்று மெல்ல அழைத்தார் ஆங்கரே.

''என்ன தளபதி?''

''பெண்கள் இருக்கவேண்டிய இடம் எது?''

''வீடு.''

''அதைவிட்டு ஒரு பெண் கடலில் செல்ல விரும்புகிறாள், மாலுமி வாழ்க்கையை மேற்கொள்கிறாள்...''

''உம்.''

''அதில் வரும் அபாயங்களையும் அவள் மேற்கொள்ள வேண்டியதுதானே?''

இந்தக் கேள்விக்குப் பதில் என்ன சொல்வதென்று தெரியாததால் இதயசந்திரன் ஒரு வினாடி அவரை உற்று நோக்கினான். ''மஞ்சு உங்கள் பெண்ணல்லவா?'' என்றும் வினவினான்.

''ஆம், இங்கிருக்கும்போது!''

''கடலில்?''

''மற்றவர்களைப்போல் அவளும் ஒரு மாலுமி.''

''ஆகவே!''

''அதன் விளைவுகளை அவள் எதிர் நோக்க வேண்டியதுதான், அனுபவிக்கவும் வேண்டியதுதான்.''

''சாதாரணமாக வரும் விளைவுகளை எதிர் நோக்கட்டும். நீங்களாகக் காஸ்ட்ரோவைப் போன்ற அபாயத்தைப் புகுத்த வேண்டாமல்லவா?''

''அதைத் தவிர்க்க முடியாது. ஜலதீபத்தை இயக்க, காக்க, காஸ்ட்ரோ தேவை.''



''மஞ்சுவைக் காக்க?''

இந்தச் சமயத்தில் கனோஜி பதில் கூறவில்லை. உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து தூரத்தில் வைக்கப்பட்டிருந்த ஒரு மரப் பெட்டியை நோக்கிச் சென்றார். அதைத் திறந்து அதற்குள்ளிருந்து ஒரு கைத் துப்பாக்கியை எடுத்து வந்தார். மற்றக் கைத்துப்பாக்கிகளைவிட அது பெரியதாயிருந்தது. அதன் இரும்புக் கைப்பிடியில் தங்க வெள்ளிப் பட்டைகள் பொருத்தப்பட்டிருந்தன. அதை எதிரேயிருந்த மேஜைமீது வைத்தார். ''இது உனக்கு'' என்றும் கூறினார்.

''இது...'' என்று சந்தேகத்துடன் இழுத்தான் தமிழன்.

''ஒரு போர்ச்சுக்கீஸியனிடமிருந்து காஸ்ட்ரோ திருடியது'' என்றார் கனோஜி.

''எனக்கு எதற்கு இது?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''மஞ்சுவிடம் சரியாகக் காஸ்ட்ரோ நடந்து கொள்ளாவிட்டாலோ கப்பலை எதிராளியிடம் காட்டிக் கொடுக்க முற்பட்டாலோ அவனை இதால் சுட்டுவிடு'' என்று சர்வ சகஜமாகக் கூறினார் ஆங்கரே.

இதயசந்திரன் மலைத்து நின்றான். கனோஜி அவனருகில் வந்து அவன் தோளில் தனது இரும்புக் கையை வைத்தார். ''மஞ்சுவுக்குக் காவல் தேவையில்லை தமிழா! இருப்பினும் காஸ்ட்ரோ உடன் வருவதால் இந்த எச்சரிக்கை அவசியமாகிறது. அவன் எந்தத் தவறு செய்தாலும் தயை தாட்சண்யமின்றிச் சுட்டுவிடு'' என்று திட்டமாக மீண்டும் ஒருமுறை வலியுறுத்தவும் செய்தார்.

''இது அநீதியல்லவா?'' என்றான் இதயசந்திரன்.

''கடலின் நீதி நிலத்தின் நீதிக்குப் புறம்பானது. உன் புது வாழ்வில் நீயே புரிந்துகொள்வாய். போய் வா. எதை மறந்தாலும் நீ மஞ்சுவின் காவலன் என்பதை மட்டும் மறக்காதே. அவளைக் காக்க எதையும் செய்யத் தயங்காதே. நீதி, தயை, தாட்சண்யம் எல்லாம் அவள் நலனுக்குப் பிறகுதான் என்பதை நினைவில் வைத்துக் கொள்'' என்று கூறி அந்தப் புதுக் கைத்துப்பாக்கியை எடுத்து அவன் இடைக் கச்சையில் செருகினார் ஸார்கேல். ''இனி நீ போகலாம்'' என்பதற்கு அறிகுறியாக வாயிற் படியைச் சுட்டியும் காட்டினார்.



# காஸ்ட்ரோவின் காதல்

கனோஜி ஆங்கரேயிடமிருந்து விலையுயர்ந்த கைத்
துப்பாக்கியையும், காஸ்ட்ரோவைப் பற்றிய
எச்சரிக்கையையும் மஞ்சுவின் காவலன் எனும் பதவியை
யும் பெற்று அவரது மாளிகையிலிருந்து வெளியேறிய
இதயசந்திரனின் எண்ணங்கள் புயலில் அகப்பட்ட
கப்பலைப்போல திக்குத் திசையற்றுத் திரிந்து கொண்
டிருந்தன. காஸ்ட்ரோவின் குணத்தையறிந்திருந்தும்
ஜலதீபத்தின் உபதளபதியாக அவனை நியமிக்க வேண்டு
மானால் அவனது கப்பலோட்டும் திறமையிலும் போரிடும்
சக்தியிலும் கனோஜிக்கு எத்தனை மதிப்பிருக்க வேண்டு
மென்பதைப்பற்றி நினைத்துப் பார்த்தான் தமிழக
வாலிபன். அத்தகைய ஒருவனிடமிருந்து பெண்ணைக்
காப்பாற்றத் தன்னை நியமிக்க வேண்டுமானால் தனது
கண்ணியத்திலும் கடமையிலும் பராக்கிரமத்திலும்
எத்தனை நம்பிக்கையை அவர் கொண்டிருக்கவேண்டும்
என்று சிந்தித்தான். அத்துடன், தான் மகாராஷ்டிரத்
துக்கு வந்த காரணமென்ன, கொண்டுள்ள வேலையென்ன
என்பதைப் பற்றியும் எண்ணிப் பார்த்தான். மகாராஷ்டிர
ராணியொருத்தியின் பிள்ளையைத் தேடி, பிள்ளையைத்
தூக்கிச் சென்றவனைத் தேடித் தான் வந்திருக்க, மாலுமித்
தொழிலும் மற்றொரு பெண்ணைக் காக்கும் பணியும்
கிடைப்பதைப் பற்றி எண்ணி, தனது வாழ்க்கை தன்னை
யும் மீறி எங்கோ செலுத்தப்படுவதை உணர்ந்தான்.
இத்தனையிலும் ஓர் ஆறுதல் மட்டுமிருந்தது அவன்
உள்ளத்துக்கு. அஞ்சன்வேல் கோட்டைவழியில் ஜலதீபம்
செல்லுமானால் அந்தக் கோட்டையில் தான் கண்ட
முகவெட்டு வீரனைத் தான் சந்திக்க முயலலாமென்றும்,
அப்படிச் சந்தித்தால் தான் வந்த வேலைக்கு முற்றுப்புள்ளி
ஏற்படுமென்றும் எண்ணி அதன் விளைவாகச் சிறிது மன
ஆறுதலும் அடைந்தான். அஞ்சன்வேல் கோட்டை

சிந்தனையில் எழுந்ததால் வாசிஷ்டி நதி எழுந்தது, பரசுராமன் கோயில் எழுந்தது, பானுதேவியின் அழகிய வதனமும் எழுந்தது. அடர்ந்த மலைத்தோப்பில் அவள் கால் விரல்கள் தன் கைவிரல்களை நெறித்த இன்பச் சூழ்நிலையும் எழுந்தது. அந்தக் காட்சிகள் எழுந்ததால் வாசிஷ்டி நதிக்கரையில் மஞ்சு தனக்கருகில் நனைந்த உடையுடன் படுத்துக் கொண்டிருந்த காட்சியும் கூடவே எழுந்தது. இரண்டு பெண்களும் அவன் சித்தத்தில் மாறி மாறியும் கூடியும் எழுந்து அதை அலைக்கழித்தனர். இடையே பிரும்மேந்திர சுவாமியின் அருள் முகமும் கனோஜியின் கடகடவென்று நகைக்கும் வதனமும் எழுந்து சிந்தையைக் குழப்பின.

இந்த நிலையில் தெருக்களைத் தாண்டி காஸ்ட்ரோவின் அறைக்கு வந்த இதயசந்திரன், அங்கிருந்த நிலையைக் கண்டதும் பெரு வியப்படைந்தான். பயணத்துக்கு சர்வ சித்தமாகக் காஸ்ட்ரோ மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். மாலுமிகள் அணியும் சராயையும், உடலைப் பிடிக்கும் முரட்டுச் சொக்காயையும், தலையில் வட்டமான மாலுமிக் குல்லாயையும் அணிந்திருந்த காஸ்ரோவின் காலில் தடித்த தோல் காலணியிருந்தது. இடையில் சுற்றி ஓடிய தோற் பட்டையில் வயிற்றுக்கு அக்கம் பக்கங்களில் இரண்டு கைத்துப்பாக்கிகள் காட்சியளித்தன. நீளமான பெரிய வாளொன்றும் இடையில் கட்டப்பட்டு மஞ்சத்துக்கு அப்பால் நீட்டிக் கொண்டிருந்தது. அவன் தோளிலிருந்து தொங்கிய துணிப்பை புடைத்துக் கிடந்த முறையிலிருந்து உள்ளே அவன் ஆடைகள் தவிர இரண்டு குடிப் புட்டிகளாவது இருக்குமென்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது. உட்கார்ந்திருந்த முறையிலும் அவன் பெரும் கடல் வீரன் என்ற தோரணை சந்தேகத்துக்கிடமின்றி இருந்தது.

அவனைப் பார்த்து மலைத்து நின்ற இதயசந்திரனைக் கண்ணிமைக்கும் நேரத்தில் ஏற இறங்கப் பார்த்துவிட்ட



காஸ்ட்ரோ, ''உனக்குப் பதினைந்து நிமிடங்கள் தருகிறேன்'' என்று உத்தரவிடும் தோரணையில் கூறினான்.

அவன் தோரணையும் குரலிலிருந்த கடுமையும் இதயசந்திரனுக்குப் பிடிக்கவில்லையானாலும் அதை வெளிக்குக் காட்டாமல், ''நான் கிளம்பியாகிவிட்டது'' என்று பதில் கூறினான்.

''உன் ஆடைகள், ஆயுதங்கள்...'' என்று கேட்டான் காஸ்ட்ரோ.

''இங்கு கொடுக்கப்பட்ட ஆடையைத் தவிர வேறு ஆடை இல்லை. இருப்பது வாள் ஒன்றுதான்'' என்று கூறி மூலையிலிருந்த வாளை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டான்.

காஸ்ட்ரோ அவனிடம் ஏதும் பேசாமல் எழுந்திருந்து, ''கதவைப் பூட்டிக் கொண்டு வா'' என்று கூறி அவனிடம் தன் தோற்பட்டையிலிருந்த சாவியை எடுத்துக் கொடுத்து விட்டு வெளியே நடந்தான். இதயசந்திரனும் ஏதும் பேசாமல் கதவைப் பூட்டிக்கொண்டு அவனைப் பின் தொடர்ந்தான். முந்திய நாள் காஸ்ட்ரோவுக்கும் அன்றைய காஸ்ட்ரோவுக்குமிருந்த வேறுபாடு அவனுக்கு நன்றாகத் தெரிந்தது. கனோஜியின் மாளிகையிலிருந்து திரும்பியது முதல் தன்னை ஒரு வேலைக்காரன்போல் காஸ்ட்ரோ நடத்தியதைக் கண்டதால் முதலில் வியப்பை அடைந்தாலும் தன்னைக் கனோஜி அழைத்ததன் காரணத்தை அவன் புரிந்துகொண்டிருக்க வேண்டுமென்று பிறகு ஊகித்துக்கொண்ட இதயசந்திரனின் உள்ளம் மெல்லத் தீப்பிடிக்க ஆரம்பித்ததும் அதை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். முன்கோபியான தனக்கு அத்தனைப் பொறுமை எப்படி வந்தது என்பது புரியாமல் திணறினான். அடுத்த சில மாதங்களில் தன் பொறுமை மிக மிக அதிகமாகப் போவதை அந்த நேரத்தில்

உணராமலே காஸ்ட்ரோவைப் பின்பற்றிச் சென்றான் இதயசந்திரன்.

வெகு துரிதமாகவும் ஒரே சீராகவும் மாலுமி நடை போட்டுக் கோட்டையின் பிர்தான வாயிலைக் கடந்த காஸ்ட்ரோ, அலை மோதும் துறைமுகப் படகுத் தளைக்கு வந்ததும் ஒருமுறை திரும்பிக் கோட்டையைப் பார்த்தான். கோட்டையின்மீது ஒருபுறமிருந்த ஆமையையும் இன்னொரு புறமிருந்த மாருதியையும் தலை தாழ்த்தி வணங்கினான். இதயசந்திரனும் அவனைப் போலவே வணங்கினாலும் அதைத் திரும்பிக்கூடப் பார்க்காத காஸ்ட்ரோ படகுகள் கட்டப்பட்டிருந்த முகப்பை நோக்கிச் சென்றான். காஸ்ட்ரோவின் ஒவ்வொரு செய்கையிலும் விசித்திரமிருந்தது, அலட்சியமிருந்தது, பெரும் தோரணையுமிருந்தது. கிறிஸ்தவனான அவன் கூர்மாவதாரத்தையும் ஆஞ்சநேயரையும் வணங்கியது விசித்திரமாயிருந்தது இதயசந்திரனுக்கு. அவன் தன்னிடம் காட்டிய அலட்சியம் கோபத்தைத் தந்தது. அவன் தோரணை அவனிடம் மதிப்பைத் தந்தது. விசித்திரம், கோபம், மதிப்பு ஆகிய மாறுபட்ட உணர்ச்சிகளுடன் அவனைத் தொடர்ந்து சென்ற இதயசந்திரன் அவனுடன் படகுத் தளைக்குச் சென்று அவன் குதித்த படகுக்குள் தானும் குதித்து மீண்டும் கோட்டை வாசலையும் துறைமுக முன் பகுதியையும் நோக்கினான்.

துறைமுகத்தில் கூட்டமிருந்தது. மாலுமிகள் பலரைத் தவிர மீன் பிடிப்போரும் தங்கள் படகுகளில் சென்று கொண்டிருந்தார்கள். அந்த இயற்கைத் துறைமுகம் பூராக விடியாத அந்தச் சமயத்திலும் பெரும் உயிர்த் துடிப்பைப் பெற்றிருந்தது. சற்று தூரத்தில் ஒரு புறத்தில் பெரிதாக எழுந்த ஸஹ்யாத்ரியின் பெரும் மகுடங்களும் சரிவுகளும் அந்தத் துறைமுகத்துக்கு இணையற்ற ஒரு கம்பீரத்தை அளித்தன. துறைமுகத்தில் நடமாடிய மக்களும் மாலுமிகளும், பயணமாகும் மக்களுக்குத்



தின்பண்டங்கள் விற்கும் சிறு வணிகரும் ஸஹ்யாத்ரியின் அந்தப் பின்னணியில் விளையாட்டுக் குழந்தைகளைப் போல் தோன்றினார்கள். இந்த அழகைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டதால், தானும் காஸ்ட்ரோவுமிருந்த படகுத்தளை அவிழ்க்கப் பட்டதையோ, படகு நகர்ந்து விட்டதையோ இதயசந்திரன் உணராததால் திடீரென வந்த ஓர் அலையில் எழுந்த படகு அவனைக் கீழே தள்ளி விட்டது! அப்படிப் படகில் விழுந்தவன் மெள்ளச் சமாளித்துக் கொண்டதும் காஸ்ட்ரோ கூறினான்: ''மாலுமியின் கண்கள் எங்கும் பார்க்க வேண்டிய கண்கள் தான்! ஆனால் பராக்குப் பார்க்கும் வேலை அவற்றுக் கில்லை'' என்று. அதற்குப் பதிலேதும் சொல்லவில்லை தமிழன்!

படகில் விழுந்து சமாளித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்த பிறகும் சுவர்ண துர்க்கத்தின் சூழ்நிலையை யும் பலத்தையும் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஒரு முறை தூரத்தே துறைமுகக் கோடியில் ஆடிக்கொண் டிருந்த ஜலதீபத்தைப் பார்த்தான். அதன்மீது காற்றில் படபடத்துக் கொண்டிருந்த மகாராஷ்டிரர் அறக்கொடி அவனை எச்சரிப்பது போலிருந்தது. அலையில் தாழ்ந்து எழுந்துகொண்டிருந்த ஜலதீபத்தின் கூர்மையான முகப்பு அவனை, 'வா வா' என்று அழைத்துக் கொண்டிருந்தது. அக் கப்பலில் தனக்கு எச்சரிக்கை, வரவேற்பு இரண்டு மிருக்கும் என்பதைப் புரிந்துகொண்ட இதயசந்திரன் ஒரு முடிவுக்கு வந்துவிட்டானாதலால் கப்பலை அடைந்த போது சற்றுப் புன்முறுவலுடனேயே அதில் ஏறினான். கப்பலில் ஏறிப் படகை அனுப்பிவிட்ட காஸ்ட்ரோ, அதுவரை தமிழன் முகத்திலிருந்த குழப்பத்தையும் கவனிக்கத் தவறவில்லை. பிறகு ஏற்பட்ட முடிவையும் முறுவலையும் கவனிக்கத் தவறவில்லையாதலால் அவன் உதடுகளிலும் சிறிது புன்சிரிப்புப் படர்ந்தது.

அந்தப் புன்சிரிப்புடன் தன்னைத் தொடரச் சொல்லி இதயசந்திரனுக்குக் கைகை காட்டிச் சென்ற காஸ்ட்ரோ

கப்பலின் கீழ்த்தளத்திலிருந்த ஒரு பெரிய அறைக்கு அழைத்துச் சென்று அங்கிருந்த நூறு நூற்றைம்பது மாலுமிகளிடம் அவனை அறிமுகப்படுத்தத் தொடங்கி, ''இன்றிலிருந்து தமிழனும் இந்தக் கப்பலின் மாலுமி; உங்களுடனிருப்பான். இவன் வேலை என்னவென்பது பிறகு அறிவிக்கப்படும்'' என்று கூறிச் சென்றான்.

அவன் சென்ற பிறகு மாலுமிகளும் அவனை நோக்கினர். அவனும் மாலுமிகளை நோக்கினான். அவர்களில் பலர் அவனுக்குப் புதிதல்ல. முந்திய பயணத்தில் வந்தவர்கள்தான் பெரும்பாலோர். பத்துப் பதினைந்து பேர் மட்டுமே புதியவர்களென்பதைப் புரிந்துகொண்ட இதயசந்திரன் தனக்கும் மாலுமிகளுக்கும் இடையேயிருந்த மௌனத் திரையைக் கிழிக்க முற்பட்டு, ''உங்களிடம் தொழில் பழக வந்திருக்கிறேன்'' என்றான். மாலுமிகள் யாரும் பதில் கூறவில்லை, கொலைப் பார்வையாக அவனைப் பார்த்தார்கள். கடைசியில் ஒருவன் கேட்டான்: ''உன்னை ஏன் இங்கு அனுப்பிவிட்டார்கள்?'' என்று.

''மாலுமித் தொழில் பழக ஆசைப்பட்டேன். அனுப்பினார்கள்'' என்றான் இதயசந்திரன் சர்வசாதாரணமாக.

''மாலுமித் தொழிலுக்கு வரும் எல்லோருமே இங்கு வருவது கிடையாது'' என்றான் ஒரு மகாராஷ்டிரன்.

''வேறெங்கு போவார்கள்?'' என்று வினவினான் இதயசந்திரன்.

''சிலர் பாய்மரத்தில் வேலை செய்வார்கள். இன்னும் சிலர் பீரங்கிகளை இயக்குவார்கள். சிலர் சுக்கான் பிடிக்கப் பழகுவார்கள். துடுப்புத் தள்ளும் வேலை அனேகமாகச் சிறை பிடிப்பவர்களுக்குக் கொடுக்கப்படுவது'' என்றான் ஒரு டச்சுக்காரன்.

அவனை உற்று நோக்கிய இதயசந்திரன், ''அப்படியானால் நீங்களெல்லாருமே சிறை பிடிக்கப்பட்டவர்களா?'' என்று கேட்டான்.



''இல்லை. இங்கு சாதாரண மாலுமிகளும் இருக்கிறார்கள். தவிர, இது உயர்ந்த வகுப்பினருக்கு அளிக்கப்படும் வேலையல்ல'' என்றான் ஒரு கொங்கணி.

''வேலையிலும் வகுப்பு வேற்றுமை உண்டா!'' என்று சற்றுக் கோபத்துடன் கேட்டான் தமிழன்.

''உண்டு'' என்றான் டச்சுக்காரன்.

''கப்பலில் மிகக் கீழ்த்தர வேலை எது?'' என்று கேட்டான் தமிழன்.

''துடுப்புத் தள்ளுவது, கீழ்த்தரம் மட்டுமல்ல மிகக் கடுமையானதும்கூட'' என்று பதில் கூறினான் டச்சுக்காரன்.

''உனக்கு மாலுமித் தொழில் புதிதா?''

''இல்லை. பரம்பரை மாலுமிதான்'' என்றான்.

''எப்பொழுதும் துடுப்புத்தான் தள்ளுவாயா?''

''இல்லை, எங்கள் நாட்டுக் கப்பலில் பீரங்கி இயக்குபவனாயிருந்தேன். அதை ஆங்கரே பிடித்தபோது சிறைப்பட்டேன். துடுப்புத் தள்ள நியமிக்கப்பட்டேன்.''

இதயசந்திரன் சில நிமிடங்கள் சிந்தனையில் இறங்கினான். பிறகு கூறினான் அந்த மாலுமிகளை நோக்கி, ''நான் இந்த வேலையைத்தான் செய்யப்போகிறேன்'' என்று.

மாலுமிகள் வியப்பால் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டார்கள்.

''உங்கள் அந்தஸ்த்துக்கு...'' என்று ஒருவன் துவக்கினான்.

''அந்தஸ்து திறமையைப் பொறுத்தது. ஆகையால் இதை ஏற்க நான் முடிவு செய்துவிட்டேன்'' என்ற

சந்திரன், அந்த அறையில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டான். ஒரு மகாராஷ்டிரன் அவனை நெருங்கி வந்து கேட்டான்: ''ஸார்கேலிடம் தவறாக நடந்து கொண்டாயா தமிழா?'' என்று.

''இல்லை. ஏன் கேட்கிறாய்?'' என்று வினவினான் தமிழன்.

''உன்னை இந்த வேலைக்கு அனுப்பியிருக்கிறாரே? அதுவும் காஸ்ட்ரோவிடம் பணிபுரிய அனுப்பியிருக் கிறாரே!'' என்று சுட்டிக் காட்டினான் மகாராஷ்டிரன்.

''அதனாலென்ன?''

''காஸ்ட்ரோ கொடியவன்.''

''இருந்தாலென்ன செய்ய முடியும்?''

''உப தளபதியென்ற முறையில் எதையும் செய்ய முடியும். உன்னைச் சுட்டுவிடக்கூட முடியும்?''

''என்னை எதற்காகச் சுடவேண்டும்?''

''காரணம் தெரியாது. முடிந்தால் உன்னைச் சுடத் தவறமாட்டான்.''

''அதெப்படி உனக்குத் தெரியும்?''

''அவன் சென்றபோது உன்னைப் பார்த்தான்.''

''பார்த்தாலென்ன?''

''பார்வையில் குரூரமிருந்தது. சாதாரணமாக அவன் பார்வையில் சிரிப்புத்தானிருக்கும். பெரும் நயவஞ்சகன்! ஆனால் உன்னைப் பார்த்தபோது உள்ளத்திலிருப்பதைக் காட்டிவிட்டான்.''

''அப்படியா!''

''தமிழா! நீ மிக எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். இல்லையேல், அடுத்த துறைமுகத்தை ஜலதீபம் அடைவதற் குள் உன் உயிர் ஆகாயத்தை நோக்கிப் பறந்துவிடும்.''



இதயசந்திரன் இரு வினாடிகள் மௌனம் சாதித்தான். பிறகு கலகலவென நகைத்தான். ''ஏன் நகைக்கிறாய் தமிழா?'' என்று வினவினான் இத்தனை நேரம் பேசிய மாலுமி.

''என் நெஞ்சில்கூட நீ அச்சத்தைப் புகுத்துகிறாயே என்று நகைத்தேன்; சரி, உன் பெயரென்ன?'' என்று கேட்டான் இதயசந்திரன்.

''ஹர்கோவிந்த்'' என்றான் மாலுமி.

''ஹர்கோவிந்த்......'' என்று மெல்ல அழைத்தான் இதயசந்திரன்.

''ஏன் தமிழா!''

''உபதளபதிக்கு நான் படியாவிட்டால் என்ன தண்டனை?''

''வெட்டிக் கடலில் எறிந்து விடுவார்கள்.''

''நான் சுட்டுக் கொன்றுவிட்டால்?''

''அதற்கும் அதே தண்டனைதான்.''

''சரி.''

''எதற்குக் கேட்கிறாய்?''

''டி காஸ்ட்ரோவை எதிர்ப்பதா, சுட்டு விடுவதா என்று யோசித்தேன்.''

''முடிவு?''

''சுட்டுவிடுகிறேன்'' என்றான் இதயசந்திரன் முடிவாக.

மகாராஷ்டிரன் மெல்ல அவன் பக்கம் சாய்ந்து, ''சுட்டுவிடு தமிழா'' என்றான்.

இதயசந்திரன் வியப்புடன் அவனை நோக்கி, ''ஏன்?'' என்று வினவினான்.

''உனக்குக் காரணமிருக்கிறது.''

''என்ன காரணம்?''

''அருகில் வா. குனி'' என்ற ஹர்கோவிந்த், ''நீ மஞ்சுவிடம் மையல் கொண்டிருப்பது எனக்குத் தெரியும்'' என்றான் காதோடு காதாக.

''எப்படித் தெரியும்?'' இதயசந்திரன் குரல் வறண்டு கிடந்தது.

''உன்னை மஞ்சு முன்பு துடுப்புத் தள்ளுமிடத்திற்கு அழைத்து வந்தபோது உன் கண்களைப் பார்த்தேன்'' என்றான் ஹர்கோவிந்த்.

''உம் உம். அதற்கும் காஸ்ட்ரோவைக் கொல்வதற்கும் என்ன சம்பந்தம்?''

சம்பந்தத்தை மெல்லத்தான் சொன்னான் ஹர்கோவிந்த். தமிழன் தலையில் அந்தச் சொற்கள் பல துப்பாக்கிக் குண்டுகளைப் போல் பாய்ந்தன. அப்படியே மலைத்துப் பிரமித்துக் கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்து விட்டான் இதயசந்திரன். ''மஞ்சுவிடம் காஸ்ட்ரோ தீராத காதல் கொண்டிருக்கிறான். அவளை அடைய எதையும் செய்யத் தயங்கமாட்டான்'' என்றான் அந்த மகாராஷ்டிர மாலுமி.

இதயசந்திரன் புரிந்து கொண்டான் அந்தப் பயணம் எத்தனை அபாயமென்பதை. எவ்வளவு பெரிய பொறுப்புச் சுமை தன் தலையில் கட்டப்பட்டிருக்கிறதென்பதையும் புரிந்து கொண்டான். அந்தப் புது வாழ்விலும் தனது வாழ்க்கையில் பல புயல்கள் அடிக்கும் என்பதையும் உணர்ந்து கொண்டான். அந்தச் சமயத்தில் கப்பல் தளத்தில் கேட்டது பெரிய இரைச்சல். தளபதி வந்து விட்டதும், நங்கூரம் எடுக்கப்பட்டதும், பாய்கள் ஏற்றப் பட்டதும், அந்த இரைச்சலிலிருந்தே தெரிந்தது. துடுப்புத் தள்ள விரைந்தனர் அந்த அறையிலிருந்த மாலுமிகள்.



இதயசந்திரனும் விரைந்தான் அடித்தளத்தை நோக்கி, துடுப்புகளைத் துழாவ. பாய்கள் விரிந்து புடைக்க, ஜலதீபம் நகர்ந்தது. இதயசந்திரன் வாழ்வும் நகர்ந்தது இன்னொரு பகுதிக்கு. பெரும் போர்களும், ஆபத்தும், இடையிடையே மகிழ்ச்சியும் கலந்த, தரைக்குச் சிறிதும் சம்பந்தப்படாத, அவன் அதுவரை கண்டிராத புது வாழ்வில் அடியெடுத்து வைத்தான்.

அந்தப் பகுதியின் ஆரம்பமே அவனுக்கு அதிர்ச்சியைத் தந்திருந்தது. காஸ்ட்ரோவும் மஞ்சுவைக் காதலிக்கிறான் என்ற அதிர்ச்சிதான். அந்த அதிர்ச்சியும் அதிர்ச்சியால் ஏற்பட்ட வேகமும் அவனைப் பலமுறை காஸ்ட்ரோவுடன் மோத வைத்தது. அந்த மோதல்கள் அவன் தலைவிதியை மட்டுமல்ல, மகாராஷ்டிரத்தின் தலைவிதியையும் நிர்ணயித்தது.

முதல் பாகம் முற்றும்